## ம கா பா ர த ம்
## பாடிய **வில்லிபுத்தூரார் வரலாறு.**

வில்லிபுத்தூராரென்பவர், தமிழில் மகாபாரதம் பாடிய ஒரு மகாகவி; இவர் **பிராமணசாதியிற்** பிறந்தவர். இவருடைய **மதம்** திருமண்காப்புத் தரிக்கும் **வைஷ்ணவ** மென்பது. இப்பாரதத்தின் முதலிலும் இந்நூற் சருக்கங்களின் தொடக்கம்பலவற்றிலும் இவர் **ஸ்ரீ**மகாவிஷ்**ணு**வின் விஷயமாகவே பலவாறு கடவுள் வாழ்த்துக் கூறியுள்ளதனாலும், "எங்கள் மாதவன்" என்று நூலைத் தொடங்கி யிருப்பதனாலும், வில்லிபுத்தூராழ்வாரெனத் திருநாமமுடைமையாலும், ஒன்பதாம் போர்ச்சருக்கத்துக் காப்புச்செய்யுளில் "ஓராறுபேதசமயங்களுக்கு முருவாகிநின்ற வொருவ, **னீராறுநாம முரைசெய்து மண்கொடிடுவார்கள்** காணுமிமையோர்" எனத்துவாதசோர்த்துவ புண்டரத்தைச் சிறப்பித்துக் கூறியதனாலும், பதினைந்தாம்போர்ச்சருக்கத்துக் காப்பில் "கொத்தவிழ்த்த சோலைமன்னு குருகையாதிநெஞ்சிலே, வைத்த முத்திநாதன்" என நம்மாழ்வாரையும், பத்தாம்போர்சருக்கத்துக்காப்பில் " **கலிய** னெங்கள் **மங்கையாதி** கண்டுகொண்ட நாமமே" எனத்திருமங்கையாழ்வாரையும் கூறியுள்ளதனாலும் தெளிவாகும்.

நடுநாடென்று சொல்லப்படுகிற திருமுனைப்பாடி நாட்டில் **சனியூரி** லே பிராமணசாதியிலே வைஷ்ணவமதத்தில் **வீரராகவாசார்ய** ரென்பவர்க்குத் திருக்குமாரராய்த் திருவவதரித்து * வில்லிபுத்தூராழ்வாரென்று இயற்பெயர்பூண்ட இவர் **பாரதம்பாடிய காரணம்** :- இவர் இளமையிலே நல்லாசிரியரையடுத்துக் கல்விகற்று, இயல் இசை நாடகம் என்னும் முத்தமிழிலும் மிகவல்லவராய் வடமொழியிலும் மிக்கதேர்ச்சிபெற்று, ஆசு மதுரம் சித்திரம் விஸ்தாரம் என்னும் நால்வகைக் கவிகளையும் மிகஎளிதில் அமிழ்தினும் இனியன வாகப்பாடவல்லவராய், சேர சோழ பாண்டியரென்னுந் தமிழ்நாட்டு மூவேந்தர்களாலும் மிக்க சிறப்புடன் விரும்பியழைக்கப்பட்டு ஆங்காங்குச்சென்று தமது கல்வித்திறத்தைப் பலவகையாலுங் காட்டி அவர்களைக் களிப்பித்து. அவர்கள் அன்போடு அபிமானித்து மிகுதியாகவழங்கிய சிறந்த பல பெரும்பரிசுகளைப்பெற்று, பற்பல கவிகள் பாடித் திருமாலை இரவும் பகலும் எப்பொழுதுந் துதித்துக்கொண்டு, தமிழ்நாடு முழுவதிலும் தமது கல்விப்பெரும்புகழைப் பரவச்செய்து வந்தார். அங்ஙனமே வருகையில், முற்கூறிய திருமுனைப்பாடிநாட்டிலே **வக்கபாகை** யென்னும் இராசதானியில் வீற்றிருந்து செங்கோல் செலுத்திய கொங்கர்குலத்துத்தோன்றிய **வரபதியாட்கொண்டா**

---

* வில்லிபுத்தூராழ்வாரென்பது - ஸ்ரீவில்லிபுத்தூரில் திருவவதரித்த பெரியாழ்வார்க்கு வழங்கும்: அதனையே இவர்க்கு இட்டனரென்க. இச்சொல் வில்லிபுத்தூராரென்றும் வழங்கப்பெறும்,

னென்கிற அரசன், இவ்வில்லிபுத்தூராரது கல்வி கேள்வித் திறமைகளைக் கேள்வியுற்று இவரை வரவழைத்து அநேக சன்மானங்கள் செய்து தனது ஆஸ்தாநபண்டிதராக அமைத்துவைத்து, ஒருநாள் இவரை நோக்கி 'வடமொழியில் ஸ்ரீவேதவியாசமகாமுனிவரால் விரித்துரைக்கப்பட்ட மகாபாரத சரித்திரத்தைச் செந்தமிழில் விருத்தப் பாடல்களினால் ஒருபெருங் காப்பியமாகப் பாடித் தந்தருளல்வேண்டும்' என்று பிரார்த்திக்க, இவர் க்ருஷ்ணனுடைய சரித்திரம் ஆங்காங்குவருவதுபற்றி அவ்வேண்டுகோளுக்கு இசைந்து மகாகாவியமாகச் சொற்சுவை பொருட்சுவைகள் மிக்கு விளங்கும்படி நல்ல நடையிலே அதனைப் பாடியருளினார்.

இவர், தம்காலத்திற் கல்விச்செருக்கு அடைந்திருந்த புலவர்கள் பலரையும் தமது வித்தியாசாமர்த்தியத்தால் வென்று, அவ்வெற்றிக்கு அடையாளமாக, தோற்றுப்போன புலவர்களின் காதுகளைத் தமதுகையிலே எப்பொழுதும் ஆயுதமாகவைத்துக் கொண்டுள்ள துறட்டுக்கோலால் மாட்டியிழுத்து அறுத்துவந்தன ரென்பது, "குட்டுதற்கோ பிள்ளைப்பாண்டிய னீங்கில்லை **குறும்பியளவாக் காதைக் குடைந்து தோண்டி, யெட்டினமட் டறுப்பதற்கோ வில்லியி** ல்லை யிரண்டொன்றாமுடிந்து தலையிறங்கப்போட்டு, வெட்டுதற்கோ கவி யொட்டக்கூத்த னில்லைவிளையாட்டாக் கவிதைதனை விரைந்துபாடித், தெட்டுதற்கோ அறிவில்லாத் துரைகளுண்டு தேசமெங்கும் புலவரெனத் திரியலாமே" என வழங்குந் தனிப்பாடலினால்அறியப்படும். இவர் காலத்து அரசர்கள் இவரிடத்தில் மிகவும் அன்புவைத்திருந்ததனால், இவர் இங்ஙனஞ்செய்ய இடங்கொடுத்து வந்தார்கள்.

*இவருடைய **காலம்** - பாயிரத்தில் "நான்காஞ்சங்கமென முச்சங்கத் தண்டமிழ்நூல் கலங்காமல் தலைகண்டானே" என்று இவர் காலத்திலிருந்த வரபதியாட்கொண்டானென்னும் அரசனைக் கூறியிருத்தலாலும், அவ்வரசனை இரட்டையர்களும் பாடியிருத்தலாலும், அவ்விரட்டையராற் பாடப்பட்ட இராசநாராயணசம்புவராயனென்பான் கி. பி. 1331 - 1383 - வரை ஆட்சிபுரிந்தவனென்று சாசன வாராய்ச்சியாளர் கூறுவதாலும் இவர் காலம் கடைச்சங்கத்தார் காலத்துக்குப்பின் பதினான்காம் நூற்றாண்டின் இடைப்பகுதி யாகுமென்றும், அருணகிரியார்காலமும் இதுவே யென்றும் கூறுவர்.*

*இவ்வில்லிபுத்தூரார் சிவத்துவேஷம் பாராட்டுகிற வீர வைஷ்ணவ ரல்லர். அது- முதலில் விநாயகஸ்தோத்திரஞ் செய்திருத்தலாலும், அருச்சுனன் தீர்த்தயாத்திரைச்சருக்கத்திலும் அருச்சுனன் தவநிலைச்சருக்கத்திலும் பதின்மூன்றாம்போர்ச்சருக்கத்திலும் சைவசம்பிராதாயத்துக்கு வழுவுறாதபடி சிவபிரானைச்சிறப்பித்தும் இதரதேவர்களைத் தாழ்த்தியுங் கூறியதனாலும் நன்கு புலனாகின்றது. அன்றியும், வியாசர் புராணங்களில் ஒவ்வொரு தேவரை ஒவ்வோரிடத்திற் சந்தர்ப்பத்துக்கேற்பச் சிறப்பித்துக் கூறியிருத்தல் போலவே, இவரும்தமது நூலில் சூரியன் அக்கினியமன் முதலிய மற்றைத்தேவர்களையும் சமயம்வந்தவிடத்துப் பக்ஷ பாதமில்லாமற் சிறப்பித்துக் கூறியிருக்கின்றார். (தம்மையாதரித்தவக்கபாகை வரபதியாட்கொண்டானை ஆங்காங்கு உபமானமுகத்தாற் சிறப்பித்துக் கூறியுள்ளார்.)*

*கடைச்சங்கப்புலவர்களுள் ஒருவராகிய பெருந்தேவனாரென்பவர் பாரதம்பாடியுள்ளார். அந்நூலுள் பழையஉரைகளிற் கிடைக்கின்ற சிலபாடல்களன்றி, மற்றையவை காணப்படவில்லை. பிறகு ஒன்பதாம் நூற்றாண்டில் மூன்றாம் நந்திவர்மன் காலத்துப் பெருந்தேவனாரென்று பெயர்வழங்கப்பெற்ற ஒருவர் மகாபாரதத்தைத் தமிழில் வசனமும் பாடலுமாக விரவிவருகிற 'சம்பு' என்கிற நடையிலே பாடியிருக்கின்றனர்; பெரும்பாலும் வெண்பாக்களால் அமைந்ததுபற்றி, அந்நூலுக்குப் **பாரதவெண்பா** வென்று பெயர். அதிற் சிலபகுதிகளே இப்போது கிடைக்கின்றன. 13-ஆம் நூற்றாண்டின் தொடக்கத்தில் அரும்பாக்கத்து அருணிலைவிசாகன் பாரதத்தை இனிய செந்தமிழ்படுத்தினான் என்று திருவாலங்காட்டுச் சாசனம் கூறும்; இந்நூல் வழக்கு வீழ்ந்ததுபோலும். இவ்வில்லிபுத்தூரார் நாலாயிரத்து முந்நூற்றுச் சொச்சம் பாடல்களாற் பாரதத்தைப் பாடினார். இவர் பாடிய பாரதம் வடமொழி வியாச பாரதத்தின் வழிநூலென்னத்தட்டில்லை: "மண்ணிலாரண நிகரெனவியாதனார் வகுத்த, எண்ணிலாநெடுங்காதையை யானறிந்தியம்பல்" என்று இவர்தாமே அவையடக்கத்திற்கூறியிருப்பது காண்க. இப்பாரதத்துக்கும் இதன்முதனூலாகிய வியாசபாரதத்துக்கும்இடையிடையே கதையமைதிகள் சிற்சில வேறுபடுவது "முன்னோர் நூலின்முடிபொருங்கொத்துப், பின்னோன் வேண்டும் விகற்பங்கூறி, அழியாமரபினதுவழிநூலாகும்" என்ற வழிநூலிலக்கண விதிப்படி இவ்வாசிரியராற் பிறநூல்மேற்கோள்கொண்டு அமைக்கப்பட்டதாதல் வேண்டுமென அறிக: வடமொழியில் **அகஸ்த்யபட்ட** ரென்பவர் செய்த **பாலபாரதத்தோடு** இந்நூல் பலவிடங்களிலும்ஒத்திருக்கின்றது: ஆயினும், நூலாசிரியர் தமது பாரதத்துக்குப் பாலபாரதத்தைமுதனூலென்று சொல்லவில்லை.*

*வில்லிபுத்தூரார் தமது பாரதத்திற் பாடியது, முதற்பத்துப் பருவமே; மற்றையெட்டுப்பருவங்கள் அவராற் பாடப்படவில்லை. அதற்குக் காரணம்:-நூல் முழுவதையும்பாடினால், பாண்டவர்கள் கிருஷ்ணபகவான் என்கிற மகாபுருஷர்களது மரணசரித்திரத்தைத் தம் வாயாற் சொல்லவேண்டுமே யென்று கருதி, "கனை கடற்பா ரளித்து அவரு மந்நகரி லறநெறியே கருதிவாழ்ந்தார்" என மங்களகரமாகச் சரித்திரத்தைப் பாடிமுடித்தனரெனக்கொள்வது தகுதியுடையது. வில்லிபுத்தூரார்பாடிய பாரதத்திலே சுருக்கமாகக் கதையைத் தொகுத்துக்கூறும் முந்நூறு நானூறு பாடல்கள் தவிர மற்றை நாலாயிரஞ் செய்யுட்களை யெடுத்துக் கொண்டு, பிற்காலத்தில் நல்லாப்பிள்ளை யென்பவர், புதிதாகத் தாம் பதினோராயிரம் பாடல்பாடி இடையிடையிற் கோத்தும், இறுதியிற் சேர்த்தும் பாரதம் பதினெட்டுப் பருவங்களையும்பூர்த்தி செய்தார்; அது **'நல்லாப்பிள்ளைபாரதம்'** என வழங்கும்: அந்நூலாசி*
*ரியர், இற்றைக்கு நூற்றுநாற்பத்தேழு வருடங்களின்முன் இருந்தவர். இதுதவிர, இற்றைக்கு 200- வருடங்களின்முன் இருந்த அஷ்டாவதானம் - அரங்கநாதகவிராயர் பாடிய பாரதத்தின் பிற்பகுதியும் ஒன்று உளது; அது, ஏறக்குறைய 2500 - செய்யுளுடையது. இனி, மாவிந்தம் என்னும் பெயரால் தமிழில் பாரதக் கதையைச் சொல்லும் ஒருநூலுண்டு என்றும் கூறுப: மற்றும், பழைய காஞ்சிப்புராண ஆசிரியர் ஒரு பாரதத்தை இயற்றியுள்ளாரென்று அப்புராணச் சிறப்புப்பாயிரம் தெரிவிக்கின்றதென்றும் அந்நூல் இப்போது கிடைக்கவில்லையென்றும் கூறுப.*

*இவர் மகாபாரதமொன்றுதவிர வேறுநூலெதுவும் பாடியிருப்பதாகக் தெரியவரவில்லை.*

*இவர் தமது நூலிற் பெரும்பாலும் வடமொழிகளைத் தனி மொழியாகவும் தொடர்மொழியாகவும் இன்னமொழியின் சம்பந்தமானதென்று எளிதில் தெரியவொண்ணாதபடி திரித்தும் மொழிபெயர்த்தும் உபயோகித்திருத்தலால், வடமொழியிலும் மிகவல்லவரென நன்குவிளங்குகின்றது. தமிழில் எந்த நூலாசிரியரும்வடமொழிகளை இவரளவு எடுத்துக்கொள்ளவில்லை. வடசொற்களைத்தமிழ்க்காப்பியத்தில் நுழைக்கிற வழக்கம் இவர்காலந் தொடங்கித்தான்அதிகமாயிருத்தல்வேண்டும். இவர் பாடல்களில்-உவமை, உருவகம்,எடுத்துக்காட்டுவமை, தற்குறிப்பேற்றம், வேற்றுப்பொருள்வைப்பு, பிறிதுமொழிதல்,உயர்வுநவிற்சி முதலிய பொருளணிகள் அமைந்திருப்பது மாத்திரமே யன்றி, மடக்கு[யமகம்], பிராசம் முதலிய சொல்லணிகளும் ஆங்காங்கு அமைந்திருத்தலையும்,இவரது செய்யுள்நடை பலவிடத்து முடுகுதலுடையதாதலையும், பலவகைச்சந்தங்கள்சந்தப்போலிகள் வண்ணங்கள் பொருந்தியிருத்தலையும், யுத்தவருணனை எல்லாநூல்களினும் இந்நூலிற் சிறத்தலையும் காணலாம்.*

## வில்லிபுத்தூரார் பாரதம்

*வில்லிபுத்தூராருடைய பாரதம் என்று விரியும்: வில்லிபுத்தூராரியற்றிய பாரதம் என்க:தொக்குநின்ற ஆறாம்வேற்றுமை, செய்யுட்கிழமைப் பொருளது. பாரதம் என்னுஞ்சொல்லுக்கு - பரதனது வம்சத்தைப்பற்றிய நூலென்றுபொருள். இங்குக் குறித்தபரதனென்பவன் - சந்திரவமிசத்தில் துஷ்யந்தமகாராசனுக்குச் சகுந்தலையினிடந்தோன்றிப் பிரசித்திபெற்ற ஓரரசன். பரதவம்சத்துத்தோன்றினவர், பாரதர்; (அவராவார்- பாண்டவரும், துரியோதனாதியரும்.) அவர்களது சரித்திரத்தை உணர்த்தும் நூல்பாரதமெனப்பட்டது; இது -வடமொழித்தத்திதாந்த நாமம். இனி, வருணாச்சிரமதருமம்இராசதருமம் மோட்சதருமம் நீதிமுதலிய சிறந்த உறுதிப்பொருள்களை யெல்லாம்அறிவிப்பதனால் முனிவர்கள் சீர்தூக்கிப் பார்க்குமிடத்து மற்றையெல்லா நூல்களினும்மிகுந்த பாரம் [அதாவது - மகிமை] உடைமைபற்றி, இந்நூலுக்குப் பாரதமென்னும்பெயர் இடப்பட்டதென்றுங் கொள்ளலாம். இருக்கு முதலிய நான்குவேதங்களோடு ஒப்ப ஐந்தாம் வேதமென்று சிறப்பித்துக் கூறப்படுவதும், மிகச்சிறந்த பகவத்கீதையைத் தன்னுள் பீஷ்மபர்வத்திலும் விஷ்ணுஸஹஸ்ர நாம ஸ்தோத்ரத்தை ஆநுசாஸநிகபர்வத்திலும் அடக்கிக்கொண்டிருப்பதும், இந்நூலுக்கு எல்லா நூல்களினுஞ் சிறந்த மேம்பாடாம். இந்நூலை முதலில் வடமொழியிற்செய்தவர், ஸ்ரீவேதவியாசமகாமுனிவர்; இவரால் வைக்கப்பட்ட 'பாரதம்' என்கிற முதனூலின் பெயரே வழிநூலாகிய இத்தமிழ்நூலுக்கும் பெயராயிற்று. பாரதத்துக்கு* ***'ஜயம்'*** *என்றும் ஒரு பெயருண்டு.*

*இது, இதிகாசம் இரண்டனுள் ஒன்று, மற்றொன்று - இராமாயணம். உபதேசபரம்பரையில் வந்த ஒருவருடைய பழைய சரித்திரமொன்றைப் பிரதானமாக எடுத்துப் பலகிளைக்கதைகளோடு புணர்த்து விரித்துக் கூறும்நூல் இதிகாச மென்றும் [இதிகாசம் - பழையவரலாறு]. உலகத்தின் தோற்றம் ஒடுக்கம் முனிவர்கள் அரசர்கள்மரபு அவர்களுடைய சரித்திரங்கள் மநுவந்தரம் என்னும் ஐந்துவிஷயங்களை விரவிக் கூறும் நூல்-புராணமென்றும் [புராணம் - ஐந்து இலக்கணங்களுடன் பழையவரலாறுகளை யுணர்த்தும் நூல்] வேறுபாடு உணரத்தக்கது. புராணம் - பிராம்மம்முதலாகப் பதினெட்டுவகைப்படும். இந்த இதிகாசபுராணங்கள், வேதத்தின்கருத்து இன்னதென்று நியாயப்பிரமாணங்களால் தேற்றிவிளக்குதல்பற்றி வேதத்திற்கு உபப்பிரஹ்மணங்களென்று சொல்லப்படும்: உபப்பிரஹ்மணமென்றால் வளர்ப்பதென்று பொருள். இவற்றுள், புராணங்களினும் இதிகாசம் பிரபலமான பிரமாணமென்றும், அதுபற்றியே இதனை 'இதிகாச புராணம்' என முன்னர் வைத்துக் கூறுவதென்றும் அறிக.*

*இப்பாரதத்தில் பெருங்காப்பிய இலக்கணங்கள் பலவும் வருவதை ஆங்காங்குக்காண்க.*

*பாரதம் - அந்தந்தப்பாகத்தின் விஷயத்தைக் குறிக்குஞ் சொற்களால் ஆதிபருவம், சபாபருவம், ஆரணியபருவம், விராடபருவம், உத்தியோகபருவம், வீட்டுமபருவம், துரோணபருவம், கன்னபருவம், சல்லியபருவம், சௌப்திகபருவம், ஸ்திரீபருவம், சாந்திபருவம், ஆநுசாஸநிகபருவம், அசுவமேதபருவம், ஆசிரமவாசபருவம், மௌசலபருவம்,*

*மகாபிரத்தானபருவம், சுவர்க்காரோகணபருவம் எனப் பெயர்பெற்ற பதினெட்டுப்பருவங்கள் அடங்கியுள்ளது. அவற்றுள்,*

# ஆறாவது வீட்டுமபருவம்.

*பீஷ்மபர்வம் என்ற வடசொற்றொடர் திரிந்தது. பீஷ்மனது சம்பந்தமான பருவ மென்று ஆறாம்வேற்றுமைத்தொகையாகக் கொள்க; விஷயமாகவுடைமை, வேற்றுமைப்பொருளாகிய சம்பந்*
*தம். இனி, இரண்டாம் வேற்றுமையுருபும்பயனுந்தொக்கதொகையாக, பீஷ்மனைப்பற்றிய பருவ மெனினும் அமையும். பீஷ்மன் துர்யோதனாதியர் சேனைத்தலைவனாய்நின்று பத்துநாள் போரை நடத்திய கதையைக் கூறும் பாகமென்று பொருள். பருவம்=பர்வம்: கணுஎன்று பொருள்: கரும்பு மூங்கில் முதலியவற்றிற்கு ஏகதேசமாகிய [ஏகதேசம் - ஒருபகுதி] கணுப்போல, நூலுக்கு ஏகதேசமாகிய உறுப்பைப் பருவமென்றது-உவமாகுபெயர்.*

*கீழ் ஆதிபருவம்முதலாகவும், மேல் சௌப்திகபருவம்முதலாகவும் கதாநாயகரான பாண்டவரது சரித்திரபாகத்தின் விஷயத்தைக்குறிக்குஞ் சொற்களாற் பர்வங்களுக்குப் பெயரிட்டுவரும் ஆசிரியர், இங்கு வீட்டுமபருவம், துரோணபருவம், கன்னபருவம், சல்லியபருவம் எனத் துரியோதனாதியரோடு சேர்ந்தவரைப்பற்றின சொற்களாற் பெயரிடக் காரணம் என்னையோ வெனின்?-எதிரிகளது சிறப்பை நன்கு எடுத்துக்காட்டி அப்படிப்பட்டவர்களை இவர்கள் வென்றிட்டார்க ளெனக் கதாநாயகரைப் பெருமைப்படுத்தவேண்டி யென்க. இனி, பீஷ்மவதபர்வ மென்பது மத்தியமபதலோபமாய்ப் பீஷ்மபருவமென நின்றது, திரிந்ததென்றலும் ஒன்று.*

### முதற் போர்ச்சருக்கம்

*பாண்டவர்க்கும் கௌரவர்க்கும் நடந்த பதினெட்டுநாளை யுத்தத்தில் முதல்நாள்யுத்தத்தைக் கூறும் பாகமென்று பொருள்.*

***கதைத்தொடர்ச்சி:-*** *இப்பரதகண்டத்திலே அஸ்தினபுரியில் சந்திர குலத்திலேயுதித்துச் செங்கோல்செலுத்திய சந்தனுவுக்கு முதல் மனைவியாகிய கங்கையின்குமாரர் பீஷ்மரென்பவரும், இரண்டாம் மனைவியாகிய யோஜநகந்தியின்மகன் விசித்திரவீரியனென்பவனும் இருந்தார்கள். [முன்னார்ச்சத்தியவதியென்னும்பெயரோடு இருந்து; பராசரமுனிவரோடுசேர்ந்து வியாசரைப்பெற்றுப் பின்பு அப்பராசாரருளாற் கன்னிப்பருவமடைந்த இந்தக் கந்தவதியினிடம் சந்தனுவுக்குப்பிறந்த முதற்குமாரனான சித்ராங்கதன், அப்பேருள்ளஒருகந்தருவனாற் கொல்லப்பட்டு இறந்தான்.] முன்னைய விரதத்தின்படி. வீடுமர்விசித்திரவீரியனுக்குப் பட்டாபிஷேகஞ் செய்வித்தார். விசித்திரவீரியனதுபத்தினியாகியஅம்பிகையினிடத்துத் திருதராஷ்டிரனும், அம்பாலிகையினிடத்துப் பாண்டுவும்,சந்ததிவிருத்தியின்பொருட்டுத் தாய்சொற்கடவாத வியாசபகவானருளாற் பிறந்தனர்.அம்பிகையாலேவியனுப்பப்பட்ட சூத்திரப்பெண்ணினிடத்து வியாசரருளால்அவதரித்த விதுரனென்னுங்குமாரனும் இருந்தான். திருதராட்டிரன் பிறவிக்குருடனாதலால், விதுரனை மந்திரியாகவைத்துக்கொண்டு, பாண்டு, திருதராட்டிரனுக்குமுடிசூட்டித் தானே இராசாங்ககாரியம் பார்த்து வந்தான். பாண்டுவுக்கு மனைவியுடன்சேரக்கூடாதென்று சாபம் நேரிட்டதனால், அவனனுமதிப்படி அவனதுமூத்தமனைவியாகிய குந்தி தனக்கு இளமையில் துருவாசமுனிவனுபதேசித்திருந்தமந்திரத்தின் மகிமையால் வந்த யமதருமராசனால் யுதிஷ்டிரனையும், வாயுதேவனால் பீமசேனனையும். தேவேந்திரனால் அருச்சுனனையும் பெற்றாள். [முன்பு கன்னிப்பருவத்துச் சூரியனாற் குந்தியினிடம் பிறந்தவன், கர்ணன்.] அவளுடைய சக்களத்தியான மாத்திரி, குந்தியால் அம்மந்திரமுபதேசிக்கப் பெற்று அசுவிநிதேவர்களால் நகுலன், சகதேவன் என்னும் இரட்டைப்பிள்ளைகளைப் பெற்றாள். திருதராட்டிரனுக்குத் துரியோதனன் துச்சாசனன் முதலிய நூறு பிள்ளைகளும், துச்சளை யென்னும் ஒரு பெண்ணும் காந்தாரியிடம் பிறந்தார்கள். [பஞ்சபாண்டவர்களுள் தருமனும் வீமனும் துரியோதனாதியர் நூற்றுவரினும் மூத்தவரென்றும், அருச்சுனன் முதலிய மற்றைமூவரும் துரியோதனாதியர்க்கு இளையவரென்றும் அறிக.] பாண்டு சிலகாலத்துக்குப்பின் இறந்து போனான். அப்பொழுது மாத்திரி சககமநஞ்செய்தாள். பின்பு*

பாண்டவருந் துரியோதினாதியரும் கிருபாசாரியர் துரோணாசாரியரிடத்து வில் வித்தை கற்கும் போதே, துரியோதனாதியர் பொறாமையினால் பாண்டவரிடத்து ஞாதிப்பகைகொண்டு பலதீமைகள் செய்துவந்தார்கள். வருகையில் அரக்குமாளிகையிலிட்டுத் தங்களையெரிக்கும்படி துரியோதனாதியர் செய்த யத்தனத்தைப் பாண்டவர்கள் விதுரரால்தெரிந்து தப்பிப் பிராமண வேடம்பூண்டு திரிந்து, திரௌபதியின் சுயம்வரத்துக்குச் சென்று, அங்குக் கட்டியிருந்த யந்திரத்தை அறுத்து அருச்சுனன் திரௌபதியைக்கொண்டுவர, தாயார்சொற்படி அந்த ஒருத்தியை ஐவரும் மணஞ்செய்து கொண்டு அஸ்தினபுரத்துக்கு வந்தார்கள். வந்தவுடனே திருதராட்டிரன்இவர்களை இந்திரப்பிரஸ்தத்திலும், துரியோதனன் முதலியோரை அஸ்திநபுரியிலும்இருந்து அரசாளும்படி இராச்சியத்தைப் பங்கிட்டுக்கொடுத்தான்.

பின்பு தருமபுத்திரன் தனதுதம்பிமார் நால்வரைக்கொண்டு திக்குவிசயஞ் செய்துராஜசூயயாகம்முடித்து வெகுமகிமையுடன் விளங்கினான். அது கண்டு பொறாமைகொண்டு துரியோதனன் யுதிட்டிரனைத் தந்திரமாகத் தன்னிடம் அழைப்பித்துத் தன் மாமனான சகுனியைக்கொண்டு அவனுடன் சூதாடுவித்து அவனது செல்வம் முழுவதையும் பறித்துக்கொண்டு அவனையும் அவனது தம்பிமாரையும் அவர்களதுமனைவியுயான பாஞ்சாலியையும் அடிமையாக்கி, அவளைத் தீண்டகூடாத காலத்தில் துச்சாதனனைக் கொண்டு சபையிற் பலாத்காரமாகக் கொண்டுவந்து துகிலுரியச் செய்தான். அப்பொழுது ஸ்ரீகிருஷ்ணாநுக்கிரகத்தால் அவள் மேன்மேல் ஆடைவளரப்பெற்று மானங் காத்துக்கொண்டாள். பின்பு அவளது கற்பின் பெருமைக்கு அஞ்சித் திருதராட்டிரன் அவர்களை அடிமைத்தனத்தினின்றும் நீக்கிச் செல்வத்தையுங் கொடுத்தனுப்ப, துரியோதனாதியர் அதனை மறுத்து அவற்றையெல்லாங் கவர்ந்துகொண்டு, மறுசூதாடி அடிமை நீங்கின அவர்களைப் பன்னிரண்டு வருஷம் வனவாசமும் ஒரு வருஷம் அஜ்ஞாத வாசமும் [அஜ்ஞாதவாசமாவது - ஒரு வருஷம்தம்மை இன்னாரென்று அறியவொண்ணாதபடி நாட்டில் மறைந்துவசித்தல்] செய்துவந்தால் அரசுபெறலாமென்று ஏற்பாடுசெய்து அனுப்பினார்கள். அங்ஙனமே பாண்டவர்கள் திரௌபதியுடனே சென்று பன்னிரண்டு வருஷம் காமியவனம்முதலிய இடங்களில் வசித்துப் பின்னர் மாறுவேடம்பூண்டு விராடநகரத்தில் ஒருவருஷகாலம் அஜ்ஞான வாசஞ்செய்தனர். அந்தப்பதின்மூன்றாவது ஆண்டினிறுதியில் துரியோதனன் பாண்டவர்கள் விராடநகரத்தில் இருக்கலாமென்று ஒருவாறுஊகித்து உணர்ந்து, அவர்களைக் கண்டுபிடிக்கும்படி படையெடுத்துச்சென்று, அந்நாட்டை இருபுறத்தும்வளைத்துக் பசுக்கூட்டத்தைக் கவர்ந்துசெல்ல, அருச்சுனனொழிந்த நால்வரும் விராடனுடன் சென்று தென்புறத்தில் திரிகர்த்தரையும், விராட குமாரனை உத்தரனுக்குத் தேரூர்ந்துசென்ற பேடிவடிவான அருச்சுனன் வடபுறத்தில் துரியோதனாதியரையும் போரில் வெல்ல அப்போது முன்னையஏற்பாட்டின்படி பதின்மூன்றுவருடமுங் கழிந்துவிட்டனவாதலால், பாண்டவர்களுந் திரௌபதியும் நிஜரூபத்தோடுவெளிப்பட்டனர். பின்பு விராடராசன் அவர்களுக்கு விசேஷ உபசாரஞ்செய்து தூதர்கள் மூலமாகச் செய்தியைத்தெரிவித்து ஸ்ரீகிருஷ்ணன் முதலான பந்துக்களையும் மற்றும் அரசர்களையும் வரவழைத்து, கிருஷ்ணனுடன்பிறந்தவளான சுபத்திரை யினிடத்து அருச்சுனனுக்குப் பிறந்த குமாரனான அபிமந்யுவுக்குத் தன்மகளான உத்தரையைச் சுபமுகூர்த்ததில் மணம் புரிவித்தான்.

பின்பு பாண்டவர்கள் விராடனால் அமைக்கப்பட்ட உபப்பிலா வியமென்ற பட்டணத்தையடைந்து கிருஷ்ணன் முதலியவர்களுடனே இராச்சியம் பெறும் உபாயத்தை ஆலோசித்து முடிவு செய்து உலூகனென்னும் அந்தணனைத் திருதராட்டிரனிடந் தூதனுப்ப, அவ்வேதியன் சென்று செய்தி கூறுகையில், அங்குத் துரியோதனன், துரோணர்முதலிய பெரியோர்கள்பலர் சொல்லவுங் கேளாமல் கர்ணன்முதலிய சிற்றினத்தவரின் கருத்தையே முக்கியமாகத்தழுவிச் சிறிதும்இராச்சியங் கொடுக்கமாட்டேனென்று மறுத்துவிட, அச்செய்தியை அம்முனிவன் பாண்டவர்க்குங் கண்ணனுக்குந் தெரிவித்துச் சென்றான். அதன்பின் கண்ணபிரானைத் தந்தமக்குப் போரில் ஏற்ற துணையாகும்படி துரியோதனனும் அருச்சுனனும் ஒருங்கேசென்று வேண்ட, அப்பெருமான் தந்திரமாக, துரியோதனனுக்கு யாதவசேனை முழுவதையுந் துணையனுப்புவதாகச் சொல்லி, தான் மாத்திரம் பாண்டவர்க்கே துணைவனாயினான். பின் திருதராட்டிரனது வேண்டுகோளால் சஞ்சயனென்னும் முனிவன் பாண்டவர்பக்கல்வந்து 'அரசாட்சி பலபெருந்துன்பங்களுக்கும் இடமாதலால், அதனிடத்து ஆசையை விட்டு வனத்தையடைந்து பெருந்தவஞ்செய்தலே சிறந்த அறிவு' என்று வைராக்கியம்போதிக்க, பாண்டவர்கள் அதற்குச் சிறிதும் உடன்படாது மறுத்து விட்டனர். அதன்பின்பு பாண்டவர் மீண்டும் ஆலோசித்துக் கண்ணபிரானையே தூதனுப்ப, அப்பிரான்சென்று சொன்ன நீதிகளையுஞ் சற்றும் உட்கொள்ளாமல் துரியோதனன் சிறிதும்

*அவர்களுக்கு இடங்கொடுக்கமாட்டேனென்று துணிவாய்க் கூறிவிட்டதுமன்றி அங்குக் கிருஷ்ணனைக்கொல்லும்படி ஒரு தந்திரமுஞ்செய்ய, கிருஷ்ணபகவான் தனது திவ்வியசக்தியால் மிகப்*
*பெரிதாக விசுவரூபமெடுத்து அதற்குத்தப்பி மீண்டு பாண்டவரிடம்வந்து அங்குநடந்தசெய்திகளை யெல்லாந் தெரிவித்தருளினான். பின்பு, பாண்டவர் ஏழு அகௌஹிணிசேனையையும், கௌரவர் பதினொரு அகௌஹிணிசேனையையுந் திரட்டிக்கொண்டு, குருக்ஷேத்திரத்தில் வந்து எதிர்த்து உக்கிரமாகப் பெரும்போர் செய்ய ஆயத்தமாயினர்.*

### *1.--கடவுள் வாழ்த்து*

***மேவரு ஞானா னந்த வெள்ளமாய் விதித்தோ னாதி***
***மூவரு மாகி யந்த மூவர்க்குண் முதல்வ னாகி***
***யாவரும் யாவு மாகி யிறைஞ்சுவாரிறைஞ்சப் பற்ப***
***றேவரு மாகி நின்ற செங்கண்மா லெங்கள் கோவே.***

*(இதன் பொருள்.) மேவு அரு - அடைதற்கு அருமையான, ஞானம் ஆனந்தம் வெள்ளம் ஆய் - ஞானம் ஆநந்தம் என்னும் இவற்றின் மிகுதிமயமாய், விதித்தோன்ஆதி மூவர்உம் ஆகி - படைத்தற்றொழிற் கடவுளான பிரமன் முதலியதிரிமூர்த்திகளுந்தானாய், அந்த மூவர்க்குள் முதல்வன் ஆகி - அத்திரிமூர்த்திகளுள்ளுந் தலைவனாய், யாவர்உம் யாஉம் ஆகி - எல்லாவுயர்திணைப் பொருள்களும் எல்லா வஃறிணைப் பொருள்களுமாய், இறைஞ்சுவார் இறைஞ்ச பல் பல் தேவர்உம் ஆகி - (தந்தம்மை) வணங்குதற்குரியவர்கள் வணங்கும்படி (அந்தந்த மதத்துக்குரிய) பலபல தேவர்களின் வடிவமுமாய், நின்ற - (என்றும் அழியாது) நின்ற, செம் கண் மால் - சிவந்த திருக்கண்களையுடைய திருமால், எங்கள் கோ - எங்களுக்குத் தலைவனாவன்; (என்றவாறு.)*

*வீட்டுமபருவம் தொடங்கப்போவதால், கடவுள்வாழ்த்து முதலிற் கூறுகின்றார். ஞானவெள்ளமாய் என்றது - எல்லாவற்றையும் எப்பொழுதும் ஐயந்திரிபற அறியும்*
*அறிவின்மிகுதியையுடையவனாயென்றபடி. ஆனந்த வெள்ளமாய் என்றது. எல்லாவின்பங்களினும் மேம்பட்ட நிரதிசயப்பேரின்பத்தையே எப்பொழுதும் உடையவனாயென்றபடி. மனமொழிமெய்களுக்கெட்டாத பேரறிவு பேரின்பங்கள், இங்கு 'மேவருஞானானந்தவெள்ளம்' எனப்பட்டன. விதித்தோனாதிமூவருமாகி என்றது, பிரமருத்திரர்க்கு அந்தராத்மாவாய் நின்று அவர்களைக் கொண்டு படைத்தல் அழித்தல் தொழில்களை நிகழ்த்தித் திருமால் தானான நிலையில் நின்று காத்தற்றொழிலைப் புரிந்தருளுதலால்; "ஆக்குமாறயனா முதலாக்கிய வுலகங், காக்குமாறு செங்கண்ணிறை கருணையங் கடலாம், வீக்குமாறரனாமவை வீந்தநாள் மீளப், பூக்குமாமுத லெவனவன்பொன்னடிபோற்றி" என இந்நூலின்முதற் கடவுள் வாழ்த்திலுங் கூறினார்: "நான்முகனை நாராயணன் படைத்தானான்முகனுந், தான்முகமாய்ச் சங்கரனைத் தான் படைத்தான்" என்ற சித்தாந்தத்தின்படி திரிமூர்த்திகளுள்ளும் மற்றையிரு மூர்த்திகளுக்குங் காரணமாகிய மூர்த்தி திருமா லாதலால், 'அந்த மூவர்க்குண்முதல்வனாகி' என்றார்: "முதலாவார் மூவரே யம்மூவருள்ளும், முதலாவான் மூரிநீர்வண்ணன்" என்றார் பொய்கையாழ்*
*வாரும், 'மூவர்க்குமுதல்வனாகி' என்றபாடத்துக்கு - திருப்பாற் கடலிலெழுந்தருளியுள்ள திருமாலின் வியூகமூர்த்திகளாகிய வாசுதேவன் சங்கர்ஷணன் பிரத்யும்நன் அநிருத்தன் என்ற நால்வருள் பிரதான மூர்த்தியான வாசுதேவன் பிரமவிஷ்னுருத்ரரூபிகளாய்ப் படைத்தல் காத்தல் அழித்தல் தொழில்களைச் செய்யும் மற்றை மூவர்க்குங் காரண னாதலால், அந்நிலையைக்கருதி அங்ஙனங் கூறிய தென்க; "மூவரா-யவர்களுக்கு முதல்வனாகிய மூர்த்தி" என்றார் கீழ்க் கிருட்டிணன் தூதுசருக்கத்தும். "ஸர்வம் விஷ்ணுமயம்ஜகத்" என்றபடி சகல சேதநாசேதநங்களின் உள்ளும் புறம்பும் எம்பெருமான் வாசியறக் கலந்து நிற்றலின், 'யாவரும்யாவுமாகி' என்றது; "யாவையும் யவருந் தானாய்", "அண்டத் தகத்தான் புறத்துள்ளான்" என்றார் திருவாய்மொழியிலும் "தமருகந்த தெவ்வுருவ மவ்வுரு வந்தானே, தமருகந்த தெப்பேர்மற் றப்பேர்-தமருகந்த, தெவ்வண்ணஞ் சிந்தித் திமையா திருப்பரே, யவ்வண்ண மாழியா னாம்," "நும்மின்கவிகொண்டு நும்நு மிட்டாதெய்வ மேத்தினாற், செம்மின் சுடர்முடி யென்றிரு மாலுக்குச் சேருமே" எனஆழ்வார்களருளிச்செய்தபடி உலகத்தில் அந்தந்த மதத்தவர் கொண்டாடுந் தெய்வமெல்லாம் 'எம்பெருமானது சொரூபமே யாதலால்' 'இறைஞ்சுவாரிறைஞ்சப் பற்ப றேவருமாகி' என்றும், கடவுள் எப்பொழுதும் அழியாது நித்தியனாயிருத்தலால் 'நின்ற' என்றுங் கூறினார். 'எங்கள்கோவே' என்றார், தம்போலியரையும்*

*உளப்படுத்த;தம் கோத்திரத்தவரை உளப்படுத்த எனினுமாம். திருமாலின் திருவவதாரவிசேஷமாகிய கண்ணபிரான் இங்ஙனம் தானிருக்கிற உண்மைத்தன்மையை அருச்சுனனுக்குக் காட்டியருளுகிற செய்தி இச்சருக்கத்திற் கூறப்படுதலால், அதற்கேற்ப இங்ஙனங்கடவுயாதலாள்வாழ்த்துக் கூறினார்: மேல் நிகழ்கிறசரித்திரத்தின் குறிப்பைச் சொல்லினாலாவது பொருளினாலாவது கருத்தினாலாவது ஒருவாறுதோன்றக் கடவுள்வாழ்த்துக் கூறுதலும் மகாகவிகளது மரபாம்.*

*பல+பல+தேவர்=பற்பறேவர் ; பலவென்பது - தன்முன் தான்வரவும் வேறுவரவும் அகரங்கெட லகரம் விகாரப்பட்டதன்றி, வருமொழித் தகரவொற்றுத் திரிய நிலைமொழியீற்றுலகரங் கெட்ட தென்க: [நன் -உயிர் - 20 : மெய்.34,26.]*

*இதுமுதற் பதினேழுகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களுமாகி வந்த* ***அறுசீர்க்கழிநெடிலடி யாசிரியவிருத்தங்கள்.*** *(1)*

***2.-இதுமுதல் ஆறுபாடல்கள்-கண்ணன் அருச்சுனனுக்குத் தத்துவங்களை உபதேசித்தமையைக் கூறும்.***

***மாயையென்றொருத்திதன்பான்மனமெனுமைந்தன்றோன்றித்***
***தூயநல்லறிவன்றன்னைத்தோற்றமின்றாக்கிவைத்தான்***
***தாயொடுதந்தைமக்கடாரமென்றிவர்பால்வைத்த***
***நேயமுமவன்றனாலேநிகழ்ந்ததோர்நினைவுகண்டாய்.***

*(இ - ள்) மாயை என்ற ஒருத்திதன்பால் - மாயையென்ற ஒருத்தி இடத்தில், மனம்எனும் மைந்தன் தோன்றி - மனமென்னும் புத்திரன் உண்டாகி, தூயநல் அறிவன்தன்னை - பரிசுத்தமான நல்ல ஞானமென்கிறவனை, தோற்றம் இன்று ஆக்கி வைத்தான் - வெளிப்படாத படி செய்திட்டான்; தாயொடு தந்தை மக்கள் தாரம் என்ற இவர்பால் வைத்த நேயம்உம் - தாய் தந்தை பிள்ளைகள் மனைவி என்கிற இவர்களிடத்து வைத்த அன்பும், அவன் தனால்ஏ நிகழ்ந்தது ஓர் நினைவு கண்டாய் - அந்த மனமென்பவனால் உண்டானதொரு எண்ண மென்றே அறிவாய்; (எ - று.)-இவை ஆறுபாடல்களும், பகவத்கீதையின் சுருக்கமான சாராமிசம்.*

*மாயையாவது-உள்ளதை இல்லாததாகவும், இல்லாததை உள்ளதாகவும், ஒன்றைமற்றொன்றாகவுங்காட்டும் எம்பெருமானது ஒருசக்தி. மனம் அந்தமாயைக்கு வசப்பட்டபோது, பொருள்களின் நிலையை உள்ளபடி அறியுந் தத்துவஞானம் தோன்றுவதில்லை; ஆகவே, நிலையுள்ளபொருள்களை நிலையில்லாதனவென்றும், நிலையில்லாத பொருள்களை நிலையுள்ளனவென்றும் மாறுபட அறியும் விபரீதஞானம் தலையெடுக்கும்; அதனாலேயே, நித்தியமான ஆத்மாவுக்கு யாதொரு சம்பந்தமும் படாமல் அநித்தியமான தேகத்தையே பற்றிய தாய்முதலியோரிடத்துச் சுற்றத்தவரென்ற பொய்யபிமானம் உண்டாகி நிலைநிற்கின்றது என்றதாம். ஒருத்திதன்பால், பால் - ஏழனுருபு. என்ற - ஈறு தொக்கது; என்றுஎனஎடுத்து எண்ணிடைச்சொல்லுமாம். கண்டாய் என்பது -- காண்பாயெனப் பொருள்படுதல், காலவழுவமைதி; இனி இதனை இடைச்சொல் தன்மைப்பட்டுத் தேற்றப் பொருள்தருவ தென்றுங் கொள்ளலாம். வடமொழியில் "மாயா" என்பது பெண்பாற்சொல்லாதலால், அதனை இங்குப் பெண்ணாகவும், மற்றை மனமும் அறிவும் பெண்பாற்சொற்களல்ல வாதலின், அவற்றை ஆணாகவும் உருவகப்படுத்தினார்; உருவகவணி. (2)*

***3. குயின்றவைம்பொறிவாய்நின்றுகுறித்தவைம்பொருளுந்தானே***
***அயின்றுமுக்குணங்களோடுமறுவகைப்படைகளோடும்***
***பயின்றரசாளுமந்தமனமெனும்பகைவனாங்குத்***
***துயின்றபோதொளித்துநின்றதோன்றலுந்தோன்றுங் கண்டாய்.***

*(இ - ள்.) குயின்ற - (உடம்பிற்) பொருந்திய, ஐம் பொறி வாய்- (மெய் வாய் கண்மூக்குச் செவி யென்னும்) பஞ்ச இந்திரியங்களி னிடமாக, நின்று - இருந்து, குறித்த- (முறையே அப்பஞ்சேந்திரியங்களுக்கு விஷயமாக) அமைக்கப்பட்ட, ஐம் பொருள்உம் - (ஊறு சுவை ஒளி நாற்றம் ஓசை என்னும்) ஐந்துபுலன்களையும், தானே அயின்று - தானே அனுபவித்து, முக்குணங்களோடுஉம்--(சத்துவம் ரஜஸ் தமஸ் என்னும்) மூவகைக்குணங்களுடனும், அறுவகை படைகளோடுஉம்- (காமம் கோபம் லோபம் மோகம் மதம்மாற்சரியம் என்னும்) ஆறுவகைச் சேனைகளோடும், பயின்று - கூடிப்பழகி, அரசு ஆளும் - அரசாட்சிசெய்கிற, அந்த மனம் எனும் பகைவன்- கீழ்க்கூறின மனமென்கிற சத்துருவானவன், துயின்றபோது - தூங்கிய பொழுது, ஆங்கு ஒளித்து நின்ற தோன்றல்உம் -
அவனால் தோற்றமிலனாய் நின்ற (தூயநல்லறிவனென்கிற) புருஷனும், தோன்றும் - வெளிப்பட்டுவிளங்குவான்; (எ - று.)- 'கண்டாய்' என்பதற்குக் கீழ்உரைத்தவாறு உரைக்க.*

*பஞ்சேந்திரியங்களுக்கு வசப்பட்டு அவற்றின் புலன்களிலே முக்குணங்களோடும் மற்றும்பல தீச்சிந்தைகளோடும் மனத்தை அதுபோகிறவழிப்படி யதேச்சையாக விட்டிடாமல் அடக்கிவைத்தால் தத்துவஞானம் உண்டா மென்பது கருத்து. அரிஷட்வர்க்க மென்றும் உட்பகை யென்றுங் கூறப்படுகிற காமம் முதலிய ஆறினையும் யானை தேர் குதிரை வில் வாள் வேல் என்னும் அறுவபைப்படைகளாக* ***உருவகப்படுத்தினார்;*** *மனமென்னும் பகைவன் விவேகமாகிய அரசனைப் போர்செய்து அடக்குதற்கு இவை துணை நிற்றாலென்க. அரசாளுதல் -
கருதியபடியெல்லாஞ்செல்லுதல். அந்த மனம் - மாயையினிடத்துத் தோன்றி அறிவைத் தோற்றமின்றாக்கிவைத்த மன மென்றவாறு. தோன்றல் - விளங்குந்தன்மையனான புருஷன்; இதில் அல் - கருத்தாப்பொருள்விகுதி. இது - ஆண்பாற்சிறப்புப்பெயர். முக்குணங்களை மந்திரிகளாகக்கொள்க. மனத்தின் தூண்டுதலாலே ஐம்பொறிகள் ஐம்புலன்களின்வழியே செல்லுதலால், 'பொறிவாய்நின்று பொருளாயின்று' என்றார்; "உண்டற்குரிய வல்லாப்பொருளை, உண்டன போலக் கூறலு மரபே" என்ற வழுவமைதியால், 'அயின்று' எனப்பட்டது. போது - மரூஉ. (3)*

***4. அந்தநல்லறிவன்றன்னையறிந்தவரறிஞராவார்
தந்தையால்வகுக்கப்பட்டசராசரப்பொருள்கடோறும்.
வந்தவான்றீம்பானெய்போலுயிர்க்குயிராகிவாழும்
பந்தமதுணர்ந்துநேரேபார்க்குங்காற்பகையார்நண்பார்.***

*(இ-ள்.) அந்த நல் அறிவன்தன்னை - அந்தச் சுத்தஞான மென்கிற புருஷனை அறிந்தவர் - (உள்ளபடி) உணர்ந்தவரே, அறிஞர் ஆவார் - புத்திமான்களாவார்கள்; தந்தையால் வகுக்கப்பட்ட - (எல்லாப் பிரபஞ்சத்துக்கும்) பரமபிதாவான கடவுளால் அமைக்கப்பட்ட, சர அசரம் பொருள்கள்தோறுஉம் - சஞ்சரிப்பனவும் சஞ்சரியாதனவுமாகிய எல்லாப் பொருள்களிலும், ஆன் வந்த தீம்பால் நெய்போல் - பசுவினிடமாக வந்த இனிய பாலினிடத்து நெய்போல, உயிர்க்கு உயிர் ஆகி வாழும் - (சகல) சிவாத்துமாக்களினுள்ளும் அந்தராத்துமாவாய் (மறைந்து அப்பரமான்மா) வாழ்கின்ற, பந்தம்அது - சம்பந்தத்தை, நேரே உணர்ந்து - வழுவற அறிந்து, பார்க்கும் கால் - ஆலோசிக்குங்காலத்து, பகை யார் நண்பு ஆர் - (ஒருவனுக்குப்) பகைவர் எவர்? நண்பர் எவர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)*

*எல்லாச்சீவான்மாக்களிடத்தும் பரமான்மா ஒருதன்மையாகவே பொருந்தியிருக்கையில் அவற்றில் சிலவற்றைப் பகையாகவும் சிலவற்றை நண்பாகவும் கருதுவது மாயாகாரியமேயன்றி வேறன்று என்பதாம். பால் நெய் - விட்டுப் பிரியாது உள்ளுறைதற்கு உவமம். சராசரம் - உம்மைத்தொகை தீர்க்கசந்தி: எழு
வகைப்பிறப்பினுள், தேவர் மக்கள் விலங்கு பறவை ஊர்வன நீர்வாழ்வன என்ற ஆறும் - சரமும், ஸ்தாவரம் - அசரமுமாம், தந்தையால்- எல்லாப்பிராணிகளுக்கும் பிதாமகனான படைத்தற் கடவுளாகிய பிரமதேவனாலென்றுமாம், பகை, நண்பு - அவற்றையுடையார்க்குப் பண்பாகுபெயர். யார் என்றதில், வினா - எதிர்மறை குறித்தது. ஆர்-யார் என்றதன் மரூஉ. (4)*

***5. உம்பருமுனிவர்தாமும்யாவருமுணராவொன்றை
இம்பரின்றுனக்குநானேயிசைவுறவுணர்த்தாநின்றேன்***

**ஐம்பெரும்பூத்தானுமமைத்தனவுடலம்யார்க்கும்
நம்பனுமொருவனுள்ளேஞானியாய்நடத்துகின்றான்.**

*(இ-ள்.) உம்பர்உம் - தேவர்களும், முனிவர்உம் - முனிவர்களும், யாவர்உம்- மற்றும் எல்லோரும், உணரா - அறியாத, ஒன்றை-ஒரு தத்துவப்பொருளை, இம்பர்- இவ்விடத்து, இன்று - இப்பொழுது, உனக்கு-, நானே-, இசைவு உற - பொருந்தும்படி, உணர்த்தாநின்றேன்- அறிவிக்கிறேன்; (கேள்): யார்க்குஉம்- எல்லாப்பிராணிகளுக்கும், உடலம்-சரீரங்கள், ஐ பெருபூதத்தான்உம் அமைத்தன- ஐந்து பெரிய பூதங்களாலுஞ் செய்யப்பட்டன; உள்ளே- அவற்றினுள்ளே, ஞானி ஆய் -ஞானசொரூபியாய், நம்பன்உம் ஒருவன் - ஒப்பற்ற கடவுளொருவன், நடத்துகின்றான் - (இருந்து எல்லாத் தொழில்களையும் அவற்றைக்கொண்டு) செய்விக்கிறான்; (எ - று.)*

*சடைப்பூதங்களினுள்ளே மனிதன் புகுந்து அவற்றைக்கொண்டு தொழில் நடத்துதல்போல, பகவான் சேதநாசேதநங்களினுள்ளேயிருந்து தொழில் நடத்துகின்றன னென்க. ஐம்பெரும் பூதம் - பஞ்ச மகாபூதம்; நிலம் நீர் தீ காற்று வானம் என்பன; பிருதிவி அப்பு தேயு வாயு ஆகாசம் எனப்படும். இப்பஞ்ச பூதங்களைப் பஞ்சீகரணம் பண்ணுதலாலேயே பிரபஞ்சப்பொருள்கள் உண்டாகின்றன; பஞ்சீகரணம் பண்ணுதலாவது - பிருதிவியில் ஒருபாதி பிருதிவியும் மற்றைப்பாதி அப்பு தேயு வாயு ஆகாசங்களும், இவ்வாறே, மற்றைப்பாதி அதுவும் பாதிமற்றைநான்குமாகக் கலக்கச் செய்தல். 'யார்க்கும்' எனச் சிறப்புடையுயர்திணைமேல்வைத்துக் கூறினாராயினும், அஃறிணைப் பொருள்களையும் உபலக்ஷணத்தாற் கொள்க. நம்பன் - (யாவராலும்) நம்பிச் சரணமடையப்படுபவன் எனக் காரணப்பெயர்; நம்பு-பகுதி, அன் - விகுதி: இனி, நம் என்பது பகுதியாக நமக்கு இன்னானென்னும் பொருள்படுவதோர் உயர்ச்சிச்சொல்லென்றுங் கொள்ளலாம். உணர்த்தாநின்றேன், ஆநின்று - நிகழ்கால விடைநிலை. தாம்-அசை. (5)*

**6. என்னைநீபுகலக்கேண்மோவெங்குமாயாவுமாகி
மன்னியபொருளும்யானேமறைக்கெலாமுடிவும்யானே
உன்னையான்பிறிவதில்லையொருமுறைபிறிந்துமேனாள்
நன்னிலாவெறிக்கும்பூணாய்நரனுநாரணனுமானோம்.**

*(இ-ள்.) நல் - அழகிய, நிலா- சந்திரகாந்தியோடொத்த காந்தியை. எறிக்கும் - வீசுகின்ற, பூணாய் - ஆபரணங்களையுடைய அருச்சுனனே! என்னை-, புகல - (இத்தன்மையனென்று யானே) சொல்ல, நீ-, கேண்மோ - கேட்பாயாக; எங்குஉம் ஆய் - எல்லா விடங்களிலும் பொருந்தி, யாஉம் ஆகி - எல்லாப்பொருள்களுமாய், மன்னிய - அழியாதுநிலைபெற்ற, பொருள்உம்-பரம்பொருளும், யான்ஏ- நானே; மறைக்கு எலாம் முடிவுஉம்-வேதங்களுக்கெல்லாம் முடிவான பொருளும், யானே-;உன்னை-, யான்-, பிறிவது இல்லை - (எப்பொழுதும்) விட்டுநீங்குவதில்லை; மேல்நாள் - முற்காலத்தில், ஒருமுறை - ஒருதரம், பிறிந்து - நீங்கி, நரன்உம் நாரணன்உம் ஆனோம் - நரநாராயணராய் அவதரித்தோம்; (எ - று,)*

*முன்னொருகாலத்தில் குருசிஷ்யகிரமத்தை உலகத்தில் அனைவர்க்கும் விளக்கும்பொருட்டு நரனென்னும் சிஷ்யனும் நாராயணனென்னுங் குருவுமாகப் பதரிகாச்சிரமத்தில் திருமால்தோன்றிச் சிஷ்யனுக்குக் குரு தத்துவப் பொருள்களை உபதேசிப்பதாக வீற்றிருக்கின்றனர்; "நாராயணனாயுலகத்தறநூல், சிங்காமை விரித்தவனெம்பெருமான்" என்பது பெரிய திருமொழி. அவர்கள் தாமே இங்கு முறையே அருச்சுனனுங் கண்ணனுமாக அவதரித்தவர்; இங்கும் அருச்சுனனைச் சிஷ்யனாக்கிக் கண்ணன் குருவாய் நின்று தத்துவம் விளக்கியருளுதல் காண்க; இதுபற்றியே, அருச்சுனனுக்கு, நரனென்று ஒருபெயர். கேண்மோ, மோ - முன்னிலையசை. நாரணன்- நாராயணன் என்பதன் விகாரம்; நார + அயந எனப் பிரியும்; சிருஷ்டிப்பொருள்களுக் கெல்லாம் இருப்பிடமானவ னென்றும், பிரளயப்பெருங்கடலை இருப்பிடமாவுடையவ னென்றும், மற்றும் பலவாறும் பொருளுரைப்பார். "செய்கின்ற கிறியெல்லாம் யானே யென்னும் செய்வானின் றனகளும் யானே யென்னும், செய்துமுன் னிறந்தவும் யானே யென்னுஞ் செய்கைப் பயனுண்பேனும் யானே யென்னும் செய்வார்களைச் செய்வேனும் யானே யென்னும்" என்றும், "உற்றார்க ளெனக்கில்லை யாருமென்னும் உற்றார்க ளெனக்கிங்கெல்லாரு மென்னும், உற்றார்களைச் செய்வேனும் யானே யென்னும் உற்றார்களை யழிப்பேனும் யானேயென்னும்"*

*என்றுந் திருவாய்மொழியிற் கூறியுள்ளவற்றின் கருத்துக்களை இங்கே யுணர்க. கொல்பவனும் கொல்லப்படுபவனும் கொலைத்தொழிலும் கொல்விப்பவனும் எல்லாம் நானே யாதலால், நீ உன்னைக் கொல்பவனாகவும், சுற்றத்தவரைக் கொல்லப்படுபவராகவும் மாறுபாடாக நினைத்துப் பந்து வதத்தைப் பற்றிச் சிறிதுஞ் சிந்திக்கவேண்டா என்று உபதேசித்துக் கண்ணபிரான் அருச்சுனனது மனத்தடுமாற்றத்தை யொழித்தருளுகிறார். ஏகாரங்கள் பிரிநிலையோடு தேற்றம். மறைக்கெலாமுடிவு - வேதாந்த சித்தாந்தம். மறைமுடிவு என்றது, வேதத்தின்பாகங்கள் இரண்டனுள் பகவானைப்பற்றிச் சொல்வதாய்ப் பிரமகாண்டமெனப்படுகிற உபநிஷத்துக்களை. இரண்டாமடியிலுள்ள உம்மைகள் இரண்டனுள், முன்னது - எதிரது தழுவியதும், பின்னது - இறந்ததுதழுவியதுமாம்.(6)*

***7. பின்னொருபிறப்பின்யாமேயிராமலக்குமப்பேர்பெற்றோம்***
***இந்நெடும்பிறப்பினீயும்யானுமாயீண்டுநின்றோம்***
***நின்னிடைமயக்குமிந்தநேயமுமொழிகவென்று***
***தன்னிலையவற்குக்காட்டித்தத்துவந்தெளிவித்தானே.***

*(இ-ள்) பின் ஒரு பிறப்பின் - பின்பு ஒரு அவதாரத்திலே. யாம்ஏ - நாமிருவருமே, இராம லக்குமர் பேர் பெற்றோம் - ராமலஷ்மணரென்னும் பெயரை யடைந்தோம்; இ நெடு பிறப்பில் - இந்தப் பெரிய அவதாரத்திலே, நீஉம் யான்உம் ஆய் ஈண்டு நின்றோம் - அருச்சுனனாகிய நீயும் கிருஷ்ணனாகிய நானுமாய் இங்கு நின்றோம்; (ஆதலால்), நின்னிடை - உன்னிடத்திலுள்ள, மயக்குஉம் - திகைப்பையும்,இந்த நேயம்உம் - (உறவினரென்றும் நண்பினரென்றுங் கொண்ட) இந்தஅபிமானத்தையும், ஒழிக - நீங்குவாயாக, என்று - என்று அருளிச்செய்து, தன்நிலை அவற்கு காட்டி - தனது உண்மை நிலையான விசுவரூபத்தை அவ்வருச்சுனனுக்குக் காண்பித்தலுஞ் செய்து, தத்துவம் தெளிவித்தான் - உண்மையுணர்வை மனந்தெளியும்படி செய்தருளினான்;(எ-று,)*

*தான் உபதேசித்த உண்மைப்பொருளை அருச்சுனனுக்குக் கட் புலனாக்கி அவனுடைய திகைப்பைத் தீரவொழித்தற்குக் கண்ணன் தன்னிலையை அவற்குக் காட்டியருளினான். ஒரு காலத்தில் தேவர்களெல்லோரும் இராவணன்முதலிய இராக்கதர்களின் உபத்திரவம் பொறுக்க மாட்டாமல் ஸ்ரீமகாவிஷ்ணுவைச்சரணமடைந்துவேண்ட, அவர் தசரதசக்கரவர்த்திதிருமகனாய் ஸ்ரீராமனாக லட்சுமணபரத சத்துருக்கன ரென்னும் தம்பிமார்மூவருடனே திருவவதரித்து அரக்கர்களனைவரையும் அழித்து நல்லோரைக் காத்தருளினார். இராமன் கண்ணனும், லஷ்மணன் அர்ச்சுனனு மாதலால், முதலடியில் 'இராமலக்குமப்பேர்பெற்றோம்' என்ற கிரமத்திற்குஏற்ப இரண்டாமடியில் 'யானும் நீயுமா யீண்டுநின்றோம்' என முறைப்படிவைக்காதது - **எதிர்நிரனிறைப் பொருள்கோ** ளின்பாற்படும்; [நன்-பொது. 63]: கீழ்க்கவியில் "நரனுநாரணனு மானோம்" என்றதையும் இதனோடு சேர்க்க. லஷ்மணன் ஆதிசேஷனது அவதாரமாதல் மாத்திரமேயன்றித் திருமாலினது அம்சமுமாதல்போல, அர்ச்சுனனும் இந்திரனது அவதாரமாதல் மாத்திரமேயன்றித் திருமாலினது அமிசமுமாவ னென அறிக. இராமலக்குமர் - வடசொற்றிரிபு. ராமனென்பதற்கு- தன்திறத்தில் யாவரும் மனங்களித்திருக்கப்பெற்றவ னென்பது பொருள்; சகலசற் குணங்களும் பொருந்தினவனென்பது கருத்து. லஷ்மணனென்பதற்கு - (உத்தமபுருஷ) லக்ஷணங்கள் பலவற்றையும் உடையவனென்றும், (பகவத்கைங்கரிய) லஷ்மியோடுகூடியவனென்றும் பொருளாம். இராமலக்குமர்+பேர்=இராமலக்குமப் பேர்;"சில விகாரமா முயர்திணை." மயக்கு - மயங்கு என்னும் முதனிலைதிரிந்த தொழிற்பெயர். மயக்காவது - பொருளல்லவற்றைப் பொருளென்று உணரும் விபரீதஞானம். (7)*

*8.-உபதேசத்தால் தெளிந்தஅருச்சுனன் ஸ்ரீகிருஷ்ணனைப் போற்றிச் செருச்செய்யச் செல்லுதல்.*

***ஆங்கவன் றெளிந்து தேறி யறம்பொருளின்ப முற்றிப்***
***பாங்கினானின்னையெய்தும்பயனெனக்குரைத்தாயென்று***
***பூங்கடிக்கமலநாறும்பொன்னடிபோற்றியான்செய்***
***தீங்கெலாம்பொறுத்தியென்றுசெருச்செயுமாறுபூண்டான்.***

*(இ - ள்.) ஆங்கு - அப்பொழுது, அவன் - அவ்வருச்சுனன், தெளிந்து - மயக்கந்தெளிந்து, தேறி - (நல்லுணர்வு) தேர்ந்து, 'அறம் பொருள் இன்பம் முற்றி - தருமஅர்த்தகாமமென்னும் மூன்றுபுருஷார்த்தங்களையும் முடிய ஒழித்து, பாங்கினால் - (பிரபத்தியாகிய பரம) உபாயத்தால், நின்னை எய்தும் - உன்திருவடியையடைந்து உய்தலாகிய, பயன் - நல்லபிரயோசனத்தை, எனக்கு உரைத்தாய் - அடியேனுக்கு அருளிச்செய்தாய்,' என்று - என்று (கண்ணனைநோக்கி உபசாரவார்த்தை) கூறி, பூ கடி கமலம் நாறும் பொன் அடிபோற்றி - சிறந்த பரிமளமுடைய செந்தாமரைமலர் போலத்தோன்றுகின்ற அழகிய (கண்ணனது) திருவடிகளை வணங்கி, யான் செய் தீங்கு எலாம் பொறுத்தி என்று - 'நான் செய்த குற்றங்களையெல்லாம் பொறுத்தருள்வாயாக' என்று (அபராதக்ஷாமணமுங்) கூறி, செரு செயும் ஆறு பூண்டான்-போரைச் செய்யும்படி மேற்கொண்டான்;(எ - று,)*

*"ஆயாவென் மைத்துனனே யாழித்தேர்ப் பாகாநான், பேயானுரைத்த பெரும்பிழைகள் - மாயா, பொருபடைக்கை மாலே பொறுத்தருள்வாயென்று, திருவடிக்கே வீழ்ந்தான் தெளிந்து" என்பது பாரதவெண்பா. ஆங்கு - அவ்விடத்திலென்றுமாம்; என்றது, போர்க்களத்தில் தேர்த்தட்டை. கீதையில் "ஸர்வதர்மாந் பரித்யஜ்ய மாமேகம் ஸரணம் வ்ரஜ [எல்லாவுபாயங்களையும் முற்றவிட்டு என்னையொருவனையே நீ அடைக்கலமாக அடைவாய்]" என்ற பகவானது பிரதானமான வாக்கியத்தின் கருத்தை அனுசரித்து 'அறம்பொருளின்பமுற்றிப் பாங்கினால் நின்னையெய்தும் பயனெனக்குரைத்தாய்' என்பதற்குப் பொருள் கூறப்பட்டது; **"பரனைநினைந் திம்மூன்றும், விட்டதே பேரின்பவீடு"** என ஔவையார் கூறியதையும் அறிக. அறம்பொருளின்பம் - இம்மூன்றும்திரிவர்க்க மெனப்படும்: இவற்றுள் அறமாவது-மனு முதலிய நூல்களில் விதித்தனசெய்தலும், விலக்கியனஒழிதலுமாம்; (இன்னவை செய்யத்தக்கவை யென்றும் இன்னவை செய்யத்தகாதவை யென்றும் நூல்களால் வரை) அறுக்கப்பட்டமைபற்றி, அறமென்று பெயர். பொருளாவது- தருமவழியிற்சேர்க்கப்பட்ட பொன்மணி நெல் முதலவாகும். இன்பமாவது - ஒருகாலத்து ஒருபொருளால் ஐம்புலனும் அனுபவிக்குஞ் சிறப்புடையதான சிற்றின்பம். அறம் - இம்மைமறுமைவீடென்னும் மூன்றையும், பொருள் - இம்மை மறுமை யென்னும் இரண்டையும், இன்பம் - இம்மையொன்றையும் தருவதாதல், 'அறம்பொருளின்பம்' என்ற முறைமைக்குக் காரணம். பொன் - ஆபரணத்துக்குக் கருவியாகுபெயர் எனினுமாம். தீங்கெலாம்- "பலபேசி யதிபாதக மெனக்கருதி யான்மலைவு றேனினி" என்றவை. (8)*

*9.-பிறகுதேரின்மீதேறிக்கொண்டு கிருஷ்ணன் பாண்டவருடன் வீடுமனைக் குறுகி, 'நீ எதிர்ப்பின் எம்மால் வெல்ல முடியுமோ? 'எனல்.*

***பூண்டவெம்பரித்தேர்மீதப்பொய்யிலாமெய்யினானும்***
***பாண்டவர்தாமுமாகப்பகீரதிமைந்தன்றன்பால்***
***ஈண்டினானெய்திநீயேயிவருடன்மலையின்மற்றுன்***
***காண்டகுபோரின்வென்றுகளங்கொளத்தகுமோவென்றான்.***

*(இ-ள்.) (இங்ஙனம் அருச்சுனனது மயக்கத்தையொழித்து அவனைப் போர்புரியஉடன்படுத்தினபின்பு), அ பொய் இலா மெய்யினான்உம் - அசத்தியமில்லாதசொரூபத்தையுடைய அந்தக் கண்ணபிரானும்.-பாண்டவர் தாம்உம் ஆக - பஞ்சபாண்டவர்கள் உடன்வர, பூண்ட வெம்பரி தேர் மீது - பூட்டிய உக்கிரமானகுதிரைகளுயுடைய தேரின்மேலே, (சென்று), பகீரதி மைந்தன்தன்பால் - கங்கைகுமரனான வீடுமனிடத்து, ஈண்டினான் எய்தி - நெருங்கிச்சேர்ந்து, (அவனைநோக்கி), 'நீஏ இவருடன் மலையின் - (யாவரினுஞ் சிறந்த) நீயே இப்பாண்டவர்களுடன் எதிர்த்தால், காண் தகு உன்போரின்-(யாவரும் அதிசயித்துப்) பார்க்கத்தக்க உனதுயுத்தத்தில், (இவர்கள்), வென்று - (உன்னைச்) சயித்து, களம்கொள தகும் ஓ-போர்க்களத்தை ஆக்கிரமிக்க முடியுமோ? [முடியாதன்றோ],' என்றான்-என்று வினவினான்; (எ - று.)*

*பெரியோரைப்பணிந்து அவரனுமதியும் ஆசியும்பெற்றுப் போர் புரிதலே வெற்றியை விளைக்கு மென்ற நூற்கொள்கை, இங்கு அறியத்தக்கது. பீஷ்மன் தான் நினைத்தபொழுது உயிரைவிடுதல் முதலிய பெருவரங்களைப் பெற்றவனும், யாவராலும் வெல்ல முடியாத பராக்கிரமசாலியுமாதலால், அவனை வெல்லுதற்கு அவனையே உபாயங் கேட்குமாறு, மாயவன் இங்ஙனஞ் சென்று*

*வினாவினான். மெய்யினானும் பாண்டவர் தாமுமாக ஈண்டினான் என்றான்-பால்விரவிச் சிறப்பினால் ஒருமுடிபுஏற்றது; பால்வழுவமைதி: [நன்.பொது.27.] இரண்டாமடியில் தாம், தன் - அசைகள். பகீரதி - பாகீரதீஎன்ற வடசொல்லின்விகாரம். பகீரதசக்கரவர்த்தியாற் பூலோகத்திற் கொணரப்பெற்றதுபற்றிக் கங்கைக்குப் பாகீரதியென்று பெயர். கங்காநதியின் பெண் தெய்வம் பிரமசாபத்தினால் மானுடமகளாய்த் தோன்றியபோது அவ்வாறான சாபத்தினாலேயே சந்தனுவாகப்பிறந்த வருணதேவனுக்கு வீடுமன் புத்திரனாகப் பிறந்தானாதலால், அவனை 'பகீரதிமைந்தன்' என்றார். ஈண்டினான் - முற்றெச்சம். நீயே, ஏகாரம் - உயர்வுசிறப்பு. மற்று-அசை; வினைமாற்றுமாம்: பின்புஎன்றுமாம். காண் - முதனிலைத் தொழிற்பெயர். காண்டகு - காணுதற்குத்தக்கஎன நான்கனுருபாக விரிக்க. களம் வென்றுகொளத்தகுமோ எனமொழிமாற்றியுரைத்தல் நேராம். ஓ-எதிர்மறை. (9)*

### *10.*-இதுவும் அடுத்தகவியும் - வீடுமன் தன்னைவெல்லும் உபாயத்தைக் கூறியதைத் தெரிவிக்கும்.

**மற்றவன் றருமராசன்மைந்தனேயவனிக்கெல்லாம்**
**கொற்றவனாகுமென்னைக்கொல்லநீயுபாயங்கேண்மோ**
**அற்றைவெஞ்சமரிற்சீறுமம்பையென்றொருத்திதானே**
**செற்றிடத்தவமுஞ்செய்துசிகண்டியாய்ப்பிறந்துநின்றாள்.**

*இது முதல் மூன்று கவிகள் - குளகம்.*

*(இ - ள்.) (அதுகேட்டு), அவன் - அவ்வீடுமன், '(இனி), தருமராசன் மைந்தன்ஏ - அறத்துக்குத்தலைவனான யமனது குமாரனான யுதிஷ்டிரனே, அவனிக்கு எல்லாம் கொற்றவன் ஆகும் - பூமிமுழுவதுக்கும் அரசனாவன்; என்னை கொல்ல-, நீ-, உபாயம் கேண்மோ-உபாயத்தைக் கேட்பாயாக; அற்றை - அந்நாளில் [முன்னொருகாலத்தில் என்றபடி], சீறும் - (என்மேற்) கோபித்த, அம்பை என்ற ஒருத்தி-அம்பை யென்னும்பேரை யுடைய ஒரு பெண், வெம் சமரில்தான்ஏ செற்றிட - கொடிய போரில் தானே (என்னைக்) கொல்லும்படி, தவம்உம் செய்து - தவத்தையும் பண்ணி, சிகண்டி ஆய் பிறந்துஉம் நின்றாள் - சிகண்டி யென்னும்பெயருள்ள ராஜகுமாரனாய்ப் பிறந்துமிருக்கிறாள்; (எ - று) - இப்பாட்டில் 'அவன்' என்னும் எழுவாய், மேல் பன்னிரண்டாங் கவியில் 'என்றனன்' என்ற வினையைக்கொண்டுமுடியும்.*

***பின்னிரண்டடியிற் குறித்த வரலாறு:-*** *காசிராசனது பெண்கள் மூவரைத் தன் தம்பியான விசித்திரவீரியனுக்கு மணம்புரிவிக்கும் பொருட்டுச் சுயம்வரத்தில் வீடுமன் வலியக் கவர்ந்து தேரேற்றிக் கொண்டுசெல்லுகையில் அரசர்கள் பலர் எதிர்த்துவந்து தோல்வியடைய, அவர்களுள் சிறிதுபோரில்முன்னிட்ட சாலுவனிடத்தில் அம்பையென்பவள் மனத்தைச் செலுத்தியதனால் பிறகு வீடுமன் அந்தச்சாலுவனிடத்திற் சேருமாறு அவளையனுப்பிவிட, அந்தச் சாலுவன் 'பகைவன் கவர்ந்துபோன உன்னை யான் கொள்ளேன்' என்று மணம் மறுத்துவிட்டதனால், அவள் பின்பு வீடுமனை மணஞ்செய்துகொள்ளும் பொருட்டுப் பலவாறுமுயன்றும் பயன்படாது போக, பின்னர் அவள் வனஞ்சென்று தவஞ்செய்து அவ்வீடுமனை மறுபிறவியிற் கொல்லும்படி சிவபெருமானிடம் வரம்பெற்று அக்கினிபிரவேசஞ் செய்து பாஞ்சால தேசத்தரசனாகிய துருபதராசனிடத்திற் பெண்ணாகப்பிறந்து சிகண்டியென்றுபெயர்பெற்று ஆணெனவழங்க வளர்ந்தனள்: பிறகு ஸ்தூணனென்ற யட்சனால் வரமாகத் தனது பெண்தன்மையைமாற்றி ஆண்தன்மை கொடுக்கப் பெற்றன ளென்பது.*

*அற்றை வெம்சமரிற்சீறும் என்பதற்கு - யாற்றொழுக்காக, அந்நாளில் (யான் பரசுராமனோடு) செய்த கொடிய போரில் (யானே வென்றதனாற்) கோபமுற்றஎன்றும் உரைக்கலாம். சாலுவனால் மறுக்கப்பட்ட அம்பையென்பாள் பரசுராமனைச்சார்ந்து தன் கருத்தைத் தெரிவிக்க, அந்த அம்பையின் வேண்டுகோளை நிறைவேற்றுவிக்கக் கருதிப் பரசுராமன் வீடுமனோடுபொருது தோற்றன னென்க. தருமராசன் என்ற சொற்போக்கு- 'தந்தையையொப்பான் மைந்தன்' என்றபடி இவனும் தருமநெறி சிறிதுந்தவறாதவ னென்பதை விளக்கும். ஏ-பிரிநிலை. உம்மைகள் - முறையே எதிரதும் இறந்ததுந் தழுவிய எச்சம். (10)*

***11, பன்னுசீரியாகசேனன்குமரனைப்பத்தாநாளில்***
***என்னெதிரமரிற்காட்டிலியான் படையாவுந்தீண்டேன்***
***பின்னவன்வெகுண்டுசெய்யும்பெருமிதங்கண்டுமீண்டு***
***கன்னனைவெல்லநின்றகாளைகைக்கணையால்வீழ்வேன்.***

*(இ - ள்.) பன்னு - (யாவராலும்) எடுத்துச்சொல்லப்படுகிற, சீர் -புகழையுடைய, யாகசேனன் குமரனை - துருபதராசனது குமாரனான அந்தச் சிகண்டியை, பத்துஆம் நாளில் - பத்தாவது யுத்த தினத்தில், அமரில் - போரில், என் எதிர் காட்டில் - எனது எதிரில் நிறுத்திக்காட்டினால், யான்படை யாஉம் தீண்டேன் - (பெண்ணாயிருந்து ஆணான அவனோடு போர்செய்ய) நான் ஆயுதங்களில் எவற்றையுந் தொடவும்மாட்டேன்; பின் - பின்பு, அவன் வெகுண்டு செய்யும் - அந்தச்சிகண்டி கோபித்துப்போர் செய்கிற, பெருமிதம் - பராக்கிரமத்தை, கண்டு - பார்த்து, மீண்டு - பின்பு, கன்னனை வெல்ல நின்ற காளை கை கணையால் வீழ்வேன் - கர்ணனைச் சயிக்குமாறு உறுதியாய்நின்ற இளவீரனான அருச்சுனனது கையிலுள்ள அம்பினால் (அடிபட்டுப் போர்க்களத்தில்) விழுவேன்;*

*யாகசேனனென்பது, துருபதனுடைய மற்றொருபெயர். இவன் குமரனென்றது, சிகண்டியை. பெருமிதம் - மிக்க அளவு; ஒருவன் மற்றையோரினுஞ் சிறந்துவிளங்குதற்குத் காரணமாகுதலால், பெருமிதமென்று பராக்கிரமத்துக்குக் காரணப்பெயர்: வீரத்தினைப் பெருமிதமென் றெண்ணினான்; என்னை? எல்லாரோடும் ஒப்பநில்லாது பேரெல்லையாக நிற்றல் பெருமித மெனப்படும் என்றற்கு என்பது; என உரைத்ததை அறிக. 'கன்னனை வெல்லநின்றகாளை' என்றது, திரௌபதியைத் துகிலுரிந்தபோது அருச்சுனன் 'துரியோதனனுக்கு உற்ற துணையான கர்ணனை யான் கொல்வேன்' என்று சபதஞ் செய்துள்ளா னாதாலென்க: கர்ணனிடத்துத் தனக்குள்ள துரபிப்பிராயத்தாலும், அருச்சுனனுக்கு ஒரு ஆசீர்வாதமாகவும், வீடுமன் இவ்வாறு கூறினான்: இனி, நடப்பவற்றைஅறியும் எதிர்காலவுணர்ச்சியாற் கூறினானுமாம். காளை-அது போன்றவனுக்கு உவமவாகுபெயர்.*
*(11)*

***12.-பின்புவீடுமன் 'நீ இருக்கையில் வெற்றி இவர்க்கே' என்ன, க்ருஷ்ணன் துரோணனிடஞ் செல்லுதல்.***

***நின்றனையருளொடாங்கேநீலமாமேனியாய்நீ***
***வென்றிமற்றிவரேயல்லால்வேறியாரெய்துகிற்பார்***
***என்றனனென்றபோதப்பிதாமகனிருதாள்போற்றி***
***நின்றவர்தம்மைக்கொண்டுசிலைமுனிநிலையிற்போனான்.***

*(இ-ள்) நீலம் மா மேனியாய் - நீலநிறமுள்ள அழகிய திருமேனியை யுடையவனே ! நீ-, ஆங்கே - அந்தப்பக்கத்திலே [பாண்டவர்திறத்திலே], அருளொடு - கருணையுடனே, நின்றனை - (துணைசெய்ய) நின்றாய்; (ஆகையால்), இவர்ஏ அல்லர்ல் - இப்பாண்டவர்களேயன்றி, வேறு யார்-, வென்றி - வெற்றியை, எய்துகிற்பார் - அடையவல்லவராவர்? [எவருமில்லை யென்றபடி], என்றனன் - என்று (வீடுமன் கண்ணனை நோக்கிக்) கூறியருளினான்; என்றபோது - அங்ஙனங்கூறினபொழுது, (கண்ணபிரான்), அப்பிதாமகன் இரு தாள் போற்றி நின்றவர் தம்மை கொண்டு - (தமது) பெரியபாட்டனான அவ்வீடுமனது உபயபாதத்தை வணங்கி நின்ற பாண்டவர்களைக் கூட்டிக் கொண்டு, சிலை முனி நிலையில் போனான்-விற்றொழிலில்வல்ல துரோணாசாரியன் நிற்கிறவிடத்துச் சென்றான்; (எ-று.)*

*நீலம் ஆம் மேனியாய் என்றும் எடுக்கலாம். மற்று - அசை.* ***13.-துரோணனைக்கிட்டியதும், க்ருஷ்ணன் 'நீ அருளினால் தான் இப்பாண்டவர்க்கு வெற்றி' என்று அவனிடம் கூறுதல்.***

***போயவர்குருவின்பாதம்போற்றிமுன்னிற்பச்செங்கண்***
***மாயவனவனைநோக்கிவாகையந்தாமஞ்சூட***

***நீயிவர்க்களித்தியாகிலுண்டலானின்னைவையம்***
***தாயவர்தமக்கும்வேறலரிதெனச்சாற்றினானே.***

*(இ - ள்) அவர்-அப்பாண்டவர்கள், போய்-,குருவின் பாதம் போற்றி - (தமது) வில்லாசிரியனான துரோணனது அடிகளை வணங்கி, முன்நிற்ப - எதிரிலே நிற்க, (அப்பொழுது), செம் கண் மாயவன்- சிவந்த திருக்கண்களையும் மாயையையுமுடைய கண்ணன்,-அவனை நோக்கி - அத்துரோணனைப் பார்த்து, 'வாகை அம் தாமம் சூட - (வெற்றிக்குரிய) அழகிய வாகைப்பூமாலையைச் சூடும்படி, நீ-, இவர்க்கு அளித்தி ஆகில் - இப்பாண்டவர்க்குக் கருணைசெய்வாயானால், உண்டு அலால் - வெற்றி யுண்டேயல்லாமல். நின்னை வேறல் - உன்னைச்சயித்தல், வையம் தாயவர் தமக்குஉம் அரிது - உலகங்களை அளவிட்ட திருமாலுக்கும் அருமையானது,' என சாற்றினான் - என்று சொன்னான்; (எ - று.)*

*துரோணன் அஸ்திரசஸ்திரங்களில் அதிசாமர்த்தியமுடையவனாய் அனைவர்க்கும் அழித்தற்கரியனாதலின், அவனைக்கொல்ல அவனையே உபாயங்கேட்குமாறு, மாயவன் அவனிடஞ்சென்று தோத்திரிக்கின்றானென்க. முன் - இடமுன். குருவென்னும் வடசொல்லுக்கு - (அஜ்ஞாநமாகிய மன) இருளை யொழிப்பவனென்று பொருள். வாகை - பூவுக்கு, முதலாகுபெயர். தாமம் - வடசொல். வையம் தாயவர்என்றபெயர், அவ்வெம்பிரானது நினைத்தவற்றை நினைத்தவாறே முடிக்கவல்ல ஸர்வசக்தியை விளக்கும்.*

***வையந்தாவிய கதை:-*** *மகாபலியென்னும் அசுரராசன் தன் வல்லமையால் இந்திரன்முதலியயாவரையும் வென்று மூவுலகங்களையும் தன்வசப்படுத்தி அரசாண்டு செருக்குக்கொண்டிருந்தபொழுது, அரசிழந்ததேவர் திருமாலைச் சரண மடைந்து வேண்ட, அவர் வாமனாவதாரமெடுத்துக் காசியபமுனிவருக்கு அதிதிதேவியினிடந் தோன்றின பிராமணப் பிரமசாரியாகி, வேள்வியியற்றி யாவர்க்கும் வேண்டிய அனைத்தையுங் கொடுத்துவந்த அந்தப்பலியினிடஞ் சென்று, தவஞ்செய்வதற்குத் தன்காலடியால் மூவடி மண் வேண்டி, அது கொடுத்தற்கு இசைந்து அவன் தத்தஞ்செய்த நீரைக் கையிலேற்று, உடனே திரிவிக்கிரமனாக ஆகாயத்தையளாவிவளர்ந்து, ஓரடியால் மண்ணையும் ஓரடியால் விண்ணையும் அளந்து மற்றோரடியால் அவனையும் பாதாளத்தில் அழுத்தி அடக்கினார் என்பது.வேறல் - தொழிற்பெயர். (13)*

***14.-இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்; துரோணன்***
***தன்னை வெல்ல உபாயங்கூறியதைத் தெரிவிக்கும்.***

***மன்மகன்றருமன்வென்றுவையகமெய்தநிற்பான்***
***என்மகனெனக்குமுன்னேயிறந்தனனென்றுவானில்***
***வின்மகபதியையொக்கும்வேந்தர்முன்சொல்லிற்சூரன்***
***றன்மகன்மகனேபின்னைச்சாபமென்றெடுக்கிலேனே.***

*(இ-ள்.) 'சூரன்தன் மகன் மகனே-சூரனென்னும் அரசனது புத்திரனான வசுதேவனது குமாரனே! மன் மகன் தருமன்-பாண்டுராசனதுபுத்திரனான யுதிட்டிரன் தான், வென்று - (பகைவரைச்) சயித்து, வையகம் எய்த நிற்பான் - (இனிப்) பூமியை அடையநிற்பவன்; வானில் - சுவர்க்கத்தில்வாழ்கிற, வில்-ஒளியையுடைய, மகபதியை - தேவேந்திரனை, ஒக்கும் - போன்ற, வேந்தர் முன் - அரசர்களது முன்னிலையில். என் மகன் எனக்கு முன்னே இறந்தனன் என்று சொல்லின் - என் குமாரனான அசுவத்தாமா யானிறப்பதற்குமுன்னே (போரில்) இறந்தானென்று (தகுந்தவர் யாராவதுசொன்னால், பின்னை - அதன்பின்பு, சாபம் என்று எடுக்கிலேன் - வில்லென்றுகையில் எடுக்கவும்மாட்டேன் ; (எ - று)-இங்ஙனங் கூறினதனால், துரோணனுக்குப்புத்திரன்பக்கலுள்ள மிக்கஅன்பு விளக்ங்கும்.*

*தேரில் விற்பிடித்துநிற்கையில் என்னைக் கொல்லவல்லாரில்லை யாதலால், நம்பத்தகுந்த புருஷனைக் கொண்டு எனக்கு மிகவும் அநிஷ்டமான நிகழ்ச்சியொன்று நிகழ்ந்ததாகக் கூறின், கையிற் பிடித்த சாபத்தைச் சோகத்தினால் விட்டிடுவேன்: அப்போது என்னைக் கொல்லலா மென்று உபாயங் கூறினானென்று வியாசபாரதம் கூறும். "என்மகனே யென்முன்னிறந்தானெனுமாற்ற,*

*மன்னவையுட் கேட்பிக்க வல்லையேல் - பின்னை, அடலுக வென்றிண்டோ ளம்புகவா வென்கை, யுடலுகவா வென்ற னுயிர்" என்பது, பாரதவெண்பா. மகபதியென்னும் வடமொழிப்பெயர்க்கு - யாகத்துக்குத் தலைவனென்று பொருள்; நூறு அசுவமேதயாகங்களைச் செய்து இந்திரபதவி பெறுதலால், இவனுக்கு இப்பெயர். இந்திரன், அரசர்க்குச் செல்வத்திலுஞ் சிறப்பிலும் உவமை. சூரனது பௌத்திர னாதலால், கண்ணனுக்கு 'சௌரி' என ஒரு திருநாமமுங் காண்க. சூரன் - ஸூரனென்னும் வடமொழித்திரிபு.*

***15. என்பெருஞ்சாபங்கைவிட்டியானெதிர்நிற்றலானும்***
***தன்பெருஞ்சாபத்தாலுஞ்சமரிடைத்திட்டத்துய்மன்***
***வன்புடனெனக்குக்கூற்றாய்மலைகுவன்மலைந்தவன்றே***
***நின்பெருங்கருத்துமுற்றுமேகுவீர்நீவிரென்றான்.***

*(இ - ள்.) (அவ்வாறு), என் பெரு சாபம் கைவிட்டு யான் எதிர் நிற்றலான்உம்- எனதுபெருமையையுடையவில்லைக் கையினின்று ஒழித்துவிட்டு [நிராயுதபாணியாய்] நான்எதிரிலே நிற்பதாலும், தன்பெரு சாபத்தால்உம் - தனது [த்ருஷ்டத்யும்நனது] பெரியவரத்தாலும், சமரிடை - போரிலே, திட்டத்துய்மன்-, வன்புடன் - வலிமையுடனே,எனக்கு கூற்று ஆய்-எனக்கு யமனாய், மலைகுவன்-போர்செய்வான்; மலைந்தஅன்றுஏ - (அங்ஙனம்) போர்செய்த அப்பொழுதே, நின் பெரு கருத்து முற்றும்-உனது பெரிய எண்ணம் நிறைவேறிவிடும் [நான் இறந்திடுதல் திண்ணம்]; நீவிர்ஏகுவீர் - நீங்கள் போங்கள், என்றான் - என்று (துரோணன் கண்ணனையும் பாண்டவரையும் நோக்கிக்) கூறினான்; (எ-று.) "இற்றைக்கு மூவைந்தா நாளி லிகலமருட், கொற்றப்போர் மன்னவனே கூசாதே -வெற்றிகொளும், பாஞ்சாலன் புத்திரன் கைப்படுவேனென்றுரைத்தான் றான்சாயுமாறே தரித்து" என்றார் பெருந்தேவனாரும். 'தன்பெருஞ்சாபம்' என்றது, தன்தந்தையான துருபதன் துரோணனைக் கொல்லும்பொருட்டு ஒருபுத்திரனுண்டாகவேண்டுமென்று செய்த யாகத்தில் தான் தோன்றிநின்றதை. இதனை 'சாபம்' என்றது, பிறனையழித்தலாகிய பயனைத் தவறாது விளைத்தலாலாம். வன்புடன் - துரோணனான என்மீது தந்தை தொடங்கி வருகிற தீராப்பகைமையுடனேயென்றும் உரைக்கலாம். பெருங்கருத்து - துரோணனையழித்தல். பாண்டவர்க்கு வெற்றியை விளைத்தல், பூபார நிவ்ருத்தி. சாபம் - வடசொல்திரிபு; "சாபமே சபித்தல் வில்லாம்" என்னும் நிகண்டினால் இருபொருளு முடையதாதலை அறிக. விட்டியான்- குற்றியலிகரம். வன்பு - பண்புப்பெயர். (பிராணிகளதுஉடம்பையும் உயிரையும் வேறுவேறாகப் பிரித்துக்) கூறுபடுத்தல்பற்றி, யமனுக்குக் கூற்றென்று பெயர்; இனி, (பிராணிகளின் ஆயுட்காலத்தைக்) கூறாக்கி வரையறைசெய்தல்பற்றிய பெயருமாம். யமன் தவறாது அழித்தற்கு உவமை. (15)*

***16.-யுதிஷ்டிராதியர் தம்படைத்தொகுதியைச் சேர்தல்.***

***முனிவனைவிடைகொண்டேகிமுகுந்தனுந்தாமுமுன்னம்***
***தனிவனந்திரிந்துமீண்டோர்தானையங்கானிற்புக்கார்***
***பனிவனநிறைந்தபொய்கைக்கரைநிழற்பரப்புந்தேமாங்***
***கனிவனமென்னயார்க்குமுதவிகூர்கருணைக்கண்ணார்.***

*(இ-ள்) (பின்பு), பனி வனம் நிறைந்த பொய்கை கரை-குளிர்ச்சியையுடைய நீர் நிரம்பின குளத்தினது கரையிலே, நிழல் பரப்பும் - நிழலைப் பரவச்செய்கிற, கனி தேமா வனம் என்ன - பழங்களோடு கூடிய தேமாமரத்தோப்புப்போல, யார்க்குஉம் உதவிகூர் - யாவர்க்கும் நன்றிசெய்தல் மிகுந்த, கருணை கண்ணார்- அருளோடுகூடிய நோக்கத்தை யுடையவர்களாகிய, முகுந்தன்உம் முன்னம் தனி வனம் திரிந்து மீண்டோர் தாம்உம் - கண்ணபிரானும் முன்னே ஒப்பற்ற காட்டில் அலைந்து திரும்பிவந்த பாண்டவர்களும், முனிவனை விடை கொண்டுஏகி -- துரோணனிடத்து உத்தரவு பெற்றுக்கொண்டு சென்று, தானை அம் கானில் புக்கார்- அழகிய (தமது) சேனையாகிய காட்டினுள்ளே சென்றார்கள்; (எ - று.)-க்ருபன் சல்லியன் இவர்களையும் கிட்டி யுதிஷ்டிராதியர் அவர்களாசியும் அனுக்கிரகமும்பெற்று மீண்டனரென்று வியாசபாரதம் கூறும்.*

*தன்னிடம்வந்தவர் யாவராயினும் அவர்களின்விடாய் தணியும்படி நீர்பருகி வீற்றிருத்தற்குத் தண்ணிழலையும் பசிதீர உண்ணுதற்கு இனியகனியையும் அளித்து உதவும் பொய்கைக்கரை மாம்பொழில்போலப் பகைவர் நண்பர் அயலார்என்னும் பேதங் கருதாது தம்மைவந்தடைந்தவர் யாவர்க்கும் பலவகையாலும் உதவி செய்பவர் இவரென்பார், இங்ஙனங் கூறினார். "பயன் மர முள்ளூர்ப் பழுத்தற்றாற் செல்வ, நயனுடை யான்கட் படின்" என்ற திருக்குறளையும், "நடுவூருள் வேதிகை சுற்றுக்கோட் புக்க, படுபனை யன்னர் பலர்நச்சவாழ்வார்," "அழல்மண்டு போழ்தி னடைந்தவர்கட் கெல்லாம், நிழன்மரம்போல் நேரொப்பத் தாங்கிப்-பழுமரம்போற், பல்லார் பயன்றுய்ப்பத் தான் வருந்தி வாழ்வதே, நல்லாண் மகற்குக் கடன்" என்ற நாலடியாரையும், "பார்கெழுபழுமரம்பழுத்தற்றாகவும்" என்ற கம்பராமாயணத்தையும் இங்கேயறிக. வநம் - வடசொல்; இது-நீரென்றும் காடென்றும் பொருள்படுதலை "வனமே காடும் நீரு மழகும்" என்ற திவாகரத்தாலு மறிக. தேமா-தேன்போலினிய பழங்களைத் தருவதொரு மாமரவிசேடம்; இதன் எதிர்மொழி-புளிமா. தேன்+மா=தேமா. முனிவனை -உருபு மயக்கம். "முன்னந்தனிவனந்திரிந்து மீண்டோர்தானையங்கானிற் புக்கார்' என, முன்பு பலவருஷகாலங் காட்டிலேதிரிந்து இனி வனவாசம் வேண்டாஎன்று திரும்பினவர்கள் மீண்டுமொருகாட்டிற் பிரவேசித்தன ரென்று ஒருசமத்காரந் தோன்றக் கூறியது,* **பொருத்தமின்மையணி** *யென்னும்* **அஸங்கதியலங்காரமாகும்.** *சேனையைக் காடென்றது, அடர்த்தியாலும் அச்சந்தருதலாலுமென்க. (16)*

### 17.-படையை வியூகம ் வகுத்தபின் பாண்டவரின் தூசிப்படை துரியோதனன் படையுடனே எதிர்க்கச் செல்லுதல்.

**கொற்றவர் தம்மை யேழக் குரோணிவெஞ் சேனையோடும்**
**பற்றுடை யசல மாகும் பான்மையால் வியூக மாக்கி**
**வெற்றிதந் தருள்கென் றேத்தி விந்தையை வணங்கி மாயோன்**
**சொற்றபின் றூசி யோடு தூசிசென் றுற்ற தன்றே.**

*(இ-ள்.) மாயோன் - கண்ணபிரான், ஏழ் அக்குரோணி வெம் சேனையோடுஉம் - ஏழு அக்ஷௌஹிணியென்னுந் தொகையுள்ள பயங்கரமான சேனையுடனே, கொற்றவர்தம்மை - அரசர்களை, பற்று உடை அசலம் ஆகும் பான்மையால் வியூகம்ஆக்கி - (ஒன்றோடொன்று) தொடர்ச்சியுள்ள மலை யென்னுந் தன்மையால் அணி வகுப்புச்செய்து, வெற்றி தந்தருள்க என்று ஏத்தி விந்தையை வணங்கி - சயத்தைக் கொடுத்தருள்வாயாகவென்று துதித்துப் (போர்க்களத்துக்குரிய தெய்வமாகிய) துர்க்கையை வணங்கி, சொற்ற பின் - (போர்செய்யும்படி) சொன்னபின்பு, தூசி - முற்படை, தூசியோடு-(எதிரிகளுடைய) முற்படையுடனே, சென்று உற்றது- (போருக்குப்) போய் நெருங்கிற்று; (எ-று.)-அன்றே - ஈற்றசை.*

*'படைவகுப்பாவது - வியூகம்; அஃது - எழுவகையுறுப்பிற்றாய் வகையால்நான்காய் விரியால் முப்பதாம். உறுப்பு ஏழாவன - அரம் முதல் தோட்டியீறாயின. வகைநான்காவன - தண்டம், மண்டலம், அசங்கதம் [அஸம்ஹதம்], போகம் என இவை. விரி முப்பதாவன - தண்டவிரி பதினேழும், மண்டலவிரி இரண்டும், அசங்கதவிரி ஆறும், போகவிரி ஐந்தும் எனஇவை. இவற்றின்பெயர்களும் இலக்கணமும் ஈண்டு உரைப்பின் பெருகும்; அவையெல்லாம் வட நூல்களுட் கண்டுகொள்க' என்பது, திருக்குறள் பரிமேலழகருரை. அசலவியூகமாக்குதலாவது - நால்வகைச்சேனைகளையும் மலைபோல் வடிவு அமையும்படி ஒழுங்குபடநிறுத்துவது; சிறுசேனையைக் கொண்டே பெரியசேனையை வென்று அழிக்கவல்லதும், இந்திரனால் ஏற்படுத்தப்பட்டதும், அசலமென்று பிரசித்தமானதும், வச்சிர மென்று பெயருள்ளதுமான வியூகமாக வகுக்கப்பட்ட தென்று வியாசபாரதங் கூறுகின்றது. ஒரு வேஷத்தை மேற்கொண்டவன் அதற்குஉரிய குணந்தொழில்களையெல்லாம் உடையனாகவேண்டுவது இயற்கை யாதலால், தேவாதிதேவனான திருமால் இங்குத் தான் கொண்ட மநுஷ்யாவதாரத்துக்கேற்பத் துர்க்கையை வணங்கின னென்க. பற்று உடை அசலம் - (பகைவர்களது) வெல்லும் ஆசையை ஒழிக்கிற அசலவியூகம் எனவுங் கொள்ளலாம். (17)*

வேறு.

*18.-முரசம் முழங்குதல்.*

***புரசை யானைப் பொருபரித் தேருடை***
***அரசன் மாத்துவ சத்தன வாதலாற்***
***குரைசெய் வான்பணைக் குப்பைகள் யாவினும்***
***முரச சால முழங்கின சாலவே.***

*(இ - ள்.) புரசை - கழுத்திடுகயிற்றையுடைய, யானை- யானைகளையும், பொரு பரி - போர்செய்யவல்ல குதிரைகளையும், தேர் - இரதங்களையும், உடை- உடைய, அரசன்- யுதிஷ்டிரராசனது, மா துவசத்தன ஆதலால் - பெருமையையுடைய கொடியில் (தாம்) இருப்பனவாகையால், முரச காலம்-பேரிகைகளின் கூட்டங்கள், குரை செய்வான் பணை குப்பைகள் யாவின்உம்-ஒலித்தலைச் செய்கின்ற பெரிய போர்ப்பறைகளின் கூட்டங்க ளெல்லாவற்றினும், சால முழங்கின- மிகுதியாக ஒலித்தன; (எ - று.)*

*பாண்டவசேனையில் இயல்பாக வெற்றிக்கு அறிகுறியாகவும் போரில் ஊக்கத்தையுண்டாக்கி வளர்த்தற்பொருட்டும் முரசங்கள் அடிக்கப்பட்டு மிகுதியாக முழங்குதலை, தலைவனானதருமனது கொடியில் தம்உருவம் எழுதப் பெற்றுள்ளதென்ற செருக்கினாலாகிய களிப்பின் மிகுதியால் அதிகமாகமுழங்கினதாக ஒரு காரணங்கற்பித்துவருணித்ததனால், இது,* ***ஏதுத்தற்குறிப்பேற்றவணி.*** *மதம் பிடித்தகாலத்தில் யானையின்மேல் ஏறுதற்கு ஒரு ஆதாரமாக, எப்பொழுதும் யானைக்கழுத்தில் கயிறுகட்டிவைத்தல் இயல்பு. காலாட்சேனையைஉபலக்ஷணத்தாற் பெறவைத்தார். முரஜஜாலம் - வடசொற்றொடர்.*

*இதுமுதற் பதினேழுகவிகள் - பெரும்பாலும் முதற்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய* ***கலிவிருத்தங்கள்.*** *(18)*

*19.-சங்குகளொலித்தல்.*

***மலர்ந்தபற்பவனநிகர்பைந்துழாய்***
***அலங்கல்வித்தகனேந்தினவாதலால்***
***வலம்புரிக்குலம்வாழ்வுபெற்றேமெனாச்***
***சலஞ்சலத்தொடுஞ்சங்கொடுமார்த்தவே.***

*(இ - ள்) மலர்ந்த பற்பவனம் நிகர் - மலர்ந்த தாமரைக்காட்டை யொத்த, பைந் துழாய் அலங்கல் வித்தகன் - பசுநிறமான திருத்துழாய் மாலையையணிந்த ஞானசொரூபியான திருமாலின். வடிவமான கண்ணபிரானால், ஏந்தின - (கையிற்) பிடிக்கப்பட்டவை, ஆதலால்-, வாழ்வு பெற்றேம் எனா-சிறப்புப்பெற்றோ மென்று களித்து, வலம்புரி குலம் - வலம்புரிச் சங்குகளின் கூட்டங்கள், சலஞ்சலத்தொடுஉம் - சஞ்சலமென்னுஞ் சங்குகளோடும், சங்கொடுஉம்-இடம் புரிச்சங்குகளோடும், ஆர்த்த - ஒலித்தன;(எ-று.)*

*வலம்புரிச்சங்குகளின் மிக்க முழக்கத்திற்கு, கண்ணன்கையிலிருப்பது நம்மினமேயென்ற களிப்பைக் காரணங் கற்பித்ததனால், இப்பாட்டும் -* ***ஏதுத்தற்குறிப்பேற்றவணி.*** *நிகர் வித்தக னென இயையும். திருக்கண்கள் திருக்கைகள் திருவடிகள் திருமுகம்திருவாய் திருவுந்தி முதலிய அவயவங்களெல்லாம் செந்தாமரைமலர் போலுதலால்,திருமாலின் திருமேனிக்குத் தாமரைக்காட்டை உவமை கூறியது; "கைவண்ணந்தாமரை வாய்கமலம் போலுங் கண்ணிணையு மரவிந்த மடியு மஃதே" எனத்திருநெடுந்தாண்டகத்திலுங் காண்க. பற்பவனம் - பத்மவநமென்றவடசொல்திரிபு.துழாய் - துளஸீ: வடமொழி. அலங்கல் - தொங்கியசைவது என மாலைக்குக்காரணக்குறி: இதில், அல் - கருத்தாப்பொருள்விகுதி. திருமாலின் கையிலுள்ளது - பாஞ்சசந்நியமென்னும் வலம்புரிச்சங்கு. 'வலம்புரிச்சங்கு. 'வலம்புரி, சலஞ்சலம்.இடம்புரி என்பன - சங்கின்சாதிபேதம். "இப்பி யாயிரமே சூழ்ந்த திடம்புரி யென்றுகூறு, மொப்பில்சங் காயிரஞ்சூழுறும் வலம்புரி யென்றேதும், அப்படி யதுவுஞ் சூழ்ந்தசலஞ்சல மாகுமற்றைத், தப்பிலாச் சலஞ்சலங்கள்*

*சார்ந்தது பாஞ்சசன்னியம்" என்ற நிகண்டுசெய்யுளால், இவற்றில் ஒன்றினு மொன்று ஆயிரமடங்கு சிறந்ததென உய்த்துணர்க. வலம்புரி - வலப்பக்கமாக உட்சுழிந்திருக்குஞ் சங்கு. (19)*

### *20.-இருபுறத்துச்சதுரங்கசேனைகளும் ஒன்றையொன்று எதிர்த்தல்.*

**சென்றுதேர்களுந்தேர்களுஞ்சேர்ந்தன**
**வென்றிவேழமும்வேழமுமூர்ந்தன**
***நின்றவாசியும்வாசியுநேர்ந்தன***
**வென்றிவீரரும்வீரருமேவினார்.**

*(இ - ள்.) (இரண்டுசேனைகளிலும்), தேர்களும் தேர்களும்-, சென்று சேர்ந்தன- போய் (ஒன்றொடொன்று) நெருங்கின; வென்றி-சயத்தையுடைய, வேழம்உம்வேழம்உம் - யானைகளும்யானைகளும், ஊர்ந்தன - (ஒன்றோடொன்று எதிர்த்து) நடந்தன; நின்ற- தவறாது நின்ற, வாசிஉம் வாசிஉம் - குதிரைகளும் குதிரைகளும்,நேர்ந்தன - (ஒன்றோடொன்று) எதிர்த்தன; வென்றி- சயத்தையுடைய, வீரர்உம்வீரர்உம் - காலாள் வீரர்களும் காலாள் வீரர்களும், மேவினார்- (ஒருவரோடு ஒருவர்)பொருந்தினார்; (எ-று.)*

*தேர் யானை குதிரைகள், இங்கு அவற்றின்மீது ஏறியுள்ள வீரரையுங் குறிக்கும்.வாஜி - வடசொல். (20)*

### *21.-இதுமுதல்நான்குகவிகள் - இருபுறத்தவரும் கைகலந்து பொருதலைக் கூறும்.*

***பாரவாளமும்வாளமும்பாய்ந்தன***
**கூரவேல்களும்வேல்களுங்குத்தின வீரசாபமுஞ்சாபமும்வீக்கின**
***தூரவாளியும்வாளியுந்தோய்ந்தவே.***

*(இ - ள்.) (இருத்திறத்திலும்), பாரம் - பெரிய, வாளம்உம் வாளம் உம் - வாளாயுதங்களும் வாளாயுதங்களும், பாய்ந்தன - (ஒன்றின்மேலொன்று) பாய்ந்தன; கூர - கூர்மையையுடைய, வேல்கள்உம் வேல்கள்உம் - வோலாயுதங்களும் வோலாயுதங்களும், குத்தின - (ஒன்றையொன்று) குத்தின; வீரம் - போர் வலிமையையுடைய, சாபம்உம் சாபம்உம் - விற்களும் விற்களும், வீக்கின - (ஒன்றையொன்று) அழித்தன; தூரம் - நெடுந்தூரத்திலுஞ் செல்லுந்தன்மையுள்ள, வாளிஉம் வாளிஉம் - அம்புகளும் அம்புகளும், தோய்ந்த - (ஒன்றின்மேலொன்று) பொருந்தின; (எ - று,)*

*வாள்வீரரோடு வாள்வீரரும், வேல்வீரரோடுவேல்வீரரும், வில் வீரரோடு வில்வீரரும் எதிர்த்துப்பொருததை உபசாரவழக்காக ஆயுதங்களின்மேல் ஏற்றிக் கூறினார். பாராவாளம், வீரசாபம், தூரம் - வடசொற்கள். வாளம் என்ற வடமொழியே, வாள்என விகாரப்பட்டுநிற்பது; இனி, வேறு தமிழ்மொழி யென்னின், அம் - சாரியை யென்க. கூர - கூரென்னும் பகுதியின்மேற் பிறந்த குறிப்புப்பெயரெச்சம்; இனி, கொடியதென்னும்பொருள் தரும் க்ரூரமென்னும் வடசொல்திரிந்ததாக்கொள்ளினும் பொருந்தும். (21)*

***22. இட்டதார்முடிமன்னவரோடெதிர்***
***இட்டதார்முடிமன்னவரெய்தினார்***
***பட்டவர்த்தனப்பார்த்திவர்தம்முடன்***
***பட்டவர்த்தனப்பார்த்திவரெய்தினார்.***

*(இ - ள்.) (இருபடையிலும்), இட்ட தார் - அணிந்தமாலையையுடைய, முடி மன்னவரோடு - கிரிடந்தரித்து அரசாளும் மகுடவர்த்தனரென்னும் அரசர்களோடு, இட்ட தார் முடி மன்னவர் - அத்தன்மையரான மகுடவர்த்தனர், எதிர் எய்தினார்- எதிரிற் பொருந்தினார்; பட்டவர்த்தனப்*

*பார்த்திவர் தம்முடன் - (கிரீடமின்றி) நெற்றிப்பட்டத்தை மாத்திரங்காட்டி அரசாளும் பட்டவர்த்தனரென்னும் அரசர்களோடு, பட்டவர்த்தனப் பார்த்திவர் - அத்தன்மையரான அரசர்கள், எய்தினார் - பொருந்தினார்; (எ - று,)*

*ஒத்தவீரர்கள் ஒருவரோடொருவர் எதிர்த்தல் தருமயுத்தமாதலின், இங்ஙனங்கூறினார். (22)*

***23. மந்திரத்தவர்தம்முடன்மாமதி***
***மந்திரத்தவர்வந்தெதிர்மோதினார்***
***தந்திரத்தவர்தம்மிசையேசெலத்***
***தந்திரத்தவர்சாயகமேவினார்.***

*(இ - ள்.) மா மதி - சிறந்த அறிவையுடைய, மந்திரத்தவர் தம்முடன் - மந்திரிகளுடனே, மந்திரத்தவர்- மந்திரிகள், எதிர் வந்து மோதினார் - எதிர்த்து வந்துதாக்கினார்கள்; தந்திரத்தவர்தம் மிசைஏ செல- படைத்தலைவர்கள்மேலேயே செல்லும்படி, தந்திரத் தவர்-படைத்தலைவர்கள், சாயகம் ஏவினார் - அம்புகளைச் செலுத்தினார்கள்; (எ- று.)*

*மந்த்ரம் - ஆலோசனை, தந்த்ரம் - சேனை: அவற்றையுடையவர், மந்திரியுந் தந்திரியுமாவர். ஸாயகம் - வடசொல். மாமதி-மத்திமதீபம். (23)*

***24. மாண்டலீகர்தம்மார்புறையாகவே***
***மண்டலீகர்தம்வாட்படையோச்சினார்***
***சண்டவார்சிலைசாமந்தர்வாங்கவே***
***சண்டவார்சிலைசாமந்தர்வாங்கினார்.***

*(இ-ள்.) மண்டலீகர்தம் மார்பு உறை ஆக - மண்டாலதிபதிகளான அரசர்களதுமார்பு உறையாக இருக்கும்படி, மண்டலீகர்-, தம் வாள்படை ஓச்சினார் - தங்களது வாளாயுதத்தை வீசினார்கள்; சாமந்தர் - சாமந்தராசர்கள், சண்டம்வார் சிலை வாங்க- உக்கிரமான நீண்ட வில்லை வளைக்க, (அவர்க்குஎதிரில்), சாமந்தர் சண்டம்வார்சிலை வாங்கினார்-; (எ - று.)*

*மண்டலீகன் - நாற்பதுகிராமம் ஆள்பவன்: ஒருகோடி கிராமம் ஆள்பவன் மகுடவர்த்தனனென்றும், மகுடவர்த்தனர் நாலாயிரவரை வணக்கியாள்பவன் மண்டலீகனென்றும் ஒருசாரார் கூறுவர். ஒரு பேரரசனுக்குக் கீழ்ப்பட்டு அவனுடையநாட்டின் கடைக்கோடியையாளுஞ் சிற்றரசர்க்கு ஸாமந்தரென்று பெயர்; வடசொல். உறை - படைக்கூடு; (ஆயுதங்கள்) உறுவது உறை யெனக் காரணப்பெயர். தமதுவாள் முழுவதும் பிறரதுமார்பினுள்ளே சென்று நுழையும்படி வீசின ரென்பார், 'மார்பு உறையாக ஓச்சினார்' என்றார். (24)*

***25.-இதுவும் அடுத்த கவியும் - அடிபட்ட வீரரின் வருணனை.***

***முடியிழந்தநிருபர்முகுந்தனால்***
***இடிபடுந்தலைராகுவொடேயினார்***
***அடியிழந்தவராதபன்றேர்விடுந்***
***தொடிநெடுங்கைவலவனிற்றோன்றினார்.***

*(இ - ள்.) (அவ்யுத்தத்தில்), முடி இழந்த நிருபர் - தலையறுபட்ட அரசர்கள், முகுந்தனால் இடிபடும் தலை ராகுவொடு ஏயினார்-திருமாலால் துணிக்கப்பட்ட தலையையுடைய இராகுவோடு ஒத்தார்கள்; அடி இழந்தவர் - கால்களை இழந்தவர்கள், ஆதபன் தேர் விடும் தொடி நெடுகை வலவனின் தோன்றினார் - சூரியனது தேரைச் செலுத்துகிற தொடியென்னும் அணியையணிந்த*

*கைகளையுடையசாரதியான அருணன்போலக் காணப்பட்டனர்; (எ - று.)-*
***உவமையணி.***

*ஆதபன் - நன்றாகத் தபிப்பவன்; தபித்தல் - காய்தல். தேரோட்டுவதில் அவனுக்குள்ள கைத்திறமையை விளக்க, 'தேர்விடுந்தொடி நெடுங்கை வலவன்' என்றார். வலவன் - வல்லவன்; இன்-ஐந்தனுருபு, ஒப்புப் பொருளது. இராகுவொடு என்பதில், மூன்றனுருபு - ஐந்தாவ தற்குரிய ஒப்புப்பொருளில் வந்தது, உருபுமயக்கம். ஏயினார், ஏய்-பகுதி, இன்- இறந்தகால இடைநிலை; இப்பகுதியினடியாகச் செயவெனெச்சம் 'ஏய்ப்ப' என வருதல்காண்க.*

*துருவாசமுனிவரது சாபத்தால் கடலினுட்புக்கொளித்த தேவலோ கத்துச்செல்வங்களை மீண்டும்பெறும்பொருட்டுத் திருமாலின் கட்டளையால் தேவர்கள் அசுரர்களைத் துணைக்கொண்டு பாற்கடல் கடைகையில் உண்டான அமிருதத்தை அத்திருமால் தாம் எடுத்து. மிக அழகிய மோகினியென்னும் பெண்வடிவத்தால் அசுரர்களை மயக்கி, அமரர்களுக்குப் பங்கிட்டுக்கொடுத்தருளுகையில். இராகு வென்னும் ஓரசுரன் தானிருத்தற்குரிய அவுணர்கூட்டத்தைவிட்டுத் தேவர்கோட்டியினிடையிலேபுக்குக் கையேற்று அமிருதத்தை வாங்கியுண்ண, அதனைச் சூரியசந்திரர் குறிப்பித்தமாத்திரத்தில், எம்பெருமான் அவனை அகப்பையாலடித்துத் தலைவேறு உடல் வேறாக்க, அமிருதமுண்டதனால் உயிர்நீங்காத அத்தலையும் உடம்பும், விஷ்ணுவின் அனுக்கிரகத்தால் இராகுகேதுக்களென இரண்டு கிரகங்களாகிச் சூரியன்முதலிய ஏழுகிரகங்களோடு சேர்ந்து, சிற்சிலகாலத்து, தம்மேற் கோள்சொன்ன சூரியசந்திரர்க்குப் பகையாய் அவர்களை மறைக்கின்றன என்பது,* ***முன்னிரண்டடியிற்குறித்த கதை.*** *படைத்தல் தொழிலில் தனக்கு உதவியாகும் படி பிரமனாற்படைக்கப்பட்ட உபப்பிரமர் ஒன்பதின்மரில் ஒருவனாகிய காசியபமுனிவனதுமனைவிமார்கள் பலருள் கத்துரு என்பவள், ஒருநாள் ஆகாசமார்க்கத்தே சென்றஉச்சைச்சிரவ மென்னும் வெள்ளைக்குதிரையைக் கருநிறமுடையதென்றுமாறுபாடாகக் கூற, அதனைமறுத்து விநதை வெண்ணிறமுடையதென்று உள்ளபடிகூறவே, இதுகாரணமாக இருவர்க்கும் மாறுபாடுண்டாகி 'யாருரை பொய்யாகிறதோஅவள் மற்றவட்கு அடிமையாகக் கடவள்' என்று தம்மில் சபதம் நியமித்துக்கொள்ள,கத்துரு தனது மக்களாகிய கருநாகங்களால் அவ்வெண்பரியை மறைப்பித்துக்காட்டிவஞ்சனைவழியால் விநதையைத் தனக்கு அடிமையாக்கி 'நீ உன்மகனால்தேவலோகத்திலிருந்து அமிர்தங்கொணர்ந்து என்மக்களுக்குக் கொடுக்கையில், உனதுஇவ்வடிமைத் தன்மை ஒழியும்' என்று விடைகூற, பின்பு விநதை தன்கணவனருளால் ஆயிரம் வருஷகாலங்கழித்துப் பலிக்கும்படியான இரண்டுஅண்டங்களைப் பெற்று அடைக்காத்துவருகையில், ஐந்நூறுவருஷங் கழிந்தவாறேஒருநாள் 'பெண்புத்தி பின்புத்தி' ஆதலால் தனது அடிமைத்தனத்தைவிரைவில்ஒழித்தலிலே கருத்துக்கொண்டு ஒரு முட்டையை யெடுத்து உடைக்க,அதனுள் காலம் நிரம்பாமையால் இடைக்குக்கீழ்ப்பட்ட அவயவங்களில்லாமல் பாதிவடிவமாயிருந்த குமாரனொருவன் தோன்றி, அருணனெனப் பெயர்பூண்டு சூரியனுக்குச் சாரதியாயின னென்பது, பின்னிரண்டடி* ***யிற் குறித்த கதை.*** *இவன், கருடனது தமையன்.*
*(25)*

***26. பூபர்தங்கள்புயங்களுமார்பமுஞ்***
***சாபவெங்கணைதைத்துகுசோரியால்***
***தீபமென்னவுஞ்செம்மலர்க்கோடுடை***
***நீபமென்னவுநின்றனராண்மையால்.*** *(இ - ள்,) பூபர் - அரசர்கள், தங்கள் - தங்களுடைய, புயங்கள்உம் - தோள்களிலும், மார்பம்உம் - மார்பிலும், சாபம் வெம்கணை - (பகைவர்) வில்லால்எய்த கொடிய அம்புகள். தைத்து - பாய்ந்து, உகு - (அவ்வழியே) பெருகுகிற, சோரியால் - இரத்தத்தால், தீபம் என்னஉம் - சோதி விருட்சங்கள்போலவும், செம் மலர் கோடுஉடை நீபம் என்னஉம் - செந்நிறமான பூக்களைக்கொண்ட கிளைகளையுடைய (செங்) கடம்பமரம்போலவும், ஆண்மையால் நின்றனர் - வீரத்தன்மையோடு நின்றார்கள்; (எ-று.)*

***செந்நிறம்பற்றிய உவமை.*** போரிற் பின்வாங்காமல் எதிர்நின்று முகத்தினும் மார்பினும் *விழுப்புண்படுதலே ஆண்மைவிளங்கும் வழியாதலால், 'ஆண்மையால் நின்றனர்' என்றார். தீபம்- தீபமரம்; சோதி விருக்ஷம்: இது, பகலில் தன்னொளி தோன்றாமல் இரவில் தோன்றப் பெறுகின்றதொருமரம்; இரவெரி எனவும் படும். 'செந்தழலொளியிற் பொங்குந் தீபமாமரங்கள்'*

*என்றது பெரிய புராணம். பூபர் - பூமியைக்காப்பவர்; வடசொல். மார்பம்-அம் - சாரியை. சொரிவது, சோரி. தீபம், நீபம்- வடசொற்கள். மரம் - வீரர்க்கும், கிளைகள் - அவர் அவயவங்களுக்கும், மலர்கள்- செந்நீருக்கும் ஒப்பாம். தைத்து = தைக்க : எச்சத்திரிபு. (26)*

*27.-நான்குகவிகள் - போர்வீரர்களின் பெருவீரம் புலப்படுத்தும்.*

***கையில்வாளிதொலைந்தபின்காய்ந்துதம்
மெய்யில்வாளிகள்வாங்கிவில்வாங்கினார்
பொய்யிலாமொழிப்பூபதிசேனையின்
மையிலாண்மையினார்சிலமன்னரே.***

*(இ-ள்.) பொய் இலா மொழி-(சிறிதும்) அசத்தியமில்லாத வார்த்தைகளையுடைய,பூபதி - யுதிட்டிரமகாராசனது, சேனையில்- சேனையிலே, மை இல் ஆண்மையினார்- குற்றமில்லாத பராக்கிரமத்தையுடையவர்களான, சில மன்னர் - சில அரசர்கள்,கையில் வாளி தொலைந்த பின்- (தங்கள்) கையிலிருந்த அம்புகளெல்லாம்(பகைவர்மேலெய்து) ஒழிந்துபோனபின்பு, காய்ந்து - (பகைவர்மேற்) கோபங்கொண்டு,தம் மெய்யில் வாளிகள் வாங்கி-தமது உடம்பில் (பகைவரால் எய்யப்பட்டுத்தைத்துஉள்ள) அம்புகளைப் பறித்தெடுத்து, வில் வாங்கினார்- வில்லைவளைத்துஎய்தார்கள்; (எ - று.)*

*இதனால், அவர்களது கலங்காதஉறுதிநிலை விளங்கும். இது, **நூழிலாட்டு;** அதாவது உடலிற்புதைந்த படையைப்பறித்துப் பகைவர்மேல் விடுதல். இது - புறப்பொருளின் பகுதியாகிய தும்பைத் திணைக்குரிய துறைகளில் ஒன்று; புறப்பொருள் வெண்பாமாலையில் "களங்கழுமிய படையிரிய, வுளங்கிழித்த வேல் பறித்தோச்சின்று" எனக் கூறிய இலக்கணத்தையும், 'மொய்யகத்து மன்னர் முரணினி யென்னாங்கொல், கையகத்துக் கொண்டான் கழல் விடலை- வெய்ய, விடுசுடர் சிந்தி விரையகலம் போழ்ந்த, படுசுட ரெஃகம் பறித்து" எனக் காட்டிய இலக்கியத்தையும், "கைவேல்களிற்றொடு போக்கி வருபவன், மெய்வேல் பறியா நகும்" என்ற திருக்குறளையுங் காண்க. எய்தலாகிய காரியத்தை வில்வாங்குத லாகிய காரணத்தாற் குறித்தது **உபசாரவழக்கு.** பொய்யில் ஆம்மொழி பூபதி என எடுத்தால், பொய்யின்பாற்பட்ட சொற்களையுடைய ராஜராஜனான துரியோதன னென்று ஆகும். ஆண்மை - பௌருஷம். சில - குறிப்புப்பெயரெச்சம். (27)*

***28. வலக்கையற்றுவிழவுமனத்தொரு
கலக்கமற்றவெங்கார்முகத்தார்சிலர்
துலக்கெயிற்றுக்கணைதொடுத்தார்தொடை
யிலக்கமற்றபடையிலக்காகவே.***

*(இ-ள்.) வலம்கை அற்று விழஉம் - (தமது) வலக்கை (எதிரிகள் வழங்கின ஆயுதங்களால்) அறுந்து விழவும், மனத்து ஒரு கலக்கம் அற்ற- (தம்) நெஞ்சிலே (தைரியநிலைமை) கலங்குதல் சிறிதுமில்லாத, வெம் கார்முகத்தார் - பயங்கரமான வில்லையுடையவர்களாகிய, சிலர் - சிலவீரர்கள்,- தொடை - தொடச்சியாகவுள்ள, இலக்கம் அற எண்ணில்லாத, படை - (பகைவர்) சேனைகள், இலக்கு ஆக - எய்யுங் குறியாக, துலக்கு எயிறு கணை தொடுத்தார் - விளங்குந்தன்மையுள்ள (தமது) பற்களால் அம்புகளை (வில்லில்) தொடுத்து எய்தார்கள்; (எ-று.)*

*வலக்கையற்றவர், அம்பெய்யக் கையில்லாமையால், பல்லால் தூணியிலிருந்து அம்புகளையெடுத்து இடக்கையிற்பிடித்துள்ள வில்லில் தொடுத்தனரென்பதாம். இது - போரில் அவர்களுக்கு உள்ள ஊக்க மிகுதியை விளக்கும். தொடை - போர்மாலையைச்சூடிய என்றுமாம். கார்முகம் - வடசொல்; தொழிலில் வல்லதென்று அவயவப்பொருள். துலக்கு - முதனிலைதிரிந்த தொழிற்பெயர். தொடை- தொடுத்தல்; ஐ - விகுதி. இலக்கு-லக்ஷ்யம்; வடசொல். இலக்கமற்ற........இலக்காக - **முரண்தொடை.** 'துலக்கெயிற்றுப்படை' என்று பிரதிபேதம். (28)*

***29.     தாளிரண்டுடைச்சிங்கமன்னார்சமர்***
***வாளிரண்டொர்தொடையினில்வாங்கினார்***
***கோளிரண்டுமெனக்குறுகார்தடந்***
***தோளிரண்டுந்துணிந்தெதிர்வீழவே.***

*(இ-ள்,) தாள் இரண்டு உடை சிங்கம் அன்னார்-இரண்டுகால் களையுடைய சிங்கத்தைப் போன்ற சிலவீரர், சமர்-போரில், குறுகார் தட தோள் இரண்டுஉம் - பகைவர்களது பெரிய இரண்டு தோள்களும், கோள்இரண்டுஉம் என - (ராகுகேதுக்களாகிய) இரண்டு கிரகங்கள் போல, துணிந்து எதிர் வீழ - அறுபட்டு எதிரிலே விழும்படி, வாள் இரண்டு ஓர் தொடையினில் வாங்கினார்- இரண்டுவாளாயுதங்களை ஒருவீச்சில் வீசினார்கள்; (எ-று,)*

*சமகாலத்தில் எதிரியின் இரண்டுதோளும் அற்றுவிழும்படி இரண்டு வாள்களையெடுத்து ஒருங்குவீசினரென்பதாம். இதிலும் ஊக்கமிகுதி விளங்கும். தாளிரண்டுடைச் சிங்கம் -* ***இல்பொருளுவமை:*** *எந்தப்பிராணியையுந் தவறாதுகொல்லவல்ல தன்மையிலும், பிறர்க்கு அதிபதியாகுந்தலைமையிலும் சிங்கமாகிய விலங்கை. யொத்த மனித ரென்க; இனி, உள்பொருளுவமையாக, (திருமால் கொண்ட) இரண்டுகால்களையுடைய நரசிங்கமூர்த்தியை யொத்த பராக்கிரமமுடையாரென்றுங் கொள்ளலாம். சிங்கம் - ஸிம்ஹ மென்னும் வடமொழித்திரிபு; (யானை முதலிய பெரியவிலங்குகளையும்) இம்சிக்க [கொல்ல] வல்லதென்று பொருள். தொடை - பிரயோகிக்குந்தரம் ஒன்று. கோளிரண்டு - எளிதில் அற்றுவிழுதற்கு உவமை. கோள்-காலத்தை அளந்து கொள்வது என்று காரணப்பெயர். குறுகார் - (தம்மோடு) சேராதவர்; பகைவர். 'சமர்' என்ற விடத்து 'சிலர்' என்றும் பாடம்.      (29)*

***30,     ஓடிமுட்டலிற்றேர்களுடைந்தன***
***நாடிமுட்டலினாகங்கள்வீழ்ந்தன***
***கூடிமுட்டலிற்கொய்யுளைமாய்ந்தன***
***சாடிமுட்டலினாள்களுஞ்சாய்ந்தனர்.***

*(இ - ள்.) (இருபடையிலும் ஒன்றோடொன்று), தேர்கள்-, ஓடி முட்டலின்- விரைந்துசென்று தாக்குதலால், உடைந்தன-; நாகங்கள் - யானைகள், நாடி முட்டலின்- தேடிச்சென்று மோதுதலால், வீழ்ந்தன - கீழே விழுந்தன; கொய் உளை -கத்தரிக்கப்பட்ட பிடரிமயிரையுடைய குதிரைகள், கூடி முட்டலின்- நெருங்கிமோதுதலால், மாய்ந்தன-இறந்தன; ஆள்கள்உம்-காலாள்வீரரும், சாடி முட்டலின்-மோதித்தாக்குதலால், சாய்ந்தனர்-அழிந்தனர்; (எ-று.)- சாய்ந்தன என்றும்பாடம்.*

*நாகம்-மலையில்வாழ்வதென்று பொருள்; வடசொல். நகம் - மலை, அசையாதது, கொய்யுளை- வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித் தொகை. 'ஆடிமுட்டலின்' என்ற பாடத்துக்கு, ஆடுதல்-போராடல்.      (30)*

### *31.-தொந்தயுத்தம்.*

***பற்றிநின்றொருவன்படைவாளெதி***
***ருற்றவன்றலைசிந்திடவோச்சினான்***
***அற்றதன்றலைகொண்டவனுந்தனைச்***
***செற்றவன்றலைசிந்திடவீசினான்.***

*(இ-ள்.) ஒருவன் - ஒருவீரன், வாள் படை பற்றி நின்று - வாளா யுதத்்(கையில்) பிடித்துநின்று, எதிர் உற்றவன் தலை சிந்திட - எதிரிற் பொருந்தினபகைவனது தலை சிதறும்படி, ஓச்சினான்-வீசினான்; அற்ற தன் தலைகொண்டவன்உம் - (அங்ஙனம்) தன்தலை அறுபட்ட எதிரியும், தனைசெற்றவன்தலைசிந்திட-தன்னை யழித்தவனது தலை சிதறும்படி, வீசினான் - (வாளை)வீசினான்;*

*தொந்தயுத்தமாக இரண்டுவீரர் வாளையேந்தி வீராவேசத்தோடு விரைந்து போர்செய்கையில், ஒருவன் மற்றொருவன்கழுத்தில் வாளை வீசித் தலையை யறுத்துத் தள்ள, அங்ஙனம் தலையறுகிறவனது கையில் ஓச்சின வாளும் முன் அவன்குறித்த குறிப்படி எதிரியின்கழுத்தில் விழுந்து தலையையறுத்த தென்பதாம்; விரைந்துதொழில்செய்பவரது உடம்பு தலையறுபட்டபின்பும் சிறிது பொழுது முன்னையதொழிலை விடாதுசெய்தல், இயல்பு: "கைகொடு கால் கொடு தம்மின் வெகுண்டு கவந்த மலைந்தனவே," "தழல் விழி வாரண வீரர் முடித்தலை தடிவன சக்கரமே, யழலுமிழ் வாள்கள் சுழற்றின மீளவு மாவன சக்கரமே," "கருமுகில் முட்டின பட்டவர் கட்கனல் காலுமரும்புகையே" என்பர் மேற் பதினாறாம்போர்ச்சருக்கத்தும். சுந்தோபசுந்தர்போல இருவரும் ஒருவரால் ஒருவர் அடிபட்டு ஒருங்குஒழிந்தனரென்க. "அடுசிலைபகழிதொடுத்து விடப்புகு மளவினி லயமெதிர்விட்டவர் வெட்டின. ருடல்சிலவிரு துணிப்பட்டன பட்டபினொருதுணி கருது மிலக்கை யழிக்குமே" என்ற கலிங்கத்துப்பரணிச் செய்யுளோடு இதை ஒப்பிடுக. இனி, அவனும்- அத்தலையற்றவனும், அற்ற தன் தலை கொண்டு - அறுந்த தனது தலையினால், தனை செற்றவன் தலை சிந்திட வீசினான் - தன்னையழித்தவனது தலைசிதறும்படியெறிந்தானென்று உரைப்பாருமுளர்; என்றது, தலையறுந்த முண்டம் அத்தலையைக் கையிலெடுத்து எறிந்து எதிரியின் தலையை அழித்ததென்றவாறாம்; இது அசம்பாவிதமெனத் தோற்றலாம். (31)*

*32.-மூன்றுகவிகள்-போர்வீரர்களின் ஆண்மைச்செயலைக் கூறும்.*

**புங்கமெய்புதையப்புதையச்சிலர்**
**சிங்கமென்னச்செருக்களத்தாடினார்**
**கங்கமிட்டபைங்காவணநீழலில்**
**அங்கைகொட்டியலகைநின்றாடவே.**

*(இ-ள்.) கங்கம் இட்ட - கழுகுகளாற் செய்யப்பட்ட, பை காவணம் - குளிர்ச்சியான பந்தலின், நீழலில்- நிழலிலே, அலகை- பேய்கள், நின்று-, அம் கை கொட்டி - உள்ளங்கைகளைத் தட்டிக் கொண்டு, ஆட - கூத்தாடாநிற்க, செரு களத்து - போர்க்களத்தில், சிலர் - சிலவீரர்கள், புங்கம் மெய் புதைய புதைய - அம்புகளின்கூர்நுனி (தம்) உடம்பிலே மிகுதியாகத் தைத்தழுந்தவும், சிங்கம் என்ன - சிங்கங்கள்போல, (பராக்கிரமசாலிகளாய்), ஆடினார் - போர்செய்தார்கள்;*

*போரில் உயிர்நீங்கின உடல்களைத் தின்னவந்த கழுகுகள் அகாயத்தே இடைவிடாமற் பரவிப் பந்தல்போகட்டாற்போன்றன என்பது மூன்றாமடியின்கருத்து; போர்க்களத்திற் பேய்கள் தங்கட்கு இரையாகப் பிணங்கள் மிகுதியாகக் கிடைத்தலால்,வந்து மகிழ்ந்து கூத்தாடுதல் இயல்பு. புங்கம், கங்கம் - வடசொற்கள். பைங்காவணம்என்பதில், பசுமை - குளிர்ச்சியின்மேலது. நீழல் - நீட்டல். அங்கை கொட்டுதலைத்தாளவொற்றாகக் கொள்க. ஆடினார் என்பதற்கு - அவற்றுடன் கூத்தாடி நின்றார்என்றும் உரைக்கலாம்: என்றது, கோபத்தோடு விரைந்துபோர் செய்துநின்றவீரர்களது உடல் தலையறுபட்டபின் பதைபதைத்துக் கைகால் துடிப்பதையாம். (32)*

*33.* **வாளியாயிரந்தைத்தவழியெலாம்**
**ஒளியாகவொழுகுங்குருதியால் தாளிலானடத்துந்தடந்தேருடை**
**மீளியாமெனநின்றனர்வீரரே.**

*(இ - ள்.) வாளி ஆயிரம் தைத்தவழி எலாம் - (தம்உடம்பில் பகைவர்எய்த) பலபாணங்கள் தைத்த துளைகளெல்லாவற்றிலிருந்தும், ஒளி ஆக ஒழுகும் - ஒழுங்காகப்பெருகுகிற, குருதியால்- இரத்தத்தால், வீரர் - சில வீரர்கள், தாள் இலான்நடத்தும் - கால்களில்லாத அருணனாற் செலுத்தப்படுகிற, தட தேர் உடை-பெரியஇரதத்தையுடைய, மீளி என - பெருமையிற்சிறந்த சூரியன் போல, நின்றனர் -நின்றார்கள்; (எ-று,)*

***தன்மைத்தற்குறிப்பேற்றவணி.*** *மிக்க செந்நிறமுடைமைபற்றி வந்தது. சூரியனுக்குக் கிரணங்கள் ஆயிரமாதலால், 'வாளியாயிரந்தைத்தவழியெலா மொழுகுங்குருதி' எனப்பட்டது. வாளியாயிரம் என்பதில், ஆயிரம் என்பது - மிகப்பலவென்னுமாத்திரமாய் நிற்கும். ஒளியாக - இடைவிடாது*

*தொடர்ச்சியான தாரைகளாக என்றபடி. தொடைகளில்லாமைபற்றி, அருணனுக்கு வடமொழியில் 'அநூரு' என்று ஒருபெயர் உண்மையின், 'தாளிலான்' என ஒருபெயர் கூறினார். சூரியனுடைய ரதம் பதினாயிரம் யோசனை விசாலமுள்ள தாதலின், 'தடந்தேர்' எனப்பட்டது. ஆம் - ஆசை.*
*(33)*

***34. வெட்டி னாரவர் மெய்யிற் படாமைநின்***
***றொட்டி னாரிமைப் போதினி லோடியே***
***தட்டி னாருடலைத் தழுவிக் கொடு***
***கட்டி னார்விழுந் தார்சில காளையர்.***

*(இ-ள்.) சில காளையர் - சிலவீரர்கள், வெட்டினார் - (பகைவரால்) வெட்டப்பட்டார்கள்; ஓட்டினார் - (தாம் பகைவரைக் கொல்வதாக முன்னே) சபதஞ்செய்தவர்களாகிய, அவர் - அவ்வீரர்கள், மெய்யின் படாமை நின்று - அந்தச்சபதவுண்மையினின்றுந் தவறாமல் நிலைநின்று, இமை போதினில் ஓடி - ஒருமாத்திரைப்பொழுதினுள்ளே விரைந்து சென்று, தட்டினார் உடலை தழுவி கொடு- (தம்மை) வெட்டினவராகிய அவ்வீரரது உடம்பை அணைத்துக் கொண்டு, கட்டினார் விழுந்தார் - கட்டிவிழுந்தார்; (எ-று.)*

*என்றது, ஒருவரை யொருவர் கொல்வதாகப் பிரதிஜ்ஞை செய்து மிக்க கோபாவேசத்தோடு விரைந்து தொந்தயுத்தஞ் செய்கிற இரண்டு வீரருள் ஒருவன் மற்றொருவனை முதலில் வெட்ட, முன் தொடர்ச்சியால், உடனே அவ்வெட்டுண்டஉடல் வெட்டினவன்மேல் சென்றுவிழுந்து அவனைத்தழுவி யணைத்துக் கீழே தள்ளிக் கொன்று அவ்வீரவாதத்தை உண்மையாக நிறைவேற்றிற்றுஎன்றவாறும்; இது - மிக்கவீரத்தை விளக்கும். இமை, நொடி, மாத்திரை என்பன - ஒருபொருளான; கால நுட்பமுணர்த்தும். இப்பாட்டுக்குப் பிறவாறு உரைப்பாராயினும்உய்த்துணர்ந்து பொருந்துமாயிற் கொள்க. (34)*

*35.-இருபக்கத்தைச்சார்ந்த பலதேசத்துமன்னவரும் மாறுபட்டுப்பொருதல்.*

**கொங்கர் போசலர் போசர் சிங்களர் குகுத ராரியர் துளுவருங்**
**கங்கர் சோனகர் யவனர் சீனர் கலிங்கர் தத்தர் தெலுங்கரும்**
**வங்கர் கோசலர் தமிழர் குண்டல ரொட்டர் மாளவர் மகதரும்**
**இங்கு மங்கு மணிந்து நின்றவ ரெதிர்மு னைந்தன ரிகலியே.**

*(இ-ள்.) இங்குஉம் அங்குஉம் அணிந்து நின்றவர் - பாண்டவர் பக்கத்தும் கௌரவர்பக்கத்தும் (ஆக இரண்டுபக்கங்களிலும்) அணியிற்பொருந்தி நின்றவர்களாகிய, கொங்கர் போசலர் போசர் சிங்களர் குகுதர் ஆரியர் துளுவர்உம் கங்கர் சோனகர் யவனர் சீனர் கலிங்கர் தத்தர் தெலுங்கர்உம் வங்கர் கோசலர் தமிழர் குண்டலர் ஒட்டர் மாளவர் மகதர்உம் - இந்நாட்டுவீரர்களெல்லோரும், இகலி- பராக்கிரமங்கொண்டு, எதிர் முனைந்தனர்- எதிர்த்துப் போர்செய்தார்கள்;*

*ஸ்ரீகாளஹஸ்தி, பீமேசுவரம், ஸ்ரீசைலம் என்னும் மூன்று சிவலிங்க ஸ்தானங்களை எல்லையாகவுடைய தேசம்,* ***திரிலிங்கதேச மெனப்படும்; அதுவே***
**தெலுங்கு** *என மருவிற்று. தமிழ்நாட்டின் எல்லையை 'குணகடல் குமரி குடகம் வேங்கடம், எனுநான் கெல்லையி னிருந் தமிழ்க் கடலுள்" என்றதனா லறிக. சிங்களம்- ஸிம்ஹளம்: வடசொல். விந்தியமலைக்கும் இமயமலைக்கும் இடையிலே கிழக்கும்மேற்கும் கடலெல்லையாகவுள்ள பூமி, ஆரியாவர்த்த மென்னப்படும்; அதிலுள்ளவர்- ஆரியர். சிங்களம், துளுவம், கங்கம், சோனகம், சீனம் கலிங்கம், தெலுங்கம்,வங்கம், கோசலம், தமிழ் இவை - பதினெட்டுப் பாஷைகள் வழங்குந் தேயங்களினுட்பட்டவை. அணிந்து நின்றவர் - அணிவகுக்கப்பட்டு ஒழுங்குபட நின்றவரென்க. இப்பாட்டில் முதன் மூன்று அடிகள் அடைமொழியில்லாமல்வந்தது, ஒருஅழகாம். கோசல மென்பது-க உசல எனப் பிரிந்து, பிரமனுக்கு உல்லாசத்தை [மகிழ்ச்சியை]த் தருவ தெனப் பொருள்படும். 'தமிழர்' எனப் பொதுப்படக்கூறியது, சேரசோழ பாண்டியர் மூவரையுங் குறிக்கும்*

*த்ரவிட மென்னும் வடமொழி, தமிழெனத் திரிந்து நின்றது; இனி, தமியென்னும் வினைப்பகுதியடியாப் பிறந்து தனக்கு இணையில்லாத பாஷையெனப் பொருள் தருவதென்பாரும், இனிமை யென்னும் பொருளுணர்த்தும் தமிழ் என்னும் சொல் எல்லாப்பாஷைகளினும் இனியதாகிய இப்பாஷைக்கு ஆகுபெயராய் வழங்கிற்றென்பாரும், மற்றைப் பல பாஷைகளிலில்லாமல் தன்னிடத்தில் மாத்திரமே தனியாகவுள்ள ழகரமென்னும் எழுத்தை யுடையதென அன்மொழித்தொகைக் காரணக்குறி யென்பாரு முளர்.*

*இது முதற் பதினைந்து கவிகள் - பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ்சீர்கள்மாச்சீர்களும், மற்றை நான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்டஎழுசீராசிரியவிருத்தங்கள். (35)*

### *36.-வீடுமற்கெதிராக அருச்சுனன் போர்தொடங்கலும் இருவர்சேனையும் வளைதல்.*

***விசையன்வெஞ்சிலைவீடுமற்கெதிரமர்தொடங்கலும்வெருவவெண்
டிசையுமொன்றவளைந்துகொண்டனவிருவர்தம்பொருசேனையு
மிசையெழுந்துகளாலிமைத்தனர்மேலைநாகரும்வெங்கழுத்
தசையநின்றுசுமந்திளைத்தனர்கீழைநாகருமடையவே.***

*(இ-ள்.) விசையன் - அருச்சுனன், வெம் சிலை வீடுமற்கு எதிர் - (பகைவர்க்குக்) கொடிய விற்போரில் வல்ல பீஷ்மனுக்கு எதிரிலே, அமர் தொடங்கலும் - போரைச் செய்யத்தொடங்கின வளவில், இருவர்தம் பொரு சேனைஉம்-போர்செய்யவல்ல இரண்டு திறத்தாரது சேனைகளும், எண் திசைஉம்வெருவ - எட்டுத்திக்குக்களும் அஞ்சும்படி, ஒன்ற வளைந்துகொண்டன - ஒன்றாக ஒருங்குசூழ்ந்துகொண்டன; (அப்பொழுது), மிசை எழும் துகளால் - மேலெழுந்த புழுதி படுதலால், மேலைநாகர்உம் - மேலுலகத்துள்ள தேவர்களும். இமைத்தனர் - (தமது இமையாக்கண்களை) இமை மூடினார்கள்; கீழைநாகர்உம் அடைய- கீழுலகத்துள்ள சர்ப்பசாதியார் எல்லோரும், நின்று சுமந்து வெம் கழுத்து அசைய இளைத்தனர்- (அந்த மிக்கபாரத்தை) நிலைநின்று சுமந்து வெவ்விய (தமது) கழுத்துக்கள் வருந்த இளைப்படைந்தார்கள் ; (எ - று,)*

*விசையன் - எதுகைநோக்கிய இடைப்போலி. என்திசை - ஆகு பெயர். அடையவென்பதை மேலைநாகர்க்குங் கூட்டுக. மேலை, கீழை என்பவற்றில், ஐ- சாரியை கம்-இன்பம், அதன் எதிர்மறை- அகம்; அது, துக்கம்; அது இல்லாதது - நாகம்; சுவர்க்கலோகம் எனக் காரணங் காண்க. சேனைமிகுதியைவிளக்குந் தொடர்* ***புயர்வுநவிற்சியணி*** *இதனிற் காண்க. (36)*

### *37.-வீடுமனுக்கும் அருச்சுனனுக்கும் துணையாகச் சிலமன்னவர் வருதல்.*

***உகவைதன்னொடுவீடுமற்குறுதவியாகமகீபனுஞ்
சகுனிசல்லியனவரையும்பலதம்பிமாரையுமேவினான்
மிகுகொடுஞ்சினவீமன்விந்தரனபிமனாதியர்விசயனுக்
கிகனெடும்படையரசனேவலினுதவியாம்வகையெய்தினார்.***

*(இ - ள்.) மகீபன்உம் - துரியோதனராசனும், உகவைதன்னொடு-(போரில்) உற்சாகத்துடனே, சகுனி சல்லியன் அவரைஉம் - சகுனியும் சல்லியனும் ஆகியவர்களையும், பல தம்பிமாரைஉம் - (தனது) தம்பியர் தொண்ணூற்றொன்பதின்மருள் அநேகம்பேரையும், வீடுமற்கு உறும் உதவி ஆக - பீஷ்மனுக்குமிக்க துணையாம்படி, ஏவினான்- கட்டளையிட்டனுப்பினான்; மிகுகொடு சினம்-மிக்க பயங்கரமான கோபத்தையுடைய, வீமன் விந்தரன் அபிமன் ஆதியர் - பீமசேனனும் விந்தரனும் அபிமந்யுவும் முதலியவர்கள், இகல்நெடு படை அரசன் ஏவலின்-வலிய பெரிய சேனையையுடைய யுதிட்டிரராசனது கட்டளையினால், விசயனுக்கு உதவி ஆம் வகை எய்தினார்- அருச்சுனனுக்குத்*

*துணையாம்படி வந்தடைந்தார்கள்; (எ - று.) பலதம்பிமார் - துச்சாசனனையுந் துன்முகனையுஞ் சித்திராங் கனையுமுள்ளிட்டார்நாற்பத்தொன்பதின்ம ரெனவும், விந்தரன் - பூதிவிந்த னென்பவனெனவும், 'ஆதியர்'என்றது-திட்டத்துய்மனையுஞ் சாத்தகியையும் எனவும் பெருந்தேவனார் பாரதத்தால்விளங்கும்.* * ***பி-ம்:*** *சல்லியனிவரையும். (37)*

*38.-வீமன் வீடுமனுடன்பொருது அவனுக்குத் துணையாய் வந்த சகுனிமுதலானாரையும் பின்னிடச்செய்தல்.*

***வன்பனைக்கொடிமீதுபன்னிருவாளிமெய்க்கவசத்தின்மேல்***
***ஒன்பதிப்படியேவிவீடுமன்மெய்ந்நடுங்கவுடற்றினான்***
***மன்பரப்பொடுசகுனிசல்லியன்வந்ததம்பியரனைவரும்***
***பின்படப்பலகணைதொடுத்தனன்வருசதாகதிபிள்ளையே.***

*(இ-ள்.) வரு - (அங்ஙனம் அருச்சுனனுக்குத் துணையாக) வந்த, சதாகதிபிள்ளை-வாயுகுமாரனான வீமன், வீடுமன்-பீஷ்மனது, வன் பனைகொடி மீது-வலிய பனைமரத்தின்வடிவமெழுதிய துவசத்தின்மேல், பன்னிருவாளி - பன்னிரண்டுபாணங்களும், மெய் கவசத்தின்மேல் - உடம்பிலணிந்த கவசத்தின்மேல், ஒன்பது(வாளி) - ஒன்பது பாணங்களும், இப்படி ஏவி-(ஆக) இவ்வாறு பிரயோகித்து, மெய்நடுங்க- (அவ்வீடுமன்) உடல் நடுங்கும்படி, உடற்றினான்- போர் செய்தான்;(அன்றியும்), மன் பரப்பொடு வந்த-மிக்க யுத்தவேகத்துடனே (வீடுமனுக்குத் துணை)வந்த, சகுனி சல்லியன் தம்பியர் அனைவரும்உம் -சகுனியும் சல்லியனும்(துரியோதனனது) தம்பிமார் பலருமாகிய எல்லோரும், பின் பட-பின்னிடையும்படி,பலகணை தொடுத்தனன்- அநேக பாணங்களை யெய்தான்; (எ - று,)*

*"நினைப்பரிய கூர்வாளி நீள்வரைத்தோள் வேந்தன், பனைக் கொடிமேற் பன்னிரண்டு பாய்ச்சி - நுனைப்பகழி, யொன்பதுகொண்டாங்கவன்ற னொண்கவசத் திண்புறுத்தி, முன்பதிர வெய்தான் முனிந்து" என்றார் பாரத வெண்பாவிலும். பனைக்கொடி - தாலத்துவஜம். கவசம்-இரும்பு முதலியவற்றாலாகிய உடம்பின்மேற் சட்டை, முதலடியிலுள்ள வாளி யென்பது, இரண்டாமடியிலும் எடுத்துக்கூட்டப்பட்டது; அன்றி, ஒன்பது என்பதை எண்ணலளவை யாகுபெயராகக் கொள்ளலுமாம். பரப்பு - பரபரப்பு. பின் பட- புறங்கொடுத்தோட, தோற்க. ஸதாகதி யென்ற வடமொழிப் பெயர்க்கு - எப்பொழுதுஞ் சஞ்சரித்தலை யுடையவ னென்று பொருள். பிள்ளை - இருதிணைக்கும்வரும். மன்பரப்பொடு கணைதொடுத்தனன் என இயைத்தலுமாம். (38)*

*39.-அபிமன்னு வீடுமனது தேர்க்குதிரையை யழித்தலும் உத்தரன் சல்லியனோடு பொருதலும்.*

***ஏசிலாதுயர்தன்பிதாவினெழிற்பிதாமகனேறுதேர்***
***வாசிநாலும்விழத்தொடுத்தனன்வாளியாலபிமன்னுவும்***

---

* ***பி - ம் :*** *என்பது வருமிடங்களிலெல்லாம்* **பிரதிபேதம்** *என்ற பொருளது.*

***மாசிலாவிறலுத்தரன்றிறன்மத்திராதிபனுடனுடன்***
***றாசிலாவடலப்புமாமழைசிந்தினான்முகிலஞ்சவே.***

*(இ - ள்.) அபிமன்னுவும்-, ஏசு இலாது உயர்-குற்றமில்லாமல் [மிக்க புகழ்பெற்று] சிறந்த, தன்பிதாவின்-தனது தந்தையான அருச்சுனனது, எழில் பிதாமகன்-அழகிய (பெரிய) பாட்டனான வீடுமன், ஏறு-ஏறியுள்ள, தேர்-இரதத்திற் பூட்டிய, வாசி நால்உம்-குதிரைகள் நான்கும், வாளியால் விழ தொடுத்தனன் - (தனது) அம்பினால் இறந்துகீழ்விழும்படி யெய்தான்; மாசு இலா விறல் உத்தரன்- குற்றமில்லாத வெற்றியையுடைய உத்தரகுமாரன், திறல்மத்திர அதிபனுடன் உடன்று - வலிமையையுடைய மத்திரதேசத்தரசனான சல்லியனோடு பொருது, முகில் அஞ்ச-மேகமும் அஞ்சும்படி, ஆசு இலா அடல் அம்பு மா மழை சிந்தினான்-குற்றமில்லாத வலிமையையுடைய மிக்க பாணவருஷத்தைச் சொரிந்தான்; (எ-று.)*

*"பேரொலிநீர்க் கங்கை பெருஞ்சிறுவன் றேர்பூண்ட, போரொலிமா நான்கினையும் பொன்றுவித்தான்-கூரிய, வேல்வண்ணன் போர்முகத்து வெவ்வாளி நான்கினான், மால்வண்ணன்றங்கை மகன்" என்பது வெண்பாப்பாரதம். முன்னே உத்தரகோக்கிரகண காலத்துத் துரியோதனாதியர் சேனையைக் கண்டவளவிலே அஞ்சிக்குதித்தோடின உத்தரகுமாரன் பின்பு அருச்சுனனருளால் அஸ்திரசஸ்திரசாஸ்திரப் பயிற்சியில் மிகச்சிறந்தவனாயின னென்பது தோன்ற, 'மாசிலா விறல்' என்றார். விறலுக்கு மாசு-போரிற் பின் வாங்குதல். உடலல்-இங்கே, போர் செய்தல். அம்பு என்னும் மென்றொடர், வன்றொடராயிற்று. 'அப்புமழை' என்றதில், 'முகிலஞ்ச' என்றதற்குஏற்ப, நீர்மழையென்ற பொருளுந் தொனிக்கும்; அம்பு என்றும், அப்பு என்றும் வடமொழியில் நீருக்குப் பெயர். தனது இடைவிடாப்பெருமழையும் இந்தப் பாணமழைக்கு ஈடாகாதென முகில் அஞ்சுமென்க.அப்பு மழையென்ற தொடரை-பாணங்களாலாகிய மழையெனவாயினும்பாணங்களாகிய மழையெனவாயினும் விரிக்க: மென்றொடர் இருவழியிலும்வன்றொடராம். அம்புக்குக் குற்றம் - குறித்த இலக்குத்தவறுதலும், அவ்விலக்கைஅழியாதுவிடுதலும். **பி - ம:** 'வாளிநால்.' (39)*

### *40.-சல்லியன் உத்தரனைக் கொல்லுதல்.*

**வாவிமேல்வருபுரவிவீழவும்வலவன்மற்றுளார்**
**ஆவிவீழவுமவனெடுத்தவிலற்றுவீழவுமமர்செய்தான்**
**பாவியோடினிவில்லெடுப்பதுபாவமென்றொருபாரவேல்**
**ஏவினானெதிர்சென்றுசல்லியனிவனும்வானகமேறினான்.**

*(இ - ள்.) (இங்ஙனம் உத்தரன் அம்புமழை பொழிந்து), வாவி மேல் வரு புரவி வீழஉம் - தாவிக்கொண்டு (தன்மேல்) வருகிற (சல்லியனது) தேர்க்குதிரைகள் இறந்துவிழவும், வலவன் வீழஉம்-(அவனது) தேர்ப்பாகன் இறந்துவிழவும், மற்று உளார் ஆவிவீழஉம் - (தேர்காப்பவர் முதலாக) மற்றும் (அவனுக்குத் துணையாக) உள்ள வீரர்களது உயிர் அழியவும், அவன் எடுத்த வில் அற்று வீழஉம் - அச்சல்லியன் கையிலேந்தியுள்ள வில் துணி பட்டுவிழவும், அமர் செய்தான் - போர்செய்தான்; (அப்பொழுது), சல்லியன்-, பாவியோடு இனி வில் எடுப்பது பாவம் என்று - இந்தப் பாவியோடு இனிமேல் வில்லெடுத்துப்போர்செய்வது நல்லதன்றென்று கருதி, எதிர் சென்று ஒரு பாரம் வேல்ஏவினான்-உத்தரனெதிரிற்போய் பரியதொருவேலாயுதத்தை (அவன்மேல்) எறிந்தான்;(எறிந்தமாத்திரத்தில்), இவன்உம்-உத்தரனும், வானகம் ஏறினான்- தேவலோகமடைந்தான்; (எ-று.)*

*விற்போரில் உத்தரனை வெல்லமாட்டாமல் சல்லியன் உக்கிரமான வேலையெடுத்து வீச, அது பட்டவளவில் உத்தரன் இறந்தானென்பதாம். அமர்செய்தா னென்பதை அமர்செய்ய எனவும், ஏவினானென்பதை ஏவ எனவும் முற்றெச்சமாக்கின், ஒருவாக்கியமாம். நித்தியமாதலால் என்றும் அழியாத உயிரை 'வீழ' என்றது, அது உடம்பினின்று நீங்குதலை. பாவி - பாபீயென்னும் வடமொழித்திரிபு; தீவினையுடையானென்று பொருள்: இங்கே இது கொடியவனென்னுமாத்திரமாய் நின்றது; "அழுக்கா றென வொரு பாவி" என்ற குறளில், 'இருமையுங் கெடுத்தற்கொடுமைபற்றி, அழுக்காற்றினைப் பாவியென்றார்: கொடியானைப் பாவியென்னும் வழக்குண்மையின்' எனப் பரிமேலழக ருரைத்தவாறு அறிக. தன்னைப் பலவகையாலும் அழித்த கொடுமைபற்றி, உத்தரனைச் சல்லியன் பாவியென வெறுத்தனனென்க. பாவம் - பாபம்; இதுவும், இங்கே, நற்செய்கையன்று என்றமாத்திரமாய் நின்றது. போரிற் பின்வாங்காது பகைவராலிறந்தவர் வீரசுவர்க்கம்புகுவரென்பது நூற்றுணிபாதலால், 'வானகமேறினான்' என்றார். இறந்தானென்பதை 'வானகமேறினான்' என வேறொருவகையாற் கூறினதை, **பரியாயவணி** யென்பர் தண்டியாசிரியர். கருதிய பொருளை வெளிப்படையாகக் கூறாது அப்பொருள்தோன்ற வேறு வகையாற்கூறுதல், இவ்வணியினிலக்கணமாம்; இதனைப் **பிறிதினவிற்சியணி** என்று கூறுதலும் உண்டு. (40)*

### *41.-பாண்டவசேனை உத்தரனிறந்ததனாற் பெருங்கலக்க மடைய வீமன் போர்செய்ய வருதல்.*

**இன்றுபட்டனன்மச்சர்கோமகனென்றுதங்களினேரலார்**
**ஒன்றுபட்டுமிகைத்தெழுந்தனரூழிவாயெழுமுததிபோல்**
**அன்றுபட்டகலக்கமப்படியைவர்தம்படையமரின்மேல்**
**வென்றுபட்டமணிந்தவாரணமென்னவந்தனன்வீமனே.**

*(இ-ள்.) ' மச்சர் கோ மகன் - (பாண்டவர்களுக்கு அரிய அஞ்ஞாத வாசத்தில் பெரிய துணையாய்நின்ற) விராடராசனது புத்திரனான உத்தரன், இன்று பட்டனன் - இப்பொழுது இறந்தான்,' என்று - என்றகாரணத்தால், (மகிழ்ந்து), நேரலார் - பகைவர்கள் [துரியோதனன் பக்கத்தார்], தங்களில் ஒன்றுபட்டு - தங்களுக்குள் ஒன்றுசேர்ந்து, ஊழிவாய் எழும் உததிபோல் - கல்பரந்த காலத்திலே பொங்கியெழுகிற கடல்போல, மிகைத்து எழுந்தனர்-செருக்குக்கொண்டு கிளர்ந்தார்கள்; ஐவர்தம் படை - பாண்டவசேனை, அன்று பட்ட கலக்கம்- (விராடகுமாரன் இறந்தானென்று) அப்பொழுது அடைந்த மனத்துயரமும், அப்படி-அதற்கேற்றவாறேயிருந்தது; (பின்பு), வென்று பட்டம் அணிந்த வாரணம் என்ன - (பகை) வென்று (நெற்றியில்) வீரபட்ட மணிந்த யானை போல, (பகைவர் அஞ்சும்படி கம்பீரமாய்), வீமன் - வீமசேனன், அமரின்மேல் வந்தனன் - போர்செய்தற்கு வந்தான்; (எ - று.)*

*துரியோதனன் பக்கத்தார் உத்தரனிறந்ததற்காக எவ்வளவு மகிழ்ந்தனரோ, அவ்வளவு விசனப்பட்டார்கள் அதற்காகப் பாண்டவ சேனையா ரென்பார், 'அப்படி' என்றார். மச்சர்கோ-மத்ஸ்யதேசத்தார்க்கு அரசன். நேரலார்-தம்மோடு மனமிணங்காதவர்; எனவே. பகைவராயிற்று. கற்பமுடிவுதோறுங் கடல் பொங்கியெழுந்து உலகை மூடியழிக்கு மென்பது, நூற்கொள்கை. யானை - வீரனுக்கு,நடைவலிமை காம்பீரியங்களால் உவமை. வாரணம் - தற்சமவடமொழி. (41)*

*42.*-வீமன் போரில் வரவே எதிரிகள் பின்னிடைய, அப்போது துரியோதனன் வரக் கண்டு வீமன் சினத்தல்.

**தாமன்மேல்வரவரவுடைந்திடுதமமெனும்படிதண்டுடன்**
**வீமன்மேல்வரவரவுடைந்தனர்மேவலார்கள்வலம்புரித்**
**தாமன்மேல்வரவரவுகண்டுதரிக்கிலாதெதிர்சென்றனன்**
**காமன்மேலரனென்னநெஞ்சுகனன்றுகண்கள்சிவக்கவே.**

*(இ-ள்.) தாமன்-ஒளிவடிவமான சூரியன், மேல் வரவர- வானத்திலே உயர்ந்துவரவர, உடைந்திடு - அழிந்தொழிகிற, தமம் எனும்படி- இருள்போல, வீமன்தண்டுடன் மேல் வர வர - வீமசேனன் (தனது சத்துருகாதிநியென்னுங்) கதாயுதத்தோடு தம்மேல் எதிர்த்துவரவர, மேவலார்கள்-எதிர்பக்கத்தார், உடைந்தனர்- அழிந்தொழிந்தனர்; (அப்பொழுது), வலம்புரி தாமன் - நஞ்சாவட்டைப்பூமாலையையுடைய துரியோதனன், மேல்வர - வீமன்மேல் எதிர்த்துவர, (வீமன்), வரவு கண்டு -(அவனது)வருகையைப் பார்த்து, தரிக்கிலாது - சகிக்காமல், நெஞ்சு கனன்று- மனங்கோபித்து, கண்கள் சிவக்க - (அதனாற்) கண்கள் செந்நிறமடைய, காமன்மேல் அரன் என்ன- மன்மதன்மேற் பரமசிவன் போல, எதிர் சென்றனன் - (அத்துரியோதனன்மேல்) எதிர்த்துச் சொன்றான்; (எ - று.)*

*இப்பாட்டிற்கூறிய உவமையிரண்டனுள், முன்னது-இருந்த விடந்தெரியாதபடி உடனே அழிதற்கும், பின்னது - தவறாமல் விரைவில் எளிதில் அழிதற்கும் உவமை. தாமம் - வடசொற்றிரிபு: இது-ஒளியும் மாலையுமாதலை "தாம மொளியுந் தார்மாலையுமாம்" என்ற திவாகரத்தாலு மறிக. சூரியனுக்கு 'தாமநிதி' என்று வடமொழியில் ஒரு பெயர். தமஸ் - வடசொல். மேவலார் - விரும்பிச்சேராதவரென்று காரணப்பொருள். காமன் என்பதற்கு - (ஆண்பாற்கும் பெண்பாற்கும் ஒன்றற்கொன்று) ஆசையை விளைப்பவனென்றும், (யாவருங்கண்டு) விரும்புங் கட்டழகுடையவ னென்றும் பொருள். அரன் - ஹரன்; இவ்வடமொழிப்பெயர், அழித்தற்றொழிற் கடவுளானமைபற்றியது: இனி, அரனென்பதற்கு - அடியவரது அருந்துயரை அழிப்பவ னென்றும் பொருள்கொள்ளலாம். துரியோதன. னுக்கு அடையாளப்பூமாலை, நந்தியாவட்டம். ஒருகாலத்தில் கைலாச கிரியிற் சிவபெருமான் சனகர்முதலிய நால்வர்க்கு யோக நிலைமையை உணர்த்துதலினிமித்தம் தாம் யோகஞ்செய்துகொண்டிருக்கையில், பிரமனேவலால் மலரம்புகளை*

*யெய்து தமதுதவத்தைக் கெடுக்கலுற்ற மன்மதனைச் சினந்து நெற்றிக்கண்ணை விழித்து அதன்நெருப்புக்கு இரையாய் உடம்பெரிந்து சாம்பராய்ப்போம்படிசெய்தன ரென்பது **ஈற்றடியிற் குறித்த கதை.** (42)*

### *43.-வீமன் துரியோதனனைச் சார்ந்தாரோடு நிகழ்த்திய கடும்போர்.*

## செண்டினால்வசுகிரிதிரித்திடுசெழியனென்னவெடுத்தகைத்
## தண்டினாலெதிர்சென்றுதேரணிதிரியவன்பொடுசாடினான்
## மண்டினார்மணிமுடியும்வேழமும்வாசியும்பலதுணிபடக்
## கெண்டினான்முனைநின்றபன்னககேதுவோடமர்மோதினான்.

*(இ-ள்.) செண்டினால்-(சிவபிரான் கொடுத்தருளின) செண்டை ஆயுதமாகக்கொண்டு அதனால், வசுகிரி-பொன்மலையாகிய மகாமேருவை, திரித்திடு-சுழலச்செய்த, செழியன் என்ன-பாண்டியன் போல, எதிர் சென்று- எதிர்த்துப்போய்,கை. எடுத்த தண்டினால்-(தன்) கையிலேந்திய கதாயுதத்தால், மண்டினார்-(துரியோதனனைச் சுற்றிலும்) நெருங்கியுள்ள அரசர்களது, தேர் அணி-தேர்களின்வரிசைகள், திரிய - நிலைகெடும்படி, வன்பொடு சாடினான் - வலிமையோடு அடித்து, (அவர்களது) மணி முடிஉம் - இரத்தினகிரீடமும், வேழம்உம்- யானைகளும், வாசிஉம்-குதிரைகளும், பல துணிபட - அநேகந்துண்டுகளாகும்படி, கெண்டினான் - பிளந்து,முனை நின்ற பன்னக கேதுவோடு - எதிரில்நின்ற பாம்புக் கொடியனானதுரியோதனனுடனே, அமர் மோதினான் - போர்செய்பவனானான்; (எ-று.)*

*வஸு - செல்வம், வடசொல்; இது, இங்கே சிறப்பாய்ப் பொன்னையுணர்த்திற்று. செழியனென்பது - செழுமையுடையவனெனப் பொருள்படும்: பாண்டியனைக் குறிப்பது. கெண்டுதல் - கிண்டுதல், கண்டித்தல். **பி - ம் :** தறிய . கிண்டினான்.*

*__முதலடியிற் குறித்த கதை:-__ மலயத்துவசபாண்டியனது மகளாகிய தடாதகைப்பிராட்டியைச் சுந்தரபாண்டியவடிவமாகி மணம் புரிந்துகொண்ட சிவபெருமான் அவளிடம் தமக்குப்பிறந்த குமாரனாகிய உக்கிரபாண்டியனுக்கு முடிசூட்டி அவனுக்குப் பகையாகும் கடலையும் இந்திரனையும் மேருவையும்வெல்லுமாறு வேலும் வளையும் செண்டும் அளித்துப் போயினர்; பின்னர் அவன் ஒருகால் தன் நகர்மேற் பொங்கியெழுந்த ஏழுகடல்களையும் வேலெறிந்து வற்றச் செய்துவென்றான்; ஒரு காலத்தில் தன் நாட்டிற் பொதியமலையில் மேய்ந்திருந்த மேகங்களைப் பிடித்து அவன் தளைசெய்ய, அது கேட்டுத் தன்னையெதிர்த்து யுத்தஞ்செய்து தேவேந்திரன்மீது வளையையெறிந்து மகுடபங்கப்படுத்திச் சயித்தான்; மற்றொரு காலத்தில் தன்நாட்டில் பஞ்சம்நேரிட்டபொழுது மேருகிரியையடைந்து நிதிதேடி அது இருக்குமிடந்தெரியாமையால் அதன்மேற் செண்டைவீசி, அதற்கு ஆற்றாமல் அம்மலையரசன் எதிரில்வந்து கொடுத்த பொருள்களை யெல்லாம் பெற்றுவந்தா னென்பது **கதை.** 'செண்டினா லிமகிரி திரித்திடு **சென்னி** யென்ன' என்ற பாடத்துக்கு-ஒரு செண்டினாலே இமயமலையைத் திருப்பிய **சோழன்** போல என்று பொருள்; **அதற்குக் கதை***
*__வருமாறு;-__ பூர்வத்தில் மிக வலிமைகொண்ட கரிகாலனென்னுஞ் சோழராசன், சேரபாண்டியர் முதலிய அரசரெவரும் இங்குத் தன்னையெதிர்த்துப் போர்செய்யும் வல்லமையுடைய ரல்லாமையால், போரிலே பேராசையையும் தோள்தினவையும் உடையவனாய் 'வடதிசை பெருந்திசையாதலால், அங்கேயாவது பகைபெறலாம்' என்று எண்ணிப் போர்விருப்பத்தோடு புறப்பட்டுச்சென்று அங்கும் எதிர்ப்பவர் எவரையும் பெறாமல் அப்பாற் செல்லுமளவிலே, இமயமலை இவனை வழிதடுப்பது போலக் குறுக்கிட்டு எதிரிற் காணப்பட, அதுகண்டு அவன் 'இதுபகையாக நின்று என்னை விலக்கி எதிரிட்டது' என்று கருதிக் கோபங்கொண்டு அதைப் புறங்காண்பதற்காகவும், அதற்கு வடக்கிலுந் தனது ஆஞ்ஞை செல்லுவதற்காகவும், தனது போர் விருப்பத்தையும் தோள்தினவையும் தணித்துத் தன்பெருவலிமையையும் வெற்றியையும் வெளியிடுவதற்காகவும், சாத்தனனென்னுந் தெய்வத்தின் அருளால் தான் பெற்ற ஒருசெண்டை ஆயுதமாகக்கொண்டு அந்த மலையின்மேல் எறிந்து அதனால் அதை அடித்துத்திருப்பி அம்மலையின் மேல்புறத்திலே தனது கொடியாகிய புலியை வெற்றிக்கு அடையாளமாக எழுதுவித்து, பின்பு கோபந்தணிந்துமீண்டும் அக்கிரியை முன்போலவே திருப்பிச் சரி செய்து நிறுத்தினான் என்பதாம்; இதைச் சிலப்பதிகாரத்தாலும் கலிங்கத்துப்பரணியாலும் அறிக. (43)*

*44.-இதுவும் அடுத்த கவியும் - வீமன் துரியோதனனோடு நிகழ்த்திய கடும்போரைத் தெரிவிக்கும்.*

***மோதியாயிரபேதமாகமுனைந்துதங்களிலிருவருஞ்
சாதியாதனவில்லைமீளிமடங்கலேறனதன்மையார்
காதியாடமர்புரியுமேதினிகாவலன்குனிகார்முகஞ்
சேதியாவொருகைகொடேறியதேரெடுத்தெதிர்சிந்தினான்.***

*(இ - ள்.) (அப்பொழுது), மீளி-வலிமையையுடைய, மடங்கல் ஏறு - ஆண்சிங்கத்தை,அன - ஒத்த, தன்மையார் - தன்மையையுடையவர்களாகிய, இருவர்உம் - (வீமனும்துரியோதனனும் ஆகிய) இரண்டுபேரும், தங்களில் - தமக்குள் (ஒருவரோடொருவர்)மோதி - தாக்கி, ஆயிரம் பேதம் ஆக முனைந்து - மிகப்பலவகைகளாகப்போர்செய்து, சாதியாதன - செய்து முடிக்காத யுத்த வகைகள், இல்லை-: (பின்புவீமன்), காதி ஆடு அமர் புரியும் மேதினி காவலன் - வருத்திவெல்லவல்லபோரைச்செய்யும் நிலவுலகத்தரசனான துரியோதனனது, குனி கார்முகம் - வளைந்த வில்லை, சேதியா - துண்டுபடுத்தி, ஒருகை கொடு - (தனது) ஒருகையால், ஏறிய தேர் எடுத்து எதிர் சிந்தினான் - (அவன்) ஏறியுள்ள தேரைத் தூக்கி எதிரில் வீசியெறிந்தான்; (எ - று.)*

*வீரருக்குச் சிங்கவுவமை, நடை வலிமை நோக்கு தைரிய காம்பீரியங்களால் என்க. இருவரும் சமபலமுடையவ ராதலின், இரு வருக்கும் ஓருவமை கூறினார். சாதியாதன இல்லை - போர்த்திறமைக ளெல்லாவற்றையுஞ் செய்தன ரென்பதாம் ; இரண்டு எதிர்மறை உடன் பாட்டையுணர்த்தித் துணிவுகுறித்தன. மடங்கல் - (பிடரிமயிர்) மடங்கு தலையுடையதெனக் காரணப்பெயராம்; பிடரி மயிருடைமைபற்றி, சிங்கத்துக்கு வடமொழியில் 'கேஸரீ' என ஒருபெயர் வழங்குதலுங் காண்க. ஏறு - ஆண்பாற்பெயர்; கருத்தாப்பொருளீறுபுணர்ந்துகெட்ட காரணக்குறி. மேதிநீ - (திருமாலாற் கொல்லப்பட்ட மது கைடப ரென்னும் அசுரர்களது) உடற் கொழுப்பினால் நனைந்தமைபற்றி, பூமிக்கு இப்பெயர்; மேதஸ் - நிணம். (44)*

***45. ஆரழிந்தனவுருளழிந்தனவச்சழிந்தனவச்சிரத்
தேரழிந்துகொடிஞ்சியும்பலசின்னமானதுமன்னனும்
போரழிந்தனனென்றுசேனைபுறக்கிடாவருபொழுதினிற்
கூரழிந்ததெனக்குறித்தணிநின்றகாவலர்கூடினர்.***

*(இ - ள்.) (அப்பொழுது, துரியோதனனது தேர்ச்சக்கரத்தின்), ஆர் - இலைகள், அழிந்தன-; உருள் - சக்கரங்கள், அழிந்தன-; அச்சு - இரிசுகள், அழிந்தன-; வச்சிரம் தேர் அழிந்து - வச்சிரம்போல் உறுதியான தேர் சிதைந்து, கொடிஞ்சிஉம் பல சின்னம் ஆனது - தேர்மொட்டும் பல துண்டுகளாய்விட்டது; (அப்பொழுது), மன்னன்உம் போர் அழிந்தனன் என்று - துரியோதனனும் போரில் தோற்றா னென்ற காரணத்தால், சேனை புறக்கு இடா வரு பொழுதினில் - (அவனது)சேனை புறங்கொடுத்து வருகிற சமயத்தில், அணி நின்ற காவலர் - (அவனது)சேனை வகுப்பில் நின்ற அரசர்கள் (பலர்), கூர் அழிந்தது என குறித்து - (நமது)திறமை கெட்டதென்று கருதி, கூடினர் - ஒருங்குதிரண்டார்கள்; (எ - று.)*

*"ஆரே கூர்மையு மாத்தியு மாகுந், தேராழி யகத்திற் செறி யுறுப்புமாகும்" என்ற திவாகரத்தாலும், "ஆர்கெழு குறடு சூட்டாழி போன்று" என்ற சீவகசிந்தாமணியாலும், அதன் உரையாலும், தேர்ச்சக்கரத்தின் இடையிலேயுள்ள இலைகள் ஆரெனப்படுமென விளங்கும். உருள் - சக்கரத்துக்குக் காரணப்பெயர். அச்சு - உருள் கோத்தமரம்; இது-அக்ஷமென்னும் வடசொல்லின் சிதைவு. வச்சிரம்- ஒருவகையிரத்தினமென்றாவது, இந்திரனாயுதமென்றாவது, மரவச்சிர மென்றாவது கொள்க. கொடிஞ்சி - தாமரைமலரின் வடிவமாகச் செய்து தேரின்முன்னிடத்து வைக்கப்படுவதோருறுப்பு என்பர். சிந்நம் - வடசொல். புறக்கு - உருபுமயக்கமாக இரண்டாம்வேற்றுமையின் பொருளில் வந்த நான்காம்வேற்றுமையென்றாவது, இதில்கு - சாரியை யென்றாவது கொள்க. (45)*

*46.-துரியோதனனுக்குப் பக்கபலமாக அவனுடைய மைத்துனன்மார் வருதல்.*

**பரித்ததேரொடுபரிதியைச்செறிபரிதிபோலிருபக்கமுந்**
**தரித்தவேலினர்தாரைவாளினர்தாமவில்லினராகவே**
**விரித்தவெண்குடைமன்னர்சூழ்தரவீமனிற்பதொர்மேன்மைகண்**
**டெரித்தநெஞ்சொடுவிரைவின்மைத்துனரானகொற்றவரெய்தினார்.**

*(இ-ள்.) விரித்த வெள் குடை மன்னர் - விரித்துப்பிடித்த வெண் கொற்றக்குடையையுடைய அரசர்கள் (பலர்),- தரித்த வேலினர் - பிடித்த வேலாயுதமுடையவர்களும், தாரை வாளினர் - கூர் நுனியையுடைய வாளாயுதத்தையுடையவர்களும், தாமம் வில்லினர் ஆக - ஒளியையுடைய வில்லையுடையவர்களுமாக,- பரிதியை செறி பரிதி போல் - சூரியனைச் சூழ்ந்த பரிவேடம்போல, இரு பக்கம்உம் சூழ்தர-(தனது) இரண்டு பக்கத்திலுஞ் சுற்றிநிற்க,- வீமன் - வீமசேனன், பரித்த தேரொடு - (தன்னைத்) தாங்கி தேருடனே, நிற்பது- (இடையில்) நிற்பதாகிய, ஒர் மேன்மை - ஒரு கம்பீரத்தோற்றத்தை, கண்டு - பார்த்து,எரித்த நெஞ்சொடு - பொறாமைகொண்டு தவித்த மனத்துடனே, மைத்துனர் ஆனகொற்றவர் - (துரியோதனனுக்கு) மைத்துனன்மார்களான அரசர்கள், விரைவின்எய்தினார் - துரிதமாக அருகுவந்துசேர்ந்தார்கள்; (எ-று.)*

*பகையிருளொழித்துத் தேரின்மீது விளங்குதலால் வீமனுக்குச் சூரியனும், அவனைச் சூழ்ந்துநின்று விளங்குதலால் மன்னர்க்குப் பரிவேடமும் உவமை. பரித்ததேரொடு என்பதை 'மன்னர் சூழ்தர' என்பதனோடும் இயைக்கலாம். பரிதி - வடசொல்; சூரியனுக்குச் சமீபத்தில் சிலகாலங்களில் சூழ்ந்துதோன்றும் மண்டல வடிவமான ரேகை; இதற்கு - பரிவேஷமென்றும் பெயர்; தென் மொழியில் 'ஊர்கோள்' எனப்படும். பக்கம் - பக்ஷம்; வடசொல். மைத்துனரான கொற்றவர் - துரியோதனனது மனைவியான பானுமதிக்கு உடன்பிறந்த முறையாகுபவர். தாமம் - போர்மாலைசூடிய என்றும், நாணிக்கயிற்றையுடைய என்றுங் கொள்ளலாம். **பி -ம்:** மத்திரரான கொற்றவர். (46)*

### *47.-வீமன் கதாயுதத்தினால் வந்தவரோடு சீறி அவரிரியப்பொருதல்.*

**எய்துமைத்துனரெய்துதெவ்வரொடெண்ணில்போர்செயவிண்ணிடைச்**
**செய்துபெற்றனதேரினின்றுமிழிந்துளானனிசீறினான்**
**மொய்திறற்பவமானனன்றுமுருக்குமுக்குவடென்னவே**
**கைதவப்படைமன்னர்மாமுடிசிதையவங்கொருகதையினால்.**

*(இ - ள்.) எய்து மைத்துனர்-(இவ்வாறு) வந்த துரியோதனன் மைத்துனன்மார்,எய்து-(பாணங்களைப்) பிரயோகித்து, தெவ்வரொடு- (வீமன் முதலிய)பகைவர்களுடனே, எண் இல் போர் செய- அளவில்லாத பெரும் போரைச் செய்யாநிற்க,-விண்இடை செய்து பெற்று அன தேரினின்றும் இழிந்துளான் - தேவலோகத்திலே செய்யப்பட்டு(த் தான்) பெற்றாற்போன்ற (தனது) இரதத்தினின்று இறங்கியுள்ளவனாய், (வீமன்),- மொய் திறல் பவமானன் அன்று முருக்கு முக்குவடு என்னவ - மிக்க வலிமையையுடைய வாயுதேவன் அக்காலத்தில் [முன்பு ஒரு காலத்தில்] முறித்துத்தள்ளின (மேரு மலையின்) மூன்று சிகரங்கள்போல, கைதவம் படை மன்னர் மா முடி சிதைய-வஞ்சனை யையுடைய சேனைகளைக்கொண்ட அவ்வரசர்களது பெரிய தலைகள் சிதறிவிழும்படி, அங்கு- அப்பொழுது, ஒரு கதையினால் - (தனது) ஒப்பற்ற கதாயுதத்தால், நனி சீறினான் - மிகக் கோபித்து அடித்தான்;*

*மிகவலிமையுடையவனான வீமனுக்கு வாயுவும், அவனால் தள்ளப்பட்ட மன்னர் தலைகளுக்கு மகாமேருசிகரங்களும் உவமை. வீமன் வாயு குமாரனாதலால் அவனுக்கு வாயுவை உவமையாக்கியும், படை மன்னர் வஞ்சகனான துரியோதனனைச் சார்ந்தவ ராதலால் அவருக்குக் கைதவம் என்ற அடைமொழி கொடுத்துங் கூறினார். விண்ணிடைச் செய்துபெற்றனதேர்-விரைந்து செல்லுதலிலும், வலிமையிலும் அழகிலும், சிறப்பிலும் தேவவிமானம் போன்ற தேர்என்க. பவமாநன், கைதவம் - வடசொற்கள். முக்குவடு-திரிகூடம். அங்கு-அவ்விடத்து என்றுமாம். இல் போர் - பண்புத்தொகை. அடித்தலாகிய காரியத்தை நனிசீறுதலாகிய காரணத்தாற் கூறினார்; உபசார வழக்கு. பெற்றன-பெற்றாலன்ன, அல்லது பெற்றதன்ன. முடி- கிரீடமுமாம். **பி-ம்:** எய்துமத்திரர்.*

***மூன்றாமடியிற் குறித்த கதை:-*** *முன்ஒருகால் வாயுதேவனுக்கும் ஆதிசேஷனுக்கும் தமக்குள் யார்பலசாலியென்று விவாதமுண்டாக, அதனைப் பரிசோதித்தறியும்பொருட்டு வாயுதேவன் மேருமலையின் சிகரத்தைப் பெயர்த்துத்தள்ளுவதென்றும், ஆதிசேஷன் அது பெயரவொட்டாமற் காத்துக்கொள்வதென்றும் ஏற்பாடு உண்டாகி, அங்ஙனமே இருவரும் தேவர்முதலியோரது முன்னிலையில் தத்தம் வலிமையைக் காட்டத் தொடங்கியபொழுது, ஆதிசேஷன் தனது ஆயிரம் படங்களாலும் மேருமலையின் ஆயிரஞ்சிகரங்களையுங் கவித்துக்கொண்டு பெயரவொட்டாமற் பல நேரங்காக்க, பின்னர் வாயுதேவன் தன் வலிமையால் அம்மலைச்சிகரங்களில் மூன்றைப் பெயர்த்துக் கொண்டுபோய்த் தென்திசையில் தள்ளி விட்டானென்பது. (47)*

***48.-தன்தம்பி யிறந்ததனாற் பெருஞ்சினங்கொண்டு சுவேதன் வில்லொடு தோன்றுதல்.***

**அம்பரத்தவர்கண்டுநின்றவரதிசயித்திடவானின்மே**
**லிம்பரிப்படிதெவ்வர்வெம்படையிரியவன்பொடுதிரியவே**
**தம்பிபட்டனனென்றுகொண்டெழுசாகரத்தெழுதழலெனத்**
**தும்பையுற்றுமிலைச்சியீசனளித்தவில்லொடுதோன்றினான்.**

*(இ - ள்) அம்பரத்தவர் - மேலுலகத்தவரான தேவர்கள், வானின்மேல் - ஆகாயத்திலே (இருந்து), கண்டு நின்றவர் - (தனது போர்த்திறத்தைப்) பார்த்துக்கொண்டு நின்றவர்களாய், அதிசயித்திட - ஆச்சரியப்படும்படி, இம்பர் - இவ்விடத்திலே [போர்க்களத்தில்], தெவ்வர் வெம் படை இரிய - பகைவர்களது கொடிய சேனைகள் பயந்தோடுமாறு, வன்பொடு - வலிமையோடு, இப்படி திரிய - (வீமன்) இவ்வாறு [கதாயுத்தஞ்செய்து] சஞ்சரிக்க,-(மற்றொரு பக்கத்தில் சுவேதன்) 'தம்பி பட்டனன் என்று கொண்டு - (தனது) தம்பியான உத்தரன் இறந்தா னென்று அறிந்து, எழுசாகரத்து எழு தழல் என - பொங்குந்தன்மையதான கடலினின்று மேற்கிளர் கிற வடவாமுகாக்கினிபோல, தும்பை உற்று மிலைச்சி - (போர்க்கு உரிய) தும்பைப்பூமாலையை விரும்பிச் சூடிக்கொண்டு, ஈசன் அளித்த வில்லொடு - சிவபிரான் (தனக்குத்) தந்தருளின வில்லுடனே, தோன்றினான் - (போர் செய்யப்) புறப்பட்டான்; (எ - று,)*

*அம்பரத்திற்சஞ்சரிப்பவர்-அம்பரத்தவர். ஸாகரம் - சகரசக்கரவர்த்தி புத்திரரால் தோண்டப்பட்ட தென்று பொருள்; வடமொழித் தத்திதாந்த நாமம்: இந்திரனால் ஒளிக்கப்பட்ட சகரசக்கரவர்த்தியின் அசுவமேதயாகக் குதிரையைத் தேடுகையில் அவனது இரண்டாம் மனைவியின் புத்திரர் அறுபதினாயிரவர் பாதாளஞ்செல்லுதற்கு வழியாகத் தோண்டிய பள்ளமே பின்பு நீர்நிறைந்து ஒரு கடலாயிற்றென வரலாறு காண்க. கடலிடையிலே ஒரு பெண் குதிரையின் முகத்தில்எப்பொழுதும் தீப்பற்றியெரிகிற தென்றும், அது மழைநீர் முதலியவற்றால் கடல்பொங்காதபடி அதிகநீரை அப்பொழுதப்பொழுது உறிஞ்சிநிற்ப தென்றும், அதுவேகல் பாந்தகாலத்தில் கடலினின்று வெளிவந்து உலகை எரித்தழிக்கு மென்றும்நூற்கொள்கை. எழுசாகரம் என்பதற்கு- ஏழுவகையான கடலென்று உரைப்பாருமுளர். தும்பை-அதன் பூமாலைக்கு இருமடியாகுபெயர். ஈசன் என்ற வடசொல்லுக்கு- எல்லா ஐசுவரியமு முடையவனென்று பொருள். கோபக்கினியாற் சொலித்தல்பற்றியும், சேனைக்கடலிடை விளங்குதல்பற்றியும், சுவேதனுக்கு வடவைத்தீயை உவமைகூறினார்.*

*சுவேதன் முன்னொருகாலத்தில் தேவலோகத்திற் போயிருந்த பொழுது வசுக்கள் அவனை மயிலென்னும் பறவையாகும்படி சபித்து அவன்பேரெழுதிய அம்பொன்றை அவன்மே லெறிய, அதுபட்டவுடனே அவன் மயிலாகித் தந்தையாகிய விராடனிடம் வந்துசேர, அதனையறியாத அவன் கோபித்துத் துரத்திவிட, மைந்தன் பறந்து சென்று தவஞ்செய்து சிவபிரானருளால் சாபவிடை பெற்று வில் முதலிய ஆயுதங்களும் கவசங்களும் பெற்றனனென்ற வரலாறுபற்றி,* ***ஈசனளித்தவில்'*** *எனப்பட்டது; 'சிவன்றன்னைநோக்கிச் சிவேதன்றவஞ்செய்தவாறு, மவன்றனருளாற் பல வாயுதம்பெற்றவாறும்" என்றார் கீழ் வெளிப்பாட்டுச்சருக்கத்தும். (48)*

***49.-சுவேதன் எதிரிட்டவரை வென்றுகொண்டு சல்லியனுள்ள விடத்தைவினாவிச் சென்று சேர்தல்.***

***சங்கி னங்கண்மு ழங்க வும்பணை முரசி னங்கட ழங்கவுந்***
***துங்க வெங்களி றிவுளி தேரொடு தானை மன்னவர் சூழவும்***
***எங்கு நின்றன னெங்கு நின்றனன் மத்தி ரத்தர செனறுபோ***
***யங்கு நின்றம கீபர் வென்னிட வவனை முந்துற வணுகினான்.***

*(இ - ள்.) (இவ்வாறு தோன்றின சுவேதன்), சங்கு இனங்கள் முழங்கஉம் -* சங்கவாத்தியங்களின் வகைகள் ஒலிக்கவும், *பணை முரசு இனங்கள் தழங்கஉம் -* பெரிய பேரிகைகளின் வகைகள் ஒலிக்கவும், *துங்கம் வெம்களிறு இவுளி தேரொடு தானை மன்னவர் சூழஉம்-*உயர்ந்த கொடிய யானைகளும் குதிரைகளும் இரதங்களும் காலாட்படையும்ஆகிய சதுரங்க சைனியத்தோடு (பல) *அரசர்கள்* (தன்னைச்) சூழ்ந்துவரவும், *மத்திரத்து அரசு எங்கு நின்றனன் எங்கு நின்றனன் என்று போய் -* (என்தம்பியைக்கொன்றவனான) மத்திரதேசாதிபதியாகிய சல்லியன் எவ்விடத்துள்ளான்எவ்விடத்துள்ளான் என்றுசொல்லித் தேடிச்சென்று, *அங்கு நின்ற மகீபர்வென் இட -*அவ்விடத்தில் *[தான் போகிறவழியில்]* நின்ற பகையரசர்கள் புறங்கொடுத்தோடும்படி,*(பொருது), அவனை முந்துற அணுகினான் -* அச்சல்லியனை முற்படக் கிட்டினான்;*(எ - று.)*

*அடுக்கு -* கோபமும் விரைவும் பற்றியது. *அரசு -* அரசனுக்குப் பண்பாகுபெயர்: *இது -* சொல்லால் அஃறிணையாயினும் பொருளால் உயர்திணையாகையால், நின்றனன் என்ற ஆண்பால்முற்றைக் கொண்டது. *வென் -* வெந். *(49)*

வேறு.

***50.-சுவேதன் சல்லியனோடு வீரவாதஞ்சொல்ல, பிறகு இருவருங் கைகலந்து பொருதல்.***

***சல்லியனெ னப்பெயர்த ரித்துவரு கோமுன்***
***வல்லியமெ னத்தகுசி வேதனமர் வல்லான்***
***பல்லியமு ழக்கியதெ னப்பலவும் வீரஞ்***
***சொல்லியொரு வர்க்கொருவர் தொடுசிலை குனித்தார்.***

*(இ - ள்.) அமர் வல்லான் -* போர்செய்தலில் வல்லவனாகிய, *வல்லியம் என தகு சிவேதன் -(*கொடிய பராக்கிரமத்திற்) புலியென்று சொல்லத்தக்க சுவேதகுமாரன், *சல்லியன் என பெயர் தரித்து வரு கோ முன் -* சல்லியனென்று பெயர்பெற்றுவந்த அவ்வரசனெதிரில் *பல் இயம் முழக்கியது என -* பலவகைவாத்தியங்களை முழங்கச்செய்ததுபோல, *(உரத்தகுரலாக), பலஉம் வீரம் சொல்லி-* பலவகைவீரவாதங்களை யெல்லாஞ் சொன்னபின்பு, *(இருவரும்), ஒருவர்க்கு ஒருவர் தொடு சிலை குனித்தார் -* ஒருவரோடொருவர் அம்புதொடுத்தற்குரிய வில்லை வளைத்துப் போர்செய்தார்கள்;*(எ- று.)*

*சொல்லி -* எச்சத்திரிபு. *தொடுசிலை -* வினைத்தொகை.

இதுமுதற் பத்தொன்பது கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச் சீரொன்றுமாச்சீரும், மற்றை மூன்றும் விளங்காய்ச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட **கலிவிருத்தங்கள்**. *(50)*

*51.-அப்போது துரியோதனன் தம்பிமார் அறுவரைச் சல்லியனுக்குத் துணையாக அனுப்புதல்.*

***ஒருவருமிவர்க்குநிகரில்லையெனவுற்றே***
***யிருவருமலைந்திடவிராசகுலராசன்***
***பருவரல்கொண்மத்திரபதிக்குதவியாகென்***
***றருவரையொடொத்தபுயரறுவரைவிடுத்தான்.***

*(இ - ள்.) இருவர்உம் - (சல்லியன் சுவேதன் என்னும்) இவ் விரண்டுபேரும், இவர்க்கு ஒருவர்உம் நிகர் இல்லை என-இவர்களுக்கு ஒருத்தரும் ஒப்பில்லை யென்று சொல்லும்படி, உற்று மலைந்திட- மிகுதியாகப் போர்செய்ய, (அப்பொழுது), இராச குலராசன் - அரசர்களுடைய கூட்டத்திற்குத் தலைவனாகிய துரியோதனன், பருவரல் கொள் மத்திரபதிக்கு உதவி ஆக என்று - (அப்போரில்) இளைப்பையடைகிற மத்திரதேசத்தரசனான சல்லியனுக்குச் சகாயமாகக்கடவரென்று, அரு வரையொடு ஒத்த புயர் அறுவரை விடுத்தான் - அழித்தற்கரிய மலையோடு சமானமான தோள்களை யுடையவர்களான (தனதுதம்பிமார்கள்) ஆறுபேரைத் துணையனுப்பினான்; (எ - று.)*

*இவர்கள் துரியோதனன்தம்பிய ரென்பது, அடுத்தகவியில் "தரணிபதி தம்பியர்கள்" என்பதனால் விளங்கும். ஆயுதங்களால் அழிக்கமுடியாத வலிமையிலும், பருமையிலும், உயர்ச்சியிலும், மலை- தோளுக்கு உவமை. 'இராசராசன்' என்று துரியோதனனுக்கு ஒரு பெயர். பருவரல் - வருந்துதல்; பருவா -பகுதி, உதவி - உதவிசெய்பவர்க்குத் தொழிலாகுபெயர். (51)*

***52.-மூன்றுகவிகள் - சுவேதன் எதிர்த்துவந்தவரை வென்றமை கூறும்.***

***தரணிபதிதம்பியர்கடானையொடுவந்தே***
***யிரணமுகமொன்றுமயிலோனெனவெதிர்த்தார்***
***திரணறைகொடார்புனைசிவேதனவரந்தக்***
***கரணம்வறிதாகும்வகைகணைபலதொடுத்தான்.***

*(இ-ள்.) தரணிபதி தம்பியர்கள் - (இங்ஙனம் அனுப்பப்பட்ட) பூமிக்குத்தலைவனான துரியோதனனது தம்பிமார்கள், தானையொடு - சேனையுடனே,இரணம் முகம் ஒன்றும் மயிலோன் என- போர்க்களத்தினிடத்தை யடைகிறமயிலை(வாகனமுங் கொடியுமாக) உடைய முருகக்கடவுள்போல, வந்து எதிர்த்தார்-;(அப்பொழுது), திரள் நறை கொள் தார் புனை சிவேதன் - திரண்ட தேனைக்கொண்ட பூமாலையைச் சூடிய சுவேதன். அவர் அந்தக்கரணம் வறிது ஆகும்வகை- அவர்களது மனம் அழியும்படி, கணை பல தொடுத்தான் - அநேக பாணங்களை (மேன்மேல்) பிரயோகித்தான்; (எ - று.)*

*தம்பியர் அறுவரும் உடலாற்பலராயினும் மனத்தால் ஒருவரேயாதலாலும், சுப்பிரமணியமூர்த்தி உருவம் பலவாயினுந் தாம் ஒருவரேயாதலாலும், இவ்வுவமை ஏற்கும். முருகக்கடவுளுவமை பல பராக்கிரமங்களோடு ஆறுவடிவமாக வருதற் கென்க. சுப்பிரமணியனது வடிவம் ஆறுகூறாகச்சென்றது, சூரபதுமனை அழித்த பொழுதென்க; இங்கே "அறுவேறு வகையினஞ்சுவரமண்டி" என்ற திருமுருகாற்றுப்படை காண்க. அயிலோனெனப் பிரித்து, வேலாயுதத்தையுடையவனெனக் கொள்ளலுமாம்; 'வேலன்' என்று சுப்பிரமணியனுக்கு ஒருபெயர். வறிதாகும்வகை- வறுமையுடையதாகும்படி; எண்ணஞ் சிறிதும் இல்லாமற் கலங்கும்படி; இடைவிடாது எய்த*
*லின் எதிரிகளதுமனம் யாதாயினுமொன்றைச் சிந்திக்கவுஞ் சிறிதும் அவகாச மில்லையாயிற் றென்க. ரணமென்னும் வடமொழி, முதலில் இகரம்பெற்று, இரணம்எனநின்றது; [நன் - பத -21.] (52)*

***53. முரண்டெதிருமன்னவர்முரண்கொள்சிலையோரொன்***
***றிரண்டுசிலையாகவொருவீரணிவையெய்தான்***
***திரண்டுவருமன்னர்முடிசிந்தியுடன்மண்மேற்***
***புரண்டுவிழவாளிமழைதூவுபுயல்போல்வான்.***

*(இ - ள்.) திரண்டு - (தம்மில்) கூடி, வரு - (போருக்கு) வருகிற, மன்னர் - பகையரசர்களது, முடி- தலையை, சிந்தி - திதறி, உடல் மண் மேல் புரண்டு விழ- (அவர்கள்) உடம்பு தரையிலே விழுந்து உருளும்படி, வாளி மழை தூவு- பாணவருஷத்தைச் சொரிகின்ற, புயல் - காளமேகத்தை, போல்வான் - ஒப்பவனான, ஒரு வீரன்-(சுவேதனாகிய) வீரனொருத்தன், முரண்டு எதிரும் மன்னவர் -*

*பகைமைகொண்டு எதிர்த்துப்போர்செய்யும் அந்தஆறு அரசர்களது, முரண் கொள் சிலை- வலிமையைக் கொண்ட வில், ஓர் ஒன்று இரண்டு சிலை ஆக - ஒவ்வொன்றும் இவ்விரண்டு வில்லாகும்படி இவை எய்தான் - இந்தப்பல அம்புகளைச் சொரிந்தான்; (எ - று.)*

*கீழ்க்கவியில் 'அவரந்தக்கரணம் வறிதாகும்வகை கணைபல தொடுத்தான்' என்றதையே இக்கவியில் விவரித்து நன்குவிளக்கிக் கூறினராதலால், 'கணைபல' என்றதை இவையென அண்மைச் சுட்டாற் குறித்தார். ஓரொன்று இரண்டுசிலையாக- ஒவ்வொன்று இரண்டு துண்டாக என்றபடி; ஒன்றை இரண்டாக்குதல் வல்லவர் தொழிலாதலின், இதில், ஒருவில் இரண்டு வில்லாக என ஒரு சமத்காரமுந் தோன்றக்கூறினமை காண்க; "அறுவர் சிலையினையுமாறிரண்டு கூறாக்கி" என்றார் பாரதவெண்பாவிலும். புரண்டு விழ-விழுந்துபுரள என விகுதிபிரித்துக்கூட்டுக.(53)*

***54. தேரும்விசைகூரிவுளியுஞ்செறிபனைக்கைக்***
***காருமயில்வாள்சிலைதரித்துவருகாலாள்***
***யாரும்வெடிபூளைவனமென்னவொருதானே***
***யூருமொருதேரனிலமொக்குமெனநின்றான்.***

*(இ - ள்.) (பகைவர்களது), தேர்உம்-இரதங்களும், விசை கூர் இவுளி உம்- வேகம்மிக்க குதிரைகளும், செறி பனை கை கார்உம்- (வலிமை) மிக்கபனைமரம்போன்றதுதிக்கையையுடைய மேகம் போன்ற யானைகளும், அயில் வாள் சிலை தரித்துவரு காலாள் - வேல் வாள் வில் என்னும் ஆயுதங்களை யேந்திவருகிறகாலாள்களும், யார்உம்-(ஆக நால்வகைச்) சேனையோரும், வெடி பூளைவனம்என்ன- வெடித்த இலவம்பஞ்சுத்தொகுதியை யொத்திருக்க, ஒரு தான்ஏ ஊரும்ஒருதேர் - வேறுதுணையில்லாத தான் ஒருவனே ஏறிச்செல்லும் (தனது) இரதமொன்று, அனிலம் ஒக்கும் என (அவ்விலவம்பஞ்சுகளைப் பறக்கடிக்கிற) காற்றையொக்கு மென்று சொல்லும்படி, நின்றான் - (வெற்றிகொண்டு) நின்றான்; (எ - று.)*
*ஒரு காலத்தில் பலபேரைப் புறங்காட்டியோடச் செய்து நிற்றற்கு, காற்று இலவம்பஞ்சைச் சிதறச்செய்தல் உவமையெனக் காண்க. பனைக்கைக் கார்எனவே, யானையாயிற்று. கார் - உவமையாகுபெயர். காலாள்-வேற்றுமைத்தொகை. அநிலம்- வடசொல்.*

***55.-துரியோதனனுரைப்பச் சுவேதனை வீடுமனெதிர்த்தல்.***

***பட்டனவொழிந்துபலபடையுமிவனம்பிற்***
***கெட்டநிலைகண்டுரககேதனனுரைப்பத்***
***தொட்டவரிவில்லினொடுசூறையனிலம்போல்***
***விட்டபரிமாவிரதவீடுமனெதிர்ந்தான்.***

*(இ - ள்.) இவன் அம்பின் - இந்தச்சுவேதனது பாணங்களால், பட்டன ஒழிந்து- இறந்தசேனைகள்போக, பல படைஉம் - (இறவாத மற்றை) அநேகஞ்சேனைகளும்,கெட்ட - தோற்றுஓடின, நிலை - நிலைமையை, கண்டு - பார்த்து, உரக கேதனன் -பாம்புக்கொடியனான துரியோதனன், உரைப்ப - சொல்ல,- சூறை அனிலம் போல்விட்ட பரி மா இரதம் வீடுமன் - பெருஞ்சுழல்காற்றுப்போல மிகவிசையாகவிடப்படுகிற குதிரைகளைப்பூட்டிய தேரையுடைய பீஷ்மன், தொட்ட வரிவில்லினொடு - (கையிற்) பிடித்த கட்டமைந்தவில்லினுடனே, எதிர்ந்தான் - (சுவேதனெதிரில்) வந்தான்; (எ - று.)*

*'இவனம்பின்' என்றது - மத்திமதீபம். சூறையனிலம்போல் எதிர்ந்தான் எனினும்அமையும். விரதமெனப்பிரித்துரைக்கவும் இடமுண்டு. (55)*

***56.-மூன்று கவிகள்-வீடுமன் சுவேதனோடு மும்மரமாகப் பொருது இளைத்தமையைக் கூறும்***

***மத்திரனைவிட்டுமிசைவந்தமகிபதிமேல்***
***அத்திரமும்விட்டவனடற்சிலையறுத்தான்***
***சித்திரமெனும்படிதிகைத்தனன்விராடன்***
***புத்திரன்விடுங்கணைபொறாதுபுலிபோல்வான்.***

*(இ - ள்.) (அப்பொழுது சுவேதன்),* மத்திரனை விட்டு - சல்லியனை நீங்கி, மிசைவந்த மகிபதிமேல் அத்திரம்உம் விட்டு - தன்மேல் எதிர்த்து வந்த வீடுமராசன்மேல் அம்புகளையும் எறிந்து, அவன் அடல் சிலை அறுத்தான் - அவ்வீடுமனது வலிமையையுடையவில்லை அறுத்துத்தள்ளினான்; (தள்ளவே), புலி போல்வான் - (பலபராக்கிரமங்களிற்) புலியை யொப்பவனாகிய வீடுமன், விராடன் புத்திரன் விடும் கணை பொறாது - விராடகுமாரனான சுவேதன் விடுகிற அம்புகளைப் பொறுக்கமாட்டாமல், சித்திரம் எனும்படி திகைத்தனன் - எழுதுசித்திரமென்று சொல்லும்படி பிரமித்து நின்றான்; *(எ - று.)*

சந்தனுவின் மூத்தகுமாரனான இவனே நிலவுலகத்துக்குஉரிய அரசனாதலின், மகிபதியென்றார். சித்திரம் - செயலறுதற்குஉவமை. 'அத்திரமும்விட்டு' என்ற உம்மை- 'மத்திரனைவிட்டு' என்றதனை நோக்கிய இறந்தது தழுவிய எச்சம். *(56)*

***57. வீடுமனுமீளவொருவிற்கொடுசிவேதன்***
***சூடுமுடிவீழவொருசுடுகணைதொடுத்தான்***
***கோடுசிலைவாளிபலகொண்டிவனவன்றேர்***
***நீடுகொடியாடையைநிலத்துறவிழுத்தான்.***

*(இ - ள்.) (அப்பொழுது),* வீடுமனும்-, மீள ஒருவில்கொடு-மறுபடி ஒருவில்லை யெடுத்துக்கொண்டு, சிவேதன் சூடு முடி வீழ-சுவேதன் தரித்துள்ள கீரிடம் கீழ்விழும்படி, ஒருசுடு கணை தொடுத்தான்- உக்கிரமான ஒரு அம்பை எய்தான்; இவன் - இந்தச்சுவேதன், கோடு சிலை வாளி பல கொண்டு - வளைத்த வில்லினின்றுஎய்த பல அம்புகளால், அவன் தேர் நீடுகொடி ஆடையை - அவ்வீடுமனது தேரிற்கட்டிய உயர்ந்த (பனைக்) கொடிச்சீலையை, நிலத்துஉற - தரையிலே விழும்படி,விழுத்தான் - அறுத்துத் தள்ளினான்; *(எ - று.)*- நிலத்துறவழித்தான்' என்றும் பாடம்.

சுடுகணை - வினைத்தொகை; பகைவரை நெருப்புப்போல அழிக்க வல்ல அம்பென்க: நெருப்பில்வைத்துக்காய்ச்சிவடித்த அம்பெனினுமாம். *(57)*

***58. பின்னையுமவன்றனிபிடித்துவருசாபந்***
***தன்னையுமிவன்பலசரங்கொடுதுணித்தான்***
***மின்னையுநகும்பகழிவீடுமன்வெகுண்டாங்***
***கென்னவமர்செய்வதினியென்றுதளர்வுற்றான்.***

*(இ - ள்.)* பின்னைஉம் - (கொடிச்சீலையை யறுத்ததுமாத்திரமே யன்றிப்) பின்னும்,இவன்-சுவேதன், அவன் தனி பிடித்து வரு சாபந் தன்னைஉம்-வீடுமன் ஒப்பில்லாமற் கையிலேந்திவந்த அவ்வில்லையும், பல சரம்கொடு துணித்தான்- அநேகபாணங்களால் அறுத்துத்தள்ளினான்; மின்னைஉம்நகும் பகழி வீடுமன் - (ஒளியால்) மின்னலையும் இகழ்ந்துசிரிக்கும்படியான அம்புகளையுடைய வீடுமன், ஆங்கு - அப்பொழுது, இனி வெகுண்டு என்ன அமர் செய்வது என்று தளர்வு உற்றான் - 'இனிமேல் (நாம் இவனோடு) கோபித்து என்ன போர்செய்வது?' என்று சோர்வையடைந்தான்; *(எ - று.)*

வீடுமன் இரண்டுமுறை வில்லெடுக்க, அவ்விரண்டுமுறையும் அவன் வில்லைச் சுவேதன் உடனே அறுத்ததனால், இனி இவனோடு விற்போர்செய்யமுடியா தென்று கருதி மனந்தளர்ந்து, எங்ஙனம் போர்செய்வ தென்றனன் என்பதாம். நகுதல் - பரிகசித்தல். ஆங்கு - அதனா லென்றுமாம்.

*மின்னையும், உம்மை - உயர்வுசிறப்பு; அதன் ஒளிமிகுதியை விளக்கும்.* ***பி - ம்:-*** *பிடித்தவரிசாபம். (58)*

### 59.-துரியோதனன் சொல்லினால் பல அரசர் பக்கபலமாக வீடுமனைக் கிட்டுதல்.

**தளர்ந்தநிலைகண்டுதுரியோதனனரும்போர்**
**விளைந்ததுசிவேதனுடன்வீடுமனிளைத்தான்**
**இளந்தலையுறாதபடியேகுமினெனப்போய்க்**
**கிளர்ந்தமுடிமன்னர்பலர்கிட்டினர்விரைந்தே.**

*(இ - ள்.) தளர்ந்த நிலை கண்டு - (அங்ஙனம் வீடுமன்) சோர்வடைந்த நிலைமையைப் பார்த்து, துரியோதனன்-, (அரசர்களை நோக்கி), 'சிவேதனுடன் அரு போர்விளைந்தது - சுவேதனோடு பொறுத்தற்கரிய போர் உண்டாயிற்று; (அதில்), வீடுமன் இளைத்தான்-: (ஆகையால்), இளந்தலைஉறாதபடி - (நமக்கு) இழிவு உண்டாகாதபடி, ஏகுமின்- (வீடுமனுக்குத்துணையாகச் சுவேதனோடு போர்செய்யச்) செல்லுங்கள்,' என - என்று சொல்ல, (அது கேட்டு), கிளர்ந்த முடி மன்னர் பலர்- விளக்கமுற்ற கிரீடத்தையுடைய அரசர்கள் அநேகர், விரைந்து போய் கிட்டினர் - துரிதமாகச்சென்று (வீடுமனுக்குப் பக்கபலமாகச் சுவேதனுக்கு எதிரே நெருங்கினார்கள்; (எ - று.)*

*இளந்தலை-கீழ்மை. கிளர்ந்த என்பதை மன்னர்க்கு அடை மொழியாக்கின், போரில்ஊக்கங்கொண்ட என்று பொருளாம். (59)*

### 60.-இதுவும் அடுத்த கவியும் - துரியோதனனேவலால் வந்தவரைச் சுவேதன் வலியழித்தமை கூறும்.

**அந்தமுடிமன்னவரநேகரையுமுன்னம்**
**வந்தவழிமீளவும்வரும்படிதுரந்தான்**
**தந்தம்வரிவில்லுமணிதாரும்விடுதேருஞ்**
**சிந்தவெரிகால்வனசிலீமுகம்விடுத்தே.**

*(இ - ள்.) (அப்பொழுது சுவேதன்), அந்த முடி மன்னவர் அநேகரைஉம் - அவ்வாறு வந்துஎதிர்த்த கிரீடாதிபதிகளான அரசர்கள் பலரையும், தம் தம் வரி வில்உம் அணி தார்உம் விடு தேர்உம் சிந்த - தங்கள் தங்களது கட்டமைந்த வில்லும்தரித்தபூமாலைகளும் செலுத்துந் தேர்களும் சிதறும்படி, எரிகால்வன சிலீமுகம்விடுத்து - (மிக்க உக்கிரத்தன்மையால்) நெருப்பை வெளிவீசுவனவான அம்புகளைஎய்து, முன்னம் வந்த வழி மீளஉம் வரும்படி-முன்னே அவர்கள் வந்தவழியாகவேதிரும்பிச் செல்லும்படி, துரந்தான் - ஓட்டினான்;*

*முன்னம் வந்தவழி மீளவும்வரும்படி என்றது, போரிற் சிறிதும் பயன் பெறாதவராகுமாறு என்ற கருத்தை விளக்கும். தம்தம் - அவரவரது என்க. சிலீமுகம்-வடசொல்; கூர்மையான நுனியையுடைய தென்று பொருள். (60)*

***61.*** **வெவ்வனலநேர்குகுரராசனையும்வேறோ**
**ரைவரையுமேவினன்முனைந்தனர்களவருஞ்**
**செவ்வரைகள் போல்பவர்சிரங்களும்வளைக்குங்**
**கைவிரிவிலுந்துணிபடக்கணைதொடுத்தான்.**

*(இ - ள்.) (இவ்வாறு வீடுமனுக்குத் துணையாகத் தான் அனுப்பின அரசர்களையெல்லாம் சுவேதன் வென்று துரத்தியதை நோக்கித் துரியோதனன்), வெவ் அனலம் நேர் - வெவ்விய அக்கினியை யொத்த [மிக்கபராக்கிரமமுடைய], குகுரராசனைஉம்-குகுரதேசத்தரசனையும், வேறு ஓர் ஐவரைஉம் - மற்றுமொரு ஐந்துஅரசர்களையும், ஏவினன் - (வீடுமனுக்குத் துணையாகச்*

*சுவேதன்மீது) அனுப்பினான்; அவர்உம் - (அங்ஙனம் அனுப்பப்பட்ட) அரசர்களும், முனைந்தனர்கள் - (சுவேதனையெதிர்த்துப்) போர் செய்தார்கள்; (அப்பொழுது அச்சுவேதன்), செவ் வரைகள் போல்பவர்- அழகிய மலைகளை யொப்பவர்களாகிய அவர்களது, சிரங்கள்உம்- தலைகளும், வளைக்கும் கை வரிவில்உம் - வளைத்துநாணேற்றப்பட்ட கையிற்பிடித்த கட்டமைந்த விற்களும், துணிபட - அறுபடும்படி, கணை தொடுத்தான் - அம்புகளை எய்தான்; (எ - று,)*

*அநலம் - வடசொல். அரசர்க்கு மலையுவமை - எதற்குங்கலங்காத உறுதி நிலைமைக்கும், கம்பீரமான தோற்றத்துக்கும், நெடுந்தூரத்தாரும் அறியும் உயர்ச்சிக்கும் என்க. (61)*

***62.-சுவேதன் வீடுமனையெதிர்த்து மேம்படுதல்.***
***கங்கைமகன்மற்றுமொருகார்முகம்வளைத்துச்***
***சிங்கமெனவப்பொழுதுறுக்கியெதிர்சென்றான்***
***அங்கவனகைத்தொருதனம்புகொடுமீளப்***
***பங்கமுறவிற்றுணிபடுத்தியெதிர்நின்றான்.***

*(இ - ள்.) அப்பொழுது-. கங்கை மகன்-வீடுமன், மற்றுஉம் ஒரு கார்முகம் வளைத்து- வேறொரு வில்லை வளைத்து, சிங்கம் என - சிங்கம்போல, உறுக்கி எதிர்சென்றான் - கோபித்துச் சுவேதனெதிரிற் (போர்செய்யப்) போனான்; அங்கு - அப்பொழுது, அவன் - அச்சுவேதன், நகைத்து - சிரித்து, தன் ஒரு அம்பு கொடு- தனது ஓரம்பினால், மீள பங்கம் உற - மறுபடியும் (அவ்வீடுமன்) அவமானத்தையடையும்படி, வில் துணி படுத்தி-(அவனது) வில்லையறுத்துத்தள்ளி, எதிர் நின்றான் - (தனது மேன்மை தோன்ற) எதிரில் நின்றான்; (எ - று.)*

*இங்கே, நகை-வீரத்தெழுந்த வெகுளிநகை; இனி, வீடுமன் கீழ் இருமுறை வில்அறுபட்ட இழிவை நோக்கிய பரிகாசமுமாம்.*

***63.-தேவர்கள் சுவேதன்வலிமையை மதித்தல்.***

***ஆனபொழுதந்தரநெருங்கியமரகாணும்***
***வானவர்விராடபதிமைந்தனைமதித்தார்***
***வேனிலவன்மேனுதல்விழித்தவனளிக்குங்***
***கூனல்வரிசாபமிதுகொண்டனன்வரத்தால்.***

*இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்.*

*(இ - ள்.) ஆன பொழுது - இவ்வாறான அச்சமயத்தில், அந்தரம் நெருங்கி அமர் காணும் வானவர்- ஆகாயத்தில் திரண்டுநின்று போர்வினோதத்தைப் பார்க்கிறதேவர்கள், விராடபதி மைந்தனை மதித்தார் - விராடராசனதுகுமாரனான சுவேதனைக் கொண்டாடினவர்களாய்,-வேனிலவன்மேல் நுதல் விழித்தவன் அளிக்கும் - மன்மதன்மேல் நெற்றிக்கண்ணை விழித்தெரித்த சிவபிரான் (தனக்குக்) கருணையோடு கொடுத்த, கூன் நல்வரி சாபம் இரு - வளைவான சிறந்த கட்டமைந்த இவ்வில்லை, வரத்தால் கொண்டனன்-zழ்(தான் செய்த தவத்திற்கு) வரமாகச் சுவேதன் பெற்றான்; (எ - று,) -இப்பாட்டில் 'மதித்தார்' என்னும் முற்றெச்சம், அடுத்தபாட்டில் 'என்றனர்' என்ற முற்றோடு முடியும்.*

*பூமியிற் போர்நடக்கும்பொழுது அக்காட்சியைத் தேவர்கள் வானிலிருந்து காணுதல் இயல்பென்ப. வேனிலவன் - வேனிற்பருவத்துக்கு உரியவன்; வேனில்என்றது - இங்கே இளவேனிலை: அது - சித்திரை வைகாசி மாதங்களாகிய வசந்தகாலம்; அக்காலத்தில் ஆடவர்க்கும் மகளிர்க்கும் மிக்க வேட்கையை விளைத்துப் போர்த்தொழிலில் மன்மதன் ஊக்கமிகுதலால், அவனுக்கு, வேனிலவ னென ஒருபெயர். (63)*

*64.-வஞ்சனையால்தான் இவனை வெல்லவேணுமென்று தேவர்கள் கூறுதல்.*

**ஏறனையவீடுமனிளைத்தபடிகண்டால்**
**வேறவனைவில்லமரில்வெல்லவுரியார்யார்**
**மாறுபடுவெஞ்சமரில்வஞ்சனையிலன்றிக்**
**கோறலரிதென்றனர்குலப்பகைமுடிப்பார்.**

*(இ - ள்.) (அந்தச்சுவேதனுக்குமுன்), ஏறு அனைய வீடுமன் இளைத்தபடி கண்டால் - ஆண்சிங்கத்தையொத்த வீடுமன்தானே (போரில்) சோர்வடைந்த விதத்தைநோக்குமிடத்து, வில் அமரில் அவனை வெல்ல உரியார் வேறு யார் - விற்போரில்அச்சுவேதனைச் சயிக்கத்தக்கவர் வேறு எவருளர்? [ஒருவருமில்லை யென்றபடி];(ஆகையால்), மாறு படு வெம்சமரில் - (ஒருவரோடொருவர்) பகைத்துச்செய்யுங்கொடியயுத்தத்தில், வஞ்சனையில் அன்றி கோறல் அரிது - வஞ்சனைவழியிலல்லாமல் [நியாய வழியில்] (அவனைக்) கொல்லுதல் முடியாது,' என்றனர் - என்றுசொன்னார்கள்; குலம் பகை முடிப்பார் - (தமது) இனத்துக்குப் பகையாயிருப்பவனை ஒழிப்பவராகிய தேவர்கள்; (எ - று.)*

*தேவர்கூட்டத்திற்சேர்ந்தவரான வசுக்களுக்குப் பகையாகி அவர்கள் சாபத்தால்பூலோகத்தில் தோன்றின சுவேதனை அவ்வசுக்களில் ஒருவனான வீடுமனைக்கொண்டு கொல்லவேண்டு மென்னுங் கருத்தோடு தேவர்கள் இங்ஙனம் உபாயங் கூறினதனால், 'குலப்பகைமுடிப்பார்' என்றார். மிருகேந்திரனாகிய சிங்கம்போல வீடுமன் எல்லாவரசர்க்கும் மேம்பட்டவனாதலாலும், சிங்கம் யானை முதலிய விலங்குகளை எளிதில் அழித்தல்போல வீடுமன் பகைவர்களை எளிதிலழிக்கவல்ல னாதலாலும், 'ஏறனையவீடுமன்' என்றது. வீடுமன்என்றதன் இறுதியில், உயர்வு சிறப்பும்மை விகாரத்தால் தொக்கது. 'வில்லவரில்' என்ற பாடத்துக்கு - வில்வீரருள் என்க. "ஆடவரம் பூண்டவரனார்தம் பாற்பெற்றுக், கூடமருள் வெல்லுங் கொடுஞ்சிலையா - னோடேநீ, வல்லாண்மை செய்யில்வலிதொலையான் வஞ்சனையால், வில்லாண்மையோடொழிய வெல்," "வஞ்சனையாற் கொல்லிவனை வாழ்வேந்தே மற்றவன்கை, வெஞ்சிலையுண்டாக வெலற் படான்-அஞ்சுடர்கண், மின்னுயிர்க்கும் வெள்வேல் விராடன் குலமதலை, யின்னுயிர்க்குங் காலமிது" என்பன பாரத வெண்பா. (64)*

*65.-வீடுமன் தேவர் சொல்லையறிந்து சுவேதனைநோக்கி, 'வில்லன்றி வேறுபடை உனக்குத் தெரியாதோ?' எனல்.*

**ஓகைநிகழெண்வகைவசுக்களிலொருத்த**
**னாகியநராதிபதியம்முறையறிந்தான்**
**வாகைவரிவில்லொழியவாளயில்களென்னும்**
**வேகமுறுவெம்படைகள்கற்றிலைகொல்வெய்யோய்.**

இதுவும், மேற்கவியும் - ஒரு தொடர்.

*(இ - ள்.) ஓகை நிகழ் - களிப்புப்பொருந்தின, எண் வகை வசுக்களில் ஒருத்தன் ஆகிய நராதிபதி - அஷ்டவசுக்களில் ஒருவனான பீஷ்மராசன், அ முறைஅறிந்தான் - (தேவர்கள் குறித்த) அவ்விதத்தை அறிந்தவனாய், (சுவேதனைநோக்கி),வெய்யோய்-பராக்கிரமமுடையவனே! (நீ), வாகை வரி வில் ஒழிய -வெற்றிமாலையைத்தரித்த கட்டமைந்த வில்லின் தொழில்மாத்திரத்தையே யன்றி, வாள்அயில்கள் என்னும் வேகம் உறு வெம் படைகள் கற்றிலை கொல் - வாளும்வேலுமென்கிற உக்கிரத்தன்மை பொருந்திய வெவ்விய ஆயுதத்தொழில்களை அறிந்தாயில்லையோ? (எ-று.)- "என்றெதிர்சிவேதனொடு இயம்புதலும்" என அடுத்தகவியோடு இயையும்.*

*அந்தத்தேவர்கள் வார்த்தையைக் கேட்டவுடனே, இனி இவனை எளிதிற் கொல்லலாமென வீடுமன் மகிழச்சியோடு போரில் ஊக்கமிக்கதனால், 'ஓகைநிகழ்நராதிபதி'என்றது. அஷ்டவசுக்கள் - அத்வரன், அநலன், அநிலன், ஆபன், சோமன்,துருவன், பிரத்யூஷன், பிரபாசன் என இவர். இவர்களுட்*

*பிரபாசனேவீடுமனாப்பிறந்தவன். சுவேதனுக்கு ரோஷமுண்டாய் அவன் வில்லை விட்டுவேறுபடைக்கலத்தை எடுக்கச் செய்யும்பொருட்டு வஞ்சனையாக இவ்வாறு கூறினான்வீடுமன். சுவேதனுக்கு வெற்றி தருவது வில்லேயாதலின், அதனை 'வாகைவில்' எனவிசேடித்தது. (65)*

*66.-மூன்றுகவிகள்-வாட்படைகொண்டு பொருஞ் சுவேதனை வீடுமன் அம்பினாற்பொருது கொன்றமையைக் கூறும்.*

***என்றெதிர்சிவேதனொடியம்புதலும்வெள்கிக்***
***குன்றுசிலைகொண்டவனளித்தசிலைகொள்ளான்***
***வென்றிவடிவாளுருவிமேலுறநடந்தான்***
***நின்றவனும்வேறொருநெடுஞ்சிலைகுனித்தான்.***

*(இ - ள்.) என்று - என்று இவ்வாறு, சிவேதனொடு - சுவேதனுடனே, எதிர் இயம்புதலும் - எதிரிற்சொன்னவளவிலே, (அச்சுவேதன்), வெள்கி - நாணமுற்று, குன்று சிலைகொண்டவன் அளித்த சிலை கொள்ளான் - மகாமேருகிரியை வில்லாகக்கொண்ட சிவபிரான் (தனக்குக்) கொடுத்தருளினவில்லைக் கைக்கொள்ளாமல் (நீக்கி), வென்றி வடிவாள் உருவி - வெற்றியைத்தரத்தக்க கூர்மையான வாளாயுதத்தை உறையினின்று எடுத்துச்சுழற்றி, மேல் உற நடந்தான் - வீடுமன்மேலே பொருந்தச் சென்றான்: (அப்பொழுது), நின்றவன்உம் - (எதிரில்) நின்ற வீடுமனும், வேறு ஒரு நெடுசிலை குனித்தான் - (தானும் வாளையெடுக்காமல்) மற்றொருநீண்டவில்லை யெடுத்து வளைத்தான்; (எ-று.)*

*எதிர்சிவேதனென வினைத்தொகையாக எடுத்து, எதிர்த்து நின்ற சுவேதனென்றுங் கொள்ளலாம். தனக்கு விற்போரொழிந்த வாட்போர் வேற்போர்களில் திறமையில்லை யென்று வீடுமன் இகழ்ந்ததனால், வெள்கினான். தான் கையிலுள்ளவரையில் வெற்றியைத்தரவல்ல தென்றசிறப்பு, 'குன்றுசிலைகொண்டவனளித்த சிலை' என்றதனால் விளங்கும்.*

*மகா **மேருமலையைப்** பரமசிவன் **வில்லாக** ஏந்தியது, **திரிபுரசங்கார காலத்தி** லென்க. தாரகாசுரனது புத்திரர்களாகிய வித்யுந்மாலி தாரகாட்சன் கமலாட்சன்என்னும் மூவரும் மிக்கதவஞ்செய்து மயனென்பவனால் சுவர்க்க மத்திய பாதாளமென்கிற மூன்று இடங்களிலும் முறையே பசும்பொன் வெண்பொன் கரும்பொன்களால் அரண்வகுக்கப்பட்டு ஆகாயமார்க்கத்திற் சஞ்சரிக்குந்தன்மையுடைய மூன்றுபட்டணங்களைப் பெற்று, மற்றும் பல அசுரர்களோடு அந்நகரங்களுடனே தாம் நினைத்த இடங்களிற் பறந்து சென்று பல இடங்களையும் பாழாக்கிவருகையில், அத்துன்பத்தைப் பொறுக்கமாட்டாத தேவர் முனிவர் முதலியோரது வேண்டுகோளால், சிவபெருமான் பூமியைத் தேராகவும், சந்திர சூரியரைத் தேர்ச்சக்கரங்களாகவும், நான்கு வேதங்களைக் குதிரைகளாகவும், பிரமனைச் சாரதியாகவும், **மகாமேருவை வில்லாகவும்,** ஆதிசேஷனை நாணாகவும், விஷ்ணுவை வாயுவாகிய சிறகமைந்து அக்கினியை முனையாகவுடைய அம்பாகவும், மற்றைத் தேவர்களைப் பிறபோர்க்கருவிகளாகவும் அமைத்துக்கொண்டு யுத்தசன்னத்தராகிச் சென்று போர்செய்ய யத்தனித்துப் புன்சிரிப்புச்செய்து அசுரர் அனைவரையும் பட்டணங்களோடு எரித்தருளின ரென்பது **கதை.** (66)*

***67. வாளினெதிர்வெஞ்சிலைவளைத்துவயவீரன்***
***தோளிணையிலொன்றுதுணியக்கணைதொடுத்தான்***
***காளையொருகைவிழவுமற்றையொருகையான்***
***மீளவும்வெகுண்டுசுடர்வாளினையெடுத்தான்.***

*(இ - ள்.) (இங்ஙனம் வீடுமன் மாறுபாடாக), வாளின் எதிர்- (சுவேதன் எடுத்த)வாளுக்கு எதிரிலே, வெம் சிலை வளைத்து - (தான்) கொடிய வில்லை வளைத்து,வய வீரன் தோள் இணையில் ஒன்று துணிய - (இதுவரையில்) வெற்றியைப்பெற்றவீரனாகிய சுவேதனது புயங்களிரண்டில் ஒன்று அறுபடும்படி, கணை தொடுத்தான் -அம்பு செலுத்தினான்; (அப்பொழுது), காளை-சுத்தவீரனான*

*சுவேதன், ஒருகைவிழஉம்-ஒருகை அற்றுவிழவும், (சிறிதும் பாராட்டாமல்), மீளஉம் வெகுண்டு - மீண்டுங்கோபங்கொண்டு, மற்றை ஒரு கையால் - வேறொருகையினால், சுடர் வாளினை எடுத்தான்-ஒளியையுடைய வாளாயுதத்தை யெடுத்தான்; (எ - று.)*

*முதலில் வலக்கையால் வாளைஎடுத்துவந்தவன் அவ்வலக்கை வீடுமனால் அறுக்கப்பட்டவளவில் இடக்கையால் வாளை யேந்தினன் என்பதாம். அப்பொழுதும் வில்லையேந்தாமல் வாளையே யேந்தினான், வீடுமனது பழிப்புக்கு இடங்கொடாமைப்பொருட் டென்க. வலக்கை யற்றவர் இடக்கைவில்லில் எயிற்றுப்படை தொடுத்தல்கூடுதலைக் கீழ் இச்சருக்கத்து இருபத்தெட்டாங்கவியிற் காண்க. (67)*

**68. எடுத்தவடி வாளினொடு மெண்ணில்பல பாணந்**
**தொடுத்துவரு வீடுமனை மாமுடி துணிப்பான்**
**அடுத்துவரு போதவ னழன்றொரு சரத்தால்**
**நடுத்தகை யுறாமலவ னல்லுயிர் கவர்ந்தான்.**

*( இ-ள்.) எண் இல் பல பாணம் தொடுத்து வரு வீடுமனை - அளவில்லாத அநேகம் அம்புகளை எய்துவருகிற பீஷ்மனை, மாமுடி துணிப்பான் - பெரியதலையையறுக்கும்பொருட்டு, எடுத்த வடி வாளினொடு உம் - (ஒருகையில்) ஏந்திய கூரிய வாளாயுதத்துடனே, அடுத்து வரு போது - (சுவேதன்) நெருங்கிவரும்பொழுது, அவன் - அந்தவீடுமன், அழன்று - கோபித்து, ஒரு சரத்தால் - ஒப்பற்ற அம்பினால், நடு தகை உறாமல் - இடையிலே தடைப்படாமல், அவன் நல் உயிர் கவர்ந்தான் - அச்சுவேதனது நல்லஉயிரை (உடம்பினின்று) வலியவாங்கினான் [அவனைக்கொன்றான் என்றபடி], (எ -று.) இப்பாட்டில், நடுத்தகையுறாமல் என்றது, சிறந்தகுணமாகிய நடுவுநிலைமை தன்பக்கல் பொருந்தாபடி என்றபொருளையும் உணர்த்தும்; தான்கூறியபடி வில்லைவிட்டு வேறுபடைக்கலமேந்திய வீரனோடு தானும் அப்படைக்கலத்தையே ஏந்தாது விற் கொண்டு போர்விளைத்தது, உத்தமவீரனான் வீடுமனுக்கு நடுவு நிலைமை தவறுதலாம்; நடுவு நிலைமை - பக்ஷபாதமில்லாததன்மை. தகை - தடையென்னும் பொருளில், முதனிலைத்தொழிற்பெயர்; மற்றொருபொருளில், தகை - தகுதி, சற்குணம்; இது - தொழிலடியாப் பிறந்ததாயினும் பொருளாற் பண்புப்பெயர். வீடுமனை மாமுடிதுணிப்பான் - இரண்டுசெயப்படுபொருள்வந்த வினை; இது வடமொழி நடை; இதனை வடநூலார் த்விகர்மகர்த்தரிப்ரயோகமென்பர். இனி, தமிழ்நடையாக, வீடுமனை முடியிலே துணிக்கும்பொருட்டு என்றாவது, உருபுமயக்கமாய் வீடுமனதுமுடியைத் துணிக்க வென்றாவது கொள்ளலாம். வீடுமனைப்போல வஞ்சனைகருதாமல் நீதியாக மானத்தைப் பாதுகாத்து வாட்போர்செய்து இறந்ததுபற்றி, சுவேதனுயிர் நல்லுயிரெனப்பட்டது, அப்பொழுது உபயோகித்தது, பிரமாஸ்திரம்: "சென்று திசைவணங்கத் தெய்வப் படை நினைந்து, துன்று நெடுஞ்சிலைநாண் தோளலைப்ப - மன்றுலகில், மன்னுயிரைத் தான் படைத்தான் மந்திரத்தால் மற்றவன்ற, னின்னுயிரைப் போக்கினானெய்து" என்பது, வெண்பாப்பாரதம். பி - ம்: போதவனுமற்றொரு. (68)*

வேறு

**69.- சுவேதன்பட்டதற்கு வானோரும் துரியோதனனும் பக்கத்து அரசரும் மகிழ்தல்.**

**பூழிபட நிலமிசையப் பொற்சுண்ணங் கமழ்மேனிப் புதல்வன் வீழ**
**வாழிமொழித் துளமகிழ்ந்தா ரந்தரதுந் துபிமுழங்க வானோ**
**ருள்ளார்**
**ஊழிபெயர்ந் துலகேழு முள்ளடக்கித் திசைநான்கு முகளித் தேறி**
**யாழிபரந் தார்ப்பதென வார்த்தனரப் பெருஞ்சேனை**
**யரசரெல்லாம்.**

*(இ - ள்.) பொன் - பொன்நிறமான, சுண்ணம் - சுகந்தப்பொடி, கமழ் - மணம்வீசப்பெற்ற, மேனி - (தனது) உடம்பிலே, பூழி பட - புழுதிபடிய, அ புதல்வன்- அந்தச்சுவேதகுமாரன், நிலம்மிசை - தரையிலே, வீழ - இறந்துவிழ, - வானோர்உள்ளார் - ஆகாயத்தில் (போர்காண) வந்துள்ளவரான தேவர்கள், வாழி மொழிந்து- வாழ்த்துக்கூறி, அந்தரம் துந்துபி முழங்க - ஆகாயத்தில் தேவ துந்துபி வாத்தியம்முழங்காநிற்க, உளம் மகிழ்ந்தார் - மனமகிழ்ச்சி கொண்டார்கள்; ஆழி - கடல், ஊழி- கற்பமுடிவுகாலத்திலே, பெயர்ந்து - தன்நிலைமாறி [பொங்கி], உலகு ஏழ்உம் உள்அடக்கி - ஏழுலகங்களையுந் தன்னுள்ளே அடங்கச்செய்து, திசை நான்குஉம்உகளித்து ஏறி-எல்லாத் திக்குக்களிலும் கடந்துகிளர்ந்து, பரந்து-பரவி, ஆர்ப்பது என- ஆரவாரிப்பதுபோல, அ பெரு சேனை அரசர்எல்லாம் - பெரிய அந்தக்கௌரவசேனையிலுள்ள அரசர்கள் யாவரும், ஆர்த்தனர்- ஆரவாரித்தார்கள்;(எ -று.)*

*சிறந்தவீரன் மண்ணுலகத்தைவிட்டுத் தமதுவிண்ணுலகத்துக்கு விருந்தானதும், தமது இனத்தவரான வசுக்களில் ஒருவனான வீடுமன் வெற்றி கொண்டதும், தேவர்கள் மனமகிழ்ந்து பேரிகை கொட்டி வாழ்த்துக்கூறினதற்குக் காரணம். சுண்ணம் - சூர்ணமென்னும் வடமொழிச்சிதைவு. வாழி மொழிந்து - வாழியென மொழிந்து என்க. வானோர் உளம்மகிழ்ந்தார்-"உயர்திணை தொடர்ந்த பொருள் முதலாறும், அதனொடுசார்த்தினத்திணை முடிபின" என்ற விதிபற்றி, அஃறிணையாகிய சினைப்பெயர் உயர்திணையாகிய முதலின் முடிபைக் கொண்ட **திணைவழுவமைதி.** ஊழி- பிரமனாயுள். உலகேழ் - பூலோகம் புவர்லோகம் ஸுவர்லோகம் மஹர்லோகம் ஜநலோகம் தபோலோகம் ஸத்யலோகம் என்னும் மேலுலகேழும், அதலம் விதலம் ஸுதலம் தராதலம் ரஸாதலம் மஹாதலம் பாதாளம் என்னுங் கீழுலகேழுமாம். உகளித்து, உகளி-பகுதி.*

*இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் ஒன்பதுகவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரிரண்டும் மாச்சீரும், மற்றைநான்கும் காய்ச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்குகொண்ட **அறுசீராசிரியவிருத்தங்கள்;** இவற்றில் ஆறாஞ்சீர் தேமாச்சீராகவேநிற்கும். (69)*

***70.-இதுமுதல் மூன்றுகவிகள் - படுகளச்சிறப்புக் கூறும்.***

**உடைந்ததடந்தேருருள்களுகுகுருதிப்புனறோறுமும்பர்வானில்**
**அடைந்தவயவருக்குவழியாயசுடர்மண்டலத்தின்சாயைபோலும்**
**மிடைந்தகுடைகாம்பற்றுமிதப்பனவுங்கரியபுகர்வேற்கண்மாதர்**
**குடைந்தநறும்பரிமளச்செங்குங்குமநீரிடையெழுந்தகுமிழிபோலும்.**

*(இ - ள்.) உடைந்த தட தேர் - (போரில்) உடைப்பட்ட பெரிய தேர்களின், உருள்கள் - சக்கரங்கள்,-உகு குருதி புனல்தோறுஉம்- பெருகுகிற இரத்தவெள்ளங்களிலெல்லாம், உம்பர் வானில் அடைந்த வயவருக்கு வழி ஆய சுடர் மண்டலத்தின் சாயை போலும் - மேலுலகத்து வீரசுவர்க்கத்திற் சேர்ந்த வீரர்களுக்குவரும் வழியாய் நடுவுதுளைபட்ட சூரியமண்டலத்தின் நிழல்களை யொக்கும்; காம்பு அற்று மிதப்பன - காம்பு அறுபட்டு (இரத்தத்தில்) மிதப்பனவாகிய,மிடைந்த குடைஉம் - நெருங்கியகுடைகளும்,- கரிய புகர்- கருமையானநிறத்தையுடைய, வேல் கண் - வேலாயுதம்போன்ற கண்களையுடைய, மாதர் -மகளிர், குடைந்த - நீராடின, நறு பரிமளம் செம்குங்குமம் நீரிடை - நல்லவாசனையையுடைய சிவந்தகுங்குமக்குழம்போடு கலந்த நீரிலே, எழுந்த - தோன்றிய, குமிழி - குமிழிகளை, போலும்-; (எ-று.)*

***தன்மைத்தற்குறிப்பேற்றவணி.** போர்க்களத்தில் அழிந்தசேனைகளின் உடம்பினின்று பெருகிய இரத்தவெள்ளத்தில் கிடந்த தேர்ச்சக்கரங்கள்- வீரசுவர்க்கமடைபவர் சூரியமண்டலத்தைத் துளைத்துக் கொண்டு செல்லுதலால், நடுவில் துவாரம்பொருந்திய அம்மண்டலத்தின் பிரதிபிம்பங்கள் அவ்விரத்தவெள்ளத்தில் விளங்குவனவற்றைப் போலு மென்பது, முன்னிரண்டடியின் கருத்து. உகுகுருதிப்புனல் தோறும் என்பது **மத்திமதீபம்.** போரிற் பின்வாங்காது இறந்தவர் வீரசுவர்க்கம் அடைந்து இன்புறுவரென்பதும், அங்ஙனம் அடைகையில் இரவிவட்டத்தைப் பிளந்துகொண்டு அதனிடைவழியாய்ச் செல்லுவரென்பதும் நூற்கொள்கை. கண்ணுக்கு வேல் உவமை-கூர்மைக்கும் வடிவுக்கும் வேட்கைநோய் விளைத்து ஆடவரை வருத்துதற்கு மென்க. "மாதர் காதல்" என்ற தொல்காப்பியத்துஉரிச்சொல்லியற் சூத்திரத்தால், மாதரென்றது - விருப்பத்தை யுணர்த்துவதோர்உரிச்சொல்லாம்; அது - ஆகுபெயராய், விரும்பப்படும்*

*அழகையுடைய மகளிரைக்குறிக்கும். இரத்தம் செந்நீராதலால் 'குருதிப்புனல்' எனப்பட்டது. குங்குமச்செங்குழம்பு- அம்மகளிருடம்பிற்பூசியது. குமிழ்ப்பது-குமிழி: மொக்குகள்; இ-கருத்தாப்பொருள்விகுதி. (70)*

***71. வெங்கலங்கற்கடுங்குருதி வெள்ளத்துக் கொடியாடைமிதக்குந் தோற்றஞ்,***
***செங்கலங்கற்புதுப்புனலில்விளையாடித்திரிகின்றசேல்கள் போலும்,***
***பொங்கலங்கனிருபர்தலைபுனைமகுடத்துடன்கிடப்பொறியார் வண்டு,***
***தங்கலங்கல்வண்கனகசததளபங்கயமுகுளசாலம்போலும்.***

*(இ - ள்.) வெம் - பயங்கரமான, கலங்கல் - கலக்கத்தையுடைய, கடு - மிக்க, குருதி வெள்ளத்து - இரத்தவெள்ளத்திலே, கொடி ஆடை - துவசச்சீலைகள், மிதக்கும் - மிதந்தலைகிற, தோற்றம் - காட்சி,- செம் - செந்நிறமுள்ள, கலங்கல்- கலக்கத்தையுடைய, புது புனலில் - புதுநீர் வெள்ளத்தில், விளையாடி திரிகின்ற-, சேல்கள்- சேல்மீன்களை, போலும் - ஒக்கும்; பொங்கு - விளங்குகிற, அலங்கல் -போர்ப்பூமாலையைச் சூடிய,நிருபர் - அரசர்களது, தலை - தலைகள், புனை மகுடத்துடன் - அணிந்த கிரீடத்துடனே, கிடப்ப - (அவ் விரத்தத்தில்) விழுந்துகிடப்பவை,- பொறி ஆர்வண்டுதங்கு - புள்ளிகள் பொருந்தின வண்டுகள் மொய்த்தற்குரியனவும், அலங்கல்-ஒளிசெய்தலையுடையனவுமாகிய, வண் கனக சததள பங்கய முகுள சாலம் போலும்- அழகிய பொன்மயமான நூற்றிதழ்த் தாமரையரும்பின் தொகுதியை ஒக்கும்; (எ -று.)*

*கிரீடத்தோடுகூடிய தலைகள், அடியகன்று மேலே முறையே குறுகி யிருத்தலால் தாமரையரும்புபோலும். வீரர்கள்முகத்தின் விளக்கத்தையும் அவர்கள்கிரீடம் பொன்மயமாயிருத்தலையும் நோக்கி, உபமானத்தை 'வண்கனகபங்கயம்' என்றார். 'வண்டுதங்கு' என்ற உபமானத்தின் அடைமொழியை நோக்கி, உபமேயத்தில் கிரீடத்து உச்சியில் நீலமணிகள் பதிக்கப்பட்டுள்ளன வெனக்கொள்ளினுமாம். வண்டுக்குப்பொறிபோல நீலமணிக்கு ஒளியென்க.* ***தன்மைத்தற்குறிப்பேற்றவணி.*** *செந்நீருக்கு உவமையாதற் பொருட்டு, செங்கலங்கற்புதுப்புனல் கூறினார். இரண்டும், வடிவுவமை. சேல்-மீனின்ஓர்சாதி. சிறியவும் பெரியவுமாகிய கொடிச்சிலைகள், சேலினங்களை யொக்கும் கநகஸததளபங்கஜமுகுள ஜாலம் - வடசொற்றொடர். சததள பங்கஜம் - நூற்றிதழ்த்தாமரை. பங்கஜம்-சேற்றிற்பிறப்பது; தாமரைக்குக் காரணவிடுகுறிப்பெயர். (71)*

***72.. எண்ணிழந்தகுருதிநதியிருமருங்குங்கரிபரியாள்கரைகளாகக்,***
***கண்ணிழந்த பறையிடையே செருகியகால்வாய்த்தலையின் கண்கள் போலும்,***
***மண்ணிழந்துபடுமரசர்மணிக்கலங்கள் பலசிந்திவயங்கு தோற்றம்,***
***விண்ணிழந்துபரந்தசெழுங்கடலிடையேமீனினங்கள் வீழ்ந்தபோலும்.***

*(இ - ள்.) எண் இழந்த - அளவில்லாத, குருதி நதி - இரத்தப் பெருக்காகிய ஆற்றிற்கு, இரு மருங்குஉம் - இரண்டுபக்கங்களிலும், கரி பரி ஆள் - (விழுந்துகிடக்கிற) யானைகளும் குதிரைகளும் காலாட்களும், கரைகள் ஆக - கரைகளாய் அமைந்திருக்க, கண் இழந்த பறை - (அடிக்குமிடமாகிய) தோற்கண்ணைஇழந்த பேரிகைகள், இடையே செருகிய - நடுநடுவே பொருந்திய, கால்வாய்தலையின் கண்கள் போலும் - வாய்க்கால்களின் தொடக்கத்திலுள்ள மதகின்கண்களை யொக்கும்; மண் இழந்து-நிலவுலகத்தை விட்டு (உயிர்) நீங்கி, படும் -இறந்துவிழுந்துகிடக்கிற, அரசர்-அரசர்களது, மணி கலங்கள் பல - அநேகம்இரத்தினாபரணங்கள், சிந்தி - (அவ்விரத்த வெள்ளத்திலே) சிதறி, வயங்கு-விளங்குகிற, தோற்றம் - காட்சி,-மீன் இனங்கள் - நக்ஷத்திரக்கூட்டங்கள், விண்இழந்து - ஆகாயத்தைவிட்டு, பரந்த செழுகடலிடைஏவீழ்ந்த-*

*விசாலமான நீர்நிறைந்தகடலினிடத்தே விழுந்திருப்பனவற்றை, போலும்-ஒக்கும்; (எ - று.) முன்னது - வடிவுவமையும், பின்னது-நிறமும் ஒளியும்பற்றிய உவமையுமாம். செந்நிறமுள்ள இரத்தவெள்ளத்தைச் செந்நிறமுள்ள புதியயாற்றுநீர்ப்பெருக்காகவும், அதனிரண்டு பக்கத்தும் விழுந்துகிடக்கிற உயிர்நீங்கிய உடல்களை அதன்கரைகளாகவும் வருணித்தார்; நடுத்தோல் கிழிந்து நீங்க இடையிடையே விழுந்துகிடக்கிற போர்ப்பறைகளின் துவாரங்களின் வழியாய் அவ்விரத்தம் பாய்ந்துஅப்பாற் செல்வது, ஆங்காங்குள்ள கால்வாய்த்தலைமதகு கண்களில் அப்புதுவெள்ளம் பாய்ந்துசெல்வதை யொக்குமென்க. பல்வேறு நிறத்தனவான இரத்தினங்களைப் பதித்த ஆபரணங்கள் அநேகம் ஆங்காங்குச் சிதறிக்கிடந்து விளங்குதல், பல்வேறு நிறத்தனவாய் விளங்கும் நட்சத்திரங்களின்கூட்டம்போலும். **தன்மைத்தற்குறிப்பேற்றவணி.** இவ்வணிக்கு, முதலடியில் **உருவகம்** அங்கமாய் வந்தது. **பி - ம் :** வீழ்வபோலும். (72)*

### *73.-சூரியாஸ்தமன வருணனை.*

***பட்டநுதற்களியானைப்பாண்டவர்தம்படைத்தலைவன்பட்டானாகத்***
***தொட்டகழற்றடமகுடச்சுடர்வடிவாண்மகிபரெலாந்துணுக்கமெய்தி***
***விட்டபடங்கியல்பாடிவீடணைந்தார்வெயிலோனுமேல்பாற்குன்றிற்***
***கிட்டவவன்வடிவமுமிக்குருதியினாற்சிவந்ததெனக்கிளர்ந்ததம்மா.***

*(இ-ள்.) பட்டம்-பெறபப்பட்டத்தையணிந்த, நுதல்-நெற்றியையும், களி- மதக்களிப்பையுமுடைய, யானை-யானைச்சேனையையுடைய, பாண்டவர்தம்- பாண்டுகுமாரர்களது, படை தலைவன்-சேனாதிபதியான சுவேதன், பட்டான் ஆக- இறந்தவனாய்விட,-தொட்ட கழல்-அணிந்தவீரக்கழலையும், தட மகுடம் - பெரியகிரீடத்தையும், சுடர் வடி வாள் - விளங்குகிற கூரிய வாளாயுதத்தையுமுடைய, மகிபர் எலாம்- (அந்தச்சேனையின்) அரசர்யாவரும், துணுக்கம் எய்தி- கலக்கத்தை யடைந்து, விட்ட படங்கு இயல் பாடி வீடு அணைந்தார் - (தாங்கள் காலையில்) விட்டுவந்த கூடாரம் அமைந்த பாசறையிற் போய்ச் சேர்ந்தார்கள்; (அச்சமயத்தில்), வெயிலோன்உம் - உஷ்ணகிரணனான சூரியனும், மேல் பால் குன்றில் கிட்ட- மேற்குத்திக்கிலுள்ள அஸ்தகிரியிற் போய்ச் சமீபிக்க, (அப்பொழுது) அவன் வடிவம்உம்-அச்சூரியனது மண்டலமும், இ குருதியினால் சிவந்தது என - (போர்க்களத்திலுள்ள) இவ்விரத்தந் தெறித்து அதனாற் செந்நிறமடைந்ததுபோல, கிளர்ந்தது - செந்நிறமாய் விளங்கிற்று; (எ - று,)-அம்மா - ஈற்றசை; மிக்கதூரத்தில்வானத்திலுள்ள சூரியமண்டலத்திலும் இவ்விரத்தம்தெறித்த தென்பதுபற்றியவியப்பிடைச்சொல்லெனினும் அமையும்.*

*நான்காமடி - **ஏதுத்தற்குறிப்பேற்றவணி;** என வென்னும் உருபு தொடர்ந்துவந்தது. அந்திப்பொழுதில் மிக்குத்தோன்றகிற சூரிய மண்டலத்தின் செந்நிறத்தை, இரத்தத்தாற் சிவந்த தென்று உத்பிரேக்ஷித்தார். யானை - மற்றைச்சேனைகட்கும், வாள் - மற்றையாயுதங்கட்கும் உபலக்ஷணம், யானைப் பாண்டவர் - யானைபோன்ற பாண்டவ ரென்றுமாம். விட்ட படங்கு இயல் - தொங்கவிட்ட பெருங்கொடி பொருந்தின என்றுங் கொள்ளலாம். (73)*

### *74-இதுவும், மேற்கவியும் - புத்திரசோகமுற்ற விராடனுக்கு வேந்தர் உபசாரங்கூறுதலைத் தெரிவிக்கும்.*

***திருநெடுமான்முதலானதேர்வேந்தர்விராடனுழைச்சென்றுன்மைந்த***
***ரிருவருமின்றொருபடியேவெஞ்சமரிலெஞ்சினரென்றிரங்கலையா***
***பொருமுனையில்வீடுமனைப்புறங்கண்டுநிருபரெலாம்பொன்றவென்று***
***விரகுடன்வாளெடுப்பித்தபிறகன்றோதொடுசரத்தால்வீழ்ந்ததென்றார்.***

*(இ - ள்.) திரு நெடு மால் முதல் ஆன - சிறந்த பெருமைக் குணமுடைய கண்ணபிரான்முதலாகிய, தேர்வேந்தர் - ரதாதிபதிகளான அரசர்கள், விராடனுழை சென்று-வீராடராசனிடத்திற்போய், 'ஐயா-தலைவனே! உன் மைந்தர் இருவர்உம்- (உத்தரனும் சுவேதனுமாகிய) உனதுகுமாரர் இரண்டுபேரும், இன்று-இன்றைக்கு, ஒருபடிஏ - ஒரே வகையாக, வெம்சமரில்-கொடியபோரில், எஞ்சினர் - இறந்து*

*விட்டார்கள், என்று-என்றகாரணத்தால், இரங்கல் - (நீ) வருத்தப்படவேண்டாம்; பொரு முனையில் - போர்செய்யுமிடத்தில், வீடுமனை புறம் கண்டு-பீஷ்மனை முதுகுகாட்டியோடச்செய்து, நிருபர் எலாம் போன்ற வென்று- மற்றைப் பகையரசர் யாவரும் அழியும்படி வெற்றிகொண்டு, விரகுடன் வாள் எடுப்பித்த பிறகு அன்றுஓ - வஞ்சனையாக (வில்லை விட்டு) வாளையெடுக்கும்படி (வீடுமன்) செய்த பின்பன்றோ, தொடுசரத்தால் வீழ்ந்தது-(அவ்வீடுமன்) தொடுத்த பாணத்தால் இறந்து விழுந்தது; என்றார்-என்று (புகழ்ச்சி தோன்ற உபசாரமொழி) கூறினார்கள்; (எ - று,)*

*இங்ஙனம் பொதுப்படக்கூறினும்,* ***ஏற்புழிக்கோடல்*** *என்னும் உத்தியால், 'பொருமுனையில் நிருபரெலாம்பொன்ற வென்றுவீழ்ந்தது' என்பதை இருவருக்கும், மற்றதைச் சுவேதனுக்குமாத்திரமும் கொள்க. திருநெடுமால் - இலக்குமிகொழுநனும், திரிவிக்கிரமனாய் நீண்டவடிவுடையவனுமான கண்ணபிரானென்றுங்கொள்ளலாம். இறத்தலை எஞ்சுதலென்றசொல்லாற் குறித்தது -* ***மங்கலவழக்கு.*** *வீழ்ந்தது - தொழிற்பெயர், வினைமுற்றின் தன்மைப்பட்டது; இங்ஙனம் வருவதை வடநூலார் பாவேப்ரயோகமென்பர்.*
*(74)*

***75. பேய்செய்தவரங்கனையபெருங்கானிற்றிரிவோர்க்குப்***
***பெற்றகாதற்,***
***றாய்செய்தவுதவியினுந்தகுமுதவிபலசெய்தாய்சமரூடின்றுன்,***
***சேய்செய்தவுயிருதவிதேவரெலாந்துதிக்கின்றார்***
***செறித்தோர்தம்மில்,***
***நீசெய்தபேருதவியார்செய்தாரெனவுரைத்தானெறி***
***செய்கோலான்.***

*(இ-ள்,) 'பேய் செய்த அரங்கு அனைய - பேய்கள் (தாம் கூத்தாடுதற்குச்செய்த) நாடகசாலையைப் போன்ற, பெருகானில் - பெரிய காட்டிலே, திரிவோர்க்கு - அலைந்தஎங்களுக்கு. பெற்ற காதல் தாய் செய்த உதவியின்உம் தகும் உதவி பல செய்தாய்- (மக்களைப்) பெற்ற அன்புடைய தாய் (அம்மக்களுக்குச்) செய்யும் உபகாரத்தி*
*னும் சிறந்த அநேக உபகாரங்களை (மிக்க அன்போடு) செய்தருளினாய்; (அதுவுமின்றி), சமரூடு - போரிலே, இன்று - இன்றைக்கு, உன் சேய் செய்த- உனதுமக்கள் செய்த, உயிர் உதவி-(தன்தனது) பிராணனைக் கொடுத்தலாகிய உபகாரத்தை, தேவர் எலாம் துதிக்கின்றார்-(இம் மண்ணுலகத்து மனிதர்மாத்திரமேயன்றி விண்ணுலகத்துத்) தேவரெல்லோரும் புகழ்கிறார்கள்; செறிந்தோர் தம்மில்- உற்ற நண்பர்களில் நீ செய்த பேர்உதவி யார் செய்தார் - (நேராகவும் மக்கள் மூலமாகவும்) நீ செய்த பெரியஉதவிபோன்ற உதவியை வேறு எவர்செய்தார்? [ஒருவருமில்லை யன்றோ?]', என உரைத்தான்-என்று உபசாரமொழிகூறினான்: (யாரெனில்),-நெறி செய் கோலான் - நீதிமுறைமையைச் செய்யுஞ்செங்கோலையுடைய தருமபுத்திரன்; (எ - று.)*

*விராடன் செய்தது "காலத்தினாற் செய்தநன்றி" ஆதலின், அதற்கு ஒத்ததும் மிக்கதும் வேறுஇல்லையென அறிக. நெறிசெய் என்ற அடைமொழியில், தான் நல்வழியில் நடத்தலும், குடிகளைச் சன்மார்க்கத்திற் செலுத்துதலும் ஆகிய இரண்டும்அடங்கும். பிசாசங்கள் யதேச்சையாகத் திரியுங் கொடுங்காடென்பார், 'பேய்செய்தவரங்கனைய பெருங்கான்' என்றார். யாவரன்பினும் தாயன்பு சிறத்தலால்,'பெற்றகாதல்தாய்' என்றார். சேய் என்ற உயர்திணைப் பெயர் - சாதி யெருமையாய்,இரண்டு குமாரரையும் உணர்த்திற்று. உயிருதவி - "அன்பிலா ரெல்லாந் தமக்குரியரன்புடையார், என்புமுரியர் பிறர்க்கு" என்றபடி தம்மோடுதொடர்ச்சியுடையார்பொருட்டுத் தமதுஉயிரையு மிழந்து உதவியது. அரசனாற் செய்யப்படும் முறைமைஒருபாற்கோடாது செவ்விய கோல்போலுதலால், செங்கோலென்றும், கோலென்றுங்கூறப்படும்; வடநூலாரும் தண்ட மென்பர். அரங்கு - ரங்கமென்னும்வடமொழித்திரிபு; நடம்பயிலிடம். இப்பாட்டில், திரிவோர்க்கு என்றதைத்தன்மைக்குப்படர்க்கைவந்த இடவழுவமைதி யென அறிக. இனி, இப்பாட்டில்'நெறிசெய்கோலான்' என்றதை - கண்ணபிரானெனக் கொண்டால், திரிவோர்க்குஎன்ற படர்க்கை, வழாநிலையாம். (75)*

*76.-தருமபுத்திரனுக்கு விராடன்கூறும் உத்தரம்*

***உன்னுயிர்போனீவளர்த்தவுத்தரன்றனுயிருமுருத்தெழுஞ்சிவேதன்***
***தன்னுயிரும்போரரசர்தாமிருந்துகொண்டாடச்சமரிலீந்தார்***
***என்னுயிருநினதன்றியாரதினிச்சதுர்முகத்தோனீன்றபாரின்***
***மன்னுயிருக்குயிரனையாயெனவுரைத்தான்வளமலிசீர்மச்சர்கோமான்.***

*(இ - ள்.) 'சதுர் முகத்தோன் - நான்குமுகங்களையுடைய பிரமதேவன், ஈன்ற- படைத்த, பாரில் - நிலவுலகத்திலுள்ள, மன் -நிலை பெற்ற, உயிருக்கு - எல்லாவுயிர்களுக்கும், உயிர் அனையாய் - உயிரை யொத்தவனே! [பேரன்புடையவனே!], உன் உயிர்போல் நீ வளர்த்த, உனதுஉயிரைப்போல(ப் பாவித்து மிக்க அன்போடு) நீ வளர்த்த உத்தரன் - உத்தரகுமாரன், தன்- தன்னுடைய,உயிர்உம்- உயிரையும், உருத்து எழும் - (பகைவர்மேற்) கோபித்துக்கிளம்புகிற,சிவேதன்-,தன் - தன்னுடைய, உயிர்உம்-உயிரையும், போர் அரசர்*
*தாம் இருந்து கொண்டாட - போர்த்திறத்தையுடைய அரசர்கள் இருந்து புகழும்படி, சமரில்-போரில், ஈந்தார் - கொடுத்தார்கள்; இனி-இனிமேல், என் உயிர்உம் நினது அன்றி யாரது-எனது உயிரும் உனக்குஉரியதேயல்லாமல் வேறுயாருக்குஉரியது? [எவர்க்கு முரியதன்று என்றபடி]; என உரைத்தான்-என்று (தருமனை நோக்கிக்) கூறினான் : (யாவனெனில்), வளம் மலி சீர் மச்சர் கோமான் - எல்லா வளப்பங்களும்நிறைந்த சிறப்பையுடைய மத்ஸ்ய தேசத்தார்க்குத் தலைவனான விராடமகாராசன்;(எ- று.)*

*எவர்க்கும் உயிரினும் அன்புக்கு விஷயமானது பிறிது இன்று ஆதலால், அதுவே சிறந்தஅன்புக்குப் பொருந்தின உவமையாக எடுத்துக்கூறப்படும். தருமபுத்திரன் கங்கபட்டனாக இருந்த அஞ்ஞாதவாசகாலமாகிய ஒருவருஷத்தில் உத்தரனை மிகுந்த அன்போடு பாராட்டிவந்ததையே கொண்டு, உபசாரமாக, 'உன்னுயிர் போல் நீ வளர்த்தவுத்தரன்' என்றது. 'என்னுயிரு நினதன்றியாரதினி' என்றது, நானும் என்னாலியன்றவளவு பெரும்போர்செய்து உன் பொருட்டாகவே உயிருதவுவேனென்றதாம்; அங்ஙனமே அவன்செய்து முடித்தலை மேற்காண்க. தருமன்உலகத்து உயிர்களையெல்லாம் தன்னுயிர்போலவே பாவித்து நன்கு காக்குமவனாதலாலும், எல்லாவுயிர்களின் அன்புக்கும் இடமாகுபவனாதலாலும், அவனை 'சதுர்முகத்தோனீன்றபாரின் மன்னுயிருக்குயிரனையாய்' என விளித்தான்; இப்படிப்பட்ட சற்குணசம்பந்நனான உன்திறத்தில் நாங்கள் உயிர்துறப்பது எங்களுக்குஉற்றதொழிலேயா மென்பது, இதனாற்போதரும். வீரர்பெருமையை வீரரேயறிவராதலால், 'போரரசர்கொண்டாட' எனப்பட்டது,* ***பி-ம்:*** *வீந்தார்,வீழ்ந்தார். (76)*

*77.-சூரியோதய வருணனை.*

***முப்பொழுது முணர்கேள்வி முகுந்தனுடன் பாண்டவரு***
***முடிசாய்த் தாங்கண்,***
***எப்பொழுது விடிவதென நினைதருமெல் லையின் வல்லே***
***யிரண்டு போரும்,***
***அப்பொழுது காண்டற்கு வருகின்றானெனத்தடந்தே***
***ரருக்கன் வந்தான்,***
***மைப்பொழுதுஞ் சிவேதனெதிர் மத்திரத்தான் வரூதினிபோன்***
***மாய்ந்த தம்மா.***

*(இ - ள்.) முப் பொழுதுஉம்-மூன்றுகாலத்துச் செய்திகளையும் உணர்-அறிந்த கேள்வி- நூற்கேள்விகளையுடைய, முகுந்தனுடன் - கண்ணபிரானுடனே, பாண்டவர்உம்-, ஆங்கண் - அவ்விடத்திலே [பாசறையில்], முடிசாய்த்து - தலைசாய்த்து [படுத்து], எப்பொழுது விடிவது என நினைதரும் எல்லையின் - (நாம்வெற்றிகொள்ளுமாறு) எப்பொழுது உதயமாகுமென எண்ணமிட்டுக்கொண்டிருக்கையில்,-தட தேர் அருக்கன்-பெரியதேரையுடைய சூரியன், இரண்டுபோர்உம் காண்டற்கு அப்பொழுது வல்லே வருகின்றான் என -*

*இருதிறத்தாருடையபோரையும் பார்க்கும்பொருட்டு அப்பொழுது விரைவாகவருகிறவன் போல, வந்தான் - வந்துஉதித்தான்: (அங்ஙனம் உதித்த சூரியனது முன்பு), மை பொழுதுஉம் - இருட்பொழுதாகிய இராத்திரியும், சிவேதன் எதிர் மத்திரத்தான் வரூதினிபோல்-சுவேதனது எதிரிலே மத்திரதேசாபதியான சல்லியனது சேனைபோல, மாய்ந்தது- (இருந்தவிடந் தெரியாமல்)அழிந்தது; (எ-று.)-அம்மா-ஈற்றசை; அழித்தற்கரிய இருள் எளிதில் ஒழிந்தது பற்றியவியப்பிடைச்சொல்லென்றுமாம்.*

*முன்நடந்தவை, இப்பொழுது நடக்கிறவை, இனிநடப்பவை என்னும் அனைத்தையும் அறியும் திரிகாலஞானி, திருமால். கேள்வியாவது-கேட்கப்படும் நூற்பொருள்களைக் கற்றறிந்தார் கூறக் கேட்டல்; இது-கற்றவர்க்கு அதனாலாகிய அறிவை வலியுறுத்துதலும், கல்லாதவர்க்கும் அவ்வறிவை உண்டாக்குதலும் ஆகிய சிறப்புடைமையால், எடுத்துக்கூறப்பட்டது. முற்று முணர்ந்த முழுமுதற் கடவுளுக்கு ஒருவரிடம் தாம் கேட்டறிய வேண்டுவது ஒன்றும் இன்றாயினும், ஆராத அருளாற் கொண்ட அவதாரவிசேடத்திற்கு ஏற்பக் கண்ணன் சாந்தீபினிமுதலியோர் பக்கல் நூற்பொருள்களைக் கற்றுங் கேட்டும் ஒழுகியதனால், பரத்துவம் சௌலப்பியம் என்னும் அவ்விரண்டு திருக்கலியாணகுணங்களும் விளங்க, 'முப்பொழுது முணர்கேள்வி முகுந்தன்' என்றார். இனி, மூன்று காலங்களிலும் உள்ளார் அனைவராலும்கேட்டு அறியப்படும் புகழுடைய கண்ணனெனினும் அமையும்; கேட்கப்படும் பொருள்க ளெல்லாவற்றினும் எம்பெருமான்புகழ் சிறத்தலாலும், செவிபடைத்ததற்குப்பயன் அதனைக்கேட்டலே யாதலாலும், அது, கேள்வியெனப்பட்டது. முதல்நாட் போரில் தாம் அடைந்த தோல்வி நீங்க மறுநாள்போர்செய்யவேண்டுமென்று எழுந்த மிக்கசிந்தையால், பாண்டவர் பக்கத்தார் பொழுதுவிடிவதை எதிர்நோக்கியிருந்தனரென்க. தேவர்கள் தத்தம்வாகனத்தின்மீது வானத்துவந்து போர்காணுதல் இயல்பாதலாலும், சூரியன் 'கண்' எனப்படுவனாதலாலும்,'இரண்டுபோருங் காண்டற்கு வருகின்றானென' என்று உத்பிரேட்சித்தார்.சுவேதனெதிர் மத்திரத்தான் வரூதினி மாய்ந்ததைக் கீழ் (இச்சருக்கத்து)ஐம்பத்துநான்காம்பாட்டிற்காண்க. சுவேதனது சிறந்த பராக்கிரமத்தில் ஆழ்ந்த சிந்தைஅவனிறந்த பின்பும் மீண்டதில்லையாதலால், கவி அதனை உவமை கூறியதோடுஇச்சருக்கத்தை முடித்தார்.*

*கேள்வி - தொழிலாகுபெயர். ஆங்கண் - அக்கண்என்பதன் மெலித்தலாகியஅங்கண் என்பதன் நீட்டல்; இனி, ஆங்குஎன்ற இடைச்சொல்லின்மேல், அண் -இடப்பொருள்காட்டும் விகுதியென்றலும் 'ஆன்' என்றது கண் என்பதனோடுசேர்க்கையில் திரிந்த தென்றலும் உண்டு. அர்க்கன், வரூதிநீ - வடசொற்கள். (77)*

## *முதற்போர்ச்சருக்கம் முற்றிற்று,*

### *இரண்டாம் போர்ச்சருக்கம்*

#### *1.கடவுள் வணக்கம்,*

**எந்த வெந்த யோனி பேத மெங்கு மெங்கு முள்ளன**
**அந்த வந்த யோனி தோறு மாவி யான தன்மையைச்**
**சிந்தை யின்க ணொருக ணத்தி னிகழு மாறு தேவர்கோன்**
**மைந்த னுய்ந்தி டப்பு கன்ற வள்ள றாள்வ ணங்குவாம்.**

*(இ - ள்,) எந்த எந்த யோனி பேதம் - எந்தஎந்தப் பிறப்பு வகைகள், எங்குஉம்எங்குஉம் உள்ளன - எல்லாவுலகங்களிலும் எல்லா விடங்களிலும் இருக்கின்றனவோ,அந்த அந்த யோனி தோறுஉம் - அந்தந்தப் பிறப்புக்களிலெல்லாம், ஆவி ஆனதன்மையை - (பரமாத்மாவாகிய தான்) உயிர்க்குஉயிராய் உள்ளுறையும் இயல்பை,சிந்தையின்கண் ஒரு கணத்தில் நிகழும் ஆறு - மனத்திலே ஒருக்ஷணப்பொழுதிலேபதிந்திடும்படியாக, தேவர்கோன் மைந்தன் உய்ந்திட -*

*தேவர்களுக்கரசனாகியஇந்திரனது புத்திரனான அருச்சுனன் ஈடேறும்படி, புகன்ற - (கீதை) உபதேசித்தருளிய, வள்ளல் - வரையாது அருளுந்தன்மையனான கண்ணபிரானது,தாள் - திருவடிகளை, வணங்குவாம் - நமஸ்கரிப்போம்; (எ - று.)*

*கீழ்ச்சருக்கத்தில் பகவான் பார்த்தனுக்குப் பரமார்த்தம் பகர்ந்தருளிய பெருங்கருணையில் இவ்வாசிரியர்க்கு உண்டான ஈடுபாட்டின் மேலீட்டினால், அடுத்தஇச்சருக்கத்துக்கு அச்சிறப்பையேசொல்லிக் கடவுள்வாழ்த்துக் கூறுகின்றார். பலவருஷகாலம் பணிவிடை செய்து வழிபட்டார்க்கே உபதேசித்தற்குரிய நற்பொருளை அருச்சுனனுக்கு அருளாற்கூறியருளின உதாரகுணம் விளங்க, 'வள்ளல்' என்றார். "* ***ஊர்வ*** *பதினொன்றா மொன்பது* ***மானிடம்*** *,* ***நீர் பறவை*** *நாற்காலோர் பப்பத்தாம்- சீரிய, பந்தமாந்* ***தேவர்*** *பதினாலயன்படைத்த, வந்தமில்சீர்த்* ***தாவர*** *நாலைந்து" என்பதனால், ஏழுபிறப்பின் எண்பத்துநான்கு நூறாயிரம்யோனிபேதம் இன்னவை யென விளங்கும். ஒருகணத்தில் - மிகவிரைவில் என்றபடி,உய்தல் - உஜ்ஜீவித்தல், கரையேறுதல். உய்ந்திட - இம்மையில் பகையொழித்துப்பிழைக்க, மறுமையில் நற்கதிபெற எனக் கொள்க. வணங்குவாம் என்ற பன்மைக்குக்காரணம், கீழ்"எங்கள்கோ" என்றவிடத்து உரைக்கப்பட்டது.*

*இதுமுதற் பன்னிரண்டுகவிகள் - பெரும்பாலும் ஈற்றுச் சீரொன்று விளச்சீரும், மற்றையாறும்மாச்சீர்களுமாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட* ***எழுசீராசிரியசந்தவிருத்தங்கள்.*** *(78)*

*2.-திட்டத்துய்மனை நோக்கி ஸ்ரீகிருஷ்ணன் 'நீ சேனாபதி யாகிப்பொருக' என்று பணித்தல்.*

**சோனைமேகமென்னாவாளிதூவுதிட்டத்துய்மனைச்**
**சேனைநாதனாகிநீசெருச்செய்கென்றுசெப்பினான்**
**வானையாதியானபூதபேதமாகிமாயையா**
**யேனைஞானரூபியாகியாவுமாயவெம்பிரான்.**

*(இ - ள்.) வானை ஆதி ஆன - ஆகாயத்தை முதலாகவுடைய, பூதபேதம் ஆகி - பூத வகைகளின்வடிவமாய், மாயை ஆய் - மாயையின் வடிவமாகி, ஏனை ஞானரூபி ஆகி - (அம்மாயைக்கு) வேறான தத்துவஞான சொரூபியாய், யாஉம் ஆய - (இன்னும் பிரபஞ்சத்து உள்ள) எல்லாப்பொருளுந் தானேயாய்நின்ற, எம் பிரான் - நமக்கெல்லாந்தலைவனான கண்ணபிரான், (அப்பொழுது), சோனை மேகம் என்ன வாளி தூவு திட்டத்துய்மனை - இடைவிடாப்பெருமழைபொழியுங் காளமேகம்போல அம்புமழையைச்சொரிகிற திட்டத்துய்மனை (நோக்கி), நீ சேனைநாதன் ஆகி செரு செய்க என்று செப்பினான்-'(இனி) நீ சேனைத்தலைவனாய்ப் போர்செய்வாயாக' என்று சொல்லியருளினான்;*

*திட்டத்துய்மனைச் சேனாபதியாக்கினது, இவன் துரோணனைக் கொல்லும்வல்லமையுடையானாதலாலும், அத்துரோணனிடத்து வில் முதலிய ஆயுதவித்தையனைத்தையுங் கற்றறிந்தவ னாதலாலும், பாண்டவர்க்கு அன்புள்ள மைத்துன னாதலாலும், முன்னம் சுவேதனிருக்கையிலேயே சேனைத்தலைமையில் இளவரசாக அமைக்கப் பட்டவனாதலாலும் என அறிக. தன்னையொழிந்த நான்குபூதமும் தன்னிடத்தே அகன்று விரிதற்குக் காரணமான பெருமையையுடையது ஆகாயமாதலால், அதனை முதலதாக்கி 'வானையாதியான பூதம்' என்றார்; ஆகாயத்தினின்று வாயுவும், வாயுவினின்று அக்கினியும், அக்கினியிலிருந்து சலமும்,சலத்திலிருந்து நிலமும் பிறந்ததென வேத மோதும். பூத பேதம் - ஐம்பெரும்பூதங்கள். எம்பிரான் என்றது, எல்லாவுயிர்களையும் உளப்படுத்தி. மாயையாகி -பிரபஞ்ச சிருஷ்டிக்குக் காரணமான பிரகிருதத்துவத்தின் வடிவமா யென்றும்உரைக்கலாம். (79)*

*3.-இருவர் சேனையும் போர்க்களஞ்சேர்தல்,*

**ஐவர்சேனையிங்கெழுந்ததங்கெழுந்ததடலுடைத்**
**தெவ்வர்சேனைவெகுளியோடெழுந்திரண்டுசேனையும்**

**பவ்வமோரிரண்டெழுந்துபடர்வதென்னவெருவருங்
கவ்வையோடுவந்துவெங்களத்திடைக்கலந்தவே,.**

*(இ - ள்.)* இங்கு-இந்தப்பக்கத்தில், ஐவர் சேனை- பாண்டவர் சேனை, எழுந்தது - (போருக்குப்) புறப்பட்டது; அங்கு- அந்தப்பக்கத்தில், அடல் உடை தெவ்வர் சேனை - வலிமையையுடையபகைவர்களான துரியோதினாதியரது சேனை,எழுந்தது- (போருக்குப்) புறப்பட்டது; (இவ்வாறு), இரண்டு சேனையும்-, வெகுளியோடு எழுந்து - கோபத்தோடு புறப்பட்டு, பவ்வம் ஓர் இரண்டு எழுந்து படர்வது என்ன - ஒப்பற்ற இரண்டுகடல்கள் கிளம்பி (ஒன்றன்மேலொன்று) செல்வது போல, வெருவரும் கவ்வையோடு வந்து - (கேட்பவர்) அஞ்சத்தக்க பேராரவாரத்துடனே வந்து, வெம் களத்திடை- கொடியபோர்க்களத்திலே, கலந்த - சேர்ந்தன; *(எ - று.)* **தன்மைத்தற்குறிப்பேற்றவணி.** பவ்வம், கவ்வை - பௌவம், கௌவை என்பவற்றின்போலி. ஐவர்- தொகைக்குறிப்பு. கலந்த-முற்று. *(80)*

*4.-தூளிப்பெருக்கமும் பல்லியவொலியும்.*

**வெம்பராகம்வெளியிலுற்றெழுந்தபோதுவேழவிற்
சம்பராரிதகனநாளினன்றெழுந்ததன்மையென்
றும்பரார்நடுங்கினாருருத்துவீழுமுருமென
விம்பரார்நடுங்கினாரிரங்குபல்லியங்களால்.**

*(இ-ள்.)* (அந்தச் சேனைகளாற் கிளப்பப்பட்ட), வெம்பராகம் - மிகுந்த தூளிகள், வெளியில் உற்று எழுந்த போது - வெளியிலே தோன்றி மேலெழுந்தபொழுது, வேழம் வில் சம்பராரி தகனம் நாளின் அன்று எழுந்த தன்மைஎன்று-கருப்புவில்லையுடைய மன்மதனை யெரித்த தினமாகிய அப்பொழுதில்(சிவபிரானது நெற்றிக்கண்ணின் நெருப்பின் புகை) மேலெழுந்த விதத்தை யொக்குமென்றுகருதி, உம்பரார் நடுங்கினார் - மேலுலகத்துள்ள தேவர்கள் மிகஅஞ்சினார்கள்; இரங்கு பல் இயங்களால்-ஒலிக்கிற (அச்சேனைகளிலுள்ள) அநேகவாத்தியங்களின் முழக்கத்தால், உருத்து வீழும் உரும் என - கர்ச்சித்துவிழுகிறஇடியென்றுகருதி, இம்பரார் நடுங்கினார் - இவ்வுலகத்துள்ள மனிதர்கள் மிகஅஞ்சினார்கள்; *(எ - று.)*

***மயக்கவணி.*** பராகம், சம்பராரி, தஹநம்-வடசொற்கள். சம்பராரி- சம்பர அரிஎனப் பிரியும்; சம்பரனென்னும் அசுரனுக்குச்சத்துருவென்று பொருள்: இவ்வசுரனைமன்மதன் கண்ணபிரானுக்கு ருக்குமிணிப்பிராட்டியிடத்துப் பிரத்யும்நனென்னும்புத்திரனாகப் பிறந்த பொழுது கொன்றனனென வரலாறு. *(81)*

*5.-இதுவும், மேற்கவியும் - குளகம்: சேனைத்தலைவனோடு தருமபுத்திரன் களத்தில் அணிவகுத்துநிற்றலைக் கூறும்.*

**அளவின்மன்னரேறுதேர்களாறிரண்டுபத்துநூ
றிளவலோடுகசதுரங்கமங்களோடுமிடம்வரப்
பளகமன்னவெழுபதிற்றுப்பத்துநூறுதேரொடும்
வளவராதிமன்னரோடுநகுலராசன்வலம்வர.**

*(இ - ள்.)* இளவல் - (பாண்டவருள்) இளையவனான சகதேவன், அளவு இல்மன்னர் ஏறு- எண்ணிறந்த அரசர்கள் ஏறியுள்ள, ஆறு இரண்டு பத்து நூறு - பன்னீராயிரமென்னுந் தொகையுள்ள, தேர்களோடு - இரதங்களுடனும், கச துரங்கமங்களோடு உம் - யானைகள் குதிரைகளுடனும், இடம் வர - இடப்பக்கத்திலே வரவும், நகுலராசன்-, பளகம் அன்ன - மலைகளைப்போன்ற, எழுபதிற்று பத்து நூறு தேரொடும் - எழுபதினாயிரந்தேர்களுடனும், வளவர் ஆதி மன்னரோடும் - சோழர்முதலிய அரசர்களுடனும், வலம் வர-வலப்பக்கத்திலே வரவும்,- (எ - று.)-'நாயகன் நின்றனன்' என மேற்கவியில் முடியும்.
துரங்கமம் - துரிதமாகச்செல்வ தெனக் காரணப்பெயர். ஓடு கசதுரங்கமங்களென

*வினைத்தொகையாக எடுத்து, ஓடுந்தன்மையனவான என்றும் உரைக்கலாம்: அப்பொழுது, தேர்களென்பது- மூன்றாம் வேற்றுமைத் தொகை. நகுலராசன் - நகுலனாகியராசனென இருபெயரொட்டு. (82)*

***6. மிடல்கொள்வாளமைச்சரோடுவிரைவின்வீரர்பின்வர***
***முடுகுசேனையபிமன்வீமன்விசயன்மாயன்முன்செல***
***நடுவுநால்வகைப்படும்பதாதியோடுநாயகன்***
***கடகநாதனுடனணிந்துநின்றனன்களத்திலே.***

*(இ - ள்.) மிடல் கொள் வாள் அமைச்சரோடு - வலிமையைக் கொண்ட ஆயுதங்களையேந்திய மந்திரிகளுடனே, விரைவின் வீரர் - (போரில்) விரைதலையுடைய வீரர் (பலர்), பின் வர - பின்னே வரவும்,- முடுகு சேனை- ஊக்கங்கொண்ட சேனைகளுடனே, அபிமன் வீமன் விசயன் மாயன் - அபிமந்யுவும் வீமசேனனும் அருச்சுனனும் கண்ணனும், முன் செல - முன்னேபோகவும்,-நடுவு- நடுவிலே, நால் வகை படும் பதாதியோடு - நாலுவகைப்பட்ட சேனைகளுடனே, நாயகன் - தலைவனான தருமபுத்திரன், கடகம் நாதனுடன்-சேனைத்தலைவனாகிய திட்டத்துய்மனுடனே, களத்தில்-போர்க்களத்தில், அணிந்து நின்றனன்- அணிவகுத்துநின்றான்;*

*அமைச்சர் - (எப்பொழுதும் அரசனது) அருகி லிருப்பவரென்று பொருள் : மந்திரிகளுக்குத் தமிழில் 'உழையிருந்தான்' எனவும், 'உழையன்' எனவும் பெயர்வழங்குதல் காண்க. விரைவின்வர என இயைத்தலுமாம். பதாதி - காலாட்சேனை; இது-இங்கே, சேனைமாத்திரமாய் நின்றது; இங்ஙனம் சிறப்புப் பெயர்பொதுப்பொருளையும், பொதுப்பெயர் சிறப்புப்பொருளையும் உணர்த்துதல் ஒருவகைப்பாஷை வழக்கம். நால்வகைப்படும் பதாதி - சதுரங்கசேனை.*
***பி-ம் :*** *-மிடலும்வாண்மிலேச்சரோடுவீட்டும். (83)*

*7-வீடுமன் அணிவகுத்துத் துரியோதனனுடன் களத்தில் வந்துநிற்றல்.*

***மாடிரண்டுமெண்ணில்கோடிமன்னர்சேனைநிற்கவும்***
***பீடுகொண்டநேகமன்னர்பேரணிக்கணிற்கவும்***
***சூடுதும்பைமண்டலீகர்தூசியாகநிற்கவும்***
***வீடுமன்மகீபனோடுநடுவண்வந்துமேவினான்.***

*(இ - ள்.) மாடு இரண்டுஉம் - இரண்டு பக்கங்களிலும், எண் இல் கோடி -அளவிறந்த கோடிக்கணக்கான, மன்னர் - அரசர்களது, சேனை - சேனைகள்,நிற்கவும்-, அநேகம் மன்னர் - பல அரசர்கள், பீடு கொண்டு - பராக்கிரமத்தையுடையராய், பேர் அணிக்கண்- பெரிய பின்னணிச்சேனையிலே, நிற்கவும்-, சூடு தும்பை-அணிந்த தும்பைப் பூமாலையையுடைய, மண்டலீகர் - மண்டலாதிபதிகளான அரசர்கள், தூசி ஆக - முன்னணிச்சேனையாக, நிற்கவும்-, நடுவண்-(இவர்கள்) நடுவிலே, வீடுமன் - பீஷ்மன், மகீபனோடு - துரியோதன அரசனுடனே, வந்து மேவினான்- வந்து சேர்ந்தான்; (எ-று.)*
*சூடுதும்பைமண்டலீகர் என்றது, வடமொழிநடை; தும்பை சூடு மண்டலீகர் என மொழிமாற்றுதல், நேராம். 'எண்ணில்கோடி' என்ற அடைமொழியை மன்னர்க்குஞ் சேனைக்குங் கூட்டுக. முன்னே 'மாடிரண்டும்' என வந்ததனாலும், பின்னே 'தூசி' என வருவதனாலும், நடுவில் 'பேரணி' என்றது பின்னணியாயிற்று.* ***பி - ம்:*** *மகீபரோடு. (84)*

*8.-இருதிறத்துச் சேனைக்குங் கைகலந்த போர்.*

***வீசுகொண்டலுடனெதிர்ந்துகோடையுந்திவீசவே***
***மூசுகொண்டலோரிரண்டுமுடுகிநின்றுபொழிவபோல்***
***தூசிநின்றவீரரோடுதூசிவீரர்வில்வளைத்***
***தாசுகங்கள்வீசவீசவந்தரம்புதைந்தவே.***

*(இ - ள்.) வீசு கொண்டலுடன் எதிர்ந்து - வீசியடிக்கிறகீழ் காற்றோடு எதிரிட்டு, கோடை உந்தி வீச - மேல்காற்று மோதி வீசுதலால், மூசு கொண்டல் ஓர்இரண்டு - நெருங்கிய இரண்டு மேகங்கள், முடுகி நின்று - (ஒன்றோடொன்று) பகைத்துநின்று, பொழிவபோல் - மழை பெய்வனபோல,-தூசிநின்ற வீரரோடு - (ஒருபக்கத்து) முன்னணிச் சேனையில்நின்ற வீரர்களுடனே, தூசிவீரர் - (மற்றொருபக்கத்து) முன்னணிச்சேனையில்வீரர்கள், வில்வளைத்து - வில்லைவளைத்து, ஆசுகங்கள் வீச வீச - அம்புகளை மேன்மேல் வீசுதலால், அந்தரம் புதைந்த - ஆகாயவெளிகள் மறைந்தன; (எ - று.)*

*பெருங்காற்றோடுகூடிப் பெருமழை பொழிவதுபோல, வீரர்கள் ஒருவர்மேல் ஒருவர் அம்புகளை அளவில்லாமற் சொரிந்து ஆகாயத்தைமறைத்தார்களென்பதாம். " **குணக்கெழுகாற்று** மேகமுங் **கொண்டல்,"** "வெயிலுங்காந்தளு **மேற்றிசைக்காற்றுங்** குதிரையும் வேனிலுங் **கோடை** யாகும்" என்ற பிங்கலந்தையைஇங்கே அறிக. பொழிவ - பெயர்; பொழிவனவாகிய கொண்ட லோரிரண்டுபோலென்க. ஆசுகம் - விரைந்துசெல்வதென்று பொருள்; ஆசு - விரைவு: வடமொழிஅவியயம். (85)*

***9.-இதுவும் அடுத்த கவியும்-திருஷ்டத்யும்நனும் துரோணனும்பொர, திருஷ்டத்யும்நன் தோற்றோடியமை கூறும்.***

**சொற்கையாதவாய்மைவல்லதுருபதன்குமாரனும்
விற்கையாசிரியனுமுற்றெதிர்ந்து தம்மில்வெகுளவே
பொற்கைவெஞ்சராசனம்பொழிந்தகோலிழிந்தவா
னுற்கையென்னவொருகைமாமுகங்களூடொளித்தவே.**

*(இ-ள்.) (அப்பொழுது), சொல்கையாத-சொல்வெறுக்கப்படாத [இன்சொல்லையுடைய],வாய்மை வல்ல - உண்மைபேசுதலில் வல்லவனான, துருபதன் குமாரன்உம் -துருபதராசனது புத்திரனான திட்டத்துய்மனும், வில் கை ஆசிரியன்உம் -வில்லையேந்திய கையையுடைய துரோணாசார்யனும், உற்று எதிர்ந்து - வந்துஎதிரிட்டு, தம்மில் வெகுள - தமக்குள் [ஒருவன் மேலோருவன்] கோபிக்க, (அச்சம யத்தில்), பொன் கை வெம் சராசனம் - அழகியகையிற்பிடித்த பயங்கரமான (இருவர்)விற்களும், பொழிந்த - சொரிந்த, கோல் - அம்புகள், வான் இழிந்த உற்கை என்ன-ஆகாயத்தினின்று வீழ்ந்த எரிகொள்ளிபோல, ஒருகை மா முகங்களூடு ஒளித்த -(எதிர்ப் பக்கத்திலுள்ள) ஒற்றைக்கையை [துதிக்கையை] யுடைய விலங்காகியயானைகளின் முகங்களிலே தைத்துமறைந்தன; (எ - று.)*

*உற்கை-எரிகொள்ளி; உல்கா என்னும் வடமொழித் திரிபு. சொற்கையாத என்பதற்கு-(புகழ்பவரது) சொல்லுக்கு மிக இனிய என்றும் உரைக்கலாம்; "நாகையாப்புகழான்" என்பர் மேற் பதினாறாம் போர்ச் சருக்கத்தும். கௌரவ பாண்டவர்க்கும், சிகண்டி திட்டத்துய்மர்க்கும், துரோணன் வில்வித்தைபயிற்றி வைத்தகுரு வாதலால், இவனை 'விற்கையாசிரியன்' என்றார். பொற்கை- பொன்னாபரணமணிந்த கையுமாம். சராசநம்-வடசொல்; அம்புகளைத் தள்ளுவ தென்று பொருள். (86)*

***10. வீரசாபமுடனுரைக்கும்வெய்யசாபம்வல்லவத்
தீரன்வாளியாலழிந்துசிலையுமேறுதேரும்விட்
டீரமாமதிக்குடைந்தவிருள்கொலென்னவேகினா
னாரவாரமுடன்மலைந்தவைவர்சேனையதிபனே.***

*(இ - ள்.) (அப்பொழுது), வீர சாபமுடன் - வீரத்தன்மைக் குரிய வில்லின் தொழிலிலும், உரைக்கும் வெய்ய சாபம்-கோபித்துச் சொல்லுங் கொடிய சாபமிடுதலிலும், வல்ல - வல்லவனான, அ தீரன் - தைரியசாலியான அந்தத்துரோணாசார்யனது, வாளியால் - அம்புகளால், ஆரவாரமுடன் மலைந்த ஐவர்சேனை அதிபன் - பேரொலியோடு எதிர்த்துப்போர்செய்த பாண்டவர்சேனைக்குத்தலைவனான திட்டத்துய்மன், அழிந்து - தோற்று, சிலைஉம் ஏறு தேர்உம் விட்டு - கைவில்லையும் ஏறியதேரையும்*

*ஒழித்து, ஈரம் மாமதிக்கு உடைந்த இருள் கொல் என்ன - குளிர்ச்சியையுடைய பெரிய பூர்ணசந்திரனுக்குத் தோற்ற இருள்போல, ஏகினான் - சென்றான்; (எ - று.)*

*எளிதில் அழிதற்கு உவமை. துரோணன் அந்தணானாய் நின்றே அரசர்க்குரியவில்வித்தையையும் முழுதுமறிந்துள்ள சிறப்புத் தோன்ற, 'வீரசாபமுடனுரைக்கும்வெய்யசாபம்வல்ல வத்தீரன்' என்றார்; வில்லாலுஞ் சொல்லாலும்பகைவரையழிக்கவல்லவனென்பது, இத்தொடரின் கருத்து. வெகுளிகொண்டுசபித்தாலும் அருள்கொண்டு அனுக்கிரகித்தாலும் அந்தந்தப்பயன்களைத் தவறாமல்தந்தேவிடும் நிறைமொழியை யுடையவன் இவனென்பது விளங்க 'உரைக்கும்வெய்யசாபம்வல்ல வத்தீரன்' என்றதனால், இவனது அந்தணவொழுக்கம்நன்குவிளங்கும். சாபமென்ற ஒரு சொல்லே வெவ்வேறுபொருளில் மீளவும் வந்தது-மடக்கு என்னுஞ் சொல்லணி; இதனை வடநூலார் யமகமென்பர். பொருளணியில்* **சொற்பின்வருநிலையணி** *யெனப்படும். இருள்கொல், கொல் - அசை.*

### *11.-சேனாபதிதோற்கவே வீமசேனன் உக்கிரமாகப் பொருதல்.*

**உடைந்துடைந்துசேனைமன்னன்வருதல்கண்டுருத்துவான்**
**மிடைந்தகொண்டலெனவதிர்ந்துவீமசேனன்வேலையைக்**
**கடைந்தகுன்றொடொத்ததேர்கடாவிவந்துமுனிவனோ**
**டடைந்தமன்னருட்கியோடவொருகணத்திலமர்செய்தான்.**

*(இ - ள்.) சேனை மன்னன்-(தங்கள்) சேனைத்தலைவனான திட்டத்துய்மராசன், உடைந்து உடைந்து வருதல் - (இங்ஙனம்) தோற்றுத் தோற்று வருதலை, கண்டு - பார்த்து, வீமசேனன்-, உருத்து- கோபங்கொண்டு, வான் மிடைந்த கொண்டல் என அதிர்ந்து - ஆகாயத்திற்பொருந்திய மேகம் போலக் கர்ச்சித்து, வேலையை கடைந்தகுன்றொடு ஒத்த தேர் கடாவிவந்து - (முன்னே) திருப்பாற்கடலைக் கடைந்திட்டமந்தரமலையோடு சமமான (தனது) இரதத்தைச் செலுத்திவந்து, முனிவனோடுஅடைந்த மன்னர் உட்கி ஓட- அந்தண குலத்தானாகிய அத்துரோணனும்(அவனுக்குத் துணையாகச்) சேர்ந்துள்ள அரசர்களும் தோற்றுப் பயந்தோடும்படி,ஒரு கணத்தில் அமர் செய்தான் - ஒருக்ஷணப் பொழுதிலே போரைச்செய்தான்;*

*உடைந்து உடைந்து என்ற அடுக்கால், திட்டத்துய்மன் மீண்டும் வேறு வில்லையெடுத்துக்கொண்டு வேறொருதேரின்மே லேறிச் சென்று துரோணனோடு பொருவதுந் தோற்பதுமாக இங்ஙனம் பல முறை நிகழ்ந்த தென விளங்கும். முன்னொரு காலத்தில் துருவாசமுனிவரது சாபத்தாற் கடலினுட்புக்கு ஒளித்த சுவர்க்கலோகத்துச் செல்வங்களையெல்லாம் மீளவும் பெறும்பொருட்டு இந்திரன்முதலிய தேவர்கள் திருமாலின்நியமனப்படி அசுரர்களுடன் கூடிச்சென்று மந்தரமலையை மத்தாகநாட்டி வாசுகி யென்னும் பெரும்பாம்பைக் கடைகயிறாகப்பூட்டித் திருப்பாற்கடலைக் கடைந்தன ரென்பது* **கதை** *. மந்தரகிரி பாற்கடலைக் கலக்கியதுபோல, வீமன்தேர் போர்க்கடலைச் கலக்குதல்பற்றியது,* **இவ்வுவமை** *. (88)*

### *12.-வீமசேனன் உக்கிரமாகப் பொரவே, கலிங்க மன்னனான சக்ரதேவன் யானைவீரர்களோடு வந்து அவனை எதிர்த்தல்.*

**உக்ர மாக வீமன் வந்த வுறுதி கண்ட நேகபோர்**
**விக்ர மாம தத்த டக்கை வேழ வீரர் தம்முடன்**
**வக்ர சாப மழைபொ ழிந்து வடக லிங்க மன்னவன்**
**சக்ர தேவன் முகிலெ றிந்த வுருமே னத்த லைப்பெய்தான்,**

*(இ - ள்.) வீமன் - வீமசேனன், உக்ரம் ஆக வந்த - (இவ்வாறு) கடுமையாக எதிர்த்துவந்த, உறுதி- மனவுறுதியை, கண்டு-பார்த்து, வட கலிங்கம் மன்னவன்-வட கலிங்கதேசத்து அரசனாகிய, சக்ரதேவன்- சக்கரதேவ னென்பவன், அநேகம் போர் விக்ரம் மா மதம் தடகை வேழம்வீரர் தம்முடன்-பலவகைப் போர்த்திறமையையும் மிக்கமத சலத்தையும் பெரியதுதிக்கையையுமுடைய யானைகளின்மே லேறிய பலவீரர்களுடனே, வக்ர சாபம் மழை பொழிந்துவளைவான வில்லைக் கொண்டு அம்புமழையைச் சொரிந்துகொண்டு, முகில் எறிந்த உரும் என- மேகமிடித்த இடிபோல [மிகப்பயங்கரமாக], தலைப்பெய்தான் - எதிர்த்து வந்தான்; (எ - று.)*

*விக்ரம் - விக்ரமம் என்பதன் விகாரம்; பராக்கிரமம். சக்ரதேவன் முகிலெறிந்தஉருமென எனஎடுத்து, தேவராசனான இந்திரன் (தனக்கு வாகனமான) மேகத்தை(வச்சிராயுதங்கொண்டு) அடித்தலாலுண்டான இடிபோல என்றும் உரைக்கலாம்;ஸக்ரன் - வடசொல். தலைப்பெய்தல்- முன்னே கலத்தல். அநேகபோர் - நிலைமொழிவட சொல்லாதலால், வலி இயல்பு. (89)*

வேறு,

***13.-கலிங்கராசனுடன்வந்த யானைப்படைகளை வீமன் வென்றமை.***

**கதிக்கடுந் தேரினின் றிழிந்து காலிங்கன்**
**மதிக்குமும் மதகரி வந்த யாவையுந்**
**துதிக்கைவன் கரங்களாற் சுற்றி யெற்றினான்**
**விதிக்கொரு விதியனான் வீம சேனனே.**

*(இ - ள்.) (அப்பொழுது), விதிக்கு ஒரு விதி அனான் - ஊழ்வினைக்கும் ஒருஊழ்வினையை யொத்தவனாகிய, வீமசேனன்-, கதி கடு தேரினின்று இழிந்து - வேகம்மிக்க (தனது) இரதத்தினின்று இறங்கி,- காலிங்கன்-அந்தக் கலிங்கநாட்டுமன்னனான சக்ரதேவன், மதிக்கும்- நன்குமதித்த, மும்மதம் கரி வந்த யாவைஉம் - மூன்றுமதங்களையுடைய யானைகள் (போருக்கு) வந்தன எல்லாவற்றையும், வல் கரங்களால் துதிக்கை சுற்றி எற்றினான்- (தனது) வலியகைகளால் துதிக்கையைப் பிடித்து வீசினான்; (எ - று.)*

*பதினாயிரம் யானைபலங் கொண்டவனாதலால், இங்ஙனம் எளிதிற் செய்தான். 'விதிக்கொருவிதியனான்' என்றது - மற்றையோருடைய போர்ச்செயல்களெல்லாம் விதியை அனுசரித்துப் பயன்தரும்: இவனது போர்ச்செய்கையையோ, விதி தான் அனுசரிக்கும் என்றவாறு; எனவே, பகைவரை எதிர்த்துத் தவறாமற் கொல்ல வல்லவன் என்றதாம்; "ஊழிற் பெருவலி யாவுள மற்றொன்று சூழினுந் தான் முந்துறும்" என்றபடி எல்லாவுபாயங்களையுந் தடுத்துவிட்டுத் தான் தவறாமற் பலிப்பதாகிய ஊழ்வினையையுந் தன் கருத்தின்படி நடத்தத்தக்க பராக்கிரமமுடையா னென்க. விதிக்கு என்றதன் இறுதியில் உயர்வுசிறப்புஉம்மை விகாரத்தால் தொக்கது. பீமஸேனன்- பயங்கரமான சேனையையுடையான். காலிங்கன்- தத்திதாந்தநாமம். மும்மதம்-கன்னம் இரண்டு, குறியொன்று ஆக மூன்றிடங்களினின்று பெருகுவன. துதிக்கை வன்கரங்களால் - யானைத் துதிக்கைபோன்ற தனது வரிய கைகளாலென்றுங் கொள்ளலாம். **பி-ம் :** காலிங்கர்.*

*இதுமுதற் பத்துக் கவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாச்சீரும், மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகிய **கலிவிருத்தங்கள்.** (90)*

***14.-இதுமுதல் ஐந்துகவிகள் - வீமனாற்போரிலடிபட்ட யானைகளை வருணிப்பன.***

***மின்பொழிபடையுடைமேவலாருட***
***லென்புகவிபங்களையெடுத்தெறிந்தவா***

***தன்பெருந்துணைவனாந்தாமமாருதி***
***வன்புடன்பறித்தெறிவரைகளென்னவே.***

*(இ - ள்.) 'தன் பெரு துணைவன் ஆம் - தனது [வீமனது] பெரிய தமையனான, தாமம் மாருதி - ஒளியையுடைய வாயுகுமாரனான அநுமான், வன்புடன் பறித்து எறி - வலிமையோடு பேர்த்து வீசிய, வரைகள்- மலைகளாம்,' என்ன - என்றுஉவமை கூற,- மின் பொழி - மின்னல்போன்ற ஒளியைச் சொரிகிற,படை உடை - ஆயுதங்களையுடைய, மேவலார் - பகைவர்களது, உடல் என்பு - உடம்பிலுள்ள எலும்புகள், உக - சிந்தும்படி, இபங்களை - யானைகளை, (வீமன்),எடுத்து எறிந்த-, ஆ - விதம், (என்னே!) (எ - று,)*

*முடிக்குஞ்சொல் வருவித்து முடிக்க. எடுத்தெறிந்தவாற்றை மேலிற்கவிகளிற் காண்க. இபம் - வடசொல். ஆ - ஆறு என்பதன் கடைக்குறை. அடுத்த தமையன் தருமனாதலின், அனுமானை 'பெருந்துணைவன்' என்றது; துணைவன் - உடன்பிறந்தவன்: பிராதா. அனுமான் கேசரியென்னும் வாநரராசனது மனைவியாகிய அஞ்சநாதேவியினிடம் வாயுதேவனால் முன்புபிறந்தவனாதலால், பின்பு வாயுவினாற் குந்தியினிடம் பிறந்த வீமனுக்கு அண்ணனாவன். தாமம்மாருதி - மாலையையுடைய அனுமா னென்றுமாம்; இந்திரன் இளமையில் இவனுக்கு ஒருபொற்றாமரைமாலை யளித்ததாகவும், பட்டாபிஷேககாலத்தில் இராமபிரான் திவ்வியமான ஒரு முத்தாரத்தைச் சீதாபிராட்டியைக்கொண்டு கொடுப்பித்ததாகவும், இராமாயண வரலாறு.தாமம் - இருபொருளிலும், வடசொல். மாருதி-தத்திதாந்தநாமம்: மருத்- வாயு.அனுமான் மலைகளைப் பறித்தெறிந்தது, இலங்கைக்குச்செல்லக் கடலில் அணைகட்டிய பொழுதி லென்க. வலிமையும் பருமையும் பற்றிய* ***தற்குறிப்பேற்றவுவமையணி.*** *பி-ம்: எறிந்தனன். (91)*

***15. வெம்பிமேல்வருதிறல்வீமன்மும்மதத ் தும்பிமேல்விழவிழத்தும்பிவீசுவ***
***பம்பிமேலெறிதருபவனனாற்கட***
***லம்பிமேல்விழவிழுமம்பிபோன்றவே.***

*(இ - ள்.) வெம்பி - கோபங்கொண்டு, மேல் வரு - (பகைவர்) மேல்வருகிற,திறல் - பலத்தையுடைய, வீமன்-, மும் மதம் தும்பி மேல் விழ விழ - மூன்றுமதங்களையுடைய யானைகளின்மேல் அடுத்தடுத்து விழும்படி, வீசுவ - எடுத்துஎறிவனவான, தும்பி - யானைகள்,-பம்பி மேல் எறிதரு பவனனால் - நெருங்கிமேல்வீசுகிற வாயுவினால், (வீசியெறியப்பட்டு), கடல் - கடலிலே, அம்பிமேல்விழ விழும் - மரங்கலங்களின் மேல் அடுத்தடுத்து விழுகிற, அம்பி- மரக்கலங்களை,போன்ற - ஒத்தன; (எ-று.)*
***தற்குறிப்பேற்றவுவமையணி.*** *வடிவுவமை. மரக்கலத்துக்கு யானை உவமைகூறப்படுதலை, "களிறுங் கந்தும் போல நளிகடற், கூம்புங்கலனுந் தோன்றும்," "பொருமால்களிறு போன்றோர் வங்கம்" என்ற முன்னோர் செய்யுட்களிலுங் காண்க. பம்பிமேலேறிதருபவனன் - பெருங்காற்று. கீழ்ப்பாட்டில் தம்பிக்குத் தமையனையும், இப்பாட்டில் மைந்தனுக்குத் தந்தையையும் உவமைகூறினார்.*

***16. வருகளிறொருகையால்வாங்கிவீசலிற்***
***பொருபணைமண்ணுறப்புதையவீழ்ந்தன***
***விரிதிரைநெடுங்கடல்விசும்புதூர்த்தநா***
***ளிருநிலமிடந்திடுமேனம்போன்றவே.***

*(இ - ள்.) வரு களிறு - (தன்மேல் எதிர்த்து) வருகிற யானைகளை, ஒரு கையால் வாங்கி வீசலின் - (வீமன்) ஒருகையால் எடுத்து எறிதலால், பொரு பணைமண் உற புதைய வீழ்ந்தன - போர்செய்யுங்கருவியான தந்தம் பூமியிலே நன்றாகப் புதையும்படி (கவிழ்ந்து கீழ்) விழுந்த அவ்யானைகள்,-விரி திரை நெடு கடல்(பொங்கி மேலெழுந்து) ஆகாயத்தை மறைத்தகாலத்தில், இரு நிலம் இடந்திடும் -பெரிய பூமியைக் (கோட்டாற்) குத்தியெடுத்த, ஏனம் - (திருமாலின் திருவவதாரமான)வராகமூர்த்தியை, போன்ற-(தனித்தனி) ஒத்தன; (எ-று.)*

*வடிவுந் தொழிலும் நிறமும் பற்றிய உவமை. ஒருகாலத்திற் பூமியைப் பாயாகச்சுருட்டியெடுத்துக்கொண்டு கடலில் மூழ்கிப் போன இரணியாக்கனை, திருமால், தேவர்*

*முனிவர் முதலியோரது வேண்டுகோளால், மகா வராகரூபமாகத் திருவவதரித்துக் கொன்று, பிரளய ஆபத்தையடைந்த பூமியைக் கோட்டாற் குத்தி யெடுத்துக் கொண்டுவந்து பழையபடி விரித்தருளின ரென்பது* ***கதை.*** *வீழ்ந்தன - பெயர் ; எழுவாய், இனி, வீழ்ந்தனவாகிய வரு களிறு என இயைத்தலுமாம். (93)*

***17. கழலணிபொலங்கழற்காளைகைகளா***
***லெழவெழமதகரியெடுத்துவீசலின்***
***விழுவனவன்றிமேல்விசையிற்போவன***
***பழையகற்சிறகுடன்பறப்பபோன்றவே.***

*(இ - ள்.) கழல்-காலிலே, அணி - தரித்த, பொலம் கழல் - பொன்னாலாகிய வீரக்கழலையுடைய, காளை - சிறந்தவீரனான வீமன், கைகளால்-, மத கரி - மதயானைகளை, எடுத்து-, எழ எழ - மேலே மிகுதியாகச் செல்லும்படி, வீசலின் - எறிதலால், (அப்பொழுது), விழுவன அன்றி - (கீழே) விழுகிறயானைகள் ஒழிய, மேல் விசையின் போவன - மேலே [ஆகாயத்தில்] வேகத்தோடு செல்லும் யானைகள்,-பழைய சிறகுடன் பறப்ப கல் போன்ற - முன்னிருந்த (தமது) இறகுகளுடன் (ஆகாயத்திற்) பறப்பனவான மலைகளை யொத்தன; (எ - று.)*
*பறப்ப - வினையாலணையும்பெயர். முன்னொருகாலத்தில் மலைகளெல்லாம் பறவைகள்போல இறகுடையனவாயிருந்த அவற்றால் உலகமெல்லாம் பறந்து திரிந்து பலவிடங்களின்மேலும் உட்கார்ந்து அவ்விடங்களையெல்லாம் பிராணிகளுடனே அழித்துவர, அதனை முனிவர் முதலியோரா லறிந்த தேவேந்திரன் சினந்து சென்று தனது வச்சிராயுதத்தால் அவற்றின் சிறகுகளை அறுத்துத் தள்ளி விட்டா னென்பது* ***கதை. பி - ம்.*** *பழையதம். (94)*

***18. புகலுறுகலிங்கர்கோன்போரில்வென்னிட***
***விகலுடனெடுத்தெடுத்திவனெறிந்தபோ***
***தகல்வெளிமுகடுறவதிர்ந்துமேலெழு***
***முகபடமுகில்கள்வான்முகில்கள்போன்றவே.***

*(இ - ள்.) புகல் உறு - (சிறப்பித்துச்) சொல்லத்தக்க, கலிங்கர் கோன் - கலிங்கதேசத்தார்க்கரசன், போரில் வென் இட - போரில் புறங்கொடுக்கும்படி, இவன்-இவ்வீமன், இகலுடன் எடுத்து எடுத்து - வலிமையோடு தூக்கித்தூக்கி, எறிந்தபோது - (மதயானைகளை ஒன்றன்மேல் ஒன்றை) வீசியபொழுது,-அகல் வெளிமுகடு உற - பரந்த ஆகாயவெளியிலே பொருந்த, அதிர்ந்து மேல் எழும்- இடித்துக் கொண்டு மேற்கிளம்புகிற, முகபடம் முகில்கள் - முகபடாதத்தைக் கொண்ட அவ் யானைகள், வான் முகில்கள்-ஆகாயத்திற் சஞ்சரிக்கிற மேகங்களை, போன்ற-ஒத்தன; (எ - று.)*

*புகல் என்னும் வினைப்பகுதியின்மேல், உறு - துணைவினை; இனி புகலுறு - (போர்க்களத்தினுட்) புகுதலையடைந்த என்றுங் கொள்ளலாம். இவ்வுரைக்கு, புகல் - புகு என்னும் பகுதியின் மேற் பிறந்த தொழிற் பெயர். முகபடமுகில்கள் - அடையடுத்த உவமவாகுபெயர். வென்- முதுகு.* ***பி-ம்:*** *முகில்கள் வான்முகில்களை முகப்பபோன்றவே.*

***19.-முன்னணி சிதையவே, கலிங்கராசன் வில்லோடு பொரவருதல்.***

***வென்னிடுகடகரிவீரன்வீமன்முன்***
***முன்னணிகலங்குறமுறிந்தவாறுகண்டு***
***என்னிதுவெனமொழிந்தேறுதேரொடுந்***
***தன்னொருசிலையொடுந்தானுந்தோன்றினான்.***

*(இ - ள்) (இவ்வாறு), வீமன் முன் - வீமசேனனெதிரிலே, வெண் இடு கட கரி- புறங்கொடுத்த மதயானைகள், முன் அணி - (தனது) முற்படையிலே, கலங்குற முறிந்த ஆறு - கலக்கமுண்டாக அழிந்த விதத்தை, கண்டு-பார்த்து, வீரன்-வீரனான கலிங்கராசன், என் இது என மொழிந்து - இது என்னவீரமென்று சொல்லிக்கொண்டு, ஏறு தேரோடுஉம்-(தான்) ஏறிய தேருடனும், தன் ஒரு*

*சிலையொடுஉம்-தனது ஒப்பற்ற வில்லுடனும், தான்உம் தோன்றினான் - தானும் எதிர்த்து வந்தான்; (எ-று,)*
*என்னிதுவீரமென்று வீமனுடைய வீரத்தைக் கொண்டாடினன் கலிங்கராசனென்க, கடம் - யானைக்கன்னம்: வடசொல்: மதநீர்க்கு ஆகுபெயர். (96)*

***20.-கலிங்கராசன் ஏவ, பல அரசர் வீமனை வளைத்தல்.***

***களத்திடைமடிந்தனகலிங்கன்வேழமென்***
***றுளத்தழல்கண்ணிணைசிவப்பவுந்திடத்***
***தளத்தரணிபரெனுந்தானையானைகள்***
***வளைத்தனமருத்தின்மாமடங்கறன்னையே.***

*(இ - ள்.) 'வேழம் - (தனது) யானைகள், களத்திடை - போர்க் களத்திலே, மடிந்தன - (வீமனால்) அழிந்திட்டன,' என்று - என்ற காரணத்தால், உளத்து- மனத்தில்தோன்றிய, அழல் - கோபாக்கினியால், கண் இணை - (தனது) இரண்டுகண்களும். சிவப்பு - செந்நிறமடைய,- கலிங்கன் - கலிங்கராசன், உந்திட - தூண்டிச்செலுத்த,-(அப்பொழுது), தளம் தரணிபர் எனும் தானை யானைகள் - (அவன்) சேனையிலுள்ள அரசர்களாகிய யானைக்கூட்டங்கள், மருத்தின் மா மடங்கல்தன்னை - வாயுதேவனது பெரியசிங்கம்போன்ற புத்திரனான வீமனை, வளைத்தன - சூழ்ந்து கொண்டன; (எ - று.)*

*அரசர்களிடத்து யானையின் தன்மையும், வீமனிடத்துச் சிங்கத்தின் தன்மையையும் ஏற்றிக் கூறியது - உருவகவணி. கலிங்கனது சேனையிலுள்ள யானைகள் அழிந்த பின்பும் அச்சேனை வீரர்களாகிய யானைகள் வீமனைச் சூழ்ந்தன வென ஒருவகைச் சாதுரியந் தோன்றக் கவி கூறினார். முன்நிற்க மாட்டாமல் எளிதில் அழிதற்கு உவமை. சீவக சிந்தாமணியில் "முழைமுகத்திடியரி வளைத்த வன்ன மள்ளரின்... மழைமுகத்த குஞ்சரம் வாரியுள் வளைத்தவே" என்றவிடத்து 'அரியை யானை வளைத்தல் - **இல்பொருளுவமம்'** என ஆசிரியர்நச்சினார்க்கினியர் உரைத்தவாற்றை இங்கே அறிக. தளம்-கூட்டமுமாம். யானைத்தானைகள்-யானைச்சேனைகள். மடங்கல்-உவமையாகுபெயர். (97)*

***21,-கலிங்கமன்னன் சேனையோடு பொருதழிய,***
***வீடுமன் வீமன்மீது உடன்றுவருதல்.***

***கந்தடர்களிற்றுடன்கலிங்கபூபதி***
***மைந்தருஞ்சேனையும்பொருதுமாய்ந்தபின்***
***இந்திரனாற்சிறகிழந்தகுன்றுபோற்***
***சிந்தைநொந்துடன்றனன்சேனைமன்னனே.***

*(இ - ள்.) கந்து அடர் களிற்றுடன் - கட்டுத்தறியை முறிக்கும் இயல்புள்ள மதயானைகளோடு (வந்த), கலிங்க பூபதி - கலிங்க நாட்டரசன், மைந்தர்உம்-(தனது) மக்களோடும், சேனைஉம்- சேனைகளோடும், பொருது-(வீமனுடன்) போர்செய்து, மாய்ந்த பின் - அழிந்த பின்பு,- சேனை மன்னன் - சேனைத்தலைவனான வீடுமன், இந்திரனால் சிறகு இழந்த குன்றுபோல் சிந்தை நொந்து - தேவேந்திரனால் இறகுகளையிழந்திட்ட மலைபோல மனம் வருந்தி, உடன்றனன் - கோபித்து (வீமனை) எதிர்த்துப்போர் செய்தான்; (எ - று.)*
*மூன்றாமடியால், கலிங்கன் வீடுமனுக்குப் போரில் உற்ற துணையாக வுள்ளவ னென விளங்கும். கந்து=ஸ்கந்தம்: மரக்கிளையின் பெயராகிய இந்த வடமொழி இலக்கணையாய், கட்டுத்தறியைக் காட்டும். யானை கட்டுத்தறி முறிப்ப தாதலை "தூணும் விலங்கு முறிப்பது" என மேற் பதினேழாம் போர்ச்சருக்கத்தில் வருவதனாலுங் காண்க. இந்திரன் - வீமனுக்கும், சிறகு - கலிங்கனுக்கும், குன்று - வீடுமனுக்கும் உவமை. (98)*

***22.-மூன்றுகவிகள் - வீமன் வீடுமனுடன் கடும்போர்***
***புரிந்து ஆகவமுழுவதிலும் ஆரவம்மிகுத்தலைக் கூறும்.***

**வீமனுந் தனதுதேர் மேல்கொண் டாங்கொரு**
**தாமவே லவன்புயத் தடத்தி லோச்சினான்**
**மாமரு மாலையான் றானு மற்றவ்வே**
**றோமர மொன்றினாற் றுணித்து வீழ்த்தினான்.**

*(இ - ள்.) வீமனும்-, தனது தேர் மேல் கொண்டு - தன்னுடைய தேரின்மேல்ஏறிக்கொண்டு, ஆங்கு- அப்பொழுது, ஒரு தாமம் வேல் - ஒளியையுடையதொருவேலாயுதத்தை, அவன் புயம் தடத்தில்- அந்த வீடுமனது தோளினிடத்தில், ஓச்சினான்- குறிக்கொண்டு எறிந்தான்; மா மரு மாலையான் தான்உம் - மிக்கவாசனையையுடைய மாலையையுடைய அவ்வீடுமனும், அ வேல் - அந்தவேலாயுதத்தை, தோமரம் ஒன்றினால் - (தான் எறிந்த) தோமரமென்னும் ஓராயுதத்தால், துணித்து வீழ்த்தினான் - துண்டித்துத் தள்ளினான்; (எ - று.)*

*தோமரம் - இருப்புலக்கைக்கும், கைவேலுக்கும், பேரீட்டிக்கும் பெயர். தாமவேல்- வெற்றிமாலையைச் சூடிய வேலுமாம். மற்று - அசை. கீழ் 13-ஆம் பாட்டில் வீமன் தேரினின்று இறங்கினமை கூறியதனால், இங்கே 'தேர்மேல் கொண்டு'என்றார் (99)*

வேறு.

***23,*** **ஓடுமிர தத்திவுளி நாலுமட லற்றுவிழ வோரொர்கணை**
**தொட்டி ரதமு,**
**மீடுகுலையத்துவசம் வீழவனி கத்தவரு மேகவெதிர்**
**முட்டு தலுமே,**
**நீடுவரை யொப்பதொர்கதாயுத மெடுத்தணுகி நேர்பட**
**வடித்த னனரோ,**
**வீடுமன் மனத்தனையதேர்வலவனைக்கடிதின்**
**வீமனெனும் வெற்றி யுரவோன்.**

*(இ - ள்.) (அதுவுமின்றி, வீமனது), இரதத்து - தேரிற்பூட்டிய, ஓடும் - விரைந்துசெல்லுந்தன்மையனவான, இவுளி நால்உம் - குதிரைகள் நான்கும், உடல் அற்று விழ- உடம்பு துணிந்து விழும்படியும், இரதம்உம் ஈடு குலைய - அத்தேரும் வலிமைகெடும்படியும், துவசம் வீழ- அத்தேர்க்கொடி அறுந்துவிழும்படியும், அனிகத்தவர்உம் ஏக-(அவன்) சேனையிலுள்ள வீரர்களும் (புறங்கொடுத்து) ஓடும்படியும், ஓர் ஓர் கணை தொட்டு - (ஒவ்வொன்றுக்கு) ஒவ்வொரு அம்பை எய்து, எதிர் முட்டுதலும் - (வீடுமன்) எதிர்த்துப் போர் செய்தவளவில்,-வீமன் எனும்வெற்றி உரவோன்-வீமனென்கிற*
*சயத்தைத்தரும் பலத்தையுடைய வீரன், கடிதின் - விரைவாக, நீடுவரை ஒப்பது ஓர்கதாஆயுதம் எடுத்து அணுகி-நீண்ட மலையை யொப்பதொரு கதாயுதத்தை யெடுத்துக்கொண்டு அருகிற்சென்று, வீடுமன் மனத்து அனைய தேர் வலவனை- வீடுமனது மனத்தை யொத்த தேரைச் செலுத்தும் பாகனை, நேர் பட அடித்தனன்- குறி தவறாது காயம்படும்படி அடித்தான்; (எ - று.)*

*கதைக்கு மலைஉவமை - பெருவடிவத்துக்கும், வலிமைக்கும், அழித்தற்கு அருமைக்கும். அச்சந்தருவதற்கு மென்க. மனத்தனைய - மனத்துக்கு மிகவும் இஷ்டமான என்றபடி; இதனைத் தேருக்கும் வலவனுக்கும் அடைமொழியாக்கலாம் : தேருக்கு ஆக்கும்போது, மனத்து அனைய- மனோவேகத்தை யொத்த எனப் பொருள்கொள்ளினும் இழுக்காது. உரவோன் என்பதில், உரவு- பகுதி; அது-பலம்: தேகபலம், ஆயுதபலம், சேனாபலம், மனோபலம், புத்திபலம், தெய்வபலம் முதலிய பலவகை வலிமைகளையும் உணர்த்தும்.*

*இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் பத்துக்கவிகள் - பெரும்பாலும் முதலைந்துசீரும் கூவிளங்காய்ச்சீர்களும், ஆறாவது தேமாச்சீரும், ஏழாவது புளிமாச்சீருமாகிய*
***எழுசீராசிரியவிருத்தங்கள்.** (100)*

*24.* **வேகமுடனிப்படியவ்வீமனுமுடற்றியடல்வீடுமனொ**
**டொத்தமுதுபோர்,**
**மோகரவிதத்தரசர்மாமகுடரத்நமுடன்மூளைகடெறிக்கவடியா,**
**நாகமொடெடுத்திவுளிதேர்சிதறமுற்றவொருநாழிகையிலெற்றி**
**வரவே,**
**யாகவமுழுக்கவுருமேறெறிவதொக்குமெனவாரவமிகுத்ததறவே.**

*(இ - ள்,) இ படி - இவ்விதமாய், வேகமுடன் - விரைவோடு, அவ்வீமனும்-, உடற்றி - போர்செய்து, அடல் வீடுமனொடு ஒத்த - வலிமையையுடைய பீஷ்மனோடு பொருந்திய, முது போர் மோகரம் விதத்து அரசர் - பழமையான [பெரிய] யுத்தத்தில் உக்கிரமான தன்மையையுடைய அரசர்களது, மா மகுடம் ரத்நமுடன்- பெரிய கிரீடத்திற்பதித்த இரத்தினங்களுடனே, மூளைகள்- தலைமூளைகளும், தெறிக்க-சிதறும்படி, அடியா-அடித்து, நாகமொடு இவுளி தேர் - யானைகளோடு குதிரைகளையுந் தேர்களையும், எடுத்து-, சிதற - (அவை பொடியாய்ச்) சிந்தும்படி, ஒரு நாழிகையில் - ஒரு நாழிகைப் பொழுதிலே, முற்ற - (அச்சேனை) முழுவதிலும், எற்றி வர - தாக்கிக்கொண்டு வருகையில், ஆகவம் முழுக்க - அப்போர்க்களம் முழுவதும், உரும் ஏறு எறிவது ஒக்கும் என - பேரிடிவிழுவதுபோலுமென்னும்படி, அற - மிகவும், ஆரவம் மிகுத்தது - இரைச்சல்அதிகப்படப்பெற்றது; (எ - று.)*

*ஆஹவம், ஆரவம் - வடசொற்கள். பெரியதையுஞ் சிறந்ததையும் ஏறென்றல்,மரபு.* ***பி - ம் :*** *இப்படியில். சிதறி. (101)*

*25.-இதுவும். மேற்கவியும்-குளகம்: அபிமனும்வந்து கடுமையாகப் பொருவதைத் தெரிவிக்கும்.*

**மீளவும்வளைத்தசிலை வீடுமனத்திர்த்தகுரல்**
**வீமனொடுருத்திருவருங்,**
**காளமுகிலுக்குமுகினேர்மலைவதொக்கவெரிகா லுநயனக்**
**கடையினார்,**
**மூளவெதிர்முட்டியெதிர்சேனையு நிலத்துதிரமோது**
**பொழுதத்துவெகுளா,**
**வாளபிமன்வெற்றிவரிவார்சிலைகுனித்துவயவாளிக**
**டொடுத்துவரவே.**

*(இ - ள்.) வளைத்த சிலை வீடுமன் - வளைத்த வில்லையுடைய பீஷ்மன், அதிர்த்த குரல் வீமனொடு - உரத்தகுரலையுடைய வீமனுடனே, மீளஉம் உருத்து -மறுபடியும் கோபித்துவர,-இருவர்உம் - (வீடுமன் வீமன் என்னும்) இரண்டுபேரும், காளம் முகிலுக்கு நேர் முகில் மலைவது ஒக்க - கார்காலத்துக் கரிய மேகத்துக்கு எதிரில் மற்றொருமேகம் போர்செய்வதுபோல, எரி காலும் நயனம் கடையினார்- நெருப்பையுமிழுங் கடைக்கண்ணையுடையவர்களாய், மூள - கோபம்மூள, எதிர் முட்டி - எதிரில்தாக்கி, எதிர்சேனைஉம் நிலத்து உதிர - (தன்தன்) எதிர்ப்பக்கத்துள்ள சேனையும் தரையிலே பொடியாய்ச் சிந்தும்படி, மோது பொழுதத்து-தாக்கிப் போர்செய்யும் பொழுது, வாள் அபிமன் - ஆயுதப்பயிற்சியில்வல்ல அபிமந்யு, வெகுளா-கோபங்கொண்டு, வெற்றி வரி வார் சிலை குனித்து - சயத்தைத்தருகிற கட்டமைந்த நீண்ட வில்லை வளைத்து, வய வாளிகள் தொடுத்து வர- வலிய அம்புகளைப் பிரயோகித்துவர,-(எ - று.)- 'நகுவோன்ஒத்தனன்' என மேற்கவியில் முடியும்.*

*உருத்து - உருக்க. கடையினார் - குறிப்புமுற்றெச்சம். இடைவிடாது ஆயுதமழைபொழிதலின், முகில்உவமை. இவர்களை முகில் என்றதற்கேற்ப ஆர்த்தகுரலை இடிமுழக்கமாகவும், எரிகாலுதலை மின்னலொளியாகவும், கைவில்லைஇந்திரவில்லாகவுங் கருதுக. (102)*

*26.* **வார்சிலையைவட்டவடிவாம்வகைவணக்கியெதிர்மாறு படவுற்றுவருவோ,**
**ரோரொருவர்நெற்றிதொறுமோரொருவடிக்கணைகளூ டுருவவிட்டு நகுவோன்,**
**மேருவைவளைத்துநெடுவாசுகிபிணித்துமழைமேகநிகர் மெய்க் கணைதொடர,**
**வாரழலின்முப்புரமுநீறெழநகைத்தவரவாபரண னொத்தனனரோ.**

*(இ - ள்.) வார் சிலையை - நீண்ட வில்லை, வட்டம் வடிவு ஆம் வகை- வளைந்தவடிவமாகும்படி, வணக்கி - வளைத்து, எதிர் மாறு பட உற்று வருவோர் ஓர் ஒருவர் நெற்றிதொறும்உம்-(தனக்கு) எதிரிலே பகைமைபொருந்த நெருங்கி வருகிறவீரர் ஒவ்வொருவரது நெற்றியிலும், ஓர் ஒரு வடி கணைகள் ஊடுருவ விட்டு -ஒவ்வொரு கூரிய அம்பைத் துளைத்துச்செல்லும்படி பிரயோகித்து, நகுவோன் -(அவர்களை நோக்கி இகழ்ந்து) சிரிப்பவனான அவ்வபிமன்,-மேருவை வளைத்து - மகாமேருகிரியை (வில்லாக) வணக்கி, நெடு வாசுகி பிணித்து - நீண்ட வாசுகியென்னும் பெரும்பாம்பை (நாணியாக)க் கட்டி, மழை மேகம் நிகர் மெய் கணை தொடா - மழைபொழியுங் காளமேகத்தையொத்த திருமேனிநிறத்தையுடைய (திருமாலாகிய) அம்பைத் தொடுத்து, ஆர் அழலின் முப்புரம்உம் நீறு எழ நகைத்த -மிக்க தீயால் திரிபுரமுழுவதுஞ் சாம்பராய்ச்சிதறும்படி புன்சிரிப்புச் செய்த,அரவுஆபரணன் - சர்ப்பங்களை ஆபரணமாகவுடைய சிவபிரானை, ஒத்தனன்- போன்றனன்; (எ-று.)*

*அழித்தற்கடவுளாகிய உருத்திரமூர்த்தி உவமை, தவறாது எளிதில் பகையழிக்கும் ஆற்றலுக்கு என்க. வாசுகி - அஷ்டமகா நாகங்களுள் ஒன்று "பொன்னங் குடுமி மேருவரை சிலையாய்ச் சேடன் புரிநாணாய்க், கன்னித்துளவத் திருநெடுமால் கணையாய்" எனவும், "தடநெடு வடவரை சாபமும், படவர விறைபகர் நாரியும், மடல்விரி துளவினன் வாளியும்" எனவும் பல புராணங்களில் திரிபுரசங்காரகாலத்து ஆதிசேஷன் வில்நாணியாக இருந்ததாகக்கதை பிரசித்தமாகவிருக்க, இங்கு 'நெடுவாசுகிபிணித்து' என்றது புராணாந்தர கல்பாந்தர கதையைப்பற்றியதாதல்வேண்டும்; இனி, மேரு இமயம் மந்தரம் இவற்றில் ஒன்றை மற்றொன்றாகக் கவிகள் அபேதமுற வழங்குதல்போல, மகாநாகமென்ற பொதுமைபற்றி, ஆதிசேஷனை வாசுகியென்று அபதேமாகக் கூறியதென்றுங் கொள்ளலாம்: இங்ஙனம் ஒற்றுமை நயம்பற்றிக்கூறும் மரபை "ஆழியான் பள்ளி யணையே யவன்கடைந்த, வாழிவரையின் மணித்தாம்பே-ஊழியான், பூணே புரமெரித்த பொற்சிலையிற் பூட்டுகின்ற, நாணே யகல நட" என்ற பாடலிலுங் காண்க.வட்டம் - வருத்தமென்னும் வடமொழிச் சிதைவு. மெய்க்கணை - தவறாத அம்பென்றுமாம். "பின்னைதழுவுங்கணை" என்றாற்போல, திருமாலுக்கு உரிய அடைமொழி கொடுத்து 'மழைமேகநிகர்மெய்க்கணை' என்றார். ஆர் அழலின் - அழித்தற்கரிய அனலினா லென்றுமாம்.* ***அரவாபரணனென்ற விவரம்:-*** *ஒருகாலத்திற் பரமசிவன் தன்னைமதியாத தாருகவனத்திலுள்ள முனிவர்களது கருவத்தைப் பங்கஞ் செய்யவும், அவர்கள் மனைவிமார்களின் கற்புநிலையைப் பரிசோதிக்கவுங் கருதித் தாம் ஒருவிடசங்கமத் திருவுருவங்கொண்டு அவரில்லந்தோறுஞ்சென்று பிக்ஷாடநஞ்செய்து, தம்மைநோக்கிக் காதல் கொண்ட அம்முனிபத்தினியரது கற்புநிலைமையைக் கெடச்செய்ய, அதுகண்டு பொறாமற் கோபம்மூண்ட அம்முனிவர்கள் அபிசார யாகமொன்று செய்து அவ்வோமத்தீயினின்றும் எழுந்த நாகங்கள் பூதங்கள் மான் புலி முயலகன் வெண்டலை முதலியவற்றைச் சிவனைக் கொன்றுவரும்படி ஏவ, சிவபெருமான், தம்மேற் பொங்கி வந்த நாகங்களை ஆபரணங்களாகவும், பூதங்களைத் தமதுகணங்களாகவுங் கொண்டு, மானைக் கையிலேந்தி, புலியைத் தோலையுரித்து உடுத்து, முயலகனை முதுகிற் காலால் ஊன்றி, வெண்தலையைக் கையிற்பற்றிச் சடையின்மேல் அணிந்து, இங்ஙனமே அவற்றையெல்லாம் பயனிலவாகச்செய்துவிட்டன னென்பது.*
*(103)*

*27.-வீமனையும் அபிமனையும்*
*துரியோதனன் ஏவலாற் பல அரசர் வளைதல்.*

**மேவலர்விதப்படையும்வீடுமனுமுட்கும் வகைவீமனும்விறற் புதல்வனும்,**

**பூவலயமுற்று மெழுகாலவிறுதிப்பரவைபோலிகல்விளைத்த பொழுதிற்,**
**கூவலினிலைப்புனலுமீதெழுவதொத்ததொருகோபமொடு சர்ப்பதுவசக்,**
**காவலனுரைப்பவிருவோரையும்வளைத்தனர்கள்காவல ரெனைப்பலருமே.**

*(இ - ள்) (இவ்வாறு), வீமனும்-, விறல் புதல்வன்உம் - வெற்றியையுடைய (அருச்சுனனது) குமாரனான அபிமந்யுவும்,'- மேவலர் விதம் படையும் வீடுமன்உம் உட்கும் வகை - பகைவர்களது பலவகைச்சேனைகளும் (அச்சேனைத்தலைவனான) பீஷ்மனும் அஞ்சும்படி, பூவலயம் முற்றுஉம் எழுகாலம் இறுதி பரவை போல்- பூமண்டலமுழுவதிலும் பொங்கிப்பரவுகிற கல்பாந்தகாலத்துப் பிரளயப் பெருங்கடல்போல [யாவரையும் அழிக்குமாறு], இகல் விளைத்த பொழுதில் - போரைச்செய்தசமயத்தில், சர்ப்ப துவசம் காவலன்-பாம்புக் கொடியையுடைய துரியோதனராசன், கூவலின் நிலைபுனல்உம் மீது எழுவது ஒத்தது ஒரு கோபமொடு - கிணற்றினுள் நின்ற நீர் மேற்கிளம்புவதைப் போன்ற [உள்ளிருந்து வெளிக்கிளம்பின] ஒரு பெருங்கோபத்துடனே, உரைப்ப - (முனைந்துசெல்லும்படி) கட்டளை கூற, காவலர் எனை பலர்உம் - அரசர்களெல்லோரும், இருவோரைஉம் வளைத்தனர்கள் - (வீமனும் அபிமன்யுவு மாகிய) அவ்விரண்டுபேரையுஞ் சூழந்துகொண்டார்கள்.*

*வீமனும் விறற்புதல்வனும் - அன்புடைமைபற்றி, தம்பிமகனை அவன் மகன்போலக் கூறியது. புனலும், உம் - அசை; இழிவு சிறப்புமாம். பரவை - பரவியது. 'கூவலினிலைப்புனலுமீதெழுவ தொத்ததொரு கோபம்' என்பதற்கு - கிணற்றுநீருங் கொதித்து மேற்கிளம்பத்தக்கதாகிய கடுங்கோபமென்று உரைப்பாருமுளர். **பி-ம்:** கோபமொடுமத்தினபுரிக். (104)*

### *28.-அருச்சுனன் வீமஅபிமன்யுக்களைக் குறுகுதல்.*

**தானவர்சமத்துமிருதோள்வலியுமற்றுமுனைதானைபுறகிட்டழியவே**
**வானவர்துதிக்கவயவாகைபுனையக்கடவுள்வாழ்வினிதளித்துவருவோன்**
**மீனவனெனத்தகையகாளையொடெடுத்தகதைவீமனவளைத்தனரெனக்**
**கூனல்வரிவிற்பகழிதூவியிரதத்தின்மிசைகூவியவரைக்குறுகினான்.**

*(இ - ள்) தானவர் - (நிவாதகவசரும் காலகேயரு மாகிய) அசுரர்கள், சமத்துஉம் இருதோள் வலிஉம் அற்று - (தங்கள்) சாமர்த்தியமும் இரண்டு தோள்களின்பலமும்ஒழிந்து, முனை - போர்க்களத்திலே, தானை - சேனைகளுடனே, புறகு இட்டு -(முன்னே) முதுகுகொடுத்து, அழிய - (பின்பு) அழிந்திடவும்,-வானவர் துதிக்க-தேவர்கள் புகழவும்,-வய வாகை புனைய- வெற்றிக்குரிய வாகைப்பூமாலையைச்சூடவும், கடவுள் வாழ்வு இனிது அளித்து வருவோன் - (இந்திரன் முதலிய)தேவர்களுக்கு வாழ்க்கையை இனிமையாகக் கொடுத்து தன்மையனாகியஅருச்சுனன்,- 'மீனவன் என தகைய காளையொடு- மீன்வடிவமெழுதியகொடியையுடைய மன்மதனென்று (அழகிலும் பேராற்றலிலுஞ்) சொல்லத்தக்க(தன்மகனான) அபிமனுடனே, எடுத்த கதை வீமனை- ஏந்திய கதாயுதத்தையுடையவீமனையும், வளைத்தனர்-(பகையரசர்களெல்லோரும் ஒருங்கு) சூழ்ந்தார்கள்,' என -என்று அறிந்து, கூன் நல் வரி வில் பகழி தூவி - வளைந்த சிறந்த கட்டமைந்த(தனது காண்டீவமென்னும்) வில்லினின்று அம்புகளைத் தொடுத்து, கூவி- (அவ்வரசர்களைப் போருக்கு) அழைத்துக் கொண்டு, இரதத்தின் மிசை - தேரின்மீது,அவரை குறுகினான் - அந்த அண்ணனையும் புதல்வனையும் சமீபித்தான்; (எ -று.)*
*அருச்சுனன் கைலாசத்துச் சென்று தவமியற்றிப் பரமசிவனிடத்துப் பாசுபதம்முதலியனபெற்ற பின்பு அங்குவந்து அழைத்துப்போன தந்தையாகிய இந்திரனுடனேதேவலோகஞ்சேர்ந்து, அங்குத் தேவர்களதுவேண்டுகோளின்படி அவர்கட்குப்பகைவராய்ப் பலநாளாகப் பெருந்துன்ப மியற்றிவந்த கடலிடையிலுள்ள தோயமாபுரவாசிகளான நிவாதகவசரென்னும் அசுரர் மூன்று கோடிபேரையும், அந்தரத்துள்ள இரணியபுரவாசிகளான காலகேய ரென்னும் அசுரர் அறுபதினாயிரவரையும்*

*ஆங்காங்குச் சென்று போர்செய்து அழித்தொழித்தனன் என்பது கீழ் **ஆரணியபருவத்து வரலாறு.** சமத்து - ஸமர்த்தசப்தபவம். **பி-ம்:-** [1] சமத்து மிகு.'* *(105)*

*29.-அருச்சுனன் பகழிதூவிச் செல்லும்போது அரசர் கெட்டுச்சிதற வீடுமன் திகைக்க, படைஞர் தம்படைவீடுபுகுதல்.*

***வீசுபகழித்துளியின்மேகமெனவிற்கொடிவன்மேலுறநடக்குமளவிற்***
***றேசுபடையருக்கனெதிர்மூடுபனியொத்தரசர்தேரணிகெடச்சிதறினார்***
***மாசுணமணிக்கொடிமகீபதிபடைத்தலைவன்வார்சிலைவளைத்திலனெடும்***
***பாசறைபுகக்கடவினார்கடகளிற்றினணிபாய்பரியணிப்படைஞரே.***

*(இ-ள்.) (இவ்வாறு), வீசு பகழி துளியின் மேகம் என - நெடுந்தூரம் விரைந்தெறிகிறஅம்புகளாகிய மழைநீர்த்துளிகளையுடையதொரு மேகம் போல, வில் கொடு -காண்டீவவில்லை(க் கையில்) ஏந்திக்கொண்டு, இவன் - இவ்வருச்சுனன், மேல் உற-(பகைவர்) மேலே பொருந்த, நடக்கும் அளவில் - (போருக்குச்) செல்லுமளவில்,-தேசு உடை அருக்கன் எதிர் மூடு பனி ஒத்து - ஒளியையுடைய சூரியனுக்குஎதிரிலே மூடுபனிபோன்று, அரசர் - பகையரசர்கள், தேர் அணி கெட -தேர்வரிசைகள் அழியும்படி, சிதறினார் - (முன்நிற்கமாட்டாமற்) சிதறுண்டுபோனார்கள்; (அப்பொழுது), மாசுணம் மணி கொடி மகீபதி படை தலைவன் - பாம்பையெழுதிய அழகியதுவசத்தையுடைய துரியோதனராசனது சேனாதிபதியான வீடுமனும், வார்சிலை வளைத்திலன் - (தனது) நீண்ட வில்லை வளைக்கவும்மாட்டிற்றிலன்; (அங்ஙனந்திகைத்துநின்றிடவே), கடம் களிற்றின் அணி - மதயானை வரிசையிலும், பாய் பரி அணி - தாவிச்செல்லுந்தன்மையனவான குதிரைகளின்வரிசையிலும் (இருந்த), படைஞர் - சேனாவீரர்கள், நெடு பாசறை புக- பெரிய (தமது) பாடிவீட்டிற் செல்ல, கடவினார் - (தம்தம்வாகனங்களை ஏவிச்) செலுத்தினார்கள்; (எ - று.)*

*தோணிகெட்டதனால், பின்பு மற்றையிரண்டணியே கூறினார். சிறந்த ஆயிரங்கிரண முடைமையால், 'தேசுடையருக்கன்' எனப்பட்டான். மூடுபனி - சூரியனெதிர்ப்படுதற்குமுன் உலகை மூடியிருந்த பனி யென இறந்தகாலவினைத்தொகை; இருந்தவிடந் தெரியாமல் எளிதில் அழிதற்கு உவமை. மணிக்கொடி - இரத்தினங்களைப் பதித்த காம்பையுடைய கொடியுமாம். மேகத்துக்கும் இந்திரவில் உள தாதலால், 'மேகமென விற்கொடு' என்றார். தேசு=தேஜஸ்: படைஞர் - அதுவீரருமாம்.* *(106)*

*30.-சூரியாஸ்தமனவருணனை.*

**வேலையமுதுக்குவருவானவர்களொத்தனர்கள்வீடுமன்முதற்படைஞரா**
**லாலநிகரொத்தனனனீகினிதொலைத்தொருதனாண்மைநிலையிட்டுவருவோன்**
**மேலினியிமைப்பொழுதுநாம்வெளியினிற்கிலிவன்மேலிடுமெனக்கருதினான்**
**போலெழுவயப்புரவியூருமிரதத்திரவிபோயுததியிற்சொருகினான்.**

*(இ - ள்.) (அப்பொழுது அஞ்சித் சிதறியோடின), வீடுமன் முதல் படைஞர் - பீஷ்மன்முதலான சேனைவீரர்கள், வேலை அமுதுக்கு வரு வானவர்கள் ஒத்தனர்கள் - பாற்கடலில்தோன்றிய அமிருதத்தைப் பெறுதற்கு வந்த தேவர்களைப் போன்றார்கள்; அனீகினி தொலைத்து - (அங்ஙனம் சத்துரு) சேனையை யோட்டி, ஒரு தன் ஆண்மை நிலை இட்டு வருவோன் - ஒப்பற்ற தனதுபராக்கிரமத்தை நிலைநிறுத்தி வருபவனான அருச்சுனன், ஆலம் நிகர் ஒத்தனன் - (அப்பொழுது பாற்கடலினின்று யாவரும் அஞ்சுமாறு எழுந்த) காலகூடவிஷத்தை உவமையாகப் பொருந்தினான்; (அச்சமயத்தில்), எழு வய புரவி ஊரும் இரதத்து இரவி-ஏழு வலியகுதிரைகள் பூண்டு நடந்துந் தேரையுடைய சூரியன், இனி மேல் நாம் வெளியில் இமைப்பொழுது நிற்கில் இவன் மேலிடும் என கருதினான் போல் - நாம்இனிமேல் வெளியிலே ஒரு கணப்பொழுது நின்றாலும் இவ்வருச்சுனன் நம்மேலும்(அழிக்க) வருவானென்று எண்ணினான்போல, உததயில் போய் சொருகினான் -(மேல்) கடலிற் போய் மறைந்தான்; (எ - று.)- படைஞரால், ஆல் - ஈற்றசை.*

*முன்னிரண்டடி - **உவமையணி** யும், பின்னிரண்டடி- **ஏதுத்தற்குறிப் பேற்றவணியு** மாம். மண்ணுலகத்தில் ஆண்மைநிலையிட்டு வருபவன் அங்கு எதிர்ப்பவரில்லாமையால் விண்ணுலகத்துப் பாய்ந்து எதிரில் நிற்குந் தன்மேல் பொருதிடுவானோ எனச் சூரியன் அஞ்சினான். சூரியன் அஸ்தமித்தலை மேல்கடலில்மறைதலாகத் தோற்றம்மாத்திரத்தைக்கொண்டு கவிகள் வருணிப்பர். வீடுமன்முதலியோரை வானவர்க ளென்றதற் கேற்ப, வெற்றியை அமுதமாகக் கொள்க.அமுதுக்கு - நான்காம்வேற்றுமை, பொருட்டுப் பொருளது. 'படைஞரார்' என்றபாடத்துக்கு, ஆர் - விகுதிமேல் விகுதி. ஆலம் - ஹாலம்: வடசொல். எழுபுரவி - பண்புத்தொகை; சூரியனது தேர்க்குதிரை ஏழெனப் பெயர்பெற்ற தொன்றேயென்பாரும், ஒரு குதிரைக்கு ஏழு பெயர்க ளென்பாரும், ஏழுகுதிரைகளென்பாரும்,ஏழுகுதிரைகளில் ஒன்று ஏழெழுன்று பெயர்பெற்ற தென்பாரும் எனப் பலதிறத்தவராவர்.*

### *31.-மாலைப்பொழுது வருணண.*

**ஆதபனொளித்ததிசையோவொளிசிவந்ததறவாழ்குருதிமெத்துகையினான்
மாதிரமுமைக்கடலுமாநிலமுமுட்டவொருமாசறுசிவப்புவடிவா
யேதிலிருள்புக்குலவலாமிடமறக்கடையினேறனலியொத்ததிகலிப்
பாதகமிகுத்தகொலைவாணிருபர்தத்தமதுபாடிநகர்புக்கனர்களே.**

*(இ - ள்.) (அப்பொழுது), ஆதபன் ஒளித்த திசைஓ-சூரியன் மறைந்த மேற்குத்திக்குமாத்திரமோ, ஒளி சிவந்தது-(தன்) ஒளி செந்நிறமடைந்தது; மாதிரம்உம்-திக்குக்களும், மை கடல்உம்-கரிய கடலும், மா நிலம்உம்-பெரிய பூமியும், முட்ட-முழுவதும், அற ஆழ் குருதி மெத்துகையினால்-மிகவும் ஆழ்ந்துள்ளஇரத்தவெள்ளம் மிகுதலால், ஒரு மாசு அறு சிவப்புவடிவ ஆய்- களங்கமில்லாத ஒருசிவந்தவடிவத்தையுடையதாய், எதில் இருள் புக்கு உலவல் ஆம் இடம் அற-பகையாகிய இருள் பிரவேசித்துசஞ்சரித்தற்கு ஏற்ற வெற்றிட மில்லாதபடி, கடையின்ஏறு அனலிஒத்தது-(யுகத்தின்) முடிவில் (கடலினின்று) வெளியெழுந்து பரவும்படபாமுகாக்நியைப் போன்றது; (அச்சமயத்தில்), இகலி பாதகம், மிகுத்த கொலைவாள்நிருபர்- (ஒருவரோடொருவர்) மாறுபட்டுப் பாவத்தை மிகச் செய்யுங் கொலைத்தொழிலையுடைய ஆயுதங்களையேந்திய (இருதிறத்து) அரசர்களும், தம்தமது பாடிநகர் புக்கனர்கள் - தங்கள் தங்களது படைவீட்டிற் போய்ச் சேர்ந்தார்கள்; (எ-று,)*

*'ஆதபனொளித்ததிசைஒளிசிவந்தது' என்றது, சூரியாஸ்தமன காலத்தில் தோன்றுஞ் செவ்வானத்தை. இரத்தத்துக்கும் நெருப்புக்கும் உவமை செந்நிறம்பற்றியது. மாநிலம்முழுவதும் குருதிமெத்துகையினாற் சிவந்தது என்றது - **பிறிதின்குணம்பெறலணி.** அங்ஙனம் சிவந்த நிலத்தைக் கடையினேறு அனலியொத்ததென வருணித்தது - **தன்மைத்தற்குறிப்பேற்றவணி** யாம். படைவீடு நகரம்போலப் பல பிராணிகள் ஒருங்குதிரண்டு வசிக்கும்படி விசாலமாக ஒழுங்குபட அமைக்கப்பட்டுள்ள தென்ற சிறப்பு விளங்க, 'பாடிநகர்' என்றார்; ஸ்ரீவேதவியாசரும் படைவீட்டுக்கு அஸ்தினாபுரியை உவமை கூறியுள்ளார். திசையோ, ஓ - பிரிநிலை. ஏது இன்மை - யாதொருசம்பந்தமுமில்லாமையென அயலையுணர்த்திப் பகையைக் குறிக்கும். ஒளியும் இருளும் ஒன்றுக்கொன்று மாறுபாடுடைய தாதலால், 'ஏதிலிருள்' எனப்பட்டது. "கோறல், பிறவினை யெல்லாந் தரும்" என்பவாகலின், 'பாதகமிகுத்த கொலை' என்றது. **பி-ம்:-** கடலினேறனலி. (108)*

### *32.-சூரியோதயவருணனை.*

**கூளிகள்செ ருக்கிநட மாடுகளம் விட்டரசர் கோமகனை
யுற்றளவிலேவாளபிம னுக்குமொரு தேர்விசய னுக்குநம்வ ரூதினிபுறக்கி
டுவதே
நாளைமுது கிட்டவரை யாருயிர்செ குத்திடுவ னானெனவு
ரைத்த னனிரா
மீளவுமு தித்தனன்வி ரோசனன்மு தற்பகலில் வீரர்வி றலைக்க
ருதியே.**

*(இ - ள்.) கூளிகள் - பெருங்கழுகுகள் [அல்லது பேய்கள்], செருக்கி - (மிக்கதசையாகிய நல்லுணவு தமக்குக் கிடைத்ததனால்) மிகக்களித்த, நடம் ஆடு - கூத்தாடப்பெற்ற, களம் - போர்க்களத்தை, விட்டு - நீங்கி, அரசர் - (கௌரவசேனையின்) அரசர்கள், கோமகனை-இராசராசனான துரியோதனனை, உற்றஅளவில்-சேர்ந்தவளவில்,- (அவன் அவரைநோக்கி), 'வாள் அபிமனுக்குஉம் - ஆயுதப்பயிற்ச்சியையுடைய அபிமந்யுவுக்கும், ஒரு தேர் விசயனுக்கு உம் - ஒருதேரையுடைய அருச்சுனனுக்கும், நம்*
*வரூதினி - நமதுசேனை, புறக்கு இடுவதுஏ - பின்னிடுவதா? நாளை முதுகிட்டவரை- நாளைக்கு யாவராயினும் புறங்கொடுப்பராயின் அவரை, நான்-, ஆர் உயிர்செகுத்திடுவன் - கொல்வேன்.' என- என்று, இரா- அவ்விராத்திரியில், உரைத்தனன் -கூறினான்; (பின்பு), விரோசனன் - சூரியன், முதல் பகலில் வீரர் விறலைகருதி-முந்தினநாளில் (காட்டிய) அபிமன்யு அருச்சுனன் என்ற இவ்வீரரின் போர்த்திறத்தை(ப்பார்க்க) எண்ணி, மீளஉம் உதித்தனன் - மீண்டும் தோன்றினான்;(எ-று.)*

*நான்காமடி- **ஏதுத்தற்குறிப்பேற்றம்.** புறங்கொடுத்தலில் சேனை வீரர்க்கு அச்சமுண்டாக்குதற்பொருட்டு, துரியோதனன், இங்ஙனம் கூறினான்; அவர்கள் புறங்கொடுப்பது உயிராசைபற்றியே யாதலால், அதுஒழியுமாறு கூறியது. இதற்கு - வெவ்வேறுவகையாகப் பொருளுரைப்ப தெல்லாம் சுற்றுவழியாதலின், பொருந்தா தென விடுக்க. முதற்பகலில் வீரன்விறலைக் கருதி யென்றபாடத்திற்கு, வீரன் - அருச்சுனனென்க: இனி, முன்னாளில் துரியோதனன் சொன்ன பௌருஷத்தை (மறுநாள்பார்க்க) எண்ணி யென்றும் உரைக்கலாம். புறக்கிடுவதே என்ற ஏகாரம்- வினாவகையாற் சிறிதுந் தகுதியன் றென இழிவை விளக்கும். நாளைமுதுகிட்டவர்- இயல்பு பற்றி, எதிர்காலம் இறந்தகாலமாகச் சொல்லப்பட்ட **காலவழுவமைதி.** விரோசநன்-வடசொல்; விசேஷமாக விளங்குபவ னென்றுபொருள். **பி-ம்:-** உரைத்தனனரோ. (109)*

### *இரண்டாம் போர்ச்சருக்கம் முற்றிற்று.*

*-----*

## *மூன்றாம் போர்ச்சருக்கம்.*

### *1.-கடவுள் வாழ்த்து.*

**தந்த முறியி லவர்வைத்த தயிர்பால் வெண்ணெ யெட்டாமற்**
**குந்தி யுரலின் மிசையேறி யிளங்கோ வியர்முன் கூத்தாடி**
**நந்தன் மனையி லசோதையிரு நயனங் களிக்க விளையாடு**
**மைந்த னிருதா ளொருநாளு மறவா தாரே பிறவாதார்.**

*(இ - ள்.) தம் தம் உறியில்-தங்கள் தங்கள் உறிகளின்மேல், அவர் வைத்த- அந்தந்த ஆயர்மகளிர் வைத்திட்ட, தயிர் பால் வெண்ணெய்-தயிரும் பாலும் வெண்ணெயும், எட்டாமல் - (குழந்தைப்பருவமுள்ள தனக்கு) எட்டாமையால், உரலின்மிசை குந்தி ஏறி-உரலின்மேலிருந்து ஏறி, இள கோவியர் முன் கூத்து ஆடி-இளமைப்பருவமுடைய கோப ஸ்திரீகளின் எதிரில் (பலவகை) நடனஞ்செய்து, நந்தன்மனையில்-நந்தகோபரதுவீட்டிலே, அசோதை இரு நயனம் களிக்க - யசோதைப்பிராட்டியின் இரண்டு கண்களும் (கண்டு) களிக்கும்படி, விளையாடும்- விளையாடின, மைந்தன்- இளம்பிராய முடையனான கண்ணனது, இரு தாள்- உபயதிரு வடிகளை, ஒரு நாள்உம் மறவாதார்ஏ-ஒருபொழுதும் மறவாதவர்களே, பிறவாதார்- பிறப்பில்லாதவராவர்; (எ - று.)*

*ஒருநாளும் மறவாதார்-இடைவிடாதுதியானிப்பவரென்றபடி. "பிறவிப் பெருங்கடனீந்துவர் நீந்தா, ரிறைவ னடிசேரா தார்" என்றபடி எம்பெருமானை இடைவிடாதுதியானிப்பவர்க்குப் பிறவியறுதலும் அங்ஙனம் தியானியாதவர்க்குப் பிறவியறாமையுமாகிய இரண்டும் நியமமாதலால், 'மறவாதாரே பிறவாதார்' எனக் கூறினார்.பிறவாதா ரென்றதனால், பிறப்பற்றுக் கருமசரீரமொழிந்து திவ்வியசரீரம் பெற்றுமீளாதமுத்தியுலகஞ் சேர்ந்து நிரதிசயவின்ப மடைந்து அங்கு என்றும் ஒருபடிப்படவாழ்வரென்பதாம். '**செய்யுட் கேற்புழி**" என்றதனால், அவர் என்னுஞ்*

*சுட்டுப்பெயர்கோவியரென்னும் இயற்பெயரின்முன் வந்தது. வெண்ணெய்= வெள்நெய் - உருக்காதநெய். பசுக்களைக் காப்பவனென்ற காரணத்தால், இடையனுக்கு -வடமொழியில் 'கோபன்' என்று பெயர்; அதன்பெண்பாலான கோபீ யென்பதுவிகாரப்பட்டு, கோவியென்று ஆகி, பின்பு பலர்பால்விகுதியேற்றுக் கோவிய ரென்றுநின்றது. நந்தன் என்ற வடசொல்லுக்கு - ஆனந்த முடையவனென்றும், யஸோதாஎன்ற வடசொல்லுக்கு - (தனது நற்குணநற்செய்கைகளால் தான் பிறந்த குலத்துக்கும்புகுந்தகுலத்துக்கும்) புகழைத் தருபவ ளென்றும் பொருள். மைந்தன் - அழகனும்,மிடுக்கனுமாம்.'அசோதையிரு நயனங்களிக்க விளையாடும் மைந்தன்' என்ற விடத்து,'முழுதும் வெண்ணெய் அளைந்து தொட்டுண்ணும்' என்ற பெருமாள்திருமொழிப்பாடலும் 'ஏரார்ந்தகண்ணி யசோதை' என்ற திருப்பாவைத் தொடர்க்குவியாக்யாநமும் நினைக்கத்தக்கது. ஒருநாளும் என்ற உம்மை - இழிவுசிறப்பு. ஏகாரம்- பிரிநிலை.*

*வடமதுரைக்குச் சமீபத்திலுள்ள கோகுலபிருந்தாவனமெனப்படுகிற திருவாய்ப்பாடியிலுள்ள இடையர்களுக்கெல்லாந் தலைவர் நந்தகோபரும், அவரது மனைவி யசோதையு மாவர்; இவர்கள், கண்ணனை வளர்த்த தந்தைதாயர். வசுதேவரும் தேவகியும் கம்சனால் சிறையிலிருத்தப்பட்டுத் தளை பூண்டிருக்கையில் திருமால் தேவகியினிடம் எட்டாவது கருப்பத்திற் கண்ணனாய் அவதரிக்க, அக்குழந்தையைக் கம்சன் வழக்கப்படி கொன்றுவிடக் கூடுமென்கிற அச்சத்தால் தாய்தந்தையர் அத்தெய்வக்குழவியின் அனுமதிபெற்று அந்தச்சிசுவை அதுபிறந்த நடுராத்திரியிலேயே நந்தகோபரது திருமாளிகையிலே இரகசியமாகக்கொண்டு சேர்த்துவிட்டு அங்கு அப்பொழுது யசோதைக்கு மாயையின் அம்சமாய்ப் பிறந்திருந்ததொருபெண்குழந்தையை யெடுத்துக்கொண்டுவந்து விட, அதுமுதல் கம்சனைக்கொல்லுகிறவரையில் இளம்பருவத்திலெல்லாம் கண்ணபிரான் அவ்வாய்ப்பாடியிலேயே பலவகைத் திருவிளையாடல்கள் புரிந்து வளர்ந்தருளின் ரென்பது* **வரலாறு.**

*இது முதற் பதின்மூன்று கவிகள் - மூன்று ஆறாஞ் சீர்கள் காய்ச்சீர்களும், மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய* ***அறுசீராசிரிய விருத்தங்கள்.*** *(110)*

### *2.-இருதிறத்தவரும் படைகளை வியூகமாக வகுத்தல்.*

**ஏலாவமரின்மூன்றாநாளிரண்டுபடையுந்திரண்டேறக்**
**காலார்திண்டேர்வீடுமனும்வகுத்தான்கடுங்காருடயூகம்**
**மேலாம்வென்றிப்பாண்டவர்தம்வெஞ்சேனையைக்கொண்டெஞ்சாமற்**
**றோலாவர்த்தசந்த்ரப்பேர்வியூகம்வகுத்தான்றுளவோனே.**

*(இ - ள்.) அமரின் மூன்றாம் நாள் - யுத்தத்தின் மூன்றாவது தினத்தில் இரண்டு படைஉம் - இருதிறத்துச்சேனைகளும், திரண்டு - (தம்மிற்) கூடி, ஏலா - எதிர்க்க, ஏற - (போர்க்களத்தே விரைந்தே) செல்ல,- கால் ஆர் திண் தேர் வீடுமன்உம் - சக்கரங்களமைந்த வலிய தேரையுடைய பீஷ்மனும், கடு காருடயூகம் வகுத்தான் - பயங்கரமான கருடவியூகமாக(த் தன் சேனையை) அணிவகுத்தான்; துளவோன் - திருத்துழாய்மாலையை யுடைய கண்ணன்,- மேல் ஆம் வென்றி பாண்டவர்தம் வெம் சேனையை கொண்டு - மேன்மையான வெற்றியையுடைய பாண்டவர்களது உக்கிரமான சேனையைக்கொண்டு, எஞ்சாமல் - (வீடுமனுக்குக்) குறையாமல், தோலா அர்த்த சந்த்ரம் பேர் வியூகம் வகுத்தான் - தோல்வியடையாதஅர்த்தசந்திரமென்னும் பெயருடைய வியூகத்தை அமைத்தருளினான்; (எ-று.)*

*கருடவடிவத்தின் வாயிடத்தில் வீடுமனும், கண்களில்துரோணனும் கிருதவர்மாவும், சிரசில் அசுவத்தாமனுங் கிருபனும், கழுத்தில் பூரிசிரவன் சலன் சல்லியன் பகதத்தன் ஜயத்திரதன் என்பவரும், புறத்தில் தம்பிமாருடன் துரியோதனனும், வாலில் விந்த அநுவிந்தரும், வலச்சிறகில் மாகதருங்கலிங்கரும், இடச்சிறகில் பிருகத்பலனும் காரூசரும் மற்றும் பலவீரர் சூழ இருந்தன ரென்றும்; அர்த்தசந்திரவடிவத்தினது தென்கோட்டில் பீமசேனனும், வடகோட்டில் அருச்சுனனோடிகூடிய கண்ணனும், மத்தியத்தில் விராடன் துருபதன் திருஷ்டகேது திருஷ்டத்யும்நன்*

*சிகண்டி சாத்தியகி உபபாண்டவர் அபிமந்யு கடோத்கசன் என்னும்இவரோடு யுதிட்டிரனும் மற்றும்பலவீரர் சூழ இருந்தனரென்றும் வியாசபாரதத்திற்கூறியுள்ளது. கருடனது வடிவம்போலப் படைவகுக்கப்படுவது காருடவியூகமும்,பாதிச் சந்திரனது வடிவம் போலப்படைவகுக்கப்படுவது அர்த்தசந்திரவியூகமுமாம்.கருட சம்பந்தமானது - காருடம்; தத்திதாந்தம். யூகம் - வடசொற்றிரிபு.திருவள்ளுவர் "கால்வல் நெடுந்தேர்" என்றாற்போல, 'காலார்திண்டேர்' என்றார்;இனி, இத்தொடருக்கு - (வேகத்திற்) காற்றையொத்த வலியதேரென்றும் உரைக்கலாம்.படைவகுப்பது சேனாபதியின் தொழிலாக இருக்கவும் ஸ்ரீகிருஷ்ணனை அர்த்தசந்திரவியூகம்வகுத்தானென்றது, அவனது திருவுள்ளத்தையறிந்தே சேனாபதிவியூகம்வகுத்தமையைக் குறிப்பிக்கும். (111)*

*3.-இருதிறத்துச்சேனைகளும் பொரத்தொடங்குகையில்,<br>பலபோர்ப்பறைகளும் முழங்குதல்.*

***போரேதொடங்கியிருபடையும் புகுந்தபொழுதிலுகந்தொலைத்த<br>காரேதொடங்கிக்கார்கோள்வெங்கடுங்கால்கலிகொண்டார்ப்பனபோல்<br>வாரேதொடங்கும்பணைக்குலமு மணிக்காகளமுமுடன்முழங்கப்<br>பாரேதொடங்கியெவ்வுலகு மடைவேசெவிடுபட்டனவே.***

*(இ - ள்.) இரு படைஉம் - இருத்திறத்துச்சேனையும், போர் தொடங்கி - யுத்தத்தைச்செய்யத்தொடங்கி, புகுந்த பொழுதில்-(போர்க்களத்தில்) அடைந்தபொழுது,-உகம்தொலைத்த - கல் பாந்தகாலத்தில் (உலகத்தை) அழிக்கலுற்ற, கார் தொடங்கி -மேகம்முதலாக, கார்கோள் - கடல்களும், வெம் கடுகால்- கொடிய சண்டமாருதமும்,கலி கொண்டு ஆர்ப்பன போல்- முழக்கத்தைக் கொண்டு ஆரவாரிப்பனபோல, வார்தொடங்கும் பணை குலம்உம்- தோற்கயிற்றாற்கட்டப்பட்ட பறைகளின் கூட்டமும்,மணி காகளம் உம் - அழகிய எக்காளமென்னும் வாத்யவிசேஷமும், உடன் முழங்க- ஒருங்குஒலிக்க, (அதனால்), பார் தொடங்கி எ உலகு உம்-பூமிமுதலாகஎல்லாவுலகங்களிலுமுள்ள பிராணிகளும், அடைவுஏ செவிடு பட்டன- முறையேசெவிடாய்விட்டன; (எ - று.)- ஏகாரங்கள் ஆறும் - அசைநிலை.*

*உகந்தொலைத்த காரே தொடங்கிக் கார்கோள்வெங்கடுங்கால் கலிகொண்டார்ப்பனபோல் என்பதற்கு - சர்வசங்காரகாலத்தில் அனைத்தையும் அழித்தற்பொருட்டு இடைவிடாப்பெருமழை பொழியும் மேகம் முதலாக ஒருங்குபொங்கியெழும் கடல் இடையாக மிகக்கொடிதாகவீசும் பெருங்காற்று இறுதியாக உள்ள மூன்றுபொருள்களும் முழங்கிப் பேராரவாரத்தை விளைப்பன போலவென்று கருத்து. அளவிறந்த ஓசையைக் கேட்டால் காது செவிடாம்: அன்றியும், உலகத்தில் எங்கும் ஒருவர்பேசும்பேச்சு மற்றவர்க்கு இப்போரவாரத்தால் கேட்கவில்லையென்ற கருத்துங் கொள்ளலாம். பல பிராணிகள் அழியுங் கால மாதலின், கல்பாந்த காலத்தை உவமைகூறினது ஏற்கும். கடலினின்று மேகத்தால் (நீர்)கொள்ளப்படுவதால், கடலுக்குக் கார்கோள் என்று பெயர்; 'கார்முகக்கப் படுதலின்,கடல் **கார்கோள்** என்று பெயர்பெற்றது; ஆகுபெயர்' என்பர் நச்சினார்க்கினியர்.தொடக்குதல் - கட்டுதல்: இது - மூன்றாமடியில் எதுகை நயம்நோக்கித் தொடங்கும்என மெலிந்தது. காகளம் - சிறுசின்னம்; இது - இடைக்குறைவிகாரமாய்க்காளமெனவும் வழங்கும். உகம் - யுகமென்னும் வட மொழித் திரிபு; இது -இலக்கணையாய், யுகமுடிவையுணர்த்தி, இங்கே, கால்பாந்தகாலத்துக்கு வந்தது. (112)*

*4.-வீடுமன் துரோணன்முதலியோர்,<br>ஸ்ரீக்ருஷ்ணனுடனே அருச்சுன வபிமன்யுஇவர்களை வளைத்தல்.*

***சொல்லார்கேள்விக்கங்கைமகன் றுரோணன்முதலாமதிரதரு<br>மெல்லாரிரதகயதுரங்க மேலாளுடனேகாலாளும்<br>வில்லான்முன்னாட்டமைத்துரந்த வீரன்றனையுஞ்சிறுவனையும்<br>மல்லால்வஞ்சமல்லடர்த்த மாயன்றனையும்வளைத்தாரே.***

*(இ - ள்) சொல் ஆர் - சொற்கள்நிறைந்த, கேள்வி - கேள்விகளையுடைய, கங்கை மகன் - வீடுமனும், துரோணன்*
*துரோணனும், முதல் ஆம் - முதலாகிய, அதிரதர்உம் - அதிரதர்களும், எல் ஆர் -ஒளி நிறைந்த. இரத கய துரங்கம் - தேர்யானை குதிரைகளில், ஏல் - பொருந்தின,ஆளுடனே - வீரர்களொடு, காலாள்உம் - பதாதிவீரர்களும்,- வில்லால் முன் நாள்தமைதுரந்த வீரன்தனைஉம் - வில்திறமையால் முந்தினநாளில் [இரண்டாநாட்போரில்]தம்மைத் துரத்திய வீரனான அருச்சுனனையும், சிறுவனைஉம் - அருச்சுனன்மகனான அபிமன்னுவையும், (அருச்சுனனுக்குப் பாகனாகவுள்ள), மல்லால் வஞ்சம்மல் அடர்த்த மாயன்தனைஉம் - இளம்பருவத்திலே மற்போரால்வஞ்சனையையுடைய மல்லர்களை அழித்த ஆச்சரியகசக்தியையுடையகண்ணபிரானையும், வளைத்தார் - சூழ்ந்துகொண்டார்கள்; (எ - று.)*

*துரோணகும்பத்தில் [பதக்களவுகொண்ட பாத்திரத்தினின்று] பிறந்தமைபற்றி, துரோணன் என்று பெயர்; துரோணம்-பதக்கு: இனி, துரோணமென்று வில்லுக்குப் பெயருண்மையால், வில்வன்மைபற்றிவந்த பெய ரென்னவுமாம். கஜம் - கயமென மொழியிடையில் ஜகரம் யகரமாயிற்று. ஏலாள் - வினைத்தொகை; ஏலுதல் - பொருந்துதல். மேலாள் எனப் பதம்பிரித்து உரைத்தல் மோனைத்தொடைக்குச் சிறவாதாம். மல்-மல்லர்க்குத் தொழிலாகுபெயர். கம்ஸசபையிற் கிருஷ்ணபலராமர் செல்லுகையில், அவனால் வஞ்சனையாக ஏவப்பட்ட சாணூரன் முஷ்டிகன் முதலிய பெருமல்லர்கள் சிலர் வந்துஎதிர்த்து உக்கிரமாகப் பெரும்போர்செய்ய, அவர்களையெல்லாம் இவ்யாதவவீரர் இருவரும் மற்போரினாலேயே கொன்று வென்றிட்டன ரென்பது* ***கதை. பி - ம்:*** *வீரன்றனையுஞ் சிறுபதத்தே. (113)*

### *5.-துரியோதனன்முதலியோர் வீமனை வளைத்தல்.*

***சூரர்க்கெல்லாமுதலெண்ணுந் துரியோதனனுந்தம்பியரு***
***மாரக்கவிகைக்காந்தாரன் முதலாவுள்ளவவனிபருஞ்***
***சேரத்திரண்டுகரிகளொரு சிங்கம்வளைத்ததெனச்சிங்க***
***வீரத்துவசனின்றுழிப்போய் வளைத்தார்சமரம்விளைத்தாரே.***

*(இ - ள்.) சூரர்க்கு எல்லாம் முதல் எண்ணும் துரியோதனன் உம் -எல்லா வீரர்களுக்கும் முதலிலெண்ணப்படுகிற துரியோதனனும், தம்பியர் உம்- (அவனது) தம்பிமார்களும், ஆரம் கவிகை- முத்துக்களாலாகிய குடையையுடைய, காந்தாரன் முதல் ஆ உள்ள அவனிபர்உம் - காந்தாரதேசத்தரசனான சகுனி முதலாகவுள்ள அரசர்களும், சேர திரண்டு - ஒருசேரக்கூடி, கரிகள் ஒரு சிங்கம் வளைத்தது என -பலயானைகள் ஒரு சிங்கத்தைச் சூழ்ந்ததுபோல, சிங்கம் வீரம் துவசன் நின்ற உழிபோய் வளைத்தார் - சிங்கத்தின் வடிவத்தையெழுதின வீரத்தன்மைக்கு அறிகுறியானகொடியையுடைய வீமசேனன் நின்றவிடத்திற் சென்று அவனைச் சூழ்ந்துகொண்டு,சமரம் விளைத்தார் - போரைச் செய்தார்கள்; (எ - று.)*
*வீமனது எளிதில் வெல்லு மாற்றலுக்கும், அவன்முன் பகைவரது வீரமின்மைக்கும் ஏற்ற உவமை கூறினார். சூரர்க்கெல்லாம் முதலெண்ணும்- சூரர்களெல்லாருள்ளுஞ்சிறந்த வென்றபடி. தம்பியர் - துச்சாதனன் முதலியோர். ஆரம் - ஹாரம்:* ***பி-ம்:-*** *காந்தாரர். (114)*

### *6.-இருதிறத்துப்பெருவீரருஞ் செய்த கடும்போர் வருணனை.*

***வரத்தான்மறையாற்றாம்பெற்ற வரிசாபங்கள்பிடித்ததனிக்***
***கரத்தான்மறைந்தவரவர்தங் கடைக்கண்படைக்கண்விரைந்துவிடுஞ்***
***சரத்தான்மறைந்ததகல்வானந் தரணிதலமச்சரந்துணித்த***
***சிரத்தான்மறைந்ததுகுருதிச் சேற்றான்மறைந்ததிசைநான்கும்.***

*(இ - ள்.) வரத்தால் - (தேவர்கள் முதலியோர் தந்தருளிய) வரத்தினாலும், மறையால் - மந்திரத்தாலும், தாம் பெற்ற - தாங்கள் பெற்றுக்கொண்டுள்ள, வரி சாபங்கள் - கட்டமைந்த விற்களை, பிடித்த - உறுதியாக ஏந்தியுள்ள, தனி கரத்தால்- ஒப்பற்ற கையினால், அவர் அவர்தம் கடைக்கண் - அந்தந்தப் போர்வீரரதுகண்ணின்கடை, மறைந்தது-; படைக்கண் - (வில்லாகிய அந்த)*

*ஆயுதத்தில்,விரைந்துவிடும் - துரிதமாகப் பிரயோகிக்கிற, சரத்தால் - அம்புகளினால், அகல்வானம் - பரந்த ஆகாயம், மறைந்தது-;அ சரம் - அந்த அம்புகள், துணித்த -அறுத்துத்தள்ளிய, சிரத்தால் - (பகைவர்கள்) தலைகளால், தரணி தலம் -பூமியினிடம், மறைந்தது-; உகு - (அத்தலைகளினின்று) பெருகிய, குருதி சேற்றால் -இரத்தக்குழம்பினால், திசை நான்கு உம் - நாற்றிசைகளும், மறைந்த - மறைந்தன;(எ - று.)*

*அப்பொழுது போரில் வீரர்பலர் தாம் வரமாக அஸ்திரப்பிரயோகத்துக்கு உரியமந்திரத்தோடு பெற்றுள்ள விற்களைத் தந்தங்கையில் ஏந்தித்தம்தம் கண்ணுக்குநேராகமுன்னேபிடித்து அவற்றில் அளவிறந்த அம்புகளைத்தொடுத்து அவற்றால் எதிரிகள்தலைகளைவீழ்த்தி எங்கும் இரத்தமயமாக்கின ரென்பதாம். மறையால் என்பதற்கு -தக்கமந்திரத்தை ஜபித்த பலத்தால் என்றும், மந்திரோபதேசத்தோடு என்றுங் கருத்துக்கொள்ளலாம். ஒவ்வொருவர்க்கும் அநேகஞ் சிறந்த விற்கள் உண்மை தோன்ற,'சாபங்கள்' எனப் பன்மையாற் கூறினார். கடைக்கண் - கண்கடை: முன்பின்னாகத்தொக்க ஆறாம்வேற்றுமைத் தொகை: இலக்கணப்போலி.படையென்னும்பொதுப் பெயர் - இங்கே சிறப்பாய் வில்லையுணர்த்தி, சுட்டுப்பெயர்மாத்திரமாய் நின்றது. மறைந்த-முற்று.* ***பி-ம்:-*** *திரைநான்கும். (115)*

*7.-கடோற்கசனம்புகளால் துரியோதனன் பிரஜ்ஞையற்று விழுதல்.*

***துவசம்பிளந்துதேரூருந் துரகம்பிளந்துசுடர்மணிப்பொற்***
***கவசம்பிளந்துமார்பகமும் பிளந்தூடுருவக்கடோற்கசன்றான்***
***நவசந்திரமாமுனைவாளி தொடுத்தான்றொடுத்தநாழிகையின்***
***அவசம்பிறந்துதம்பியர்முன் விழுந்தானொருவர்க்கழியாதோன்.***

*(இ - ள்.) (அப்படிப்பட்ட கடும்போரில் துரியோதனனது), துவசம் - கொடியை,பிளந்து-, தேர் ஊரும் துரகம் - இரதத்தைச் செலுத்துங் குதிரைகளை, பிளந்து-, சுடர்மணி பொன் கவசம் - விளங்குகிற இரத்தினங்களைப் பதித்ததும் பொன்னாலாகியதுமான கவசத்தை, பிளந்து -, மார்பு அகம்உம் - மார்பினிடத்தையும்,பிளந்து-, ஊடு உருவ - உள்ளே நுழைந்துசெல்லும்படி, கடோற்கசன்-, நவ சந்திரன்மா முனை வாளி - புதுமையான (பாதிச்) சந்திரன் வடிவமான பெரிய [சிறந்த]கூர்நுனியையுடைய அம்புகளை, தொடுத்தான்-; தொடுத்த நாழிகையின் -பிரயோகித்த மாத்திரத்தில், ஒருவர்க்கு அழியாதோன் - எவர்க்குந்தோலாதவனானதுரியோதனன், அவசம் பிறந்து - (தன்வசந்தப்பிப்) பரவசமாய் [மூர்ச்சித்து என்றபடி],தம்பியர் முன் - தம்பிமார்களெதிரில், விழுந்தான்-; (எ - று.)*

*தம்பிமார் பலர் அருகிலிருந்தும் அவன் இப்படி பங்கப்படலாயிற்றென்ற இழிவுதோன்ற, 'தம்பியர்முன் விழுந்தான்' என்றார். சந்திரவாளி- அர்த்த சந்திரபாணம்;பிறைமுகவம்பு எனவும்படும். நவ - ஒன்பது, வாளி எனினும் அமையும். நாழிகையென்னுஞ் சிறப்புப்பெயர், இங்கே பொதுவாய்க் காலமாத்திரத்தை யுணர்த்திற்று.ந+வசம்=அவசம். அவசம் பிறந்து - தன்வசமில்லாமை யுண்டாய்; மெய்ம்மறந்து:வசம்-சுவாதீனம். கடோற்கசன் என்னும் வடமொழிக்கு - குடம்போலும் பெரியமயிர்முடியுடையவ னென்று காரணப்பொரு ளுரைப்பர்; கட உத்கசம் அன்னனப்பிரியும்: கடம் - குடம், உத் - அதிகம், கசம் - மயிர்முடி. (116)*

*8.-அப்போது அபிமன்யு துரியோதனனுடைய பாகனை மாய்த்தல்.*

***நாகந்துவசமெனவுயர்த்தோ னடுங்காமுன்னநண்ணலரை***
***மாகந்தனிற்சென்றமர்கடந்து வருமைந்துடையோன்றிருமைந்தன்***
***வேகம்படநின்றொருசமர வேலான்மீண்டுமவ்வேந்தன்***
***பாகன்றனதுமருமத்திற் பாய்ந்தானவனுமாய்ந்தானே.***

*(இ - ள் ) நாகம் துவசம் என உயர்த்தோன் - பாம்பைக் கொடியாக உயரத்தில் தூக்கியுள்ள துரியோதனன், நடுங்கா முன்னம் - (இவ்வாறு கடோற்கசனம்பினால்) சோர்தற்கு முன்னே,*

*நண்ணலரை மாகந்தனில் சென்று அமர்கடந்து வரு மைந்து உடையோன் திரு மைந்தன் - (தேவர்களுக்குப்) பகைவர்களான நிவாதகவச காலகேயர்களைப் பெரிய ஆகாய மார்க்கத்திற் போய்ப்போரில்வென்றுவந்த வலிமையையுடைய அருச்சுனனது சிறந்த குமாரனான அபிமந்யு. வேகம் பட நின்று - விரைவாக (எதிரில் வந்து) நின்று, ஒரு சமரம் வேலால் - போருக்குரிய ஒரு வேலாயுதத்தால், மீண்டும்-, அ வேந்தன் பாகன் தனது மருமத்தில் பாய்ந்தான்- அத்துரியோதனராசனுடைய தேர்ப்பாகனது மார்பில் எறிந்தான்; (எறியவே), அவன்உம் மாய்ந்தான் - அந்தச்சாரதியும் இறந்தான்; (எ-று.)*

*துரியோதனனைத் தேற்றுதற்குப் பாகனது துணையும் இல்லை யானதை இதில் தெரிவித்தார். நண்ணலரை மாகந்தனிற் சென்று அமர்கடந்து வரு மைந்துடையோன் திருமைந்தன் என்பதற்கு - (இந்திரனாலேவப்பட்டுப்) பகைவர்களாய் வந்து துரியோதனாதியர்களைக் கட்டித் தூக்கிக்கொண்டு போன சித்திரசேனன் முதலியவர்களைப் பெரிய வானத்திற் பாய்ந்து போரில் வென்று வந்த வலிமையையுடையனான வீமசேனனது சிறந்தகுமாரனாகிய கடோத்கச னென்று உரைப்பினும் அமையும். மீண்டும்-துரியோதனனைக் கடோற்கசன் வீழ்த்தினதல்லாமல்என்றபடி. நண்ணலர் - பொருந்தவர்: பகைவர். மாகம்=மஹா*

***கம்:*** *வடசொல்.வேகம்படப் பாய்ந்தான் என இயைப்பினுமாம். (117)*

### *9.-துரியோதனன் சோர்ந்துவீழ்ந்தமைகேட்டு வீடுமன் அருச்சுனனைவிட்டு அங்கு எழுதல்.*

**விழுந்தான்வேலாற்றேர்ப்பாகன் வெஞ்சாயகத்தால்விறல்வேந்தர்**
**தொழுந்தாளரசன்றானுமுயிர் சோர்ந்தானென்னுந்தொனிகேட்டுச்**
**செழுந்தார்வாகைவிசயனையுந் திருமாலையும்விட்டொருமுனையா**
**யெழுந்தான்மந்தாகினிமைந்தனிலைந்தார்தமக்கோரெயில்போல்வான்.**

*(இ - ள்.) தேர் பாகன் - (துரியோதனனது) சாரதி, வேலால் - (பகைவன் எறிந்த)வேலாயுதத்தால் விழுந்தான் - இறந்துவிழுந்திட்டான்; விறல் வேந்தர் தொழும் தாள்அரசன் தான்உம் - வலிமையையுடைய அரசர்கள் பலர் வணங்கும் பாதத்தையுடையதுரியோதனராசனும், வெம் சாயகத்தால் - கொடியபகைவனம்பால், உயிர்சோர்ந்தான்-மூர்ச்சித்தான்,' என்னும்-என்று (சேனைவீரர்) கூவுகிற, தொனி-சத்தத்தை,கேட்டு-, இளைத்தோர்தமக்கு ஓர் எயில் போல்வான் - (போரில்) இளைத்தவர்க்குஒருமதில்போலப் பாதுகாவலாகவுள்ளவனாகிய, மந்தாகினி மைந்தன்- கங்காபுத்திரனான வீடுமன், செழு தார் வாகை விசயனைஉம் திருமாலைஉம் விட்டு -(தன்னா லெதிர்க்கப்பட்டுநின்ற) அழகிய வாகைப்பூமாலையைச்சூடியஅருச்சுனனையும் கண்ணனையும் விட்டுநீங்கி, ஒரு முனை ஆய் எழுந்தான் -ஒரேவேகமாய்ப்புறப்பட்டு (த் துரியோதனனிடம்) வந்தான்; (எ - று.)*

*செழுந்தார்வாகை யென்றது, முந்தினநாளில் வீடுமனாதியோரைவென்ற சயத்தை விளக்குதற்கு. இளைத்தோர்தமக்கோ ரெயில்போல்வான்-இது இங்கே ஸாபிப்பிராய விசேஷணம்:* ***கருத்துடையடைமொழி.*** *ஸாயகம், த்வநி - வடசொற்கள். திருமால் - திருமகளிடத்து மால்கொண்டவனென்க; மால்- ஆசைப்பெருக்கம்: சிறந்தமாயவனுமாம். மந்தாகிநீ - ஆகாச கங்கைக்குப் பெயர். (118)*

### *10.-வீடுமன் துரியோதனன் மூர்ச்சையைத் தெளிவித்தல்.*

**வண்டாரலங்கல்வலம்புரியோன் மார்பந்துளைத்தவாளிவழி**
**கண்டானெடுத்துத்தாழ்ந்ததிருக் கையாலணைத்துக்காற்றேரிற்**
**கொண்டானாவிதருமருந்து கொடுத்தானவனுங்கொடுத்தமருந்**
**துண்டானுண்டகணத்தினின்மீண் டுணர்ந்தானுலகேழுடையானே.**

*(இ - ள்.) (வந்த வீடுமன்)-, வண்டு ஆர் அலங்கல் வலம்புரியோன் மார்பம் துளைத்த வாளி வழி கண்டான் - வண்டுகள் ஒலிக்கப்பெற்ற நஞ்சாவட்டைப்பூமாலையையுடைய துரியோதனனது மார்பை ஊடுருவின அம்புசென்ற வழியைப் பார்த்தான்; தாழ்ந்த திரு கையால் எடுத்து அணைத்து -*

*நீண்டுதொங்குகிற அழகிய (தன்)கைகளால் (அத்துரியோதனனை) எடுத்துத் தழுவி, கால் தேரில்கொண்டான்-சக்கரவலிமையையுடைய (தனது) தேரின்மீது வைத்துக்கொண்டு, ஆவி தரும் மருந்து கொடுத்தான்-உயிரைத் தரவல்ல திவ்விய ஔடதத்தை (அவனுக்குக்) கொடுத்தான்; உலகு ஏழ் உடையான் அவன்உம் - ஏழு தீவுகளாகிய பூமிமுழுவதையும் (தனதாக) வுடையனான அத்துரியோதனனும், கொடுத்த மருந்து உண்டான்-(வீடுமன்) தந்த மருந்தையுட்கொண்டான்; உண்ட கணத்தினில்-உட்கொண்ட அந்த க்ஷணத்தில் தானே, மீண்டு உணர்ந்தான்-மறுபடிஉணர்ச்சிபெற்றான்; (எ - று.)- மூர்ச்சை தெளிந்து முன்போலாயின னென்றபடி.*
*(119)*

### *11.-வீடுமன் துரியோதனனை அணியில்நிறுவியபின் வீமன் முதலியோர் பின்னிடக் கடும்போர்புரிதல்.*

**மன்னன்றனையச்சந்தனுவின் மைந்தன்பெரும்பேரணிநிறுவிப்**
**பொன்னங்குன்றேயிவன்சிலையு மிவனேகாணு புராரியென**
**மின்னுங்கழற்கால்வீமனுடன்வெம் போர்விளைத்துவிடலைபராய்**
**முன்னின்றவரும்பின்னிடத்தன் முனைவாளியினால்வினைசெய்தான்.**

*(இ - ள்.) (இவ்வாறு தேற்றி), மன்னன்தனை - துரியோதனராசனை, அ சந்தனுவின் மைந்தன் - சந்தனுகுமாரனான அவ்வீடுமன, பெரு பேர் அணி நிறுவி-மிகப்பெரிய படைவகுப்பிலே நிறுத்தி, (பின்பு), 'இவன் சிலைஉம் பொன் அம்குன்றுஏ இவன் புர அரிஏ காணும்' என-'இவனது வில்லும் பொன்மயமான அழகியமகாமேருமலையே: இவனும் திரிபுரத்தையழித்திட்ட பரமசிவனே: பாருங்கள்' என்று(தன்வில்லையுந் தன்னையும்பற்றி அனைவருங்) கூறும்படி, மின்னும் கழல் கால்வீமனுடன் - விளங்குகின்ற வீரக்கழலையணிந்த பாதத்தையுடைய வீமசேனனும்,வெம் போர் விளைத்து விடலையர் ஆய் முன்நின்றவர்உம் - (துரியோதனனோடு)கொடியபோரைச் செய்து இளவீரர்களாய் முன்னேநின்ற கடோற்கசனும்அபிமந்யுவம், பின் இட - புறங்கொடுக்கும்படி, தன் முனைவாளியினால் வினைசெய்தான்-தனது கூரிய அம்புகளால் போர்த் தொழிலைப் புரிந்தான்; (எ - று.)*

*நிறுவி, நிறுவு-பகுதி. பெரும்பேர்-சிறப்புணர்த்தும் அடுக்கு; இனி, மிக்க புகழையுடைய வென்றும் உரைக்கலாம். காணும் என்பதை முன்னிலையசையென்றும், தேற்றமென்றும் கொள்ளினுமாம்.*

### *12.-வீடுமன் தருமன்சேனையிற் பலரையும் கொன்றுகொண்டு திரிதல்.*

**மருமங்களினும்புயங்களினும் வதனங்களினுங்கண்களினுஞ்**
**செருமும்படிவெங்கணைமாரி சிந்திச்சிந்திச்சிரந்துணித்துத்**
**தருமன்சேனைப்பரவையெலாந் தானேயாகித்தலைநாளிற்**
**பொருமந்தரமால்வரைபோலத் திரிந்தான் வெம்போர்புரிந்தானே.**

*(இ - ள்.) (வீடுமன்), மருமங்களின்உம்-(எதிரிகளுடைய) மார்புகளிலும், புயங்களின்உம் - தோள்களிலும், வதனங்களின்உம்-முகங்களிலும், கண்களின்உம்- கண்களிலும், செருமும்படி - தைத்து நெருங்கும்படி, வெம் கணை மாரி சிந்தி சிந்தி-கொடிய அம்புமழையை மிகுதியாகப்பெய்து, சிரம் துணித்து-(அவர்கள்) தலைகளையறுத்து, தருமன் சேனை பரவை எலாம்- யுதிட்டிரனது சேனாசமுத்திரம் முழுவதிலும், தான்ஏ ஆகி- தானொருவனேயாய், தலைநாளில் பொரு மந்தரம் மால்வரை போல திரிந்தான்-முன்னொருகாலத்தில் (திருப்பாற்கடலில்) பொருந்திய [கடைந்த] பெரிய மந்தரகிரிபோலச் சுழன்று, வெம் போர் புரிந்தான்-கொடிய போரைச்செய்தான்; (எ-று.)- முதலடியிற்கூறிய நான்கிடமும், அம்பெய்தற்குச் சிறந்தஇலக்குக்களாம். செருமம், செருமு-பகுதி. மர்மம், வதநம், மந்தரம் - வடசொற்கள். (121)*

### *13.-வீடுமன் மும்முரமாகக் கொன்றுகொண்டிருக்கவும், அருச்சுனன் கண்டுங் காணான்போலிருத்தல்.*

***மலையொத் ததிருங் கடகளிறும் வயமா வணியு மான்றேருந்
தொலையத் தொலைய யாவரையுஞ் சுடுவெங் கணையாற்
றுரந்துதுரந்
தலையத் தரங்க மெறிகடல்வாய் வடவா னலம்போ லவனின்ற
நிலையைக் கண்டுங் காணான்போ னின்றான் விசய னிகரில்லான்.***

*(இ - ள்,) மலை ஒத்து அதிரும் கடகளிறுஉம் - மலைபோல நின்று கர்ச்சிக்கும் மதயானைகளும், வய மா அணிஉம் - வலிய குதிரைவரிசைகளும், மான்தேர்உம் - குதிரைகளைப் பூட்டிய தேர்களும், தொலைய தொலைய - மிகுதியாகஅழியும்படி, யாவரைஉம் - (பகைவர்கள்) எல்லோரையும், சுடு வெம்கணையால்துரந்து துரந்து - அழிக்கவல்ல கொடிய அம்புகளால் துரத்தித்துரத்தி, அலையதரங்கம் எறி கடல்வாய் வடவானலம் போல் - அலையும்படி அலைகளைவீசுகிறகடலில் படபாமுகாக்நிபோல, அவன் நின்ற - அவ்வீடுமன் (பாண்டவசேனைமத்தியில்) நின்ற, நிலையை - தன்மையை, கண்டுஉம் - பார்த்தும், நிகர் இல்லான்விசயன் - ஒப்பற்றவனான அருச்சுனன், காணான் போல் நின்றான் - பாராதவன்போல(ப் போர் செய்யாது திகைத்து) நின்றான், (எ - று.)*

*படபாநலம் - வடசொற்றொடர்; கடலினிடையே பெண்குதிரையொன்றின் முகத்தி லுள்ளதும், மழை முதலியவற்றால் வருகிற நீரினால் கடல் பொங்காதபடி அந்நீரை உறிஞ்சுவதும், யுகாந்தகாலத்தில் அங்குநின்று எழுந்து உலகங்களை யொழிப்பதுமாகிய தீ: படபா - பெண்குதிரை; அநலம் - நெருப்பு. நிகரில்லான் காணான்போல் நிற்பதே! என்றபடி இனி, நிகரில்லான் - இகழ்ச்சிக்குறிப்பினதுமாம். (122)*

வேறு.

***14.-வீடுமன் கடும்போர்புரிகையில் பொராதிருந்த அருச்சுனனை
ஸ்ரீ கிருஷ்ணன் சினந்து, சக்கரமெடுத்தல்.***

**கானெரி துற்றென வீடும னிப்படி காதிம லைத்திடவு
மானநி னைத்திலை சாபமெ டுத்திலை வாளிதொ டுத்திலைநீ
யேனிது னக்கென மாயனு ரைத்தவ னேறிர தத்திழியா
வானதெ னக்கினி யாகவெ னத்தினி யாழியெ டுத்தனனே.**

*(இ - ள்.) (அப்பொழுது), 'கான் எரி துற்று என - காட்டில் தீப்பற்றி யெரித்தாற்போல, வீடுமன் இ படி காதிமலைத்திடஉம்-பீஷ்மன் இவ்வாறு தாக்கிப்போர் செய்யவும், நீ-, மானம் நினைத்திலை- மானத்தை(ப் பாதுகாக்க) எண்ணினாயில்லை; சாபம் எடுத்திலை - வில்லை(க்கையில்) ஏந்தினாயில்லை; வாளிதொடுத்திலை - அம்பை யெய்தாயுமில்லை; உனக்கு ஏன் இது - உனக்கு ஏன்இந்தக்குணம்?' என - என்று, மாயன் - கண்ணபிரான், உரைத்து - (அருச்சுனனைநோக்கிச்) சொல்லி, அவன் ஏறு இரதத்து இழியா- அவ்வருச்சுனன் ஏறியுள்ள தேரினின்று (தான்) இறங்கி, இனி எனக்கு ஆனது ஆக என- 'இப்பொழுது எனக்கு ஆனது ஆகட்டும்' என்று கூறி, தனி ஆழி எடுத்தனன் - ஒப்பற்ற (தனக்குரிய சுதரிசனமென்னுஞ்) சக்கராயுதத்தை ஏந்தியருளினான்.*

*இங்ஙனம் செய்தது, எதிர்ப்பவர் இல்லாமல் வீடுமன் மிகுதியாகப் பொருத போரை நோக்கி வரம்புகடந்தெழுந்த ஆவேசத்தாலென்க. **'போரிற்படையெடேன்'**
என்று முன் துரியோதனனுக்குக் கூறியிருந்த சபதம் தவறுதலால், கண்ணன் 'தனக்கு எந்தப்பழி வந்தாலும் வருக' என்று 'ஆன தெனக்கினியாக' என்றான். கீழ்
வாசுதேவனைப்படைத்துணையழைத்த சருக்கத்தில் "போரிற்படையெடா தொழிமின்" என்று வேண்டிய துரியோதனனுக்கு ஸ்ரீகிருஷ்ணமூர்த்தி "நடையுடைப் புரவித் திண்டேர் நானிவற் கூர்வ தன்றி, **மிடைபடையேவிநும்மோ டமர்செயேன்** வேந்த" என்று வாக்குத்தத்தஞ்செய்ததை இங்ஙனந்தவறலாமோ வெனின்;- போரில் ஆயுதமெடுப்பதில்லையென்று கண்ணன் கூறியதைக் கேள்விப்பட்டு வீடுமன் கண்ணனைத் தான் போரில் ஆயுதமெடுப்பிப்பதாகத் துரியோதனனுக்குமுன் பிரதிஜ்ஞைசெய்திருந்தனனாதலால், எம்பெருமான் 'தனதுசபதந் தவறினும் தவறுக; தனது அன்பனாகிய வீடுமனது சபதம் பொய்க்கலாகாது' என்று தன் திருவுள்ளத்தி லெழுந்த*

*திருவருளால் இப்படிச்செய்தான். பரமாத்மாவாகிய கண்ணன் விரதந்தவறினால் அகர்மவசியனும் நிரங்குசஸ்வதந்திரனுமான அவனுக்கு வருவதொருகுற்றமில்லை; ஆத்மகோடிகளில் ஒருவனான வீடுமன் விரதந்தவறினாலோ அத்தீவினையால் மறுமையில் தண்டனைக்கு உள்ளாவன்: ஆதலால், தனது சிறந்தபக்தலும் பரமபாகவதர்களில் ஒருவனாக எண்ணப் படுபவனும்ஆகிய வீடுமனை ஊழ்வினையொழித்துப் பரமபதத்துச் சேர்ப்பிக்க வேண்டு மென்றபெருங்கருணையே இங்ஙனம் வரம்புகடந்ததற்கு ஏற்ற காரணமாம். இதனால், தனதுவாய்மையைத் தவறியாயினும், அடியார்களுக்கு வருகிற ஆபத்தைப் போக்கித்காத்தருளுகிற பகவானது பேரருளுடைமை விளங்குகின்றது.* ***பி-ம்:-*** *மலைத்திடவே.*

*இதுமுதற் பத்துக்கவிகள் - ஈற்றுச்சீரொன்று கூவிளங் காய்ச்சீரும், மற்றையைந்துங் கூவிளச்சீர்களுமாகிய* ***அறுசீராசிரியச் சந்தவிருத்தங்கள்.*** *(123)*

### *15.-அப்போது அருச்சுனன் தொடர்ந்துசென்று போர்புரியாதபடி ஸ்ரீக்ருஷ்ணன்தாளிணை பற்றுதல்.*

***ஆழியெடுத்தனன்வீடுமனைப்பொ ருதாவியழித்திடுவா***
***னூழிமுகக்கனல்போலெழுமப் பொழுதோடியருச்சுனனுந்***
***தாழிதனக்குமுன்வீடுகொடுத்தரு டாளிணையைப்பிடியா***
***வாழியுனக்கிவனோவெதிர்வித்தக மாயவெனத்தொழுதான்.***

*(இ - ள்.) (இங்ஙனம் கண்ணபிரான்), ஆழி எடுத்தனன் - சக்கரத்தை யேந்திக்கொண்டு, பொருது - போர்செய்து, வீடுமனை ஆவி அழித்திடுவான் - பீஷ்மனைக்கொல்லும்பொருட்டு, ஊழி முகம் கனல் போல்-பிரளயகாலத்துத் தீப்போல, எழும் அப்பொழுது-புறப்பட்டுச்சென்ற அந்தச்சமயத்தில், அருச்சுனனும்- ,ஓடி - (அவ்வெம்பெருமானைத் தொடர்ந்து) விரைந்துசென்று, தாழி தனக்கு முன் வீடு கொடுத்தருள் தாள் இணையை பிடியா - தயிர்த்தாழிக்கு முன்னே முத்தியைக்கொடுத்தருளின (அவனது) உபயபாதத்தை(த் தன்கைகளாற்) பிடித்துக்கொண்டு, 'வித்தக - ஞானசொரூபியானவனே! மாய - ஆச்சரியசக்தியுடையவனே! வாழி-வாழ்வாயாக; உனக்கு இவன்ஓ எதிர் - (வரம்பிலாற்றலையுடைய) உனக்கு இவ்வீடுமனோ எதிராவன்?' என-என்று கூறி, தொழுதான்- நமஸ்கரித்தான்; (எ - று.)*

*'அருச்சுனனால் வீடுமனை வெல்லமுடியாமற் போகவே, கண்ணன் தன் சபதந்தவறியாயினும் சக்கரமெடுத்துப் போர்புரியலாயிற்று' என்று தனக்கு உண்டாகும்பெரும்பழிக்கு அஞ்சி அருச்சுனன் கண்ணனைப் போர்புரியாதபடி திருவடிபிடித்துவேண்டுபவனானான். வரையறைகடந்த கண்ணனது பெருங்கருணைக்குக்கண்ணெச்சில்பட்டு ஏதேனுந் தீங்குவிளையுமோ வென்று தன் மனத்தில் திடுக்கென்றுஉண்டான சங்கையால், அந்தத் திருஷ்டி தோஷம் உண்டாகமலிருக்கவேண்டுமென்றுவாழியென வாழ்த்தினான்; இங்ஙனம்பகவானை வாழ்த்துதல், பொங்கும்பரிவையுடைய பெரிய பக்தர்களது மரபு. அதிக விருப்பத்தால்அவசியமில்லாதவிடத்திலும் பயசங்கையுண்டாதல், இயல்பு. இவனோ என்ற ஓகாரம்- இழிவுசிறப்போடு எதிரல்ல னென எதிர்மறையையுங் குறிக்கும்.*

***'தாழிதனக்குமுன்வீடுகொடுத்தருள் தாளிணை' என்பதிலடங்கியசரிதை:-***
*ஒருநாள் கண்ணன் யசோதை பால்கொடாததற்காக வெகுண்டு தயிர்த்தாழிகளை யுடைத்து உருட்டிவிட்டு, அதுகண்டு தன்னை யடிக்கக்கோலெடுத்து வந்த அவளுக்கு அகப்படாதபடி ததிபாண்டனென்பவனது மனையிலே மறைய, அவன் கண்ணனது திருவடித்தாமரைகளைப் பிடித்துக்கொண்டு 'எனக்கு முத்தியளிக்க வேண்டும்' என்ன, கண்ணன் 'தாய் என்னை அடிக்க வருகிறாள்: என் காலை விடு' என்று சொல்ல, அவன் 'நீ எனக்கும் எனக்கு வேண்டிய இருபத்தெட்டுமனையி லுள்ளோருக்கும் எனது தயிர்த்தாழிக்கும் பரமபதம் கொடாயானால், யான் உன்காலைவிடாமல் உன்னையசோதைகையிற் காட்டிக்கொடுப்பேன்' என்று கூற, ஸ்ரீகிருஷ்ணன் உடனேஅவன்*

*வேண்டுகோளின்படியே முத்தியருளிச் சென்றன னென்பது. "பந்தித்தடம்புடைசூழரங்கா ததி பாண்டனுன்னைச், சந்தித்தநாண்முத்தி பெற்றதென்னேதயிர்த்தாழியுமே" என்றார் ஐயங்காரும். (124)*

### 16.-ஸ்ரீக்ருஷ்ணன்ஆயுதமெடுத்தது கண்டு நடுங்கி வீடுமன் தன்தேரினின்றுஇறங்குதல்.

**வாசவன்முற்பெறு காளைதொழத்தொழ மாறுபடச்சினவுங்**
**கேசவனிப்படி மேல்வருகிற்பது கேவலமுற்றுணரா**
**நாசநமக்குறு காலநணித்தென நாடிநடுக்கமுடன்**
**தேசணிபொற்றட மேருவெனத்திரி தேரினைவிட்டிழியா.**

இது முதல் நான்கு கவிகள் - குளகம்.

*(இ - ள்.) முன் வாசவன் பெறு காளை - முன்னே இந்திரன் பெற்ற புத்திரனான அருச்சுனன், தொழ தொழ - மிகுதியாக வணங்கவும், (தணியாமல்), மாறுபட சினவும் - பகைமைதோன்றக் கோபங்கொள்ளுகிற, கேசவன் - கண்ணபிரான், இ படி மேல் வருகிற்பது - இவ்வாறு தன்மீது (எதிர்த்துப் போருக்கு) வருவதை, கேவலம் உற்று உணரா - நன்றாக உற்றுப்பார்த்து அறிந்து,- (வீடுமன்),- நமக்கு நாசம் உறு காலம் நணித்து என நாடி - 'நமக்கு அழிவு நேருங் காலம் கிட்டியது ' என்று ஆலோசித்து, நடுக்கமுடன் - அச்சத்துடனே, தேசு அணி பொன் தட மேரு என திரி தேரினைவிட்டு இழியா - ஒளிபொருந்தின பொன்மயமான பெரிய மேருமலைபோலத் திரிகின்ற தனது இரதத்தை விட்டு இறங்கி, - (எ - று.) - 'இழியா' என்றது, "எனப் பல நாடியுரைத்தனன்" (19) என்பதனோடு முடியும்.*

*உள்ளமும் உடம்பும் நடுங்குதல், அச்சமென்னுஞ் சுவைக்குரிய மெய்ப்பாடாம். வாஸவன் என்னும் வடசொல்லுக்கு-அஷ்ட வசுக்கள் தலைவனென்றும், எல்லா ஐசுவரியமு முடையவ னென்றும் பொருள்; வசு - தேவர்களில் ஓர் இனம்: அல்லது, செல்வம். கேசவன் - பிரமனையும் உருத்திரனையும் தன் அங்கத்திற் கொண்டவ னென்று பொருள்படும்: க - பிரமன், ஈச-சிவன்; "பிறைதங்கு சடையானை வலத்தே வைத்துப் பிரமனைத் தன்னுந்தியிலே தோற்றுவித்து" என்றார் திருமங்கையாழ்வாரும்;இனி, இதற்கு - அழகிய மயிர்முடியையுடையவனென்றும், கேசி யென்னும்அசுரனைக் கொன்றவனென்றும் பொருள்கள் உண்டு. கேவலம் - தனிமையாகஎன்றும், தனது சிறந்த ஞானத்தாலென்றும் பொருள் கொள்ளலாம். நமக்கு -தனித்தன்மைப் பன்மை. (125)*

### 17.-மூன்றுகவிகள்-வீடுமன் கண்ணனைப் பலவாறு துதித்தைக் கூறும்.

***ஆரணகற்பித மாதவவச்சுத வாழியிடைத்துயிலுங்***
***காரணசிற்குண ரூபமலர்க்கொடி காதன்மனத்துறையும்***
***நாரணவற்புத வானவருக்கொரு நாயகநிற்பணியும்***

***வாரணமுத்தி விசாலதலத்திடை வாழ்வுறவைத்தவனே.***

*(இ - ள்.) ஆரணம் கற்பித - வேதங்களிற்கூறிய நியமத்தை யுடையவனே! மாதவ - மாதவனென்னும் பெயரையுடையவனே! அச்சுத - அச்சுதனென்னும் பெயரையுடையவனே! ஆழியிடைதுயிலும் - கடலிலே அறிதுயிலமர்ந்தருளும், காரண - பிரபஞ்ச காரணனே! சித் குண ரூப - ஞானத்தையே குணமாகவும் வடிவமாகவும் உடையவனே! மலர் கொடி காதல் மனத்து உறையும் - செந்தாமரைமலரில் வாழும் பூங்கொடிபோல் மெல்லிய வடிவமுடைய திருமகளது அன்புள்ள மனத்தில் (எப்பொழுதும்) வசித்தருளும், நாரண - நாரயணனென்னும் பெயரையுடையவனே! அற்புத - ஆச்சரியசக்தியுடையவனே! வானவருக்கு ஒரு நாயக - தேவர்கட்கு ஒப்பில்லாத தனிநாயகனே! நின் பணியும் வாரணம் - உன்னைவணங்குவதொரு யானையை, முத்தி விசால*

*தலத்திடை - மோஷமாகிய பெரியஉலகத்தினிடத்தே, வாழ்வு உற - பேரின்பவாழ்க்கையையடையும்படி, வைத்தவனே -சேர்ப்பித்தருளியவனே!(எ-று.)*

*ஆரண கற்பித என்பதற்கு - வேதமந்திரங்களால் (ஓரிடத்து) ஆவாகனஞ் செய்யப்படுபவ னென்றும் பொருள்கொள்ளலாம். மாதவன் - திருமகள்கணவன். அச்சுதன் - தன்னைச்சரணமடைந்தவர்களை நழுவவிடாதவன் அல்லது அழிவில்லாதவன். திருப்பாற்கடலிலும் மற்றைக்கடல்களிலும் பிரளயசமுத்திரத்திலும் எம்பெருமான் பள்ளிகொண்டு யோகநித்திரை செய்தருளுகின்றன னென நூல்கள் கூறும். கொடி - உவமையாகுபெயர். சித்குணரூப, அத்புத, நாயக, வாரணம், முக்திவிஸாலதலம்- வட சொற்கள். ஒருநாயகன் - ஆதிநாயகன். நிற்பணியும் - "நின்னீறியல்பாம்" என்ற விதிக்கு மாறாக னகரந் திரிந்தது; இரண்டாம் வேற்றுமைச்சிறப்புவிதியால். முக்தி - (இவ்வுலகப்பற்றுக்களை) விட்டு அடையுமிடமெனக்காரணப்பெயர்; 'வீடு' என்னுந் தமிழ்ப் பெயரும் இதன்பொருள் கொண்டதே.*

***'வாரணம் முத்திதலத்து வாழ்வுறவைத்தவன்' என்பதிலடங்கியகதை:-***
*இந்திரத்யும்நனென்னும் அரசன் மிக்க விஷ்ணுபக்தியுடையவனாய் விஷ்ணு பூஜைசெய்கையில், ஒரு நாள் - அகஸ்தியமகாமுனிவர் அவனிடம் எழுந்தருள, அப்பொழுது அவன் கருத்து முழுவதையும் திருமாலைப்பூசிப்பதிற் செலுத்தியிருந்ததனால் அம்முனிவர்வருகையை யறியாமல் அவருக்கு உபசாரமொன்றுஞ் செய்யாதிருக்க, அவர் தம்மை அலட்சியஞ்செய்தா னென்று கருதிக் கோபித்து 'நீ யானைபோலச் செருக்குற்றிருந்ததனால், யானையாகக் கடவை' என்று சபிக்க, அங்ஙனமே அவன் ஒரு காட்டில் யானையாகத்தோன்றினனாயினும், முன்செய்த விஷ்ணுபக்தியின் மகிமையால் அப்பொழுதும் விடாமல் நாள்தோறும் ஆயிரந்தாமரை மலர்களைக்கொண்டு திருமாலை அருச்சித்துப் பூசித்துவருகையில், ஒருநாள் பெரியதொரு தாமரைத்தடாகத்தில் அருச்சனைக்காகப்*
*பூப்பறித்தற்குப் போயிறங்கினபொழுது, அங்கே (முன்நீர்நிலையில் நின்று தவஞ்செய்துகொண்டிருந்த தேவலரென்னும் முனிவரது காலைப் பற்றியிழுத்து அதனாற் கோபங்கொண்ட அவரது சாபத்தால்) பெரிய முதலையாய்க் கிடந்த ஹூஹூவென்னுங்கந்தருவன் அவ்யானையின்காலைக் கௌவிக்கொள்ள, அதனை விடுவித்துக் கொள்ளமுடியாமல் கஜேந்திரன் 'ஆதிமூலமே!' என்று கூவியழைக்க, உடனே திருமால் ஸ்ரீகருடவாகனாரூடராய் அங்கு எழுந்தருளித் தமது சக்கரத்தைப் பிரயோகித்து முதலையைத் துணித்து யானையை அதன்வாயினின்றும் விடுவித்து இறுதியில் அதற்கு முத்தியை அருள்செய்தனரென்பது. (126)*

***18. ஆவியழித்தனை தூணிலுதித்தட லாடகனைத்தலைநாண்***
***மாவலியைச்சிறு மாணுருவத்துடன்வார்சிறைவைத்தனையால்***
***ஏவிலரக்கனை வீழவடர்த்தனை யானொரிலக்கெனவோ***
***நீவலியிற்சின மூளுமனத்தொடு நேமியெடுத்ததுவே.***

*(இ - ள்.) தலை நாள் - முன்னொருகாலத்தில், தூணில் உதித்து - ஒரு கம்பத்திலே தோன்றி, அடல் ஆடகனை-வலிமையையுடைய இரணியனை, ஆவி அழித்தனை - உயிர்நீக்கினாய்; சிறு மாண் உருவத்துடன் - சிறிய பிராமசாரி ரூபத்தோடு (சென்று), மாவலியை - மகாபலிசக்கரவர்த்தியை, வார்சிறை வைத்தனை -நீண்டசிறையிலே வைத்திட்டாய்; அரக்கனை - இராக்கதராசனான இராவணனை,வீழ-இறந்துவிழும்படி, ஏவில்-அம்பினால், அடர்த்தனை-அழித்தாய்; நீ - (இப்படிப்பட்ட பேராற்றலையுடைய) நீ, வலியின்-வலிமையொடும், சினம் மூளும் மனத்தொடு - கோபம் பற்றின மனத்துடனும், நேமி எடுத்தது - (போர்செய்தற்குச்) சக்கராயுதத்தைக் கையில் ஏந்தினது, யான் ஓர் இலக்கு எனஓ - நான் (உனக்கு ஏற்ற) ஒரு லக்ஷ்யமென்று கருதியோ? (எ - று.)- ஆல், ஏ - ஈற்றசைகள்.*

*இந்திரன்முதலிய தேவர்களுட்பட மூவுலகத்தாரையும் வென்று அடக்கியாண்ட இரணியன் மகாபலி இராவணன் என்னும் இவரை முன்பு ஒவ்வொரு அவதாரத்தில் தந்திரமாக எளிதில் வென்றுஒழித்த உனது திவ்விய சக்திக்குச் சாதாரண மனிதரில் ஒருவனான யான் சிறிதும் எதிர்த்துப் பொருதற்குஏற்ற இலக்கல்ல னென எம்பெருமானது பெருமையும் தனதுசிறுமையுந் தோன்ற இங்ஙனங்கூறித் துதித்தான் வீடுமனென்க. ஆடகன் - ஹாடகனென்னும் வடமொழித் திரிபு;*
*பொன்னிறமானவனென்று இதற்குப் பொருள்: ஹாடகம் - நால்வகைப் பொன்களுள் ஒன்று;*

*(மற்றவை - கிளிச்சிறை, சாதரூபம், சாம்பூநதம் எனப்படும்.) இரணியன் இரணியகசிபு என்ற பெயர்களுக்கும் பொருள் இதுவேயாதலால், இரணியனை 'ஆடகன்' என்றார்; இரணியம் - பொன். தலைநாள் என்பதை மற்றையவற்றிற்குங் கூட்டுக. மாவலி, உரு, இலக்கு - வடசொற்சிதைவுகள். மாணியென்பது இங்கு விகாரப் பட்டு 'மாண்' என நின்றது. இனி, மாணுருவம் என்பதற்கு - பண்புத்தொகையாக, மாட்சிமைப்பட்ட ரூபமென்று உரைப்பாருமுளர். சிறை - காவலிடம்: பாதாளத்தில் பலிசக்கரவர்த்தியுள்ள விடத்துக்கு விஷ்ணு காவலாக எப்பொழுதும் வாயிலி லிருக்கிறாரென வுணர்க. அதனையே 'மூன்றடி தருகிறோ மென்றாய், கொடுத்தவிரண்டடியொழியமற்றை யோரடி நிலத்தையுந்தாராய்' என்று திருமால் பலியைக் கடன்காரர்க்குரிய சிறையிலே யிட்டதாகக் குறித்தார்: "ஒருகுறளாயிருநிலம் மூவடிமண் வேண்டியுலகனைத்து மீரடியா லொடுக்கி யொன்றுந்,தருகவெனா மாவலியைச் சிறையில் வைத்த தாடாளன்" என்னும் ஆழ்வாரருளிச்செயலை இங்கே யறிக. ஏவில், இல் - ஐந்தனுருபு ஏது. இனி, ஏ வில் எனப்பிரித்து,அம்பையும் வில்லையு முடைய என்றும் பொருள் கொள்ளலாம்.*

***முதலடியிற்குறித்தகதை:-*** *தேவர் மனிதர் விலங்கு முதலிய பிராணிகளாலும், ஐம்பெரும் பூதங்களாலும் தனக்கு மரணமில்லாதபடி அளவற்ற வரங்களைப்பெற்றுத் தேவர்முதலியவர்க்குங் கொடுமை யியற்றித் தன்னையே கடவுளாக வணங்கச் செய்து வந்தவனும், இரணியாக்கனது உடன்பிறந்தவனு மான இரணியன் தன்புத்திரனான பிரகலாதாழ்வான் தன்பெயர் சொல்லிக் கல்விகற்காமல் நாராயணநாமஞ் சொல்லி வரவே அவனைக் கொல்லுதற்கு என்ன உபாயஞ் செய்தும் அவன் பகவானருளால் இறந்திலனாக, இரணியன் மகனைநோக்கி 'நீ சொல்லும் நாராயணனென்பான் எங்குஉளன்? காட்டாய்' என்ன, அப்பிள்ளை "சாணினு முளனோர் தண்மை யணுவினைச் சதகூறிட்ட, கோணினு முளன் மாமேருக் குன்றினுமுள னிந் நின்ற, தூணினுமுள னீசொன்ன சொல்லினு முளன் இத்தன்மை, காணுதி விரைவின்" என்று சொல்ல, உடனே இரணியன் நன்றென்று சினந்து தூணைப் புடைக்க, அதில்நின்றும் பகவான் மனிதரூபமுஞ் சிங்கவடிவமுங் கலந்த நரசிங்கமூர்த்தியாய்த் தோன்றித் திருக்கைந்நகங்களால் அவன்மார்பைப் பிளந்து அழித்திட்டாரென்பது. (127)*

***19. வானரகிற்புகு தாமலெனக்குயர் வானுலகைத்தருவான்***
***நீனினைவுற்றது போனபிறப்பிலென் னீடுதவப்பயனே***
***யானுமினிப்பிற வாமலளித்தரு ளீசவெனப்பரவா***
***ஞானமனத்தொடு நாகுழறப்பல நாடியுரைத்தனனே.***

*(இ - ள்.) வான் நரகில் புகுதாமல் - (மறுமையில் நான்) பெருநரகத்திற் செல்லாதபடி, உயர் வான் உலகை எனக்கு தருவான் - சிறந்த முத்தியுலகத்தை எனக்குக் கொடுத்தருள, நீ நினைவு உற்றது - நீ எண்ணியது, போனபிறப்பில் என்நீடு தவம் பயன்ஏ - முற்பிறப்புக்களில் யான் செய்திருந்த மிகுந்த தவத்தின் பலமேயாம்; (ஆதலால்), ஈச - கடவுளே! யான்உம் இனிபிறவாமல் அளித்தருள் - (எளியவனான) நானும் இனிப் பிறப்பெடுக்காதபடி (அப்பரமபதத்தைத்) தந்தருள் வாய்,என - என்றுசொல்லி, பரவா-துதித்து, ஞானம் மனத்தொடு - தத்துவஞானம்பொருந்திய சுத்தசித்தத்துடனே, நா குழற - (தேகம் பக் திமிகுதியால்பரவசப் பட்டமைபற்றி) நாக்குத் தடுமாற, பல நாடி உரைத்தனன் - (மற்றும்) பல துதிமொழிகளையும் ஆராய்ந்து கூறினான், (வீடுமன்.)*

*எம்பிரானது திருவுள்ளத்துக்கு எதிரானவர் நரகமடைவரென்பதும், எப்படிப்பட்டவராயினும் எம்பிரானாற் கொல்லப்பட்டுவராயின் அவர்செய்த கருமத்துக்கெல்லாம் அக்கொலைமாத்திரமே தண்டனையாய்முடிய அவர்கள் கருமமொழிந்து உடனே முத்திபெறுவ ரென்பதும் ஆகிய நூற்கொள்கைகளைக் கருத்தினுட்கொண்டும், தன்மீது சினந்து எம்பிரான் கையிற் சக்கரமேந்திப் போர்செய்யவந்ததனால் தனக்கு இனி வெகுவிரைவில் அவ்வெம்பிரானால் மரணம்நேர்தல் திண்ண மெனக் கருதியும், இங்ஙனம் வீடுமன் கூறியது. இங்ஙனம் அவனால் அழித்தருளப் பட்டு முத்திபெறுதற்கேற்றதவத்தைத் தான் இப்பிறப்பில் செய்ததில்லை யென்று எண்ணி, 'போனபிறப்பிலென்னீடு தவப்பயனே' என்கிறான். ஏ- தேற்றம். நீடுதவம் - நெடுங்காலஞ்செய்த தவமென்க. இருவினையும் அற்று முத்திபெற்றவர்க்கு மீளவும் பிறப்பெடுத்தல் இல்லை யாதலால், 'இனிப்பிறவாமலளித்தருள்' எனப்பட்டது. யானும் என்ற உம்மை - தனதுதாழ்வைவிளக்குதலால்*

*இழிவுசிறப்பாவதோடு, கீழ்க்கவியில் வந்த இரணியனாதியோரை நோக்குதலால் இறந்ததுதழுவிய எச்சமுமாம். பி - ம் - மாநரகில், யானரகில், நாகுழறிப் பலநாமம். (128)*

### *20. அருச்சுனன்வேண்டுகோளினால் ஸ்ரீக்ருஷ்ணன் தேரின்மீது ஏறுதல்.*

***ஆரியனப்பொழு தாறினனிற்கவு மாடலருச்சுனனுந்***
***தாரவடிக்கணை யாயிரமுய்ப்பதொர் சாபம்வளைத்ததிரா***
***யாரெதிர்நிற்பினும் யாவர்தடுப்பினும் யானினியிப்பகலே***
***சேரமுருக்குவ னேறுகெனத்தன தேர்மிசைபுக்கனனே.***

*(இ - ள்.) அ பொழுது - அவ்வாறு வீடுமன் துதித்த பொழுது, ஆரியன் - யாவரிலுஞ்சிறந்த கண்ணபிரான், ஆறினன் நிற்கஉம் - (கொண்ட கோபந்) தணிந்து நின்றவளவிலே, ஆடல் அருச்சுனன்உம் - வெற்றியையுடைய அருச்சுனனும், தாரை வடிகணை ஆயிரம் உய்ப்பது ஒர் சாபம் வளைத்து அதிரா- ஒழுங்காகவுள்ள கூரிய மிகப்பல அம்புகளை ஒருங்குசொரிவதான ஒப்பற்ற (தனது காண்டீவமென்னும்) வில்லை வளைத்து ஆரவாரஞ்செய்து, 'இனி - இனிமேல், யார் எதிர் நிற்பின்உம் - (எனது) எதிரிலே யார் வந்து நின்றாலும், யாவர் தடுப்பின்உம் - (என்னை) எவர் தடுக்க முயன்றாலும், (சிறிதும் பின்வாங்காமல்), யான்-, இ பகல்ஏ - இந்த மத்தியானகாலத்திலேயே, சேர முருக்குவன் - (அவரெல்லோரையும்) ஒருசேர அழிப்பேன்; ஏறுக - (நீ எனது தேரில் முன்போல) ஏறியருள்வாயாக', என - என்று(கண்ணனைப்) பிரார்த்தித்து, தன தேர்மிசை புக்கனன் - தனது இரதத்தின்மேல்ஏறினான்; (எ -று.)*

*யாரெதிர்நிற்பினும் யாவர் தடுப்பினும் என்றதனால், எத்துணை வலியராயினும் எவ்வகை உறவினராயினும் யான் இப்பொழுது எதிரிகளை அழியாது விடேனென்றவாறு. அருச்சுனன்=அர்ஜ்ஜுநன்; வடசொற்றிரிபு : இதற்கு- வெண்ணிறமுடையவனென்பது பொருள்: இது -முதலில் இந்நிறமுடைய கார்த்தவீரியமகாராசனுக்குப்பெயர் பெயராயிருந்து, பின்பு, அவனைப்போன்ற சௌரிய தைரியங்களையுடைய பார்த்தனுக்கு இட்டுவழங்கப்பட்டது; இது- உவமவாகுபெயரின்பாற்படும். பார்த்தன் கருநிறமுடையவனாததலால். அவனுக்கு அருச்சுனனென்பது நிறம்பற்றிவந்த பெயரென்றல் பொருந்தாது. இனி, "குருச்சுடர் மணிசெய் பச்சைக் கொழுந்துடற் பொலிவு நோக்கி, அருச்சுன னென்ப ரீதென்னரும்பெயர் வந்த பான்மை" என்னும் நல்லாப்பிள்ளைபாரதச் செய்யுளைக்கொண்டு,அருச்சுனனென்பது - பசுமைநிறம் பற்றிவந்த பெய ரென்றலு மொன்று. அன்றியும்,பார்த்தன் (பார்வதிபோல) முதலில் [பிறந்தபொழுது] வெண்ணிறமுடையவனாயிருந்துஉடனே கருமைநிறமடைந்தானென்று கூறுவதுமுண்டு. தாரை-கூர் நுனியுமாம்.தாரையுய்ப்பது-மழைபொழிவது போலமிகுதியாக எய்வதுஎனவும் கொள்ளலாம்.அதிரா - நாணேற்றி அந்நாணியைக்கைவிரலால் தெறித்து டங்காரத்தொனியையுண்டாக்கிச் சிங்கநாதமுஞ் செய்து என்க. (129)*

### *21.-இதுவும் அடுத்த கவியும்.அருச்சுனன் செய்த கடும்போரைத் தெரிவிக்கும்.*

***நீறுப டுத்தினன் மாமகு டத்திர ணீணில வைப்படையச்***
***சேறுப டுத்தினன் மூளைக ளிற்றிசை சேர்குரு திப்புனலால்***
***ஆறுப டுத்தின னோரொரு வர்க்கெதி ராயிரம் வைக்கணையால்***
***ஈறுப டுத்தினன் வீடுமன் விட்டவர் யாவர்பி ழைத்தவரே.***

*(இ - ள்.) (உடனே அருச்சுனன்),-மா மகுடம் திரள் - (பகையரசர்களது) பெரிய கிரீடங்களின் தொகுதியை, நீறு படுத்தினன்-பொடியாக்கினான்; மூளைகளின் -(அவ்வீரர்களது) மூளைகளால், நீள் நிலம் வைப்பு அடைய சேறு படுத்தினன் -பெரிய பூலோகத்தின் இடம்முழுவதுஞ் சேறாக்கினான்; திசை சேர் குருதி புனலால் -எல்லாத்திக்குக்களிலும் பாய்கிற இரத்தவெள்ளத்தால், ஆறு படுத்தினான் - பலஆறுகளை யுண்டாக்கினான்; ஓர்ஒருவர்க்கு எதிர் ஆயிரம் வை கணையால- (தன்னையெதிர்த்த) ஒவ்வொரு வீரருக்கும் எதிராக(த் தான்எய்த) ஆயிரம் ஆயிரம்கூரிய அம்புகளால்*

*ஈறுபடுத்தினன் - (அவர்களுக்கு) அழிவை யுண்டாக்கினான்;(அப்பொழுது), வீடுமன் விட்டவர் யாவர் பிழைத்தவர் - வீடுமனொழிந்த வீரர் எவர்பிழைத்தார்? (எ - று.)-எவரும் பிழைக்கவில்லை; மிகப்பலர் இறந்தனர் என்பதாம்.*

*இனி, வீடுமன் விட்டவர் யாவர் பிழைத்தவர் என்பதற்கு - அருச்சுனனோடு போர்செய்யும்படி வீடுமனால் ஏவியனுப்பப்பட்டு எதிர்த்த வீரர்களில் யார் பிழைத்தார்? எவருமில்லை என்றுஉரைப்பாரு முளர். **பி-ம்:-** திரை சேர்குருதி, தசைசேர்குருதி. விட்டமர்.*

***22. வாயுவடிக்கணைவாசவன்வைக்கணைவாருணமெய்க்கணைசெந்***
***தீயின்வடிக்கணைதேவர்சுடர்க்கணைசேரவிடுத்தமையால்***
***ஆயமுனைப்படுதேரணிபட்டனவாளணிபட்டனவெங்***
***காய்கரிபட்டனபாய்பரிபட்டனகாவலர்பட்டனரே.***

*(இ - ள்.) வாயு வடி கணை - வாயுவைத்தெய்வமாகவுடைய கூரிய அம்பையும் [வாயவ்யாஸ்திரத்தையும்], வாசவன் வைகணை - இந்திரனைத் தெய்வமாகவுடைய கூரிய அம்பையும் [ஐந்திராஸ்திரத்தையும்], வாருணம் மெய் கணை-வருணனைத்தெய்வமாகவுடைய உண்மையான [தவறுதலில்லாத] அம்பையும் [வாருணாஸ்திரத்தையும்], செம் தீயின் வடி கணை - சிவந்த அக்கினியைத் தெய்வமாகவுடைய கூரியஅம்பையும் [ஆக்நேயாஸ்திரத்தையும்], தேவர் சுடர் கணை- (மற்றும் பல) தேவர்களுக்குஉரிய ஒளியையுடைய அஸ்திரங்களையும், சேர -ஒருசேர, விடுத்தமையால் - (அருச்சுனன்) பிரயோகித்ததனால்.-ஆயம் - கூட்டமான,முனைபடு - போர்க்களத்தில் எதிர்ப்பட்ட, தேர் அணி - தேர்வரிசைகள், பட்டன-அழிந்தன: ஆள் அணி - காலாள்வரிசைகள், பட்டன-; வெம் காய் கரி - கொடியசீறுகிற யானைகள், பட்டன; பாய் பரி - பாய்ந்துசெல்லுந்தன்மையனவானகுதிரைகள், பட்டன-; காவலர் - (இந்நால்வகைச்சேனைக்கும்)அரசராகவுள்ளவர்களும், பட்டனர் - அழிந்தார்கள்;(எ- று.)*

*வாருணம் - தத்திதாந்தநாமம். ஆய எனப் பிரித்தால், ஆகிய எனப்பொருள்படும். **பி-ம்:-** ஆயுமுனைப்படு. (131)*

*23.-அருச்சுனன் கடுமையாகப்பொரவே பகையரசர் அஞ்சியொளித்தமை.*

**நாடியொ ளித்தனர் சூழ்புனன் மத்திர நாடன்மு தற்பலருங்**
**கூடியொ ளித்தனர் மாரத ரிற்றிறல் கூரும்வ யப்படையோர்**
**ஓடியொ ளித்தன ராடம ரிற்றுரி யோதன னுக்கிளையோர்**
**வாடியொ ளித்தனர் மாகத ரொட்டியர் மாளவர் குச்சரரே.**

*(இ - ள்.) (இன்னும் அப்பொழுது), ஆடு அமரில் - (அருச்சுனன்) செய்த போரில், புனல் சூழ் மத்திரநாடன் முதல் பலர்உம்-நீர்சூழ்ந்த மத்திரதேசத்தரசனான சல்லியன் முதலிய பல சமரதவீரர்களும், நாடி ஒளித்தனர் - (எதிர்த்தற்கு அஞ்சி) இடந்தேடி யொளித்துக்கொண்டார்கள்; மா ரதரில் திறல் கூரும் வய படையோர் - மகாரதவீரர்களில் வலிமைமிகுந்த வெற்றியைத்தரும் ஆயுத்ததையுடைய சோமதத்தன்முதலியோர், கூடி ஒளித்தனர் - ஒருங்குகூடி மறைந்தார்கள்; துரியோதனனுக்கு இளையோர் - (அர்த்தரதவீரரான) துரியோதனனது தம்பிமார், ஓடிஒளித்தனர்-; மாகதர் - மகததேசத்தாரும், ஒட்டியர்- ஓட்ரசேதத்தாரும், மாளவர்-மாளவதேசத்தாரும், குச்சரர் - கூர்ச்சரதேசத்தாரும் ஆகிய அரசவீரர்கள், வாடிஒளித்தனர் - வாட்டமுற்று ஒளித்தார்கள்; (எ - று.) துரியோதனனுக்கு - நான்காமுருபு, முறைப்பொருளது. ஒட்டியர், குச்சரர் - வடசொற்சிதைவுகள். (132)*

வேறு

*24.-அருச்சுனன் கடும்போர்செய்தல்கண்டு ஸ்ரீக்ருஷ்ணன் உவந்திருக்க, வீடுமன்முதலியோர் துரியோதனனைக் காத்தவண்ணம் பாசறைசேர்தல்.*

***பார்த்த னம்பினான் மேவ லார்படைப் பரவை சாயவே விரவுகோவியர்
தூர்த்த னன்புடன் கண்டு வந்துதன் றொக்க சேனையின் பக்க மெய்தினான்
சேர்த்த வெம்பனைக் கொடிம கீபனும் வில்வினோதனுஞ் செல்வ மைந்தனுங்
காத்து நின்றுதங் காவ லன்றனைக் கொண்டு பாசறை கடிதி னெய்தினார்.***

*(இ - ள்) (இவ்வாறு), பார்த்தன் அம்பினால் - அருச்சுனனது பாணங்களால், மேவலார் படை பரவை - பகைவர்களது சேனாசமுத்திரம், சாயஏ - அழிந்திடவே,- விரவு கோவியர் தூர்த்தன்-(தன்னோடு) கலந்த கோபஸ்திரீகள் பலரிடத்திலும் அன்புள்ளவனான கண்ணபிரான், கண்டு - (அதனை) நோக்கி, அன்புடன் உவந்து - அன்போடு மகிழ்ந்து, தொக்க தன் சேனையின் பக்கம் எய்தினான்- (கூட்டமாகத்) திரண்டுள்ள தன் சேனையின் பக்கத்தை யடைந்தான்; சேர்த்த வெம் பனை கொடி மகீபன்உம்-கட்டிய கொடிய பனைமரத்தின் வடிவமெழுதிய கொடியையுடைய அரசனான வீடுமனும், வில்வினோதன்உம்-வில்வித்தையையே பொழுதுபோக்கும் விளையாட்டாகவுடைய துரோணாசாரியனும், செல்வம் மைந்தன்உம்-(அவனது) செல்வப்பிள்ளையான அசுவத்தாமனும், தம் காவலன் தனைகாத்து நின்று - தங்கள் அரசனான துரியோதனனை (அருச்சுனனம்பால் அழிவடையாதபடி சூழ்ந்து) நின்று பாதுகாத்துக் கொண்டு, கொண்டு பாசறை கடிதின்எய்தினார்- (அவனை) அழைத்துக்கொண்டு (தமது) படைவீட்டுக்கு விரைவிற் சென்றுசேர்ந்தார்கள்; (எ - று.)*

*'பார்த்தனம்பினால் மேவலார் படைப்பரவைசாயவே' என்றது- கண்ணன் தொழிலும் வீடுமன்முதலியோர்தொழிலுமாகிய இரண்டுக்குங் காரணம். பார்த்தன் என்னும் வடமொழிப்பெயர்க்கு-பிருதையினது மகனென்று காரணப்பொருள்; தத்திதாந்தநாமம். பிருதை யென்பது-குந்தியின் இயற்பெயர்: பார்த்தனென்பது, இங்குஅருச்சுனனுக்கு சிறப்பாக வழங்கிற்று; தாய்க்கு இளைய மகனிடத்தில் அன்பு மிகுதியென்ற பொது நியாயம், இதற்குக் காரணமாகலாம். தூர்த்தன்-வடசொல்; இதற்கு-வஞ்சகனான காமுக னென்று பொருள்: கண்ணன் ஆயர்மங்கையர்பலரிடத்து இங்ஙனம் ஒருங்கு காதலுடையனாதலை "கருமலர்க் கூந்த லொருத்திதன்னைக் கடைக்கணித் தாங்கே யொருத்தி தன்பான், மருவி மனம் வைத்து மற்றொருத்திக் குரைத்து ஒருபேதைக்குப் பொய் குறித்துப், புரிகுழன் மங்கை யொருத்தி தன்னைப் புணர்தியவளுக்கும் மெய்யனல்லை, மருதிறுத்தா யுன் வளர்த்தி யூடே வளர்கின்றாதாலுன்றன் மாயை தானே" என்ற பெருமாள் திருமொழிப்பாசுரத்தாலு மறிக. பக்கம் -பக்ஷம்: வடசொல். ' வில்வினோ தனும்' என்றவிடத்து 'திறல்துரோணனும்' என்றும்பாடம்.
இதுமுதல் இச்சருக்கமுடியுமளவும் ஏழுகவிகள் - பெரும்பாலும் முதல் மூன்று ஐந்து ஏழாஞ்சீர்கள் மாச்சீர்களும், இரண்டு நான்கு ஆறு எட்டாஞ்சீர்கள் கூவிளச்சீர்களுமாகிய* ***எண்சீராசிரிய விருத்தங்கள்*** *(133)*

*25,-இது முதல் மூன்று கவிகள் - படுகளச்சிறப்பு.*

***வெஞ்சரத்தினால்விசயன்வென்றபோர்மிகுகளத்தின்வாய் விசையொடற்றன
குஞ்சரத்தின்வீழ்கைகணாகமேகுருதிவட்டமும்பரிதிவட்டமே
பஞ்சரத்தொடுந்திரியுமானையின் பக்கமெங்கணும்பட்டுமூழ்கிய
செஞ்சரத்தின்மேற்சிறகர்பண்டுவச்சிரமரிந்திடுஞ்சிறகர்மானுமே.***

*(இ - ள்.) வெம் சரத்தினால் - கொடிய அம்புகளைக்கொண்டு, விசயன் - அருச்சுனன், வென்ற - சயித்தற்கிடமான, போர் மிகுகளத்தின்வாய் - போர்த்தொழில்மிகுந்த யுத்தகளத்திலே, விசையொடு*

*அற்றன - விரைவில் அறுபட்டனவான, குஞ்சரத்தின்வீழ்கைகள்- யானைகளின் கீழ்விழுந்த துதிக்கைகள், நாகம்ஏ - பெரும் பாம்புகளின்வடிவமேபோலும்; குருதிவட்டம்உம் - வட்டவடிவமாகத் தேங்கிய இரத்தப்பெருக்கும், பரிதி வட்டம்ஏ - சூரியமண்டலமேபோலும்; பஞ்சரத்தொடுஉம் திரியும் - அம்பாரிகளோடு திரிகிற, ஆனையின் - யானைகளின், பக்கம் எங்கண்உம்- (உடலின்) இருபுறத்தி லெங்கும், பட்டு முழ்கிய - தைத்து அழுந்திய, செம்சரத்தின் மேல் - சிவந்த அம்புகளிம்மீதுள்ள, சிறகர் - இறகுகள், பண்டு வச்சிரம் அரிந்திடும் சிறகர் மானும் - முன்னொருகாலத்தில் (தேவேந்திரனது) வச்சிராயுதத்தால் அறுபட்ட (மலைகளின்)சிறகுகளையே போலும்; (எ-று.)*

*யானையின் கரியபெரியவடிவத்துக்கு மலையும், அதன்மேல் தைத்துள்ள அம்பினிறகுகளுக்கு அவற்றின் இறகும் உவமை. அழகுக்காகவும்விரைந்து செல்லும்பொருட்டாகவும் அம்புகளுக்கு இறகுகட்டுதல், இயல்பு.* ***தற்குறிப்பேற்றவணி.*** *மானும் என்னும் வினைமுற்றை, மற்றை யிரண்டு வாக்கியங்களிலுங் கூட்டுக. 'கைகள் நாகமே குருதிவட்டமும் பரிதிவட்டமே' என்று சேர்த்தியால், இரத்தமண்டலமாகிய சூரியமண்டலத்தைப்பிடித்தற்கு அருகில் வந்த இராகு வென்னுங் கரும்பாம்பென்று அருகில் வீழ்ந்துள்ள யானைத்துதிக்கையைக் குறித்ததாகக் கொள்க. குஞ்சரம் - காட்டுப்புதர்களிற் சஞ்சரிப்பது; மத்தகத்துக்குக் கீழுள்ள குழிகளை யுடைய தென்றுமாம். குஞ்சம் - புதரும், கும்பஸ் தலங்களுக்குக்கீழுள்ள குழிகளும். பஞ்சரம் - வடசொல்: கூடென்றுபொருள்; இது இங்கே இலக்கணையாய் அம்பாரிக்குக் கொள்ளப்பட்டது. யானைமீது அம்பாரிகட்டுதல், இயல்பு: இனி, பஞ்சரம் - கழுகு என்று பொருள்கொண்டு, யானையாற் கொல்லப்படும் பிராணிகளை யுண்ண யானையுடன் கழுகுந் திரியுமென்பர், ஒருசாரார். சிறகர் - குற்றியலுகரம், 'அர்' பெற்றது. (134)*

***26 . கொற்றமன்னர்சென்னியினணிந்தபொற்கோளம்யாவையுந்***
***தாளமாகவே***
***யற்றைவெஞ்சமத்தடலருச்சுனனாண்மைபாடிநின்றல***
***கையாடுமால்***
***முற்றவெம்பிணக்குவையுமவேழமுமுடுகுவாசியுந்தேரு***
***மொய்ம்புறத்***
***துற்றகுன்றெனவொன்றுபட்டெழச்சொரியுமுளையாறரு***
***வியொக்குமே.***

*(இ - ள்.) கொற்றம் மன்னர் - வலிமையையுடைய (இறந்த அரசர்கள்), சென்னியின் அணிந்த - தலையில் அணிந்திருந்த, பொன் கோளம் யாவைஉம் - பொன்மகுடங்களையெல்லாம், தாளம் ஆக ஏ - தாளமாகக் (கையில் ஏந்திக்கொண்டு), அலகை-பேய்கள், அற்றை வெம் சமத்து அடல் அருச்சுனன் ஆண்மை பாடிநின்று-அன்றையதினத்துக் கொடியயுத்தத்திற் காட்டிய அருச்சுனனது பராக்கிரமத்தைப் பாடிக்கொண்டுநின்று, ஆடும் - கூத்தாடும்; வெம் பிணம் குவைஉம் - கொடிய பிணங்களின் கூட்டமும், வேழம்உம்-(இறந்த) யானைகளும், முடுகு வாசிஉம்-(முன்பு) விரைவையுடைய (இறந்த) குதிரைகளும், தேர்உம் - (அழிந்த) தேர்களும், முற்ற-(போர்க்களம்) முழுவதிலும், மொய்ம்பு உற துற்ற குன்று என - வலிமை மிக நெருங்கிய மலைகள்போல, ஒன்றுபட்டுஎழ - ஒன்றுசேர்ந்து உயர்ந்து தோன்ற, சொரியும் மூளை - (அவற்றினின்று) பெருகுகிற நிணம், ஆறு அருவி ஒக்கும் - (அம்மலையினின்று) ஆறுகளாகப்பெருகும் நீரருவிபோலும்.*

*கோளம் - வட்டவடிவமாகத் தலையிலணிவதோர் ஆபரணம். கோலம் என்று ஓதி - தலைக்கோலமென்பாரு முளர். பேய்கள் பாடியாடுதற்குக் காரணம், தமக்கு நிரம்பப் பிணங்களாகிற இரை கிடைத்த களிப்பு. இங்ஙனம் கிடைத்தற்குக் காரணம் போரில் எதிரிகள்சேனையை அழித்த அருச்சுனனது ஆற்றலே யாதலால், அதனைப் புகழ்ந்து பாடுவனவாயின. முதலிரண்டடியில்*
***தும்பைத் திணையில் பேய்க்குரவை***
*என்ற துறையின் கருத்தமையக்கூறினார். பின்னிரண்டடியில்* ***தற்குறிப்பேற்றவணி*** *காண்க. மூன்றாமடியிற் பிணமென்றது, மனிதரது உயிர்நீத்தவுடலை. யாறு என்றும் பிரிக்கலாம்.*
*(135)*

*27.* ***பமரமும்மதக்கரிவிலாவின்வேல்பட்டவாய்நிணம்பறியநிற்பன***
***குமரன்வேலின்வாயனலமூர்தருங்கோடுடைத்தடங்குன்றமொக்குமால்***
***அமரர்கோன்மகன்செங்கையம்பினாலற்றவீரர்தந்தலைகள்கௌவியச்***
***சமரபூமிசேர்ஞாளிமானுடத்தலைவிலங்கினின்றன்மைசாலுமே.***

*(இ-ள்.) பமரம் - வண்டுகள்மொய்க்கப்பெற்ற, மும் மதம் - மூன்று வகைமதத்தையுடைய, கரி - யானைகள், விலாவின் வேல் பட்டவாய் நிணம் பறிய நிற்பன - (தத்தம்) விலாப்புறத்தில் (எதிரியின்) வேல் பாய்ந்த இடத்திலே கொழுப்புவெளிப்பட அழிந்துநிற்பவை,-குமரன் வேலின் வாய்-முருகக் கடவுளால் எறியப்பட்ட வேலாயுதந்தைத்தவிடத்திலே, அனலம் ஊர்தரும் - நெருப்புப்பற்றப்பெற்ற, கோடு உடை தட குன்றம் ஒக்கும் - சிகரத்தையுடைய பெரியகிரௌஞ்சகிரியைப் போலும்; அமரர்கோன் மகன் செம் கை அம்பினால் அற்றவீரர்தம் தலைகள் கௌவி - தேவேந்திரகுமாரனான அருச்சுனனது: சிவந்தகைகளால்விடப்பட்ட அம்புகளால் அறுபட்ட வீரர்களது தலைகளைக் கௌவிக்கொண்டு, அ சமரபூமி சேர் - அந்தப்போர்க்களத்திற் பொருந்திய, ஞாளி - நாய்கள், மானுடர் தலை விலங்கின் இன்தன்மை சாலும் - மனிதத் தலையோடு கூடிய மிருகங்களின் இனிய தன்மையைப்பொருந்தும்.*

*'ஆண்டலைப்புள்' போல மானுடத்தலைவிலங்கும் உண்டென்க; புருஷமிருகமென ஒருவகை வழங்குகிறது. பமரம் - ப்ரமரமென்னும் வடமொழித்திரிபு. விலா - வயிற்றுப்புறம். மலை - யானைக்கும், மலையைத்துளைத்தவேல் - யானையின்மீது தைத்த வேலுக்கும், அனல் - இரத்தத்தோடுகூடிய நிணத்துக்கும் உவமை. விலங்கு - 'திர்யக்' என்னும் வடசொல்லின் மொழிபெயர்ப்பு; குறுக்காக நிற்பதென்று பொருள். ஆல், ஏ - ஈற்றசைகள்.*

**குமரக் வேலின்வாயனலமூர்தருங் கோடுடைக்குன்றமென்**
***பதிலடங்கியகதை:-*** *சிவபிரானது இளையகுமாரனாய்த் தேவர்வேண்டுகோளால் அசுரர்களையொழித்தற்குத் தேவசேனாபதியாம்பொருட்டு அவதரித்த முருகக்கடவுள், சூரபதுமனைப் பொருது அழித்தற்குச் செல்லுங் வழியிடையே கிரௌஞ்சனென்னும் அசுரன் பெரியமலை வடிவங்கொண்டு அக்கடவுளை நலிவதாகஎதிர்வந்துநிற்க, அதன் மேல் அப்பெருமான் தனது தெய்வத்தன்மையுள்ளவேற்படையை யேவி அதனைப்பிளந்து அழித்திட்டன னென்பது, கதை: பரசுராமனும் சுப்பிரமனியனும் பரமசிவனிடம் வில்முதலிய ஆயுதப்பயிற்சியைச் செய்துமுடித்தபின்பு இவர்களுள் உயர்வுதாழ்வு அறியும் பொருட்டுச்சிவபிரான் உமாதேவியின் முன்னிலையிலே இவர்களுக்குக் கிரௌஞ்சமலையைச்சுட்டிக்காட்டி இதனைத் துளைத்திடு மென்று நியமிக்க, பரசுராமன் அம்பெய்துஅதனைத் துளையிட்டுக் காட்ட, முருகக்கடவுள் வேலாயுதத்தை அனற்பொறிகிளம்பவீசியெறிந்து அம்மலையைப் பிளந்திட்டன னென்றும் கதை கூறப்படும். (136)*

***28.-சூரியாஸ்தமனவருணனை.***

***அன்றுவெஞ்சரத்தொடுதறிந்தவாளரசர்சோரிமெய்ப்பட்டதாதலிற்***
***சென்றுசெங்கதிர்ச்செல்வன்வாருணத்திசையடைந்துவெண்டிரையின்***
***மூழ்கினான்***
***நின்றருச்சுனன்பொரமறந்ததும்நெடியசெங்கண்மானேமிதொட்டதும்***
***பின்றைவில்லெடுத்தவன்மலைந்ததும்பேசினான்மகீபதிபிதாமகன்.***

*(இ - ள்.) அன்று - அத்தினத்திலே, வெம் சரத்தொடு-(அருச்சுனனது) கொடியஅம்புகளால், தறிந்த - அறுபட்ட, வாள் அரசர் - ஆயுதங்களையுடைய அரசர்களது, சோரி - இரத்தம், மெய் பட்டது ஆதலின் - (தனது) உடம்பில் வந்து தெறித்ததாதலால், (அவ்விரத்தக்கறையைக்கழுவியொழிக்கும் பொருட்டு), செம் கதிர் செல்வன் - சிவந்த கிரணங்களைச் செல்வமாகவுடைய சூரியன், சென்று - போய், வாருணம் திசை அடைந்து - வருணனது சம்பந்தமான மேற்குத்திக்கை யடைந்து, வெள் திரையில் மூழ்கினான் - வெண்மையான அலைகளையுடைய (அங்குள்ள) கடலிலே நீராடினான் [மறைந்தான் என்றபடி]: (பின்பு), மகீபதி பிதாமகன் - துரியோதனராசனது பெரியபாட்டனான வீடுமன்,*

*அருச்சுனன் நின்று பொர மறந்ததுஉம்- அருச்சுனன் (போர்க் களத்தில் திகைத்து) நின்று போர்செய்யமறந்ததையும், நெடிய செம் கண் மால் நேமிதொட்டதுஉம் - நீண்ட சிவந்தகண்களையுடைய திருமால் (அதனை நோக்கித் தான்போர்செய்தற்குச்) சக்கரமேந்தினதையும், பின்றை வில் எடுத்து அவன்மலைந்ததுஉம் - அதன்பின்பு வில்லையெடுத்து அவ்வருச்சுனன் போர்செய்ததையும்,பேசினான் - (பாராட்டித் தன்படைவீரரோடு) கூறினான்.*

*மெய்என்றது, மண்டலத்தை, அந்திமாலைப்பொழுதில் சூரிய மண்டலத்தில் மிகுதியாக இயல்பில்தோன்றுஞ் செந்நிறத்தைச் செந்நீர் தெளித்ததனாலாகிய தெனக்குறித்தனர்; முன்னிரண்டடியில்* ***ஏதுத்தற்குறிப் பேற்றவணி, தொடர்புயர்வுநவிற்சியணியை*** *அங்கமாகக் கொண்டு வந்தது. சரத்தொடு என்பதில்,'ஓடு' உருபு - கருவிப் பொருளது. ஆள் அரசர் எனப் பிரித்து, ஆளுதற்றொழிலையுடைய மன்ன ரென உரைத்தல் மோனைத்தொடைக்கு மிகப்பொருந்தும், வருணன் மேற்குத்திக்குப்பாலக னாதலால், மேற்றிசை 'வாருணத்திசை' எனப்பட்டது, பிதாமகன் - வீடுமன், மகீபதி - துரியோதனராசனோடு, பேசினான் என்று அநுவயித்துப் பொருள்கூறுதலு மொன்று.* ***பி-ம்:*** *அமர்மலைந்ததும். (137)*

### *29.-இருசேனையும் அற்றையிரவுபோக்கினவகை.*

***தருமன்மாபெருஞ்சேனைதன்னுளார்தங்களாதரத்தொடுதனஞ்சயன்***
***பொருவிலாண்மையும்வீமன்மாமகன்பொருதவீரமும்புகழ்ந்துபாடினார்***
***அரவகேதனன்சேனைதன்னுளாரழிந்தமன்னருக்கழுதரற்றினார்***
***இருவர்சேனையுங்கண்படாமலன்றிரவுபட்டதென்னென்றியம்புவாம்.***

*(இ - ள்.) தருமன் மா பெரு சேனை தன்னுளார் - தருமபுத்திரனது சிறந்த பெரிய சேனையிலுள்ள வீரர்கள், தங்கள் ஆதரத்தொடு - தமக்குரிய அன்புடனே, தனஞ்சயன் பொரு வில் ஆண்மைஉம் - அருச்சுனன் போர் செய்த வில்லின் திறத்தையும், வீமன் மா மகன் பொருத வீரம்உம்-வீமனது சிறந்தகுமாரனான கடோற்கசன் போர்செய்த வீரத்தன்மையையும், புகழ்ந்து, பாடினார் - புகழ்ந்து துதித்தார்கள்; அரவகேதனன் சேனை தன்னுள்ளார்- பாம்புக்கொடியனான துரியோதனனது சேனையிலுள்ளவர்கள், அழிந்த மன்னருக்கு அமுது அரற்றினார்- (தம்பக்கத்தில் இறந்த அரசர்க்காகப்புலம்பிக் கதறினார்கள்; (இவ்வாறு), இழுங்கா சேனைஉம் - இருதிறத்தாரது சேனைகளும், கண் படாமல் - தூங்காமல், அன்று இரவு - அன்றையிராத்திரி முழுவதும் பட்டம் அடைந்தநிலைமையை, என் என்று இயம்புவாம் - (யாம்) என்ன வென்றுசொல்வோம்? (எ - று.)- சொல்வது அரிது என்றபடி.*

*ஆதரத்தொடு புகழ்ந்துபாடினார் என இயையும்.* ***தநஞ்சயன்*** *என்னும் வடமொழிப்பெயர்க்கு - செல்வத்தைச் சயித்தவனென்று பொருள்; தருமபுத்திரன் ராஜசூயபாகஞ் செய்யவேண்டியபொழுது, அவன் கட்டளையால் அருச்சுனன் வடதிசையிற் சென்று பல அரசர்களை வென்று அவர்கள் செல்வத்தைத் திறை யாகக் கொணர்ந்ததனால், இவனுக்கு இப்பெயர் வந்தது; இனி, இதற்கு- வெற்றியையே செல்வமாகக் கொள்பவ னென்றும் பொருள் கொள்ளலாம். பட்டது - முறையே அடைந்த இன்பமும் துன்பமும்* ***பி-ம்:*** *தருமன்மாமகன்சேனை. (138)*

### *30.-மறுநாள் சூரியோதய வருணனை.*

***தென்னலங்கையிற் கொண்ட தென்னையே நேமி யாகவந்***
***நீலமேனியான்***
***இன்ன மும்பொரத் தேடு மாகவத் தின்று மென்று***
***கொண்டெண்ணியேகொலோ***
***தன்னெ டுந்தனிச் சயில மும்பொலத் தபனி யத்தடஞ்***
***சயில மாகவே***

***மின்னெ டுஞ்செழுங் கதிர்பரப்பினான் வெய்ய வேழ்பரித்***
***தேர்வி பாகரன்.***

*(இ-ள்.) 'அ நீலம் மேனியான் - நீலநிறமுள்ள திருமேனியையுடைய அக்கண்ணபிரான், நென்னல் - நேற்று, நேமி ஆக - சக்கரமாக, அம் கையில் கொண்டது - அழகிய (தனது) திருக்கையில் எடுத்துப் பிடித்தது, என்னையே-; (ஆதலால்), இன்னமும்-, இன்றுஉம் - இன்றைக்கும், ஆகவத்து - போர்க்களத்தில், பொர - போர்செய்யும்பொருட்டு, தேடும் - (என்னைத்) தேடுவான்,' என்று கொண்டுஎண்ணிஏ கொல்ஓ - என்று நினைத்துத்தானோ, வெய்ய ஏழ் பரி தேர் விபாகரன் - வெவ்வியஏழு குதிரை பூண்ட தேரையுடைய சூரியன், தன் நெடு தனி சயிலம் உம்பொலம் தபனியம் தட சயிலம் ஆக - தனது உணர்ந்தஒப்பற்ற உதயகிரியும் அழகியபொன்மயமான பெரிய மகாமேருகிரியாகும்படி [செந்நிறமடையுமாறு], மின் நெடுசெழு கதிர் பரப்பினான். விளங்குகிற நீண்ட மிக (தனது) சிவந்தகிரணங்களைப்பரவச் செய்தான் [உதித்தான் என்றபடி]; (எ-று.)*

**ஏதுத்தற்குறிப்பேற்றவணி.** *சூரியன் திருமாலினது சக்கராயுதத்தின் அமிசமாதலால், இங்ஙனங் கூறினது. என்றுஎண்ணிக்கொண்டு கொலோ எனமொழிமாற்றி யுரைப்பினும் அமையும். சைலம், தபநீயம், விபாகரன் - வடசொற்கள், சைலம்-சிலாமயமானது: சிலை - கல். தபநீயம்-(நெருப்பில்) தபிக்கப்பட்டு விளங்குவது; தபித்தல் - எரித்தல். விபாகரன் என்பது - விசேஷமாகஒளியைச் செய்பவனென்றும், விசேஷகாந்திக்கு இருப்பிடமானவ னென்றும்பொருள்படும்; முறையே வி பா கரன் என்றும், வி பா ஆகரனென்றும் பிரியும்: வி -விசேஷம், பா - பிரகாசம். (139)*

*மூன்றாம்போர்ச்சருக்கம் முற்றிற்று.*

*----*

## *நான்காம்போர்ச்சருக்கம்.*

### *1.-கடவுள்வணக்கம்.*

***தேடிய வகலிகை சாபந் தீர்த்ததாள்***
***நீடிய வுலகெலா மளந்து நீண்டதாள்***
***ஓடிய சகடிற வுதைத்துப் பாம்பின்மே***
***லாடியுஞ் சிவந்ததா ளென்னை யாண்டதாள்.***

*(இ - ள்.) என்னை ஆண்டதாள் - என்னை அடிமையாக ஆட்கொண்டருளிய (திருமாலினது) திருவடிகள்,-தேடிய - (எங்கு உள்ளாளென்று) தேடத்தக்க [இன்னாளென்று அறியவெண்ணாதபடி வேற்றுருவடைந்த], அகலிகை - அகலிகையயினது, சாபம் - சாபத்தை, தீர்த்த - (ஸ்ரீராமாவதாரகாலத்தில்) நீக்கியருளிய, தாள் - திருவடிகளும், நீடிய உலகு எலாம் - நீண்ட உலகங்களெல்லாவற்றையும், அளந்து - (திரிவிக்கிரமாவதார காலத்தில்) அளவாநின்றுகொண்டு, நீண்ட - நீண்டுசென்ற, தாள் - திருவடிகளும், ஓடிய - (தன்னைக்கொல்லும்பொருட்டு) விரைந்துவந்த, சகடு - சகடாசுரன், இற - அழியும்படி, உதைத்து - (கிருஷ்ணாவதாரகாலத்திலே) உதைத்து, பாம்பின் மேல் ஆடிஉம் - (காளியனென்னும்) நாகத்தின்மேல் கூத்தாடியும், சிவந்த - செந்நிறமடைந்த, தாள் - திருவடிகளுமாம்.*

*தமக்குஉரிய கடவுளினது சீர்பாதங்களின் பற்பல மகிமையை எடுத்துக் கூறியவாறு. 'தேடியவ்வகலிகை' என்ற பாடத்துக்கு - அவ்வகலிகையுள்ள விடத்தில்தாமாகச்சென்று என்ற பொருள் கூறுக. சகடு - ஸகடம் என்னும் வடமொழித் திரிபு:பண்டியென்று பொருள். ஆடியும், உம் - இறந்ததுதழுவியது. 'உதைத்தும்' எனப்பாடங்கொள்ளின், இரண்டும்- எண்ணும்மை.*

***அகலிகை*** *- அஹல்யா என்னும் வடமொழித் திரிபு: இச் சொல்லுக்கு அழகில்லாமையில்லாதவளென்று பொருள்: மிக்க அழகுடையவ ளென்று கருத்து; ஹலம் என்றார் விரூபம்: ஹல்யம் - அழகின்மை. இவள்-கௌதம முனிவரது மனைவி: சநகமகாராசாவுக்குப் புரோகிதராகிய சதாநந்தமுனிவரது தாய். பிரமதேவர் பூர்வத்தில் ரூபத்திலுங் குரலிலும் பேதமில்லாமல்*

ஒருபடிப்படவே பிரஜைகளைப் படைத்துவந்தார்; பின்பு, ஒருவர்க்கொருவர் வேற்றுமையின்றி யிருப்பது நலமன் றெனக் கருதி, முன்படைத்த பிரஜைகளுக்கு அந்தந்த அங்கங்களிலுள்ள சிறப்பையெல்லா மெடுத்து, அதைக்கொண்டு அழகுமிகுந்த பெண்ணொருத்தியைச் சிருஷ்டித்து, அவளுக்கு அஹல்யையென்று பெயரிட்டார்; அப்பொழுது இந்திரன் இம்மேலான பெண்ணுக்குக் தக்ககொழுநன் மேலான தானேயன்றி வேறில்லை யென்று செருக்குற்றிருந்தான்; படைத்தற்கடவுள் அவளை அவனுக்குக் கொடாமல் கௌதமமுனிவரிடம் கொடுத்து 'இவளைப் பாதுகாத்துவாரும்' எனக் கட்டளையிட்டார்; அவ்வாறே அவர் வெகுகாலம் பாதுகாத்துப் பின்பு பிதாமகக்கடவுளிடங் கொணர்ந்து விட்டார்; கௌதமரது மனஞ் சபலப்படாம லிருந்ததையும், அவரது தவநிட்டையையுங் கண்டு, நான்முகக்கடவுள் உவந்து அம்முனிவருக்கே அவளை மனைவியாக்கினார்; இந்திரனோ பொறாமை கொண்டு வேற்றுருவத்தால் அவளைக் கற்பழிக்கக் கருதினான்: இவ்வாறு பலநாளாய்ப்பெருங்காதல்கொண்டிருந்த தேவேந்திரன் ஒருநாள் நடுராத்திரியில் கௌதமராச்சிரமத்துக்கு அருகேவந்து பொழுதுவிடியுங்காலத்துக் கோழிகூவுவது போலக் கூவ, அது கேட்ட முனிவர் சந்தியாகாலஞ் சமீபித்துவிட்ட தெனக்கருதி யெழுந்து காலைக்கடன் கழிக்கும்பொருட்டு நீர்நிலைநோக்கிப் புறப்பட்டுச்செல்ல, அப்பொழுது இதுவேசமயமென்று இந்திரன் அம்முனிவருருக்கொண்டு ஆச்சிரமத்துட்சென்று இவளோடு கலக்கையில், இவளும் 'தன்கணவரல்லன், இந்திரன்' என்று உணர்ந்தும் விலக்காமல் உடன்பட்டிருக்க, அதனை ஞானக்கண்ணாலறிந்து உடனே மீண்டுவந்த அம்முனிவர் இவளைக் கருங்கல்வடிவமாம் படியும் இந்திரனை உடம்புமுழுவதிலும் ஆயிரம்பெண்குறியையடையும்படியுஞ் சபித்து, உடனே அவர்கள் அஞ்சிநடுங்கிப்பலவாறு வேண்டிக்கொண்டதற்கு இரங்கி, முறையே, 'ஸ்ரீராமனது திருவடிப்பொடிபடுங்காலத்து இக்கல்வடிவம் நீங்கிச் சுயவுருவம் பெறுக' என்றும், 'அப்பெண்குறிகள்பிறர்க்குக் கண்களாகப் புலப்படும்' என்றும் அவர்களுக்கு அநுக்கிரகிக்க, அவ்வாறேகல்லுருவமாய்க் கிடந்த அகலியை, ஸ்ரீராமலக்ஷ்மணர் விசுவாமித்திரரோடுமிதிலைக்குச் செல்லும்போது ஸ்ரீராமனது திருவடித்துகள் பட்டமாத்திரத்தில்சாபம்நீங்கி இயற்கையுருவமடைந்தா ளென்பது, **முதலடியின் கதை.** 'கோதமன்றன்பன்னிக்கு முன்னையுருக் கொடுத்ததிவன், போதுநின்ற தெனப்பொலிந்த பொலன்கழற்காற்பொடிகண்டாய்' என்றது கம்பராமாயனம். கௌதமர் இந்திரனைஆண்குறியிழக்கும்படியும், அகலிகையை அரூபியாகி உணவில்லாமற் பலநாள்சாம்பலிலே கிடக்கும்படியுஞ் சபித்திட்டன ரென்றும், இந்திரனைப் பகைவன்கையிலேஅகப்பட்டுப் பேரவமானமடையும்படி சபித்ததாகவும், இன்னும் சிறிது வேறுபடுத்தியும்இவ்வரலாறு நூல்களிற் கூறப்படும்.

***மூன்றாமடியிற் குறித்த சரித்திரம்:-*** நந்தகோபகிருகத்தில் ஒரு வண்டியின்கீழ்புறத்தில் தொட்டிலிற் பள்ளிக்கொண்டிருந்த ஸ்ரீகிருஷ்ணன், ஒரு காலால்அச்சகடத்தில் கம்ஸனால் ஏவப்பட்ட அசுரனொருவன் வந்து ஆவேசித்துத் தன்மேலே விழுந்து தன்னைக் கொல்லமுயன்றதை அறிந்து, பாலுக்கு அழுகிறபாவனையிலே தன் சிறிய திருவடிகளை மேலேதூக்கியருள அவ்வடிகளால் உதை பட்டமாத்திரத்தில் அச்சகடு திருப்பப்பட்டுக் கீழேவிழுந்து அசுரனுள் பட அழிந்த தென்பது.

இதுமுதல் நான்குகவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ் சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் விளச்சீர்களுமாகிய **கலிவிருத்தங்கள்.** *(140)*

*2.-பாண்டவசேனை அர்த்தசந்திரவியூகமாகவே வகுக்கப்படுதல்.*

**நற்பகலிடைவருநளினநயகன்**
**பொற்பகலுறவொளிபுரியுநேமியான்**
**பிற்பகலணியையும்பிறங்குசேனையான்**
**முற்பகல்வியூகமேயாகமூட்டினான்.**

*(இ - ள்.)* நல் பகலிடை வரும் - நல்ல மத்தியானகாலத்திலே காணப்படுகிற,நளினம் நாயகன் பொற்பு - தாமரைக்குக் கொழு
நனானசூரியனது விளக்கமும், அகலுற - நீங்கும்படி, ஒளி புரியும்-(தான் மிகுந்த) பிரகாசத்தைச்செய்கிற, நேமியான்-(சுதர்சந மென்னுஞ்) சக்கரா யுதத்தையுடைய கண்ணபிரான்,-பின் பகல் அணியைஉம் - அடுத்தநாளின் [நான்காநாளின்] படைவகுப்பையும். பிறங்கு சேனையால் -

*(வெற்றியால்) விளங்குகிற (பாண்டவர்களின்) சேனைகளைக்கொண்டு, முன் பகல் வியூகம்ஏ ஆக - (இதற்கு)முந்தினநாளின் [மூன்றாநாளில் அமைத்த] வியூகமாகவே [அர்த்தசந்திரவியூகமாகவே], மூட்டினான் - வகுத்திட்டான்;*

*"ஸூதர்ஸநம் பாஸ்கரகோடி துல்யம்" என்றபடி எம்பெருமானது திருவாழி கோடிசூரியப்பிரகாச முடையதாய் விளங்குதலால்,' நளினநாயகன் பொற்பு அகலுற வொளிபுரியுநேமி' என்றார். நளிந நாயகன்-வடசொற்றொடர். (141)*

### *3.-துரியோதனன் பக்கத்தவரும் காருடவியூகமாகவேவகுக்கப்பட, இரு சேனையும் போர்ப்பறை முழங்க ஆர்த்தல்.*

**கார்முகில்வண்ணனைக்கண்டுகாணலார்**
**தாமுமவ்வியூகமேசமைத்துமுந்தினார்**
**ஏமமோடெதிர்முனைந்திருவர்சேனையும்**
**போர்முரசெழவெழப்பொங்கியார்த்தவே.**

*(இ - ள்.) கார் முகில் வண்ணனை கண்டு - கரிய மேகம்போன்ற திருநிறத்தையுடைய கண்ணபிரானைப் பார்த்து [கண்ணன் முந்தினநாள் வியூகமாகவே அன்றும் அமைத்ததை நோக்கி யென்ற படி], காணலார் - பகைவர்கள், தாம்உம்-தாங்களும், அ வியூகம்ஏ சமைத்து முந்தினார் - அந்த [மூன்றா நாளில் வகுத்தகாருட] வியூகமாகவே அணிவகுத்து(ப் போருக்கு) முற்பட்டார்கள்; (அப்பொழுது), இருவர் சேனைஉம்- இருதிறத்தாரது சேனைகளும்,ஏமமோடு-களிப்புடனே, எதிர் முனைந்து - எதிரெதிராக வந்து கலந்து, போர் முரசுஎழ எழ-போருக்குரிய பறைகள் மிகுதியாக முழங்க, பொங்கி ஆர்த்த-ஊக்கங்கொண்டு ஆரவாரித்தன; (எ - று.)*

போர்ப்பறையோசையைக் கேட்குந்தோறும் வீரர்க்குப்போரில் உற்சாகம் மிகுதியாக உண்டாதல் இயற்கை யாதலால், 'போர்முரசெழவெழப் பொங்கியார்த்த' என்றார். இச்செய்யுளில் ஒன்று நான்காம் அடிகளில் ரகர வொற்றிடைவந்த **ஆசெதுகை** காண்க.

### *4.-வீமனை வேழப்படை வளைதல்.*

**ஏழிரு புவனமு மேந்து மேருவைச்**
**சூழ்வன கிரிக்குழாஞ் சுற்று மாறுபோற்**
**பாழியம் புயகிரிப் பவனன் மைந்தனை**
**வேழவெம் படையுடை வேந்தர் சூழவே.**

*(இ-ள்.) ஏழ் இரு புவனம்உம் ஏந்து மேருவை-பதினாலு உலகங் களையுந் தாங்கவல்ல மகாமேருகிரியை, சூழ்வன கிரி குழாம் சுற்றும் ஆறு போல்- சுற்றிலுமுள்ள மலைகளின் கூட்டம் சூழ்ந்துநிற்கும் விதம் போல,-பாழி அம் புய கிரிபவனன் மைந்தனை-வலிமை யையுடைய அழகிய மலைபோலுந் தோள்களையுடைய வாயுகுமாரனான வீமனை, வெம் வேழம் படை உடை வேந்தர் சூழ - கொடிய யானைச்சேனையையுடைய பகையரசர்கள் (வந்து) வளைந்துகொள்ள, - (எ-று.)-இதில் 'சூழ' என்ற வினையெச்சத்துக்கு, மேற் பதினொரு பாடல்களிலுள்ள 'தோலாயின' முதலிய முற்றுக்க ளெல்லாம் முடிக்குஞ்சொல்லாம்.*

***உவமையணி.*** *மலை, மேலே எவ்வளவு உயர்ந்து காணப்படுகிறதோ, அவ்வளவு கீழிலும் பொருந்திப் பூமியைத் தாங்குதலால், 'பூதரம்' எனப்படுகிறதன்மைபற்றி, 'ஏழிருபுவனமுமேந்து மேரு' என்றார். 'ஏழிரும்புவனம்' என்ற பாடத்திற்கு - ஏழுதீவுகளாகவுள்ள பெரிய பூமியென்று பொருளாம். (143)*

வேறு.

*5.-அவ்யானைச்சேனையை, வீமன் தனது ஆற்றலாற் பலவாறு சிதறடித்தமையை, பதினொருபாடல்கள் வருணிக்கும்.*

***ஆலா லமெனக் கதுவா வதிரா***
***மேலாள் விழவீ மன்வெறுங் கைகளா***
***லேலா வுடலென் புகமோ தவெறுந்***
***தோலா யினசிற் சிலதோ லினமே.***

*(இ - ள்.) (அப்பொழுது), வீமன்-, ஆலாலம் என - ஹாலாஹல விஷம்போல,கதுவா- பெருஞ்சினம்பற்றி, அதிரா - ஆரவாரஞ்செய்து, மேல் ஆள் விழ -(அவ்யானைகளின்) மேலிருந்த வீரர் கீழ்விழும்படி, வெறு கைகளால் ஏலா - (ஆயுதமெதுவு மேந்தாத தனது) வறுங்கைகளால் (யானைகளை) எடுத்து, உடல் என்பு உகமோத-(அவற்றின்) உடம்பி லுள்ள எலும்புகளெல்லாம் உதிரும் படி தாக்கியதனால், சில்சில தோல் இனம்-சிலசில யானைக்கூட்டங்கள், வெறு தோல் ஆயின - வெறுந் தோல்மாத்திரம் மிகுந்தவையாயின; (எ - று.)*

***யானைக்கு இயற்கையாகவுள்ள தோல்என்னும் பெயர்க்கு*** *இங்கே கவி சாதுரியமாக* ***ஒரு காரணங் கற்பித்துக்*** *கூறியதனால், இது - '* ***நிருக்தி*** *' என்னும்* ***பிரிநிலைநவிற்சியணி*** *யின் பாற்படும். இயற்கைப்பெயர்களுக்குக் காரணங்கற்பித்தல், இவ்வணியின் இலக்கணம்.* ***இவ்வணியை அடுத்த பலகவிகளிலுங்காண்க.*** *இதில் தோல் என்ற சொல் அடுத்து வெவ்வேறு பொருளில் வந்தது-* ***மடக்கென்னுஞ்சொல்லணி.*** *"யானையும் வனப்பு மதளுந் தோல்வியுந், தோலென்றுரைப்பார் தோற்பலகையு மாகும்" என்னும் பலங்கொண்டவ னாதலால், யானைகளை இங்ஙனம் எளிதில் அழிக்கலாயிற்று. ஆலாலம் - வடமொழித்திரிபு; இது, தவறாது அழித்தற்கு உவமை.*

*இதுமுதல் பதினெட்டுக்கவிகள் - பெரும்பாலும் எல்லாச்சீர்களும் மாச்சீர்களாகிய அளவடி நான்கு கொண்ட* ***கலிவிருத்தங்கள்;*** *இவற்றை, முதற்சீர் மாச்சீரும், இரண்டாஞ்சீர் கனிச்சீரும், மூன்றாஞ்சீர் காய்ச்சீருமாகிய சிந்தடி நான்குகொண்டுவந்த* ***வஞ்சிவிருத்தங்*** *களாக அலகிடினுமாம். (144)*

***6. மேல்வாய்தமகையொடுமேலெழவுந்***
***தோல்வாயவைகீழ்விழவுந்துணியா***
***மால்வாரணம்வாய்கள்கழன்றனமுன்***
***னால்வாயெனுநாமநலம்பெறவே.***

*(இ - ள்.) மேல் வாய் தம கையொடு மேல் எழஉம் - மேல்வாய் தமது துதிக்கையோடு மேற்கிளம்பவும், தோல் வாய் கீழ் விழஉம்-தோல் மயமான கீழ்வாய்கீழே தாழவும், அவை துணியா- அவ்விரண்டு வாய்களுந் தனித்தனி அறுபட்டு,மால் வாரணம்-பெரிய மதயானைகள், முன் நால்வாய் எனும் நாமம் நலம் பெறஏ-(தொங்குகின்ற வாயையுடைமையால் தமக்கு) முன்னமேயுள்ள நால்வாயென்னும்பெயர் (இப்பொழுது எண்ணினாலும்) சிறப்புறும்படி, வாய்கள் கழன்றன- வாய்கள் கிழியப்பெற்றன; (எ-று.)*

*தொங்குகிற வாயை யுடைமையால் வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையாக முன்பு* ***நால்வா*** *யென்று பெயரிடப்பட்டுள்ள யானைகள், அப்பொழுது, மேல்வாய் கீழ்வாய் என்னுமிரண்டும் வீமன்செய்த போரில் தனித்தனி துணிபட்டு நான்கு வாயையுடையனவாய், பண்புத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகையாகவும் நால்வா யென்னலாம்படியாயின என்க.*

***7, மதிவெண்குடைமாருதிவன்புடனே***
***குதிகொண்டொருவகைகொடுகுத்துதலா***
***லதிர்சிந்துரவல்லுரமத்தனையு***
***மெதிர்சிந்துரமாகியிளைத்தனவே.***

*(இ - ள்.)* மதி வெண் குடை மாருதி-பூர்ணசந்திரன்போன்ற வெண்கொற்றக்குடையையுடைய வாயுகுமாரனான வீமன், வன்புடனே - வலிமையோடு, குதி கொண்டு - பாய்ந்து, ஒரு கைகொடு குத்துதலால்-(தனது) ஒருகையினால் [முட்டியால்] குத்தினதனால், அதிர் சிந்துரம் - முழங்குந்தன்மையனவான யானைகள், வல் உரம் அத்தனைஉம் எதிர் சிந்துரம் ஆகி - வலிய (தமது) உடம்பு முழுவதும் எதிரிலே பொடிபட்டு, இளைத்தன- மெலிந்தன;(எ - று.)

யானையைக் குறிக்கும்பொழுது, ஸிந்துரமென்னும் வடசொல்லுக்கு - சிந்துதேசத்தில் சஞ்சரிப்ப தென்று பொருள். உரம் - மார்பு; உரஸ் என்னும் வடமொழித்திரிபு: இது இலக்கணையாய், இங்கே உடம்பை யுணர்த்திற்று. நான்காமடியில், ஸிந்தூரம் - செந் துகள். *(146)*

***8. உடலிற்றசையாவுமுடைந்துநெடுங்***
***குடலற்றுவிழும்படிகுத்துதலான்***
***மிடல்பற்றியவீமன்வெறுங்கைகளா***
***லடலத்திகளத்திகளாயினவே.***

*(இ -ள்.)* உடலில் தசை யாஉம் உடைந்து - உடம்பிலுள்ள சதைகளெல்லாம் சரிந்து, நெடு குடல் அற்று விழும்படி - நீண்ட குடலும் அறுந்து கீழ்விழும்படி, மிடல் பற்றிய வீமன் - வலிமை பொருந்தின வீமசேனன், வெறு கைகளால் குத்துதலால் - ஆயுதமில்லாத (தனது) கைகளால் குத்தியதனால், அடல் அத்திகள் அத்திகள் ஆயின - வலிமையையுடைய யானைகள் எலும்புமாத்திர மாயின ; (எ-று.)

உயிர்வாழ்ந்தபொழுதுள்ள அத்தியென்னும் பெயர் உயிர் நீங்கினபின்பு வேறுவகையாலும் இருந்த தென்பது, கவியினது சதுரப்பாடு. அத்தி என்பது - இவ்விருபொருளு முடையதாதலை "யானையு மொருமரப் பெயருமென்பு, மார்கலிப்பெயரு மத்தியென்றாகும்" என்ற பிங்கலந்தையினாலுமறிக. அத்தியென்பது -யானையைக் குறிக்கும்பொழுது, ஹஸ்தீயென்னும் வடமொழித் திரிபென்றும்;எலும்பைக் குறிக்கும்பொழுது, அஸ்தியென்னும் வடமொழித் திரி பென்றுங் காண்க.ஹஸ்தம் - கை, இங்கே துதிக்கை; அதனையுடையது - ஹஸ்தீ.தசை - ஊன். *(147)*

***9. கந்தாவகன்மொய்ம்புறுகாளைபுயக்***
***கந்தாலமர்செய்துகலக்குதலிற்***
***றந்தாவளசேனைதரிப்பறவே***
***தந்தாவளமுற்றனசாயுறவே.***

*(இ - ள்.)* மொய்ம்பு உறு - வலிமைமிகுந்த, காந்தாவகன் காளை - வாயுவினதுகுமாரனான வீமன், புயம் கந்தால் - (தனது) தோள்களாகிய தூண்களால், அமர்செய்து கலக்குதலின் - போர் செய்து கலங்கச்செய்ததனால், தந்தாவளம் சேனை -யானைச் சேனைகள், தரிப்பு அற - (பின்வாங்காது) எதிர்நிற்றல் இல்லையாம்படி, சாய்உற - அழிவுண்டாக, (அஞ்சி), தம் தாவளம் உற்றன - தமது இருப்பிடத்தைஅடைந்தன; (எ-று.)

இச்செய்யுளில் முன்னிரண்டடிகளிலும் பின்னிரண்டடிகளிலும் முதலில் எழுத்துக்கள் தனித்தனி ஒத்துநின்று பொருள் வேறுபட்டு வந்தது - ***யமக***
மென்னுஞ்சொல்லணி. கந்தவஹ னென்னும் வடசொல்லுக்கு-வாசனையை வகிப்ப னென்றும்,தந்தாவளம் என்னும் வடசொல்லுக்கு - தந்தங்களை யுடைய தென்றும் பொருள். கந்து- ஸ்கந்தமென்னும் வடமொழித்திரிபு. சாயுற - மீளஎன்றுமாம். தாவளம் - இடமாதலை"சரண மாவாசம் பக்கந்தாவள நியமந் தாமம்" என்னும் நிகண்டினாலு மறிக. சாய்-முதனிலைத் தொழிற்பெயர். *(148)*

***10. வெவ்வாயுவின்மைந்தன்வெகுண்டொருதோன்***
***மொய்வாகுவில்வைத்தெதிர்மோதுதலாற்***

**கைவாலதிமெய்தலைகால்கள்கரந்**
**தவ்வாரணம்வாரணமாகியதே.**

*(இ - ள்.) வெம் வாயுவின் மைந்தன் - கொடிய வாயுவினது குமாரனான வீமன், வெகுண்டு - கோபித்து, ஒரு தோல் - ஒரு யானையை, மொய் வாகுவில் வைத்து - வலிய கையில் எடுத்துக் கொண்டு, எதிர் மோதுதலால் - எதிரே தாக்கியதனால், கை வாலதி மெய் தலை கால்கள் கரந்து - கையும் வாலும் உடம்பும் தலையும் கால்களும் மறைந்து, அ வாரணம் - அந்தயானை, வாரணம் ஆகியது - கோழிபோலச் சுருண்டது; (எ-று.)*

*வாரணமாகியது என்பதற்கு - சங்குபோலாயிற்று என்று உரைப்பாருமுளர். "யானையுங் கோழியுஞ் சங்கும் வாரணம்" என்ற திவாகரத்தை இங்கு அறிக. வாரணம் - கடலென்றுகொண்டு, எல்லா வுறுப்புக்களும் தெரிதலின்றிக் கருநிறமொன்றே தெரிதலால், இவ்வாறு கூறியதென உரைவகுத்தாரு முளர்: அது சிறவாதென்பது மேற்பாடலை நோக்கின் விளங்கும். வாகு - இங்கே கை; "தோளுற்றொர்தெய்வந் துணையாய்" என்ற சிந்தாமணியில், 'தோள்' என்பதுபோல.*
*(149)*

***11.** கம்பித்தனகாருடல்பேருயிருங்*
**கும்பித்தனவாயுகுமாரனிவ**
**னம்பொற்கரபங்கயமள்ளுதலிற்**
**றும்பிக்குலமாயினதும்பிகளே.**

*(இ - ள்.) கார் உடல் கம்பித்தன - கரிய உடல் நடுங்கின வாகும்படியும், பேர்உயிர்உம் கும்பித்தன - பெரிய உயிரும் உள்ள டங்கினவாம்படியும், வாயு குமாரன்இவன்-வாயுவின்மகனான இவ்வீமன், அம் பொன்கரம் பங்கயம் அள்ளுதலின் -அழகிய பொன்னிறமான தன் கைகளாகிய தாமரைமலர்களில் எடுத்ததனால்,தும்பிகள் - யானைகள், தும்பி குலம் ஆயின-வண்டின் கூட்டமாயின; (எ - று.)*

*"தும்பியே களிறு வண்டாம்" என்ற நிகண்டையுங் காண்க, கம்பித்தன. கும்பித்தன - வடசொல்லடியாப்பிறந்த பலவின்பால் முற்றேச்சங்கள்; கம்பம்- நடுக்கம்:கும்பித்தல்-ஒடுங்குதல், கரிய பெரிய யானைகள், கரியசிறிய வண்டுகள்போலஉடல்சுருங்கின என்க, யானையை வண்டென்பதற்கு ஏற்ப, வீமன்கையைத்தாமரைமல ரென்றார்:* ***உருவகவணி, பி-ம்:*** *தம்பித்தனகாருடல்,*

***12.** பொன்னாகமணிப்புயன்வெங்கதையான்*
**முன்னாகமலைந்துமுருக்குதலா**
**லெந்நாகமுநாகமெனும்படியே**
**மன்னாகவமெங்கும்மடிந்தனவே.**

*(இ - ள்.) பொன் நாகம் மணி புயன் - பொன்மலையாகிய மகா மேருபோன்றஅழகிய தோள்களையுடைய வீமன், வெம் கதையால் - கொடிய (தனது)கதாயுதத்தால், முன் ஆக மலைந்து - எதிராகப் போர்செய்து, முருக்குதலால் -அழித்ததனால், எ நாகம்உம் - எல்லா யானைகளும், நாகம் எனும் படிஏ -மலைகளென்று உவமைசொல்லும்படி, மன் ஆகவம் எங்கும் - பெரிய போர்க்களம்முழுவதிலும், மடிந்தன - இறந்துவிழுந்துகிடந்தன; (எ-று.)*

*"நாகம் விண் குரங்கு புன்னை நல்தூசு மலைபாம்பி யானை" என்பது நிகண்டு. பொன் ஆகம் எனப் பிரித்தால், அழகிய அல்லது ஜயலக்ஷ்மிதங்குகிற மார்பென்னலாம். நாகம் - யானையைக் குறிக்கும்பொழுது, மலையில் வாழ்வதென்றும் [நகம்-மலை]; மலையைக் குறிக்கும்பொழுது, சலியாததென்றும் காரணங் காண்க.* ***பி-ம்:*** *மின்னாக மணிப்புயன். (151)*

***13. கோடுங்கரமும்பறியக்குதிகொண்***
***டோடுங்குருதிப்புனலூடுடல***
***மூடும்படியாவருமூழ்குதலா***
***லாடுங்கயமாயினவக்கயமே.***

*(இ - ள்.) கோடுஉம் கரம்உம் பறிய - தந்தங்களுந் துதிக்கையும் பிளந்தொழிய, குதிகொண்டு ஓடும் - (அப்பொழுது அந்தக் கொம்புங் கோடும் பறியுண்ட இடத்தினின்று) பாய்ந்தோடுகின்ற, குருதி புனலூடு - இரத்த வெள்ளத்தில்,உடலம் மூடும் படி யாவர்உம் மூழ்குதலால் - (தம்தம்) உடம்பு மறையும்படி பலரும்மூழ்கவிருந்ததனால், அ கயம்- அவ்யானைகள், ஆடும் கயம் ஆயின- நீராடுதற்குரியகுளங்களாயின; (எ - று.)*

*தந்தங்களுந் துதிக்கையும் பறியப் பாயும் இரத்தப்பெருக்குக்கு, கரைகளும் மதகும் உடையப் பாயும் புதுநீர்வெள்ளம் உவமையாம், "குளமுமாழமு நீருங் குறையுங், களிறும் பெருமையு மென்மையுங் கயமெனல்" என்பது பிங்கலந்தை, கயம்- யானையைக் குறிக்கும்பொழுது, கஜமென்னும் வடமொழித் திரிபாம், புனலூடு. ஊடு- ஏழனுருபு, உடலம். அம்-சாரியை, (152)*

***14. வீசுந்தமகைம்முதன்மெய்ம்முழுதுங்***
***கூசும்படிசிற்சில்குழம்புகளாய்***
***மூசுங்களபக்குலமொய்ம்பனுடற்***
***பூசுங்களபக்களிபோன்றனவே.***

*(இ - ள்.) மூசும் சில் சில் களபம் குலம்-நெருங்கிவருகிற சிலசில யானைகளின்கூட்டம்,-கூசும்படி - (பார்ப்பவர்) அஞ்சும் படி, வீசும் தம கை முதல் மெய்முழுதுஉம் குழம்புகள் ஆய் - முன்னேவீசுகிற தம்முடைய துதிக்கை முதலாகஉடம்புமுழுவதுங் குழைசேறாகி, மொய்ம்பன் உடல் பூசும் களபம் களி போன்றன -வலிமையையுடைய வீமசேனனது உடம்பில் பூசுதற்கு எதிர்வைத்த கலவைச்சந்தனக்குழம்பை யொத்தன;*

*"கலவையும் யானைக் கன்றுங் களபம்" என்றார் பிங்கலத்தையிலும். களபம்- யானையைக்குறிக்கும்பொழுது, வடசொல்; பத்துப் பிராயத்து யானைக்கன்றுக்குப் போதகமென்றும்,-* ***முப்பதுபிராயத்து யானைக் கன்றுக்குக் களப*** *மென்றும் பெயர்கூறுதல், வடமொழிமரபு. கலவை- குங்குமப்பூ முதலிய பலவகைவாசனைப்பண்டங்கள் கலக்கப்பெற்ற செந்நிறச்சாந்து. கலவை, வெற்றிமகளை மணந்திடுதற் கென்க. (153)*

***15. கிரியேயெனவந்தெதிர்கிட்டினபுன்***
***பொரியேயெனவானிடைபுக்கனபோ***
***ரரியேறனையான்வலிமைக்கவர்தங்***
***கரியேகரியல்லதுகண்டவர்யார்.***

*(இ - ள்.) கிரிஏ என வந்து எதிர் கிட்டின - மலைகளேயென்று உவமை கூறும்படி எதிரில் வந்து நெருங்கின யானைகளெல்லாம், புல் பொரிஏ என வானிடைபுக்கன - அற்பமானநெற்பொரிகளே யென்று உவமை கூறும்படி (அப்பொழுதுவீமனால் எளிதில் எறியப்பட்டு) ஆகாயத்திற் பறந்தன; போர் அரி ஏறுஅனையான் வலிமைக்கு - போரில் ஆண்சிங்கத்தை யொத்தவனான வீமனதுபலத்துக்கு, அவர்தம் கரிஏ கரி அல்லது - அவர்களது [பகைவர்களது] யானைகளே சாட்சியில்லாமல், கண்டவர் யார் - (வேறே உள்ளபடி) கண்டவர் எவர்? [எவருமில்லை யென்றபடி]; (எ - று.)*

*எவருங் கண்கொண்டு காணவொண்ணாதபடி உக்கிரமாக வீமன் யானைகளைத் தனதுபேராற்றலால் அழித்திட்டன னென்பதாம். "கரி யென்பதிருந்தைசான்று கறையடி சேகு நாற்பேர்" என்பது நிகண்டு. பலபலவகையாக வீமனால்அழிக்கப்பட்ட யானைகளைக்கொண்டே அவனதுவல்லமையை நன்கு*

*அறியலாம்என்பது, பின்னிரண்டடியின் கருத்து, பற்பல யானைக்கூட்டத்தை ஒருங்கேஅலட்சியமாக அழித்தல்பற்றி, இங்கே வீமசேனனுக்குச் சிங்கவேற்றைஉவமைகூறினார். (154)*

### *16.-வீமன் இங்ஙன் கடுமையாகப் பொருவதனால் எதிர்மன்னர் தம்வாகனங்களோடு வென்னிடுதல்.*

***இவ்வாறுவெகுண்டிவனெற்றுதலுங்***
***கைவாரணவேலைகலக்கமுறத்***
***தெவ்வாகியமன்னவர்தேர்களொடும்***
***வெவ்வாசிகடம்மொடும்வென்னிடவே,***

*இதுவும், மேற்கவியும் குளகம்,*

*(இ-ள்.) இ ஆறு - இப்படி, வெகுண்டு - கோபங்கொண்டு, இவன்-இவ்வீமன், எற்றுதலும்-தாக்கினவளவிலே, கை வாரணம் வேலை- துதிக்கையையுடைய யானைச்சேனையாகிய கடல், கலக்கம் உற-மிகக்கலங்க,-தெவ் ஆகிய மன்னவர் - பகைவராகிய அரசர்கள், தேர்களொடுஉம்-இரதங்களோடும், வெம் வாசிகள் தம்மொடுஉம்- உக்கிரமான குதிரைகளோடும், வென் இட - புறங்கொடுத்தோட,(எ- று.) -'உடைக்கின்றமை கண்டு உரகத்துவசன்... அவன்மேற்போனான்' என அடுத்த கவியிலே முடியும்.*

*வாரணமென்பது-யானை கோழி சங்குதடை முதலியபலபொருள் குறிக்கும் ஒருபெயர்த்திரிசொலாதலால், அது இங்கே இன்ன பொருளதென வெளிப்படையாக்குதற்கு, 'கைவாரணம்' என்றார்.*

### *17.-அதுகண்டு துரியோதனன் வீமன்மீது சேறல்.*

***உடைகின்றமைகண்டுரகத்துவசன்***
***குடையுங்கொடியுங்குளிர்மாமுரசும்***
***படையுஞ்சிலதம்பியரும்பலரும்***
***புடைகொண்டுவரப்போனானவன்மேல்.***

*(இ - ள்.) உடைகின்றமை-(இங்ஙனம் தன்சேனை) அழிகின்றதை, கண்டு- பார்த்து, உரகம் துவசன்-பாம்புக்கொடியனான துரியோதனன், குடைஉம் கொடிஉம் குளிர் மா முரசுஉம் படைஉம் சில தம்பியர்உம் பலர்உம் புடைகொண்டு வர- வெண்கொற்றக்குடையும் துவசமும் அச்சத்தைத்தருகிற பெரியபேரிகைகளும் சேனைகளும் சில தம்பிமார்களும் வேறுபலரும் பக்கத்திற்சூழ்ந்துவர, அவன் மேல்போனான்-அவ்வீமன்மீது (போருக்குச்) சென்றான்; (எ-று.)-இனி, குளிர் மா முரசு-ஒலிக்கிற சிறந்தபேரிகை யெனவுமாம். (156)*

### *18.-துரியோதனன் வீமனுடைய வில்லும் கவசமும் அழியக் கணை தொடுத்தல்.*

***வீமற்கெதிர்நின்றவன்வில்லறவுஞ்***
***சேமக்கவசஞ்சிதைவுற்றிடவும்***
***நாமக்கணையேவினனாயகனா***
***மாமுத்தமதிக்குடைமன்னவனே.***

*(இ - ள்.) நாயகன் ஆம்-(குருநாட்டுக்குத்) தலைவனாகிய, மா முத்தம் மதி குடை மன்னவன் - சிறந்த [பெரிய] முத்துக்களினாலாகிய பூர்ணசந்திரன்போன்ற வெண்கொற்றக்குடையையுடைய துரியோதனராசன், வீமற்கு எதிர் நின்று-(போய்) வீமசேனனுக்கு எதிரிலே நின்று, அவன் வில் அறஉம்-அவனது வில் துணிபடவும், சேமம் கவசம் சிதைவுற்றிடஉம் -(உடம்புக்குப்)*

*பாதுகாப்பாகவுள்ள (அவனது) கவசம்அழிவடையவும், நாமம் கணை ஏவினன்-அச்சத்தைத்தருகிற அம்புகளைச் செலுத்தினான்; (எ - று.)*

*சேமம்-க்ஷேமம் என்னும் வடமொழித்திரிபு. நாம் - அச்சப் பொருளுணர்த்துவதோர் உரிச்சொல்: அம்-சாரியை. (157)*

### *19.-வீமன் துரியோதனன்மீது கடுமையாகக் கணைதொடுத்தல்.*

***ஆறம்பினிலற்றரவத்துவச***

***நூறம்பகன்மார்பினுழைந்தனபின்***

***வேறம்புதொடுத்திலன்வீமனவன்***

***மாறம்புதொடுத்தனன்மற்றிவன்மேல்.***

*(இ - ள்.) (அப்பொழுது வீமன்விட்ட), ஆறு அம்பினில்-ஆறு பாணங்களால், அரவம் துவசம்-(துரியோதனனது) பாம்புக்கொடி, அற்று - அறுபட, நூறு அம்பு- (அவ்வீமனது) நூறுபாணம், அகல் மார்பில் நுழைந்தன-(துரியோதனனது) பரந்த மார்பிலே புதைந்து ஊடுருவின; பின்-அதன்பின், வீமன்-, வேறு அம்பு தொடுத்திலன்-வேறுபாணன் தொடுத்தானில்லை; அவன் - அத்துரியோதனன், மற்று-பின்பு, இவன்மேல்-இவ்வீமன்மேல், மாறு அம்பு தொடுத்தனன்-எதிரம்புகளைப்பிரயோகித்தான்; (எ - று.)*

*அரவத்துவசன் மார்பில் நூறம்பு நுழைந்த அப்பொழுதில் வீமன் வேறம்புதொடுக்காமை,* **தழிஞ்சி** *யென்னும் புறப்பொருள் திணையின் பாற்படும்; அது-சாய்ந்தார்மேற் படராமை. (158)*

### *20.-துரியோதனன் கடுங்கணைவிடவே வீமன் வெகுளுதல்.*

***சிங்கக்கொடியற்றணிதேர்சிதைவுற்***
***றங்கத்தினுழைந்தனவம்புகளுந்***
***துங்கக்கடகத்திரடோள்புடையா***
***வெங்கட்கனல்வீமன்வெகுண்டனனே.***

*(இ - ள்.) (துரியோதனன் விட்ட அம்புகளால்), சிங்கம் கொடி அற்று- சிங்கத்தின்வடிவமெழுதிய (வீமனது) துவசம் துணிபட, அணி தேர் சிதைவுற்று- அழகிய தேரும் அழிவடைய, அங்கத்தின்உம் அம்புகள் நுழைந்தன - வீமனுடம்பிலும் துரியோதனனம்புகள் தைத்துச்சென்றன; (அப்பொழுது), வெம் கண்கனல் வீமன்- உக்கிரமானகண்களிற் கோபாக்கினியுடைய வீமசேனன், துங்கம் கடகம்திரள் தோள் புடையா- உயர்வானவையும் கடக மென்னும் ஒருவகையணியையணிந்தவையும் திரண்டுள்ளவையுமான தனது தோள்களைக் (கைகளால்) கொட்டி,வெகுண்டனன் - சினங்காட்டினான்; (எ-று.)--அற்று, உற்று- எச்சத்திரிபுகள்.இரண்டாம் அடியில் உம்மை மாறுக. தோள்புடைத்தல்- கோபாவேசம்.*

### *21.-வீமன்நொந்தானென்று தம்பிமார்முதலியோர் துணையாகவருதல்.*

***நொந்தானிவனென்றுநுதிக்கதிர்வே***
***லந்தார்முடிமன்னரநேகருடன்***

**வந்தார்பலதம்பியர்மைத்துனருங்**
**கொந்தார்தொடைவீரகுமாரருமே.**

*(இ - ள்.) (அப்பொழுது),  இவன் நொந்தான் என்று - இவ்வீமன்  (துரியோதனனம்புகளால்) வருத்தமுற்றா னென்று கருதி, நுதி கதிர் வேல் அம் தார்  முடி மன்னர் அநேகருடன் - கூர் நுனியையும் ஒளியையுமுடைய வேலாயுதத்தையும்  அழகிய மாலையையும் கிரீடத்தையு முடைய பல அரசர்களுடனே, பல தம்பியர்  மைத்துனர்உம்-தம்பிமாரும் மைத்துனன்மாருமாகிய அநேகம்பேரும், கொந்து ஆர்  தொடை  வீர குமாரர்உம் - பூங்கொத்துப் பொருந்தின மாலையையுடைய வீரர்களானஇராசகுமாரர்களும், வந்தார் - (வீமனுக்கு உதவியாக) வந்தார்கள்;  (எ-று.)*

*நுதி - வடசொல். மைத்துனர் - இங்கே, மனைவியின் உடன் பிறந்தவர்;  என்றது, திரௌபதிக்கு உடன்பிறந்தமுறையாகுபவரை. கொந்து -எதுகை நோக்கிய  மெலித்தல். கொந்து ஆர் தொடை- திரட்சி பொருந்தின மாலை யென்றும்  உரைக்கலாம்.                                      (160)*

*22.-துரியோதனன்பக்கத்தும் பலமன்னர் துணையாகத்திரளுதல்.*

**மலருங் குடைமன் னவர்வந் தமைகண்**
**டலருங் கொடிவா ளரவோ னருகே**
**பலருங் கரிதேர் பரியா ளுடனே**
**சிலரும் புவிபா லர்திரண் டனரே.**

*(இ - ள்.) (இவ்வாறு வீமனுக்குத் துணையாக), மலரும்  குடை  மன்னவர்  வந்தமை - பரந்துவிளங்கும் வெண்கொற்றக் குடையையுடைய பல அரசர்கள்  வந்ததை, கண்டு-, பலர்உம் கரி தேர் பரி ஆளுடனே - யானைவீரரும்  தேர்வீரரும்குதிரைவீரரும் காலாள் வீரரும் ஆகிய (நால்வகை) வீரர்  அநேகரோடும், புவிபாலர்சிலர் உம் - சில அரசர்களும், அலரும் கொடி வாள்  அரவோன் அருகுஏதிரண்டனர் - விரிந்துவிளங்கும் துவசத்திலே கொடியபாம்பின்  வடிவத்தையுடையதுரியோதனனது அருகிலே (உதவியாக வந்து) கூடினார்கள்;  (எ - று.)*

*வாள் அரவு-வாள்போலஉக்கிரமான அர வென்க; இனி, ஒளியையுடைய  பாம்பெனினுமாம். மூன்றாமடியை, கரிதேர்பரி ஆள் பலருடனேயும் என  மொழிமாற்றுக. புவிபாலர் - பூமியைக் காப்பவர்.                 (161)*

வேறு.

*23.-இருபடையிலும் மன்னர் கடுமையாகப்பொருது ஆவியிழத்தல்.*

**எதிர்ந்தார் மன்ன ரிருதிறத்து மொருவர்க் கொருவ**
**ரிடையிடைநின்**
**றதிர்ந்தார் சிறுநாண் பேரொலியா லுடையா வல்ல**
**வகிலாண்ட**
**முதிர்ந்தார் போரிற் றொடுகணையான் முரட்டோ**
**டுணிந்து முடிதுணிந்தும்**
**உதிர்ந்தார் தத்த முடனிலத்தி லுயர்ந்தா ராவி**
**யுயர்வானில்,**

*(இ - ள்,) இரு திறத்துஉம் - இரண்டுபக்கத்திலும், மன்னர் - பல அரசர்கள்,  ஒருவர்க்கு ஒருவர் எதிர்ந்தார் - ஒருவரோடு ஒருவர் எதிரிட்டார்கள்;  இடை  இடைநின்று - (அவ்யுத்தகளத்தின்) இடந்தோறும் பொருந்திநின்று, சிறு நாண்  அதிர்ந்தார்- சிறியவில் நாணியை(க் கைவிரலால் தெறித்து) ஒலிசெய்தார்கள்;  பேர் ஒலியால் -அந்தப் பெரிய ஓசையினால், அகில அண்டம் உடையா அல்ல  -*

*எல்லாவண்டங்களும் (மிகஅதிர்ந்து) உடைபடாதனவல்ல[யாவும் உடைபட்டன];*
*(இன்னும்அவர்), தொடுகணையால் போரில் முதிர்ந்தார் - பிரயோகிக்கின்ற அம்புகளால்போர்செய்தலில் மிக்கார்கள்; (பின்புபகைவர்படைக்கலங்களால்), முரண் தோள்துணிந்துஉம்-வலிமையையுடையதோள்கள் அறுபட்டும், முடி துணிந்துஉம்-தலையறுபட்டும், தம் தம் உடல் நிலத்தில் உதிர்ந்தார் - தம்தமது உடம்பு தரையிலேசிதறப்பெற்றார்கள்; ஆவி உயர் வானில் உயர்ந்தார் - (தத்தம்) உயிர் சிறந்தவீரசுவர்க்கத்தில் ஏறப்பெற்றார்கள் [இறந்தார்கள்]; (எ - று.)*

*மன்னர் உடல் உதிர்ந்தார், ஆவி உயர்ந்தார் - **திணைவழுவமைதி:** 'பேரொலியாலுடையாவல்லவகிலாண்டம்' என்ற வாக்கியம், வில்நாணொலியைச் சிறப்பித்துக்கூறவந்த இடைப்பிறவரல்.*

*இதுமுதற் பத்துக் கவிகள் - கீழ்ச்சருக்கத்தின் முதற்கவி போன்ற **அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள்.** (162)*

### *24.-வீமன் துரியோதனனுடையவில்முதலியனதுணியஎய்து நகைத்தல்.*

***தாமத்தெரியல்வலம்புரியோன்றடந்ததாமரைக்கைத்தனுத்தறியச்***
***சேமக்கவனப்பவனகதிப்பரிமாநான்குஞ்சிரந்துணிய***
***மாமொட்டொடிந்துகொடுஞ்சியுடன்மான்றேர்சிதையமார்புருவ***
***நாமக்கணைகள்பலபடவில்லுகைத்தானின்றுநகைத்தானே.***

*(இ - ள்.) (அப்பொழுது), தாமம் - ஒளியையுடைய, வலம்புரி தெரியலோன்- நஞ்சாவட்டைப் பூமாலையையுடைய துரியோதனனது, தட தாமரை கை - பெரிய தாமரைமலர்போன்ற கையிலுள்ள, தனு - வில், தறிய - முறிபடவும்,-சேமம்- நன்மையுள்ள, கவனம் பவனம் கதி - நடையிலே வாயுவினது சஞ்சாரத்தை யொத்த [விரைந்த], பரிமா நான்குஉம்- (துரியோதனனதுதேர்க்) குதிரைகள் நாலும், சிரம் துணிய - தலை அறுபடவும்,-மா மொட்டு ஒடிந்து கொடுஞ்சியுடன் மான் தேர் சிதைய - பெரிய மொட்டு என்னுந் தேருறுப்பு ஒடிபட்டுப் கொடுஞ்சியென்னும் உறுப்போடு குதிரைகள்பூட்டிய (துரியோதனனது) தேர் அழியவும், மார்பு உருவ - (அவன்) மார்பு துளைபடவும், நாமம் கணைகள்-அச்சத்தை விளைக்கும்படியான அம்புகளை, பலபட - பலவாக, வில் உகைத்தான் - (தனது) வில்லினின்று செலுத்தி,(வீமன்), நின்று நகைத்தான் - எதிர்நின்று (அவனது தோல்வியை நோக்கிச்)சிரித்தான்; (எ - று,)*

*இங்கே, நகைப்பு-பகைவனை இகழ்தல் காரணமாகப் பிறந்தது. இப்பாட்டுக்கு 'வீமன்' தோன்றா எழுவாயென்பதை, அடுத்தகவியில் "அவனைப் பெற்றெடுத்தோன்" என்பதனா லறிக. வலம்புரித் தெரியலோன் என்பது-கைத்தனு, பரி, தேர், மார்பு என்றநான்கோடும் இயையும். மொட்டு - தேரில்வீரன் ஏறியிருக்கும் ஆசன மென்றும்,தேரின்கூம்பு என்றும் கூறுவர். கொடிஞ்சி - தாமரை முகைவடிவாகச் செய்ததேருறுப்பு என்றனர் நச்சினார்க்கினியர். மா என்னும் விலங்கின் பொதுப்பெயர்,னகரமெய்ச்சாரியை பெற்று இங்கே சிறப்பாய்க் குதிரையை உணர்த்திற்று. (163)*

### *25.-சகுனிமுதலியோர் துரியோதனனை எடுத்தணைத்தல்.*

***முன்னாளமரிற்கடோற்கசன்றான்முனைவெஞ்சரத்தான்மூழ்குவித்தான்***
***பின்னாண்மீளப்பிறைக்கணையாற்பிறந்தாளவனைப்பெற்றெடுத்தோன்***
***என்னாவிரங்காமெய்ந்நடுங்காவெடுத்தாரணைத்தார்சகுனியுமப்***
***பொன்னார்தடந்தேர்ச்சல்லியனுமுதலாவுள்ளபூபாலர்.***

*(இ - ள்.) (அப்பொழுது), சகுனியும்-, பொன் ஆர் தட தேர் சல்லியன் உம்-பொன்னினா லமைந்த [அழகுநிறைந்த] பெரிய தேரையுடைய சல்லியனும், முதல் ஆஉள்ள - முதலாகவுள்ள, அ பூபாலர்- அந்த [துணை வந்த] அரசர்கள், -'முன் நாள்அமரில்-முந்தின [மூன்றாவது] நாட் போரில்,*

*கடோற்கசன்-, முனை வெம் சரத்தால்- கூர் நுனியையுடைய கொடிய அம்புகளால், மூழ்குவித்தான்- (நமது துரியோதனனை)முழுகச் செய்தான்; பின் நாள் - அடுத்த இந்நாளில், அவனை பெற்று எடுத்தோன்; -அக்கடோத்கசனைப் பெற்ற தந்தையான வீமன், பிறை கணையால் மீள பிளந்தான்- அர்த்தசந்திரபாணங்களால் மறுபடியும் (இத்துரியோதனனைப்) பிளந்திட்டான்,'என்னா - என்று சொல்லி, இரங்கா - மன*
*மிரங்கி, மெய்நடுங்கா - (இவனுக்கு என்னாகுமோ என்று எழுந்த அச்சத்தால் தம்) உடம்பு நடுங்கி, எடுத்தார் அணைத்தார் - (அத் துரியோதனனை) எடுத்து அணைத்துக்கொண்டார்கள்; (எ - று.)*

*கடோற்கசன் துரியோதனனை முனைவெஞ்சரத்தால் மூழ்குவித்ததைக் கீழ்ச்சருக்கத்தில் "துவசம்பிளந்து" என்ற ஏழாங்கவியிற் காண்க. சரத்தால் மூழ்குவித்தல்-மேலே அம்புமழைபொழிந்து நிறைத்து அவனுருத்தெரியாது மறைத்தல். இங்கே ' பிறைக்கணை' என்றதனால், கீழ்க்கவியில் 'நாமக்கணை' என்றது-பிறைமுக வம்புகளை யென்க. அச்சல்லியனென இயைத்தால், அகரச்சுட்டு- வஞ்சனைவழியால் துரியோதனனுக்குத் துணைவனான தன்மையைக் குறிக்கும். சல்லியன் தேர்செலுத்துதலில்வல்லவ னாதலால், தேர்ச் சல்லிய னெனப்பட்டான். (164)*

### *26.-துரியோதனனன் தளர்ந்ததுகண்டு அவன்தம்பிமார் போரில்மூளுதல்.*

***தம்முன்றளர்ந்தநிலைகண்டுதரியாராகித்தம்பியர்க***
***ளெம்முன்பொருதற்கிசைவார்களிசைவீரென்றென்றிகல்கூறித்***
***தெம்முன்செவிகள்செவிடுபடச்சிறுநாணெறிந்துதேர்கடவி***
***முன்முன்கடிதிற்கணைபொழிந்தார்முகுந்தன்றடுத்தமுகில்போல்வார்.***

*(இ - ள்.) தம் முன் - தங்கள் தமையனாகிய துரியோதனன், தளர்ந்த- தளர்ச்சியடைந்த, நிலை- நிலைமையை, கண்டு - பார்த்து, தம்பியர்கள்-(அவனது) தம்பிமார்கள் பலர், தரியார் ஆகி - மனம் பொறாதவர்களாய், எம்முன் பொருதற்குஇசைவார்கள் இசைவீர் என்று என்று இகல் கூறி - 'எங்களெதிரிற் போர்செய்வதற்குப் பொருந்துபவர்கள் பொருந்துவீர்களாக' என்று பலமுறை (தங்கள்)வல்லமையை யெடுத்துச்சொல்லி, தெவ் முன் - பகைவர்களெதிரில், செவிகள் செவிடுபட சிறு நாண் எறிந்து - (கேட்பவரின்) காதுகள் (ஒலிமிகுதியால்) செவிடாகும்படிசிறிய வில்நாணியைத் (தம் கைவிரலால்) தெறித்து (ப்பேரொலியை உண்டாக்கி), தேர்கடவி-(தம்தம்) தேரைச் செலுத்திக் கொண்டு, முன் முன் - (ஒருவர்) முன்(ஒருவராக) முந்திவந்து, கடிதின் - விரைவாக, முகுந்தன் தடுத்த முகில் போல்வார் -கண்ணபிரானால் (கோவர்த்தனமலையைக்கொண்டு) தடுக்கப்பட்ட மேகம்போல்பவர்களாய், கணை பொழிந்தார்-அம்புமழையைச் சொரிந்தார்கள்; (எ-று.)*

*இரண்டாம்அடி-வீரவாதம். முன்முன்வருதல், போரில் அவர்களுக்கு உள்ள ஊக்கத்தை விளக்கும். முகுந்தன் தடுத்த முகில் போல்வார் என்ற உவமை, அவர்கள்வீமனை ஒன்றுஞ்செய்யமாட்டாமல் அவனால் எளிதில் வெல்லப் படுதலைக் குறிக்கும்.தம்முன் - தமக்குமுன்பு பிறந்தவன்: முன்- காலவாகுபெயர். தெவ்+முன்=தெம்முன்.இசைவார்கள் இசைவீர்-முன்னிலையிற் படர்க்கைவந்த இடவழுவமைதி.இச்செய்யுளில் இனவெதுகை காண்க. (165)*

### *27.-இதுவும்அடுத்த கவியும்-வீமன் வந்தவரை யெதிர்த்துவென்று ஐந்துதம்பிமாரைச் சுவர்க்கம் அனுப்பினமை கூறும்.*

***வின்மேல்விசையிற்கடும்பாணமேன்மேனிறுத்திவேந்தரைப்***
***பார்த்தென்***
***மேனினைவென்றவரவர்பேரிதந்துணித்துச்சிலைதுணித்துத்***
***தன்மேல்வந்ததம்பியரிற்றரியாதுடன்றவைவர்க்கு***
***மன்மேலெய்தவாளியெனத்தொடுத்தானைந்துவயவாளி.***

*(இ - ள்.) (அப்பொழுது வீமன்), வில்மேல் - (தனது) வில்லிலே, விசையின் -வேகத்தோடு, கடு பாணம்-கொடிய அம்புகளை, மேல் மேல் நிறுத்தி - மேலேமேலேவைத்துத் தொடுத்து, வேந்தரை பார்த்து - (எதிர்த்து வந்த அந்த) அரசர்களைநோக்கி, மேல் நினைவு என் என்று - இனிமேல் (உங்கள்) ஆலோசனை என்ன வென்று (இகழ்ச்சிதோன்றச்) சொல்லி, அவர் அவர் - அந்தந்தஅரசர்களது, பேர் இரதம்- பெரியதேர்களை, துணித்து-அழித்து, சிலை- விற்களை,துணித்து-அறுத்து, தன்மேல் வந்த தம்பியரில் தரியாது உடன்ற ஐவர்க்குஉம் -தன்மேல் (போருக்கு) வந்த (துரியோதனன்) தம்பிமார்களுள் பொறுக்கக்கூடாதபடி[மிகுதியாகப்] போர் செய்த ஐந்துபேருக்கும், மன் மேல் எய்த வாளி என (கீழ்த்)துரியோதனன்மேல் (தான்) தொடுத்த அம்புகள்போல, ஐந்து வயவாளி- வெற்றியைத்தருதற்குரிய ஐந்தபாணங்களை, தொடுத்தான்- செலுத்தினான்; (எ-று.)*

*முன்இரண்டடி - வீமனதுதொழில்; துணித்துத்தொடுத்தான் என்க: துரியோதனன் தம்பிமாரது தொழிலாயின், துணித்துத் தன்மேல்வந்த என்க. என் மேல்நினைவு என்றது, இனி அழிவுநிச்சயம் என்பதைக் காட்டும். ஐவர்பெயர் - அடுத்த கவியிற் கூறப்படும். மன்மேல்எய்தவாளி - கீழ் 24-ஆம் பாட்டிற் காண்க. (166)*

***28. சேனாவிந்துசுதக்கணன்பொற்றேர்ப்பிங்கலசன்சலாசந்தன்
ஆனாவீமவாகுவெனுமடல்வாணிருபரைவரையும்
வானாடாளும்படிவிடுத்தான்வன்பாற்றம்மையைவரையுங்
கானாள்கென்றகாவலனைப்போல்வான்வீரக்கழல்வீமன்.***

*(இ - ள்.) வன்பால் - கொடுமையால், தம்மை ஐவரைஉம் - (பாண்டவர்களாகிய) தங்களைந்து பேரையும், கான் ஆள்க என்ற - 'காட்டையாளுவீர்களாக' என்று சொல்லியனுப்பின, காவலனை - துரியோதனராசனை, போல்வான்-ஒப்பவனாகிய, வீரம் கழல்வீமன் - வீரக்கழலையுடைய வீமன்,- சேனாவிந்து-,சுதக்கணன்-,பொன்தேர்- பொன்னாலாகியதேரையுடைய, பிங்கலசன்-,சலாசந்தன்- ,ஆனா-(போரில்) நீங்காத, வீமவாகு-,எனும்-என்று பேர்சொல்லப்படுகிற, அடல் வாள் நிருபர் ஐவரைஉம் - வலிமையையுடையவாளாயுதத்தையுடைய அரசர்கள் ஐந்து பேரையும், வான் நாடு ஆளும்படிவிடுத்தான் - வீரசுவர்க்கத்தை ஆளும்படி அனுப்பினான்; (எ-று.)*

*துரியோதனனும் வீமனும் சமபலமுடையவராதலாலும் துரியோதனன் பஞ்சபாண்டவரை இந்நாட்டைவிட்டு வனமடையச்
சொல்லி அனுப்பியது போல, வீமன் இப்பொழுது துரியோதனன் தம்பிமாரைவரை இவ்வுலகத்தைவிட்டு விண்ணுலகமடையும்படி அனுப்புதலாலும், வீமனுக்குத் துரியோதனனை உவமைகூறினார். வானாடாளும்படிவிடுத்தல்-கொல்லுதல்:* **பிறிதினவிற்சி.** *பீமபாஹு- வடசொல்; பகைவர்க்குப் பயங்கரமான தோள்களையுடையா னென்று பொருள். ஆளுதல் - இங்கே, சேர்தல். வன்பால் - பலாத்காரமாக என்றபடி. ஸேநாபதி, ஸுஷேணன், ஸுலோசநன் ஜலஸந்தன், பீமபாஹு என வடநூலிற் பெயர் காணப்படுகிறது.*

***29.-தருமபுத்திரன்பக்கத்து வீமன் முதலியோர்
ஆங்காங்குப் போர்புரியவே துரியோதனன்சேனை யுடைதல்.***

**ஒருபால்வீமன்சிலைவிசயனொருபாலொருபாலபிமன்னு
வொருபானகுலன்சாதேவனொருபாலொருபாலுரகேச
னொருபாலரக்கன்பாஞ்சாலனொருபாலடலுத்தமபானு
வொருபாலுடன்றுபொரப்பொரவேயுடைந்ததரசன்பெருஞ்சேனை,**

*(இ - ள்.) ஒரு பால் - ஒருபக்கத்தில், வீமன்-வீமசேனனும், ஒரு பால்-, சிலைவிசயன் - வில்லில்வல்ல அருச்சுனனும், ஒரு பால்-, அபிமன்னு - அபிமன்யுவும்,ஒரு பால்-, நகுலன்-நகுலனும், ஒரு பால்-, சாதேவன் - சகதேவனும், ஒரு பால்-உரக ஈசன் - நாகர்களுக்குத் தலைவனான இராவானும், ஒரு பால்-, அரக்கன் -கடோற்கசனும், ஒரு பால்-, பாஞ்சாலன் - பாஞ்சாலதேசத்து அரசனான துருபதனும்,ஒரு பால்-, அடல் உத்தமபானு - வலிமையையுடைய உத்தமௌஜஸூம், உடன்றுபொர பொர -*

*கோபங்கொண்டு மிகுதியாகப்போர்செய்ய, (அதனால்) அரசன் பெருசேனை - துரியோதனராசனது பெரியசேனை, உடைந்தது - தோற்றுப் பின்னிடைந்தது; (எ-று.)*

*இராவான் போர்செய்யுந்தன்மை கீழ்க் களப்பலியூட்டுசருக்கத்தின் சு, எ - பாட்டுகளிற் கூறப்பட்டது. அரக்கன் - பொதுப்பெயர் சிறப்புப்பொருளை யுணர்த்திற்று. உத்தமௌஜஸ் - பாஞ்சாலரிற் சேர்ந்தவன். (168)*

*30.-அப்போது பகதத்தனென்பான் உடைந்தோடுஞ்சேனைக்கு அபயமளித்துப் பாண்டவர்சேனையோடெதிர்த்தல்.*

**விண்ணாடருக்காவெஞ்சமத்திலசுராதிபரைவென்கண்டோன்**
**மண்ணாளரசர்மகுடசிகாமணியேபோல்வான்மாமரபாற்**
**பண்ணார்பஞ்சகதிமான்றேர்ப்பகலோனன்னபகதத்தன்**
**எண்ணார்துரக்கவரும்படையையஞ்சலென்றென்றெதிர்சென்றான்.**

*(இ - ள்.) வெம் சமத்தில் - கொடிய (தேவாசுர) யுத்தத்தில், விண் நாடருக்கு ஆ - தேவர்களுக்கு உதவியாக (ச்சென்று), அசுர அதிபரை வென்எண்டோன் - அசுரத்தலைவர்களை முதுகுகாட்டியோடச் செய்தவனும், மா மரபால் - சிறந்த வமிசமுறைமையால், மண் ஆள் அரசர் மகுட சிகாமணிஏ போல்வான் - பூமியை ஆளுகிற அரசர்களது கிரீடத்திலுள்ள பிரதான ரத்தினத்தை யொப்பவனுமாகிய, பண் ஆர் - அலங்காரமமைந்த, பஞ்ச கதி - ஐவகை நடைகளையுடைய, மான் - குதிரைபூண்ட, தேர் - இரதத்தையுடைய, பகலோன் அன்ன - சூரியனை யொத்த, பகதத்தன்-, எண்ணார்துரக்க வரும் படையை - (அப்பொழுது) பகைவர்கள் துரத்துதலால் (தோற்றோடி) வருகிற கௌரவ சேனையை,அஞ்சல் என்று என்று - அஞ்சவேண்டா என்று பலமுறைசொல்லிக்கொண்டு, எதிர்சென்றான் - பகைவர்களெதிரிற் (போருக்குச்) சென்றான்; (எ - று.)*

*ஒருகாலத்திலே தேவர்களுக்கும் அசுரர்களுக்கும் நடந்த போரில் தோல்வியடைந்த தேவேந்திரன், திருமாலின் பௌத்திரனும் நரகாசுரனது மகனும் அவன்காலத்திற்குப்பின் கண்ணனால் இளமையில் பரிபாலனஞ் செய்யப்பட்டவனும் ஆகிய பகதத்தனைத் துணையழைக்க, இவன் அவ்விந்திரன் வேண்டுகோளின்படி சென்று அசுரரையொழித்து இந்திரனுக்கு அரசாட்சியை நிலைநிறுத்தினானென்பது, வரலாறு; மேல் பன்னிரண்டாம்போர்ச்சருக்கத்திலும் "முருகனென வெற்றி நேமி முகிலென முரணவுணருக்கு வாழ்வு கெடவுயர், சுரபதி தனக்கு வாழ்வு வரும்வகை சுரருலகளித்த தோழ னிவனரோ" என்று கூறுவர். அரசர் மகுடசிகாமணியே போல்வான் - அரசர்கள் தலைமையாகவைத்துக் கொண்டாடத்தக்கவ னென்றபடி. பஞ்சகதி - மல்லகதி மயூரகதி வானரகதி வியாக்கிரகதி இடபகதி என்பன: இனி, நச்சினார்க்கினியர் "விக்கிதம் வற்கிதம் வெல்லு முபகண்டம், மத்திமஞ்சாரியோடைந்து" எனக் குதிரைகட்கு ஐவகைநடை கூறியுள்ளார். புறப்பொருள் வெண்பாமாலையுரையாசிரியர் 'விக்கிதம் வற்கிதம் உபகண்டம் ஜவம் மாஜவம் என்னும் இப்பஞ்சதாரை' என்பர். மற்றும், ஆஸ்கந்திதம், தோரிதகம், ரேசிதம், வல்கிதம், புலுதம் எனவும்படும்: அவற்றுள், நிச்சலமாக அதிவேகமும் அதிமந்தமுமாகாமற் சமமானகதி, ஆஸ்கந்திதம்; அதைக்காட்டிலும் அதிகமாய்ச் சதுரமானகதி, தோரிதகம்: தாளகதியுடன் வட்ட மிட்ட நடை, ரேசிதம்; வேகத்தினாலே முன்னங்காலைத்தூக்கிவரும் நடை, வல்கிதம்; அவ்வளவு வேகமாகவும் சமமாகவும் போகுகை, புலுதம், எண்ணார் என்றது, கீழ்க்கவியிற் கூறியவீமன்முதலியோரை. (169)*

*31.-பகதத்தன் செய்த கடும்போர்.*

**அலைகால்வெள்ளக்கருங்கடல்போலதிராநின்றவாகவத்தின்**
**மலைகால்பெற்றுவருவதுபோல்வருதிண்பனைக்கைமாமிசையான்**
**சிலைகால்வளைத்துத்தீவாய்வெஞ்சரங்கொண்டடையார்**
**சிரங்கொண்டான்**
**கொலைகால்செங்கட்கரியநிறக்கூற்றந்தனக்குங்கூற்றன்னான்.**

*(இ - ள்.) கொலை கால் - (தனக்கு உரிய) கொல்லுதல் தொழிலை வெளியிடுகிற, செம் கண் - (கோபத்தாற்) சிவந்த கண்களையும், கரிய நிறம்- கருநிறத்தையுமுடைய, கூற்றம் தனக்குஉம்- யமனுக்கும், கூற்று அன்னான் - ஒரு யமனை யொத்தவனாகிய அந்தப்பகதத்தன்,-அலை கால் - அலைகளைவீசுகிற, வெள்ளம் - நீர்வெள்ளத்தையுடைய, கரு கடல் போல்-கரியசமுத்திரம்போல, அதிராநின்ற - ஆரவாரிக்கிற, அகவத்தில் - போர்க்களத்திலே, மலை கால் பெற்று வருவது போல் வரு - ஒருமலை (நான்கு) கால்களையுடையதாய் வருவதுபோல வருகிற, திண்- வலிய, பனை கை மா மிசையான் - பனைமரம்போன்ற துதிக்கையையுடைய யானையின் மேலேறியவனாய்,- சிலை கால் வளைத்து- வில்லின்கோடிகளை வளைத்து, தீ வாய் வெம் சரம்கொண்டு-நெருப்பையுமிழ்கிற நுனியையுடைய கொடிய(தன்) அம்புகளால், அடையார்சிரம் கொண்டான் - (பல) பகைவர்களின் தலைகளைஅறுத்திட்டான். (எ-று)*

*இவன் ஏறிவரும் பட்டத்துயானைக்குச் சுப்பிரதீகமென்று பெயர்; "இதற்கு நாம்முரைசெயின் நிலையுடைய சுப்ரதீகம்" என்பர், மேல்பன்னிரண்டாம் போர்ச்சருக்கத்தில். மலை கால் பெற்று வருவது -* ***இல்பொருளுவமை.***
*சிலைகால்வளைத்தல் - வில்லின் தண்டத்தை வளையச்செய்தல். அடையார்- (தன்னைச்) சேராதவர். யமனுக்குத் தான் அஞ்சாமல் யமனைத் தான் அஞ்சுவிப்பவனென்பது, நான்காம் அடியின் கருத்து. (170)*

### *32.-பகதத்தனால் தம்சேனைக்குநேர்ந்த தளர்வைக் கடோற்கசன் பார்த்தல்,*

***தாரா ரோடைத் திலகநுதற் சயிலம் பதினா யிரஞ்சூழ***
***வாரா நின்ற மதகயத்தின் வன்போர் வலியு மனவலியுஞ்***
***சேரார் வணங்கும் பகதத்தன் றிண்டோள் வலியுஞ் சிலைவலியும்***
***பாரா நின்ற கடோற்கசன்றன் படையின் றளர்வும் பார்த்தானே.***

*(இ - ள்.) தார் ஆர் - கிண்கிணிமாலைகள் நிறைந்த, ஓடை திலகம் நுதல்- பட்டத்தையும் சிந்தூரத்திலகத்தையும் அணிந்த நெற்றியையுடைய, சயிலம் பதினாயிரம் - மலைபோன்ற பதினாயிரம் யானைகள், சூழ - (தன்னைச்) சூழ்ந்து வர,வாராநின்ற-(இடையிலே) வருகிற, மதம் கயத்தின் - (சுப்பிரதீக மென்னும் அந்த)மதயானையினது, வல் போர் வலிஉம் - வலிய போர் வல்லமையையும், மனம்வலிஉம் - மனத்திலுள்ள போர்க்களிப்பையும், சேரார் வணங்கும் பகதத்தன் -பகைவர்கள் வணங்கத்தக்க பகதத்தனது, திண் தோள் வலிஉம் - உறுதியான தோள்களின் வலிமையையும், சிலை வலி உம்-வில்லின் வலிமையையும், பாராநின்ற-பார்த்துநின்ற, கடோற்கசன்-,தன் படையின் தளர்வுஉம்- (அவனாலுண்டான)தன்பக்கத்துச்சேனையின் தளர்ச்சியையும், பார்த்தான்-; (எ - று.)*

*இனி, தார்-அலங்காரத்துக்காக அணியும் பூமாலையுமாம். ஓடை - நெற்றிப்பட்டம்; இது - பொன்னினால் அமைவது: ஆடையாலமையும் முகபடாம் சூழி யெனப்படும்: இவ் வேறுபாட்டை "விழுச்சூழிய விளங்கோடைய" என்னும் மதுரைக்காஞ்சியின் உரைநோக்கி அறிக. சயிலம்=சைலம்: உவமையாகுபெயர். மனவலி-பகதத்தனது மனோபலமுமாம். (171)*

வேறு.

### *33.-கடோற்கசன் மாயவேடங்கொண்டு பகதத்தனோடு போர்தொடங்குதல்.*

***ஆய போதி லாயிர நூறு மதமாவு***
***மேய தீய காலனை யொக்கு மேலாளுஞ்***
***சாய கம்முஞ் சாபமும் யாவுந் தானேயா***
***மாய வேடங் கொண்டவ னோடு மலைவுற்றான்.***

*(இ-ள்.) (பார்த்த கடோற்கசன்,)-ஆய போதில் - அப்படியான அச்சமயத்தில்.- ஆயிரம் நூறு மதம் மாஉம் - லஷம்மதயானைகளும், மேய - (அத்தொகையாகப்) பொருந்திய, தீய - கொடிய, காலனை ஒக்கும் - யமனையொத்த, மேல் ஆள்உம் - (அந்தயானைகளின்) மேலுள்ள வீரர்களும், சாபம்உம் - (அவர்களது) விற்களும், சாயகம்உம் - (அவ்விற்களால் எய்யப்படும்) அம்புகளும், (ஆகிய), யாஉம் - எல்லாம், தான்ஏ ஆம் - தானே யாகிய, மாயம் வேடம் - மாயாவடிவத்தை, கொண்டு - எடுத்துக் கொண்டு, அவனோடு மலைவுற்றான் - அந்தப்பகதத்தனோடு போர் செய்யத் தொடங்கினான்; (எ - று.)*

*அரக்கனாதலால், மாயாரூபங்கொண்டான், சாயகம்்மும் - விரித்தல், தானேயாஎன்று எடுத்து - தானேயாக என்றுமாம். (172)*

*இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் பத்துக்கவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீர்விளச்சீரும், ஐந்தாவது மாங்காய்ச் சீரும், மற்றைமூன்றும் மாச்சீர்களு மாகிய நெடிலடிநான்குகொண்ட* ***கலிநிலைத்துறைகள்*** .

***34 - கடோற்கசன் மாயையால் எங்கும் தானும் வேழமுமேயாகிப் பகதத்தன்மீது போதல்.***

***சங்கமூதத்தார்முரசார்ப்பமுழவார்ப்பப்***
***பொங்கும்பூழியாழிவறக்கும்படிபோதச்***
***சிங்கங்குன்றிற்செல்வதுபோலச்சிலையோடு***
***மெங்குந்தானும்வேழமுமாகியெதிர்சென்றான்.***

*(இ-ள்.) சங்கம் - சங்குகள், ஊத - ஊதப்பட்டு முழங்கவும், தார் - சேனைக்குஉரிய, முரசு - பேரிகைகள், ஆர்ப்ப - ஆரவாரிக்கவும், முழவு - (மற்றைப்)பறைகள், ஆர்ப்ப - ஒலிக்கவும், பொங்கும் பூழி - மேற்கிளம்புந் தூளிகள்,ஆழி வறக்கும்படி போத - கடல்களும் நீர்வற்றும்படி பரவவும், (கடோற்கசன்),சிங்கம் குன்றில் செல்வது போல,- ஒருசிங்கம் ஒருமலையின்மேல் ஏறிப்போவதுபோல, சிலையோடுஉம் - (தன்கை) வில்லுடனே, எங்குஉம் தான்உம் வேழம்உம் ஆகி - (மாயையால்) எவ்விடத்திலும் தானும் (தன்) யானையுமாய், எதிர் சென்றான் - பகதத்தனெதிரிற் போனான்; (எ-று.)*

*சிங்கம் - பராக்கிரமசாலியான கடோற்கசனுக்கும், மலை - வலியபெரிய யானைக்கும் உவமை.மிகுதியாகக் கிளம்பின புழுதிகள்*
*படிந்து கடல்நீரை வறட்டு மென, யானைச்சேனையால் மேலெழுப்பட்ட தூளிகளின் மிகுதியைக் கூறியவாறு. தார்முரசு - மாலையையணிந்தமுரச மென்று உரைப்பாரு முளர். தானும் வேழமுமாகி எதிர்சென்றான் - உயர்திணையும் அஃறிணையும் விரவிச் சிறப்பினால் உயர்திணைஒருமை முடிபேற்ற திணைவழுவமை* ***தி. பி-ம்*** *:- சங்கமெழத் தாரைகள் முரசார்ப்ப முழவிம்ம.*
*(173)*

***35.-கடோற்கசனுடைய வேழப்படைத்தொழிலும் பகதத்தனுடைய வேழப்படைத்தொழிலும்.***

***மைபோலார்த்து மும்முறைதானமழைசிந்திக்***
***கைபோய்முட் டிக்கையொடுதத்தங்கால்வீசி***

**மெய்போல்வெம்போர்செய்தனவீரன்விறல்வேழம்**
**பொய்போனின்றவருபகதத்தன்போர்வேழம்.**

*(இ-ள்.) வீரன் - வீரத்தன்மையுள்ள கடோற்கசனது, விறல் - (மாயை) வலிமையினாலாகிய, வேழம்- யானைகள்,-மைபோல் ஆர்த்து - மேகங்கள்போல முழங்கியும், மு முறை தானம் மழை சிந்தி- மூன்றிடங்களின்றும் மதநீர்மழையைச் சொரிந்தும், கை போய் கையொடு முட்டி - முன் சென்று (தம்) துதிக்கையால் (பகையானைகளின்) துதிக்கையோடு மோதியும். தம் தம் கால் வீசி - தம் தமது கால்களை வீசியும், மெய் போல் வெம் போர் செய்தன - உண்மையான யானைகள்போலக் கொடியபோரைச் செய்தன; வரு - (எதிர்த்து) வந்த,பகதத்தன் - பகதத்தனது, போர் வேழம் - போருக்குரிய உண்மையான யானைகள், பொய் போல் நின்ற - (கீழக்கூறிய முழக்கம் முதலியன ஒழிந்து) பொய் யானைகள்போ லாயின;(எ-று.)*

*தொழிலால் பொய் மெய்யும், தொழிலொழிதலால் மெய் பொய்யும் ஆயின வென வியப்புத்தோன்றக் கூறினார். தாநம் - வடசொல்*.

***36.- கடோற்கசனுடைய மாயாவீரர்வெல்லுதல்.***

**நின்றார்நின்றபடிகடிதாகநெடிதோடிச்**
**சென்றார்கண்டசிந்துரம்யாவுந்தீயம்பிற்**
**கொன்றார்மற்றக்கொற்றவர்யாருங்கொலையுண்டார்**
**வென்றாரன்றோவீமன்மகன்சேனையில்வீரர்.**

*(இ-ள்.) வீமன் , மகன் சேனையில் - கடோற்கசனது யானைச் சேனையிலுள்ள, வீரர் - (மாயையினாலாகிய) வீரர்கள், நின்றார்-எதிர்த்து நின்றார்கள்;நின்ற படி - (அவ்வாறு) நின்ற முறைமையாகவே, கடிது ஆக-வேகமாக, நெடிதுஓடி சென்றார் - மிகுதியாக ஓடி (நெருங்கி)ப் போனவர்களாய், கண்ட சிந்துரம்யாஉம் - (எதிரிற்)காணப்பட்ட(பகதத்தனது) யானைகளை யெல்லாம், தீ அம்பின்கொன்றார் - கொடிய (மாயையாலாகிய) அம்பினால் கொன்றுவிட்டார்கள்; மற்று -பின்பு, அ கொற்றவர் யார்உம்- அவ்யானைகளின்மேலுள்ள (பகதத்தனைச்சார்ந்த)வீரர்களெல் லொரும், கொலையுண்டார் - (இவர்களாற்) கொல்லப்பட்டார்கள்; வென்றார் - (இவ்வாறு கடோற்கசனது பொய்ச்சேனையார் பகதத்தனது மெய்ச்சேனையாரைச்) சயித்துவிட்டார்கள்; (எ-று.) - அன்றோ - தேற்றம்; இதில் - வியப்புந்தோன்றும். (175)*

***37.-சூரியாஸ்தமன வருணனை.***

**ஆனதானதாகவமெங்குமானைப்போர்**
**போனபோனமைந்தர்பிழைப்பீர்போமென்றென்**
**றூனமெய்தாதவ்விறைபோனானுயிரோடும்**
**போனகண்டகாய்கதிரோனும்புறமிட்டான்.**

*(இ-ள்.) 'ஆகவம் எங்கும் - போர்க்களம் முழுவதிலும், ஆனை போர் - யானைச்சண்டை, ஆனது ஆனது - மிகுதியாகஉண்டாயிற்று; போன போன மைந்தர் - ஓடிப்போன வீரர்களெல்லோரும், பிழைப்பீர் - உயிர்வாழ்வீர்கள்; (ஆதலால்), போம் - (தப்பி) ஓடிப்போங்கள்,' என்று என்று-என்று பலமுறைச்சொல்லி, அ இறை - அந்த (ப் பகதத்த)ராசன், ஊனம் எய்தாது - அழிவையடையாமல், உயிரோடுஉம் போனான் - உயிரோடும் (புறங்கொடுத்துச்) சென்றான்; போன கண்ட - (அப்படிச்) சென்றதைப் பார்த்த, காய் கதிரோன்உம் - சுடுகிற கிரணங்களையுடைய சூரியனும், புறம்இட்டான் - (தானும் கடோற்கசனது யானைச்சேனைக்கு அஞ்சிப்) புறங்கொடுப்பவன்போல மறைந்துசென்றான்; (எ-று.)*

***தற்குறிப்பேற்றவணி** மைந்தர் பிழைப்பீர். இடவழுவமைதி. போன= போனது:விகாரம். (176)*

*38.-அப்போது இருதிறத்தாரும் பாசறை சேர்தல்.*

***பூந்தண்மாலைப்பஞ்சவரானைப்போர்வென்று***
***சேர்ந்தசேர்ந்தமன்னவரோடுந்திறலோடுந்***
***தாந்தம்பாடி வீடுபுகுந்தார்தரையாளும்***
***வேந்தனோடும்பாசறைபுக்கான்வீடும்மன்.***

*(இ-ள்.) பூ - பூக்களாலமைந்த, தண் - (தேனினாற்) குளிர்ந்த, மாலை - வெற்றிமாலையை யணிந்த, பஞ்சவர் - பஞ்ச பாண்டவர்கள், ஆனை போர் வென்று - அந்த யானைப்போரில் சயித்து, சேர்ந்த சேர்ந்த மன்னவரோடுஉம் - (தங்களோடு மிகுதியாக வந்து சேர்ந்த அரசர்களுடனும், திறலோடுஉம் - வெற்றியுடனும், தாம் தம் பாடிவீடு புகுந்தார்-தாங்கள் தங்களது படைவீட்டை யடைந்தார்கள்; வீடும்மன்-வீடுமன், தரை ஆளும் வேந்தனோடுஉம் - பூமியை ஆளுகிற துரியோதனராசனுடனே, பாசறை புக்கான்-(தன்)படைவீட்டை யடைந்தான்; (எ-று.)*

*ஈற்று அடியால், துரியோதனாதியர் சேனையிலுள்ள மற்றையரசர்கள் பலரும்பாண்டவர்சேனைக்குத் தோற்றுச் சிதறினரென்பது தொனிக்கும். வீடும்மன் - விரித்தல். (177)*

***39- காந்தாரி தம்புதல்வர் ஐவர் இறந்ததற்குக் கலங்கிக் கண்ணீர்வடித்துச் சோர்வுறல்.***

***பூண்பாய்மார்பிற்புத்திரர்தம்மைப்பொலிவோடுங்***
***காண்பாளைவர்க்கண்டிலள்பெற்றகாந்தாரி***
***சேண்பாலெய்தச்சென்றனரோவென்றிருகண்ணீர்***
***தூண்பாலாகிச்சோர்தரவுள்ளஞ்சோர்வுற்றாள்.***

*(இ-ள்.) பெற்ற-(துரியோதனாதியர் நூற்றுவரைப்) பெற்ற (தாயான), காந்தாரி-, பூண் பாய் மார்பின் புத்திரர்தம்மை - ஆபரணங்கள் பரவிய மார்பையுடைய (தன்) பிள்ளைகளையெல்லாம், பொலிவோடுஉம்-மகிழ்ச்சியுடனே, காண்பாள் - (தினந்தோறும்) காண்பவள், ஐவர் கண்டிலள்- (அன்றையதினம் அவர்களுள்) ஐந்துபேரைக் காணாதவளாய்,-சேண் பால் எய்த சென்றனர்ஓ என்று- 'வீரசுவர்க்கத்தினிடத்தை அடையப் போயினார்களோ?' என்றுசொல்லி, இரு கண் நீர் தூண் பால் ஆகி சோர்தர - (தன்) இரண்டு கண்களினின்றும் நீர் தூணின் தன்மையை யொத்து [பெருந்தாரையாக]ப் பெருக, உள்ளம் சோர்வு உற்றாள்- மனத்தளர்ச்சியை யடைந்தாள்; (எ-று.)*

*காந்தாரி-திருதராட்டிரனது மனைவி: சகுனியின் உடன்பிறந்தவள். தூண்பாலாகி-(தான்) தூண்போலசைவற்று எனினுமாம். சென்றனரோ, ஓகாரம்- இரக்கம். சேண்-ஆகாயம்; சுவர்க்கத்துக்கு இடவாகுபெயர். (178)*

***40.-காந்தாரி வருந்தியது***

***கொன்னேகுந்திமைந்தரிருக்கக்கொலையுண்டீர்***
***முன்னேமுன்னுமுன்னமுடிந்ததின்றென்னா***
***மின்னேயென்னமெய்குலையாமண்மிசைவீழ்ந்தாள்***
***என்னேயென்னேயென்றினையாநின்றென்செய்தாள்.***

*(இ-ள்.) 'குந்தி மைந்தர்-பாண்டவர்கள் ஐவரும், கொன்னே இருக்க- அழிவடையமாலேயிருக்க, கொலை உண்டீர்-(நீங்கள்மாத்திரம்) கொலைப்பட்டீர்கள்; முன்னே முன்னும் முன்னம் - முன்னே (அவர்கள்) எண்ணின எண்ணம், இன்று முடிந்தது-இன்றைக்குப் பலித்தது', என்னா-என்று சொல்லி, மெய் குலையா-உடம்பு நடுங்கி, - மின்னே என்ன-மின்னல் விழுவதுபோல, மண்மிசை வீழ்ந்தாள்- தரையிலே விழுந்து, என்னே என்னே என்று-இது என்னதுக்கம்! என்னதுக்கம்!! என்று, இனையா நின்று-மனம் வருந்திநின்று, என்செய்தாள்-என்னபாடுபட்டாள்! (எ-று.) - மிகுந்த விசன மடைந்தாள் என்றபடி.*

*திருதராஷ்டிரனது 'மனைவியாகிய தனக்குப் பாண்டுவின் மனைவியாகிய குந்தியினிடம் உள்ள பங்காளிக்காய்ச்சலால், 'குந்திமைந்தர்' என்றாள்; (ஆதியிலும் குந்திக்கு முதலில் பிள்ளை பிறந்தது கேட்டு இவள் மிகப்பொறாமையுற்றுத் தன் கருக்கொண்ட வயிற்றைக் கல்லாற் குத்திக்கொண்டது காண்க.) முன்னே முன்னும்*
*முன்னம்-என்மக்களைக் கொல்லவேண்டுமென்ற எண்ணம் - என்னே என்னே- சோகக்குறிப்பு. மாத்திரியினிடம் பிறந்த நகுல சகதேவரையும் சேர்த்து 'குந்திமைந்தர்' என்று இங்கே அபேதமாகக் கூறியது, அந்த மாத்திரிக்குப் புதல்வரைப் பெறும் மந்திர முபதேசித்தவள் குந்தி யாதலாலும், பாண்டுவோடு மாத்திரி சககமநஞ்செய்து இறந்துவிட அவ்விருவரையும் குந்தியே அன்போடுவளர்த்தன ளாதலாலும் என்க.* ***பி-ம்*** *:- முடிந்ததெனமுன்னா. முடிந்ததின்னென்னா.*
*(179)*

### *41- கவிக்கூற்று: காந்தாரி அன்றுதான் வருத்தமின்னதென்று அறியத் தொடங்கினாளெனல்.*

***வீறார்கற்பின்மின்னனையாளைவிறல்மைந்தர்***
***ஏறாமன்றிலேற்றவுமாமன்றென்னாதாள்***
***ஊறாவன்பிற்கண்ணறைமன்னனொருதேவி***
***யாறாவெள்ளத்துன்புறவன்றேயடியிட்டாள்.***

*(இ-ள்.) வீறு ஆர்-பெருமைமிக்க, கற்பின்-பதிவிரதா தருமத்தையுடைய, மின்அனையாளை-மின்னற்கொடியையொத்த திரௌபதியை, விறல் மைந்தர் - வலிமையையுடைய (தன்) பிள்ளைகளான துரியோதனனும் துச்சாதனனும், ஏறா மன்றில் ஏற்றஉம்-(பெண்கள்) செல்லத்தகாத இராசசபையிலே (பலாத்காரமாகச்) செலுத்தவும், ஆம் அன்று என்னாதாள்-(இது) தக்கதன் றென்று சொல்லாதவளாகிய, ஊறா அன்பின் - சிறிதும் உண்டாகாத அன்பையுடைய, கண்ணறை மன்னன் ஒருதேவி-பிறவிக்குருடனான திருதராட்டிரனது ஒப்பற்ற மனைவியான காந்தாரி, ஆறா - தணியாத, துன்பு-(புத்திர)சோகமாகிய, வெள்ளம்-வெள்ளத்திலே, உற- சேர்வதற்கு, அன்றே அடி இட்டாள் - அன்றைத்தினமே கால்வைத்தாள் [தொடங்கினாள்]; (எ-று.)*

*துரியோதனாதியர் நூற்றுவருள் சிலர் முந்தி இறந்த தினம் அத்தினமேயாதலால், 'அன்றே யடியிட்டாள்' என்றார். தகுதியன்றென்று சொல்லாதவளென்றதனால், தகுதியென்று உடன்பட்டவளென்பது பெறப்படும். அத்தீவினையின்பயனே புத்திரசோகத்தை யனுபவிக்கச்செய்த தென்றவாறு. கண்ணறைமன்னனொருதேவி-கண்ணில்லாதவனுக்கு ஏற்றதேவி. ஏற்றவும், உம்-இழிவுசிறப்பு. (180)*

### *42.-சூரியோதய வருணனை.*

***ஆளாய் மாய்ந்த வேந்தரி டந்தோ றழுமோசை***
***கேளா வெப்போ தேகுவ மென்றக் கிளர்கங்குன்***
***மீளா வோடிற் றத்திசை வானோன் மிளிர்சென்னிச்***
***சூளா மணிபோல் வந்தது காலைச் சுடரம்மா.***

*(இ-ள்.) ஆள் ஆய் மாய்ந்த - வீரர்களாயிருந்து இறந்த, வேந்தர்- அரசர்கள்பொருட்டாக, இடம் தோறு அழும்-பல இடங்களிலும் அழுகிற, ஓசை- ஓசையை, கேளா-(நாம்) கேட்காமல், எ போது ஏகுவம் என்று - எப்பொழுது நீங்குவோ மென்று கருதி,*
*அ கிளர் கங்குல் - அந்த (இருள்) நிறைந்த இரவானது, மீளா ஓடிற்று-மீண்டு ஓடிவிட்டது; (அப்பொழுது), காலை சுடர் - உதய காலத்துக்கு உரிய ஒளியாகிய சூரியன்,-அ திசை வானோன் - அந்தத் திக்கில் [கீழ் திசையில்] உள்ளவனான தேவேந்திரனது, மிளிர் - விளங்குகிற, சென்னி சூளாமணி போல்-முடிவில் அணிந்தகிரீடம் போல, வந்தது-உதித்துவிளங்கிற்று; (எ-று.)-அம்மா-ஈற்றசை.*

*புலம்பல் கேட்பவர்க்கு அவ்விடத்தைவிட்டு நீங்கக் கருத்துண்டாதல், இயல்பு.இயற்கையாக இரவுகழிந்ததற்கு இப்படிப் பட்டதொரு காரணத்தைக் கற்பித்துக்கூறியது - **ஏதுத்தற்குறிப்பேற்றவணி** . 'காலைச்சுடர் வந்தது' என்பதை நோக்கி,'அத்திசை' என்றது-கிழக்கைக் குறிக்கும்; செய்யுளாதலின் சுட்டு முன்வந்தது.'அத்திசை வானோன்' என்றது, கிழக்குத்திக்குப் பாலகனாகிய இந்திரனை.சூளாமணி-சூடாமணி என்னும் வடசொல்லின் போலி; தலையில் அணியும் இரத்தினமென்று பொருள்: சூடா-தலை. சூரியனைக் காலைச்சுடரென்றும், சந்திரனைமாலைச்சுடரென்றுங் கூறுதல் ஒரு மரபு. **பி-ம்** :- வானோர். (181)*

***நான்காம்போர்க்கருக்கம் முற்றிற்று.***

---------

***ஐந்தாம்போர்ச்சருக்கம்.***

***1.-கடவுள்வாழ்த்து.***

**கருமாமு கிற்கோல நெஞ்சத்தி ருத்துங்க ருத்தெய்துமேல்**
**அருமாத வன்றானு மவன்முத்தி தருகைக்கு மவனேகுரு**
**தருமாலை மணநாறு தாளானை வண்டேறு தண்ணந்துழாய்**
**மருமாலை புனைகின்ற திருமாலை யல்லாது வல்லார்கள்யார்.**

*(இ-ள்.) கரு - கருநிறமான, மா-அழகிய, முகில் - மேகம் போன்ற, கோலம்-(திருமாலின்) திருமேனியை, நெஞ்சத்து-(தன்) மனத்திலே, இருத்தும் - பதியவைக்கிற, கருத்து-எண்ணம், எய்தும் ஏல்-(ஒருவனுக்கு) உண்டாகுமானால், அரு மா தவன்தான் உம் அவன்-(பிறராற்செய்தற்கு) அரிய பெரிய தவத்தைச் செய்தவனும் அவனே; முத்தி தருகைக்குஉம் அவன்ஏ குரு - (தன்னை அடைந்தவர்களுக்குப்) பரமபதத்தைக் கொடுத்தற்கும் அவனே ஞானசிரியனாவன்; (ஆதலால்),- தரு - கற்பகவிருட்சத்தின் மலர்களாலாகிய, மாலை-மாலைகளின், மணம்-வாசனை, நாறு-மணக்கப் பெற்ற, தாளானை-திருவடிகளையுடையவனும், வண்டு ஏறு-வண்டுகள் மொய்க்கின்ற, தண்-(தேனினாற்) குளிர்ந்த, அம் - அழகிய, மரு-வாசனையையுடைய, துழாய் மாலை - திருத்துழாய்மாலையை, புனைகின்ற- தரிக்கிற, திருமாலை அல்லாது - திருமாலென்னுந் திருநாமமுடையவனு மாகிய ஆதிதேவனை யல்லாமல், வல்லார்கள்- சிறந்தகடவுளர், யார்-யாவர் (உளர்)? (எ-று.)*

*திருமாலினது வடிவத்தை ஒருகால் தியானிப்பவன், அரும்பெருந்தவஞ்செய்தவனும், தன்னையடைந்தவர்களுக்கு முத்திதர வல்ல சிறந்த ஆசிரியனும் ஆவன்; ஆதலால், திருமாலையொழிய வேறு சிறந்த கடவுள் இல்லை என்பது கருத்து. கருநிறத்திற்கும், காண்பவர் மனத்துயரந் தீர்க்கவல்ல குளிர்ச்சிக்கும், கைம்மாறு கருதாது கருணைமழைசொரிதற்கும், எம்பெருமானுக்கு நீலமேகம் உவமை. விரதங்களால் உணவு சுருக்குதல், வெயில் மழை பனிகளில் வருந்துதல் முதலிய சிரமம் சிறிதும் இல்லாமல் முத்தியைப் பெறும்உபாயமாதலால், பகவானைத் தியானித்தல் அருமாதவமாயிற்று. "ஞானமனுட்டானமிவை நன்றாகவே யுடைய, னான குருவை யடைந்தக்கால்- மாநிலத்தீர் தேனார்கமலத் திருமாமகள் கொழுநன், றானே வைகுந்தந் தரும்" என்றபடி நல்லாசிரியரை யடுத்து அவர்கள்முகமாகவே முத்திபெறவேண்டுதலால், 'முத்தி தருகைக்கு மவனே குரு' என்றார். தரு-வடசொல். கற்பக மலர்களின்மாலை, இந்திரன்முதலிய தேவர்களால் திருமாலினது திருவடிகளில் கொணர்ந்து சமர்ப்பிக்கப்பட்டவை. தேவர்கள்மாலையில் வண்டுமொய்த்தல் இல்லை யாயினும் சிறந்த அருளுடைமை தோன்ற, வண்டேறுதுழாய்' எனப்பட்டது. துளசிமாலை- திருமாலுக்கு உரியது. முன் இரண்டடியால், திருமாலினது அடியார்களின் மகிமையை எடுத்து நன்குவிளக்கி, அது மூலமாகப் பின் இரண்டடிகளில் அத்திருமாலின் ஒப்புயர்வற்ற மேன்மையை விளக்கினார். தரு-மலருக்கு முதலாகுபெயர்.*

*இதுமுதற் பன்னிரண்டு கவிகள்-பெரும்பாலும் முதல் நான்கு சீரும் மாங்காய்ச்சீர்களும், ஈற்றுச்சீ ரொன்று மாங்கனிச்சீருமாகிய நெடிலடி நான்கு கொண்ட **கலிநிலைத்துறைகள்.** (182)*

*2.- வாச்சியப் பேரொலியோடு தருமன்சேனைவெள்ளம் புறப்படுதல்.*

***வரசங்சமுந்தாரையுஞ்சின்னமும்பொன்மணிக்காளமு
முரசங்களுந்துந்துபியுமெங்குமெழவிம்மமுழவிம்மவே
கரைசிந்துதிரைசிந்துநுரைசிந்துவிரைசிந்துகணமென்னவே
யரசன்பெருஞ்சேனைவெள்ளம்புறப்பட்டதணியாகவே***

*(இ-ள்.) வர சங்கம்உம்-சிறந்த சங்குகளும், தாரைஉம்-தாரையென்னும் ஊதுகருவியும், சின்னம்உம்-சின்னமென்னும் ஊதுகருவியும், பொன் மணி காளம்உம்-பொன்னினாலும் இரத்தினங்களாலும் அலங்கரிக்கப்பட்ட எக்காளமென்னும் ஊதுகருவியும், முரசங்கள்உம்-பேரிகைகளும், துந்துபிஉம்-துந்துபியென்னும் வாத்தியமும், எங்குஉம்-எவ்விடத்தும், எழ-ஓசையெழும்படி, விம்ம-ஒலிக்கவும், முழ-மத்தளங்கள் விம்ம-முழங்கவும்,-கரை சிந்து-கரையை மோதுகிற, திரை - அலைகளை, சிந்து - வீசுகிற, நுரை சிந்து-நுரை சிந்தப்பெற்ற, விரை சிந்து கணம் என்ன - விரைந்து வரும்படியான கடல்களின் கூட்டம்போல, அரசன் பெருசேனை வெள்ளம் - தருமராசனது பெரிய சேனைகளின் கூட்டம், அணி ஆக புறப்பட்டது - வரிசையாகப் (போருக்குப்) புறப்பட்டது; (எ-று.)
வெள்ளம் - ஓர்பெருந்தொகையுமாம். வரசங்கம் - திருமாலின் பரஞ்சசன்னியமும், அருச்சுனனது தேவதத்தமும், மற்றும் பல வலம்புரிச்சங்குகளும்; இது வடமொழித்தொடர். 'வரிசங்கம்' என்றபாடத்துக்கு-கோடுகளையுடைய சங்கு என்க. காளம் - காகளம் எனவும்படும். முரசு முதலிய மூன்றும் - அடிக்கப்படும் வாச்சியவகைகள். மூன்றாமடியிலுள்ள சிந்து என்னுஞ் சொற்களில், ஈற்றது - ஸிந்து என்னும் வடசொல்; மற்றவை - தமிழ் வினைப்பகுதி:* **சொற்பின்வரு நிலையணி.** *(183)*

*3-துரியோதனன் சேனைவந்து சேர்ந்தபின்
இருதிறச்சேனையும் பொர எதிருறுதல்.*

**விருதாயிரங்கோடிமுரசாயிரங்கோடிமேன்மேலெழப்
பொருதானையுடன்வந்தணைந்தார்புறந்தந்தபூபாலருங்
கருதாவரக்கன்கொடுந்தானையிறைவன்கடுந்தானையென்
றிருதானையும்போலவெதிருற்றவிருமன்னரிருதானையும்.**

*(இ-ள்.) ஆயிரம் கோடி விருது - மிகப்பலவான பிருதுகளும், ஆயிரம் கோடிமுரசு - மிகப்பலவான பேரிகைவாத்தியங்களும், மேல் மேல் எழ - மிகுதியாகஒலிக்க, புறம் தந்த பூபாலர்உம்-(முந்தினநாளில் தோற்று) முதுகுகொடுத்த(துரியோதனன்சேனை) அரசர்களும், பொரு தானையுடன் போர்செய்யுஞ்சேனைகளுடனே, வந்து அணைந்தார் - (போர்க்களத்துக்கு) வந்துசேர்ந்தார்கள்:(இவ்வாறு வந்த) இரு மன்னர் இரு தானைஉம் - (தருமன் துரியோதனன் என்னும்)இரண்டு அரசர்களது இரண்டு சேனைகளும்,- கருதா அரக்கன் கொடுதானை.(பிறரைப் பொருளாக) மதியாத இராவணனது கொடிய இராக்கதசேனையும்,இறைவன் கடு தானை-(யாவர்க்குந்) தலைவனான இராமபிரானது பயங்கரமானவானரசேனையும், என்ற இரு தானைஉம் போல - என்ற இரண்டு சேனைகளும்போல, எதிர் உற்ற- எதிரிலே நெருங்கின;(எ-று.)*

*அசுராமிசமாய்த் தீயொழுக்கமுடைய துரியோதனாதியரது முடிவில் தோல்வியடைவதான சேனைக்கு இராவணனது சேனையும், தேவாமிசமாய் நல்லொழுக்கமுடைய பாண்டவரது முடிவில் வெற்றிபெறுஞ் சேனைக்கு இராமனதுசேனையும் உவமையாம்-கீழ்த் தருமன்சேனையை முன்னும், (செ-2) துரியோதனன் சேனையைப் பின்னும் கூறிய முறைமைக்கு மாறுபடக் கூறியது -* **எதிர்நிரனிறைப்பொருள்கோள்.** *கருதா அரக்கன் - (தனக்குவருந்தீங்கைத் தானாகவும் பிறர்சொல்லவும்) எண்ணாத இராக்கதனுமாம். என்ற என்பதன் ஈறு தொக்கது. விருது-அரசரது வீரம் கல்வி வெற்றி முதலியவற்றைத் துதிபாடகர் முதலியோர் எடுத்துக்கூறிப் புகழ்வது: வெற்றிக்கு அறிகுறியான கொடியெனினுமாம். பூபாலர் - பூமியைக் காப்பவர்; வடசொல். (184)*

### *4.- விசயன் ஸ்ரீக்ருஷ்ணனுடன் தேரிற் போருக்கு வருதல்.*

**அரக்கர்க்குமுதல்வானளித்தோருமெமரின்றுமவர்போலுமைத்
துரக்கைக்குநின்றேனெனத்தெவ்வர்தம்மோடுசொல்லிற்றெனக்
குரக்குக்கொடித்தேரின்மிசையேறிவிசையோடுகூத்தாடவே
புரக்கைக்குநின்றோனுடன்செங்கண்விசயன்புறப்பட்டனன்.**

*(இ-ள்.) 'முதல் - பூர்வகாலத்தில், அரக்கர்க்கு வான் அளித்தோர்உம் - (இராவணசேனையிலுள்ள) இராக்கதர்களுக்கு(ப்போரிற்கொன்று) வீரசுவர்க்கங் கொடுத்தவர்களும், எமர் - எங்கள் இனத்தவரே [வாநர வீரர்களே] யாவர்; இன்றுஉம் - இந்நாளிலும், அவர் போல் - அக்குரக்குவீரர்போல, உமை துரக்கைக்கு நின்றேன் - உங்களை ஒழித்தற்கு (யான் இங்கு வந்து) நின்றேன்', என- என்று, தெவ்வர் தம்மோடு - பகைவர்களாகிய துரியோதனாதியர்களோடு, சொல்லிற்று என - சொல்லியதுபோல, குரங்கு கொடி - குரங்கின்வடிவ மெழுதிய துவசம், தேரின்மிசை ஏறி - (தனது) தேரின்மேற் பொருந்தி, விசையோடு கூத்தாட - வேகத்தோடு நடனஞ்செய்ய, செம் கண் விசயன் - (கோபத்தாற்) சிவந்த கண்களையுடைய அருச்சுனன், புரக்கைக்கு நின்றோனுடன் - (தன்னைப்) பாதுகாக்கும்பொருட்டுத் துணைநின்ற கண்ணபிரானுடனே, புறப்பட்டனன் - (போருக்கு) வந்தான்; (எ-று.)*

*அருச்சுனனுக்குக் குரங்குக்கொடி, காண்டவதகநகாலத்தில் அக்கினிதேவனால் அளிக்கப்பட்டது. பின்பு வீமசேனன் புஷ்ப யாத்திரையாக அளகாபுரிக்குச்சென்றபொழுது, இடையில் அனுமானைக் கண்டு வணங்கி வேண்டி, போர்க்களத்தில் அருச்சுனனது தேர்த்துவசத்தில் வந்து நின்று மகிழ்ந்து கூத்தாடும்படி வரம்பெற்றான். அவ்வாறு அருச்சுனனது குரங்குக்கொடியில் அநுமான் ஆவேசித்து நின்று அக்கொடி காற்றில் வேகமாக அசையும் பொழுது கூத்தாடுதலை, துரியோதனாதியரைவீரவாதங் கூறி வெருட்டுவதாகக் கற்பித்து வருணித்தார்;* ***தற்குறிப்பேற்றவணி.*** *கீழ்பாட்டில், துரியோதனன்சேனைக்கு இராவணசேனையை உவமைகூறியவர், இங்கு அதை யழிக்க அநுமான் வந்ததைக் கூறினார். குரக்குக்கொடி - வேற்றுமையில் மென்றொடர் வன்றொடராயிற்று. புரக்கைக்கு -பூமிக்குப்பாரமாகவுள்ள துஷ்டர்களை யொழித்துச் சிஷ்டர்களைப் பரிபாலநஞ்செய்யும் பொருட்டு என்றுங் கொள்ளலாம்.* ***பி ம்:*** *மிசையோடி. (185)*

### *5.- வீடுமனோடு பொர அவனின்றவிடத்து ஸ்ரீகிருஷ்ணன் தேர்செலுத்துதல்.*

**அரனின்றனன்போலவவனின்றதேரொத்தவணிதேர்மிசைப்
பொரநின்றநதிமைந்தனொடுசென்றுமுனைநின்றுபொரவெண்ணியே
சரநின்றகுனிசாபவிசயன்றனைக்கொண்டுசங்கங்குறித்
துரநின்றவவனெஞ்சுடைப்பாகன்மான்றேருகைத்தூரவே.**
இதுவும், மேற்கவியும் - குளகம்.

*(இ - ள்) அரன் நின்றனன் போல - சிவபிரான் (போருக்கு வந்து) நின்றாற்போல, அவன் நின்ற தேர் ஒத்த அணி தேர்மிசை பொர நின்ற - அச்சிவபிரான் (திரிபுர சங்காரகாலத்தில்) ஏறி நின்ற (பூமியாகிய) தேரைப்போன்ற அழகியதொருதேரின்மேலேறிப் போர்செய்யவந்துநின்ற, நதிமைந்தனொடு - கங்காநதியின் புத்திரனான வீடுமனுடனே, சென்று முனை நின்று பொர எண்ணி - போய் எதிரில்நின்று போர்செய்யக் கருதி,-சரம்நின்ற குனி சாபம் விசயன் தனை கொண்டு - அம்புகள் (அழியாது) நிலை பெற்ற வளைவான (காண்டீவ) வில்லையுடைய அருச்சுனனைக் கூடஅழைத்துக்கொண்டு, சங்கம் குறித்து - (தனது பாஞ்சசன்னியமென்னுஞ்) சங்கை முழக்கிக்கொண்டு, உரம் நின்ற அவன்நெஞ்சு உடை பாகன் - தைரியம் நிலைபெற்ற அவ்வருச்சுனனது மனத்திற்கு ஏற்ற தேர்ப்பாகனான கண்ணபிரான்,-மான் தேர் உகைத்து ஊர - குதிரைகள் பூட்டிய தேரை நடத்திக்கொண்டு செல்ல,-(எ-று.)-'ஊர்கின்ற' (6) என்பதனோடு இயையும்.*

*அரனுவமை, அழித்தற்கு. உரம் - ஞானபலமென்பாருமுளர்.* ***பி-ம் ;*** *உரநின்ற வன்னெஞ்சுடைப் பாகன்- (186)*

*6.-தேர்வந்தவளவில் கலிங்கேசர்முதலோர் குறுக்கிட்டு அடிபட்டுப் புண்படுதல்*

**ஊர்கின்றதேரோடியுயர்கங்கைமகனின்றவொருதேருடன்
சேர்கின்றவெல்லைக்கலிங்கேசர்முதலானதெம்மன்னர்போய்
நேர்கின்றவிசயன்றனுடன்மோதியவனேவுநெடுவாளிபட்
டீர்கின்றபுண்வாயில்வார்கின்றசெந்நீரினிடைமூழ்கினார்.**

*(இ-ள்.) ஊர்கின்ற - (இவ்வாறு கண்ணன்) செலுத்துகிற, தேர் - (அருச்சுனனது) இரதம், ஓடி - வேகமாகச் சென்று, உயர் கங்கை மகன் நின்ற ஒருதேருடன் - சிறந்த கங்காபுத்திரனான வீடுமன் நின்ற ஒப்பற்ற தேருடனே, சேர்கின்ற எல்லை(எதிர்த்து)ச் சேர்கிற சமயத்தில்,-கலிங்க ஈசர் முதல் ஆனதெவ்மன்னர் - கலிங்கதேசத்தலைவர்கள் முதலாகிய பகையரசர்கள், போய் - (எதிர்த்துப்) போய், நேர்கின்ற விசயன் தனுடன் மோதி - எதிர்ப்பட்ட அருச்சுனனுடனே போர்செய்து, அவன் ஏவு நெடு வாளி பட்டு-அவ்வருச்சுனன் பிரயோகித்த நீண்ட பாணங்கள் (தம்மேல்) தைத்து, ஈர்கின்ற - (தம்உடலைப்) பிளக்கிற, புண் வாயில் - புண்களின் வழியே, வார்கின்ற - பெருகுகிற, செம் நீரினிடை - இரத்தத்திலே, மூழ்கினார்-அழுந்தினார்கள்; (எ-று.) (187)*

*7.-கலிங்கேசர் அலைப்புண்டதுகண்டு வீடுமன் அருச்சுனனை எதிர்த்து வில் முதலியன அறுபடுதல்.*

**செல்லுங்கலிங்கேசரலையுண்டநிலைகண்டுசிவனென்றுபார்
சொல்லும்பெருஞ்செம்மல்பல்லங்களவன் மேற்றொடுத்தேவினான்
கொல்லுங்கொடும்பாணமவையைந்துவிசயன்கொதித்தேவினான்
வில்லுந்தன்வின்னாணும்விறலம்புமுடனற்றுவிடைகொள்ளவே.**

*(இ-ள்.) செல்லும் - (அருச்சுனனை எதிர்த்துச்) சென்ற, கலிங்க ஈசர்- கலிங்கநாட்டு அரசர்கள், அலையுண்ட - (அருச்சுனனால்) வருத்தமடைந்த, நிலை -நிலைமையை, கண்டு - பார்த்து, சிவன் என்று பார் சொல்லும் பெருசெம்மல் -(அழித்தல்தொழிலில்) சிவபிரான் (போல்வான்) என்று உலகத்தவராற் சொல்லப்படுகிற சிறந்த வீரனான வீட்டுமன், அவன் மேல் பல்லங்கள் தொடுத்து ஏவினான்- அந்த அருச்சுனன்மேல் அம்புகளை (வில்லில்) தொடுத்து எய்தான்:(அப்பொழுது), விசயன்- அருச்சுனன், கொதித்து - கோபங்கொண்டு, தன் வில்உம்வில் நாண்உம் விறல் அம்புஉம் உடன் அற்று விடைகொள்ள - (அவ்வீடுமன்)தனதுவில்லும் அவ்வில்லின்நாணியும் (அவ்வில்லில் எய்யப்படும்)வலிமையையுடைய அம்புகளும் ஒருசேர அழிந்து மீண்டு செல்லும்படி, கொல்லும்கொடு பாணம் அவை ஐந்து-(பகைவரைக்) கொல்லவல்ல கொடிய ஐந்துபாணங்களை, ஏவினான்-செலுத்தினான்; (எ-று.)*

*விறலம்பும் என்றவிடத்து 'அடனாணும்' எனச் சில பிரதிகளிற்பாடங்காணப் படுகிறது; அப்பொழுது, அடல்நாண் அற்று வலிமையும்வெட்கமுங்கெட்டு என்க. பல்லம், பாணம், - வட சொற்கள். (188)*

*8.-இதுவும் அடுத்த கவியும்-வீமனுடன் மன்னர்பலரும் துச்சாதனன் முதலியோரும் பொழுது தோற்றோடினமை கூறும்.*

**இவர்கொண்டசெற்றத்தொடிவ்வாறுபோர்செய்யவிகல்வீமனைப்
பவர்கொண்டநெடுவேலைபோல்வந்துமொய்த்தார்கள்பலமன்னரும்
கவர்கொண்டமுனைவாளியவர்மார்புதோறுங்கழன்றோடவே
தவர்கொண்டுசெற்றான்முன்னளகேசனமர்வென்றனியாண்மையான்**

*(இ - ள்) இவர் - (அருச்சுனன் வீடுமன் என்ற) இவ்விருவரும், கொண்ட செற்றத்தொடு - (தாம் தாம்) கொண்ட பராக்கிராமத்துடனே இ ஆறு போர் செய்ய- இப்படி (ஒருபுறத்தில்) போர்செய்து*

*கொண்டிருக்க, - (மற்றொரு புறத்தில்), இகல்வீமனை - வலிமையையுடைய வீமசேனனை, பல மன்னர்உம் - அநேக அரசர்களும், பவர் கொண்ட நெடு வேலை போல்-(பிரளயகாலத்தில்) நெருங்குதலைக் கொண்ட பெரிய கடல்கள்போல, வந்து மொய்த்தார்கள் - வந்து நெருங்கிச் சூழ்ந்தார்கள்; (அப்பொழுது), முன் அளகேசன் அமர் தனி வென்ற ஆண்மையான் - முன்னே குபேரனது போரில் தனியே வெற்றிகொண்ட பராக்கிரமமுடைய வீமன், தவர்கொண்டு-(தன்) வில்லை(க்கையில்) ஏந்தி, (அம்புதொடுத்து), கவர் கொண்ட முனைவாளி - (பகைவருயிரைக்) கவர்தலைக் கொண்ட கூர்நுனியையுடைய (அந்த) அம்புகள், அவர் மார்பு தோறுஉம் கழன்று ஓட - அப்பகைவர்களின் மார்பு தோறும் வெளிப்பட்டு ஓடும்படி. செற்றான்- அழித்தான்;(எ-று.)*

*அளகேசன் - அளகாபட்டணத்துக்குத்தலைவன் - பாண்டவர் வனவாசஞ்செய்கையில், அங்கு வந்து விழுந்த ஒருசிறந்த பூவைப் பார்த்து ஆசைப்பட்டுத் திரௌபதி, அப்படிப்பட்ட பூவைக் கொண்டுவந்து தரும்படி வேண்ட, வீமன் குபேரனது அளகாபுரியிற் சென்று அங்குள்ள சோலையிற் பூப்பறிக்கத் தொடங்கினபொழுது, குபேரன் கட்டளையால் யக்ஷர் முதலிய பலர் சேனையோடு வந்து எதிர்க்க, அவர்களை யெல்லாம் இவன் ஒருவனாகவே வென்றிட்டா னென்பது,* **கீழ்ப்புட்பயாத்திரைச்சருக்கத்து வரலாறு** *. தனி ஆண்மையான் - அசகாயசூரன் - பவர்கொண்ட- (பவழக்)கொடியைக்கொண்ட என்றலும் ஒன்று.* ***பி - ம்:-*** *மார்பு தோளும்.*

***9. துச்சாதனன்றம்பிமார்மைந்தர்மற்றுஞ்சகுனிசல்லியன்***
***எச்சாபமுடிமன்னரும்பின்னருந்துன்னியெதிர்சீறினார்***
***அச்சாபமொன்றாலுமன்றவ்வவர்க்கம்பனேகந்தொடுத்***
***துச்சாசனஞ்சொல்லிநின்றானவ்வடன்மன்னருடனோடவே.***

*(இ-ள்.) பின்னர்உம்-பின்பு, துச்சாதனன் - துச்சாசனனும், தம்பிமார்-(அவனது) தம்பியர் பலரும், மைந்தர்-(அவர்களுடைய) புத்திரர்களும், மற்றுஉம்-இன்னும், சகுனி-சகுனியும், சல்லியன்- சல்லியனும், சாபம் முடிஎ மன்னர்உம்- வில்லலையேந்திய கிரீடாதிபதிகளான அரசர்கள்பலரும், எதிர் துன்னி- வீமனெதிரில்வந்து நெருங்கி, சீறினார்-கோபித்துப் போர்செய்தார்கள்; (அப்பொழுதுவீமன்), அ சாபம் ஒன்றால்உம் - அந்தத் (தனது) ஒரு வில்லைக் கொண்டே, அன்று- அப்பொழுது, அ அவர்க்கு-(வந்து எதிர்த்த) அந்தந்த அரசர்களுக்குக்கெல்லாம், அனேகம் அம்பு தொடுத்து-(ஒவ்வொருவர்க்கும்) பல பாணங்களைச் செலுத்தி, அ அடல் மன்னர் உடன் ஓட- வலிமையையுடைய அந்த அரசர்கள் ஒருசேர விரைந்து ஓடிப்போம்படி, உச்சாசனம் சொல்லி நின்றான் - (கொல்வேன்கொல்வே னென்று வீரவாதமாகக்) கொலை கூறி நின்றான்; (எ-று.)*

*துஸ்ஸாஸநன்-கொடிய கட்டளையுடையான். உச்சாஸனம் - கொலை: மேலான ஆக்கினையென்றுமாம்-கீழ்ப்பாட்டில் 'தவர்கொண்டு' என்றதை நோக்கி, 'அச்சாபம்' எனச்சுட்டினார். 'சீறினார்' எனக் காரியத்தைக் காரணமாக உபசரித்தார். (190)*

***10.-தம்பிமார்ஓடிவருவதுகண்டுசீறித்துரியோதனன்வீமனைநெருங்குதல்.***

**செருத்துப்புடைத்தோடிவருதம்பியர்க்கண்டுசெற்றத்துடன்**
***கருத்துப்புகைந்துட்கலங்கிக்கடைக்கண்கள்கனல்காலவே***
***மருத்துத்தருங்காளைநின்றானையின்றாவிமலைவேனெனா***
***வுருத்துத்தடந்தேரின்மிசைவந்தடுத்தானுரககேதனன்.***

*(இ-ள்.) செருத்து-போர்செய்து, புடைத்து-(வீமனால்) அடிபட்டு, ஓடி வரு- (புறங்கொடுத்து) ஓடிவருகிற, தம்பியர்-(தன்) தம்பிமார்களை, கண்டு-பார்த்து,-உரக கேதனன்-பாம்புக்கொடியனான துரியோதனன்,-செற்றத்துடன் - கோபத்துடனே, கருத்து புகைந்து-மனங்கொதித்து, உள் கலங்கி-உள்ளே கலக்கமடைந்து, கடை கண்கள் கனல் கால-(தன்) கண்ணின் கடைகள் கோபாக்கினியைச் சொரிய, மருந்து தரும் காளை நின்றானை இன்று ஆவி மலைவேன் எனா - 'வாயுபெற்றபிள்ளையாய்நின்ற வீமனை இப்பொழுதுப் (போர்செய்து) உயிரழிப்பேன்' என்று(வீரவாதஞ்) சொல்லி, உருத்து- அதட்டிக்கொண்டு, தட*

*தேரின்மிசை வந்து அடுத்தான்-பெரிய தேரின்மேலே வந்து(வீமனை) நெருங்கினான்; (எ-று.) - தம்பியர்க்கண்டு -இரண்டாம்வேற்றுமைச் சிறப்புவிதி. (191)*

*11.-இரண்டுகவிகள்-துரியோதனன் வீமனையெதிர்த்து வலிகெடுதலைக் கூறும்.*

**பேராதநிலைநின்றுவன்போடுசாபம்பிடித்தெங்கணுஞ்**
**சோராதவயவாளியீரைந்துசேரத்தொடுத்தேவினான்**
**ஆராவமுடனிட்டகவசம்பிளந்தோடியாண்மைக்கெலாம்**
**வீராபிடேகஞ்செய்வயவீமனகன்மார்பின்மிகமூழ்கவே.**

*(இ -ள்.) (வந்து அடுத்த துரியோதனன்), பேராத நிலை நின்று-சலியாத ஒருநிலையிலே நின்று,வன்போடு சாபம் பிடித்து-வலிமையோடு வில்லைக் கையில்ஏந்தி,-ஆண்மைக்கு எலாம் வீர அபிடேகம் செய் வய வீமன்- பராக்கிரமத்துக்கெல்லாம் (தலைவனாகத்தன்) வீரத்தனத்தால் பட்டாபிஷேகஞ்செய்யப் பெற்றுள்ள வலிமையையுடைய வீமசேனனது, இட்ட கவசம்-(மேலே) தரித்த கவசத்தை, பிளந்து ஓடி-பிளந்துகொண்டு சென்று, அகல் மார்பில்-(அவனது) பரந்த மார்பிலே, மிக மூழ்க-மிகுதியாக அழுந்தும்படி, ஏ கண்உம் சோராத வயவெளி ஈர்ஐந்து- எவ்விடத்தும்(பகைவெல்லுதலில்) சோர்தலில்லாத வலிமையையுடைய பத்துப் பாணங்களை, ஆராவமுடன்- ஆராவாரத்துடனே, சேர தொடுத்து ஏவினான்- ஒருசேரப் பிரயோகித்தான்; (எ-று.)*

*நிலை என்றது-போரில் வில்வளைத்து அம்பைஎய்வார்க்கு உரிய நிலை. அது-பைசாசம், மண்டலம், ஆலீடம், பிரதியாலீடம் என நான்கு வகைப்படும்: இவற்றுள், ஒருகாலில்நின்று ஒருகால் முடக்கல்-பைசாசநிலை: இருகாலும் பக்கல்வளைய மண்டலித்தல்- மண்டலநிலை: வலக்கால் மண்டலித்து இடக்கால் முந்துறல்-ஆலீட நிலை: வலக்கால் முந்துற்று இடக்கால் மண்டலித்தல்-பிரதியாலீடநிலை: இனி, பிரதியாலீடம், ஆலீடம், சமபதம், விசாகம், மண்டலம் எனநிலை ஐந்தென்பாரும் உளர். ஆராவம் - வடசொல்: பேரொலி: வீரவாதத்தா லாகுவது. இனி, ஆர் ஆவமுடன் எனப்பிரித்து, நிறைந்த அம்பறாத்தூணியொடு கவசமும் பிளந்து என இயைப்பாரு முளர்.' 'ஆண்மைக்கெலாம் வீராபிடேகஞ்செய்' என்பதற்கு - பராக்கிரமசாலிகள் எல்லோர்க்குள்ளுந் தலைமைபெற்ற என்றவாறு. (192)*

***12. ஈமந்தொ றுஞ்சென்று நடமாடு கழலைய னெதிராய்வருங்***
***காமன்ற னுடன்மேல்வி ழித்திட்ட நுதலிற்க னற்கண்ணெனத்***
***தாமம்பு னைந்தார மணநாறு மார்பத்த டந்தோயவே***
***வீமன்றொ டுத்தானொ ரெதிரம்பு பார்மன்னன் மிடல்சாயவே.***

*(இ-ள்.) ஈமம் தொறும் - மயானங்களிலெல்லாம், சென்று-போய், நடம் ஆடு - கூத்தாடுகிற, கழல் - சீர்பாதங்களையுடைய, ஐயன்-தலைவனான சிவபிரான், எதிர் ஆய் வரும் காமன்தன் உடல் மேல் விழித்திட்ட-எதிரியாய் (ப் போருக்கு) வந்த மன்மதனது உடம்பை இலக்காகக் கொண்டு அதன்மேல் விழித்துப்பார்த்த, நுதலில் கனல் கண் என - நெற்றியிலுள்ள நெருப்புக்கண்போல,-தாமம் புனைந்து ஆர மணம் நாறும் மார்பம் தடம் தோய-மாலைகளைத் தரித்து மிகவாசனைவீசுகிற மார்பினிடத்திலே பதியவும், பார் மன்னன் மிடல் சாய-பூமியை ஆளும் அரசனான அத்துரியோதனன் (அதனால்) வலிமைகெடவும், வீமன்-வீமசேனன், ஓர் அம்பு எதிர் தொடுத்தான்-ஒருபாணத்தை எதிரிலே செலுத்தினான்.*

*சிவபிரான் வீமனுக்கும், நெற்றிக்கண் அம்புக்கும், மன்மதன் துரியோதனனுக்கும், அழித்தலும் அழிக்கப்படுதலுமாகிய தொழில்பற்றி உவமை. சர்வசங்காரகாலத்தில் எல்லாப்பிராணிகளும் அழியப்பெற்ற உலகமுழுவதும் இடுகாடுஆவதனால், அவ்விடம் முழுவதிலும் அப்பொழுது சிவபிரான் உமாதேவி கண்டுஉள்ளம் மகிழும்படி திருநடனஞ் செய்கின்றன ரென்பது, சைவசம்பிராதாயம். நடம்- வடசொல். ஆரம் மணம் நாறும் என எடுத்து, சந்தனக்குழம்பு*

*கமழப்பெற்ற எனினுமாம். ஒரேதிரம்பு - துரியோதனன் தானாகவந்து விட்ட பல அம்புகளுக்கு மாறாகச்செலுத்தப்பட்ட ஒரு அம்பு. (193)*

வேறு

*13.-வீமன்மீது பூரிசிரவா வந்து பொருதல்.*

**ஓரம்பினு ளைந்தேழுல குடையானல மரவே**
**வீரம்புனை வீமன்குனி வில்லோடெதிர் நிற்கப்**
**போரம்பர வுலகாள்பவர் புகழ்பூரிச வாவந்**
**தீரம்புதொடு த்தானொரு தேர்மேலின னிவன்மேல்.**

*(இ -ள்.) ஏழ் உலகு உடையான்-ஏழுதீவுகளாகவுள்ள பூமி முழுவதையும் தனதாகவுடைய துரியோதனன், ஓர் அம்பின் உளைந்து அலமர - (தனது) ஒரு அம்பினால் வருந்திக்கலங்கும்படி (செய்து), வீரம் புனை வீமன் - வீரத்தன்மையைப்பெற்றுள்ள வீமசேனன். குனி வில்லோடு எதிரி நிற்க - வளைந்தவில்லுடனே எதிரில்நிற்க,-(அப்பொழுது),- அம்பரம் உலகு ஆள்பவர் - ஆகாயத்திலுள்ள சுவர்க்கலோகத்தை அரசாளுகிற (இந்திரன் முதலிய) தேவர்களால், போர் புகழ் - யுத்தத்திற் புகழப்படுகிற, பூரிசவா - பூரிசிரவசு என்னும் அரசன், ஒரு தேர் மேலினன் வந்து - ஒருதேரின்மேல் ஏறினவனாய் வந்து, இவன்மேல் ஈர் அம்பு தொடுத்தான் - இவ்வீமன்மேல் இரண்டு பாணங்களைச் செலுத்தினான்;(எ-று.)*
*வீரம்புனை - பராக்கிரமத்தை ஆபரணமாகக்கொண்ட என்க. பூரிஸ்ரவா: என்னும் வடசொல், திரிந்தது: இவன் சோமதத்த னென்பவனதுமகன்; அதனால் சௌமதத்தியென்றும் ஒரு பெயர் பெறுவன். இவன் துரியோதனன்பக்கத்து அதிரதவீரரில் ஒருவன்- **பி-ம்:** அலம்வர.*

*இதுமுதல் இச்சருக்கம்முடியுமளவும் பதின்மூன்று கவிகள் - பெரும்பாலும் ஈற்றுச்சீரொன்று மாச்சீரும், மற்றைமூன்றும் மாங்கனிச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட **கலிவிருத்தங்கள்.** (194)*

*14.-அதுகண்ட சாத்தகி பூரிசிரவரவோடு பொருதல்.*

**இவனாண்மையைமதியாதெதிரெய்தானெனவெய்திற்**
**பவனாகதிபெறுதேரி னனளினாபதியிளவல்**
**அவனாருயிர்கவர்வேனெனவம்பொன்றுதொடுத்தான்**
**தவனான்மறைதெரிபூரிசவாவுஞ்சரம்விட்டான்.**

*(இ-ள்.) (அப்பொழுது), நளினாபதி இளவல் - திருமகள் கணவனான கண்ணபிரானது தம்பியாகிய சாத்தகி, (வீமன்மேல் பூரிசிரவன் அம்பெய்தது கண்டு),இவன் ஆண்மையை மதியாது எதிர் எய்தான் என -'இவ்வீமனது பராக்கிரமத்தைநன்கு மதிக்காமல் (பூரிசிவரன்) இவனெதிரில் அம்பு தொடுத்தான்' என்று. வெய்தின்- கடுமையான கோபத்தோடு, பவனாகதி பெறுதேரினன் - வாயுவேகத்தைப்பெற்றதேரைச் செலுத்தியவனாய் (வந்து), அவன் ஆர் உயிர் கவர்வேன் என- 'அந்தப்பூரிசிரவனது அருமையான உயிரை (நான் இப்பொழுது) வாங்குவேன்' என்று(வீரவாதஞ்) சொல்லி, அம்பு ஒன்று தொடுத்தான் - ஒருபாணத்தை (அவன்மேற்)செலுத்தினான்; தவனால் மறை தெரி பூரிசவாஉம் - தவஞ்செய்து அதனால்(அஸ்திரத்துக்குரிய) மந்திரங்களையறிந்துள்ள பூரசிரவனும், சரம் விட்டான்-(சாத்தகியின்மேல்) எதிரம்பு தொடுத்தான்; (எ-று.)*

*பவநாகதி - வடமொழித்தொடர், எதுகைநயம் நோக்கி நீண்டது. நளிநா - தாமரைமலரில் வாழ்பவள்: அவள்கணவன் - நளிநாபதி; வடசொற்றொடர். தவன்=தவம்: இறுதிப்போலி; இனி, உயர்திணைப்பெயராகக்கொண்டு, தவஞ்செய்துள்ள முனிவனால் மந்திரங்களை யறிந்த எனினுமாம். (195)*

*15.-மூன்றுகவிகள்-சாத்தகியும் பூரிசிரவாவும் முதலில் விற்போர்புரிந்து பிறகு வாட்போர்புரிதலைக் கூறும்*

**ஏணற்றுயர்வரைமார்பினரிருவோர்களுமொருவோர்**
**காணற்றொழிலரிதாமுறைகடிதிற்கணைதொடவே**
**நாணற்றனவெஞ்சாபமுநடுவற்றனவெனினுங்**
**கோணற்றனபுகல்வானொருகுறையற்றதவர்க்கே.**

*(இ - ள்) ஏண் அற்று - வளைவு இல்லாமல், உயர் - நீண்டு வளர்ந்துள்ள, வரை -மலைபோல (வலியதாய்)ப் பரந்த, மார்பினர் - மார்பையுடையவர்களாகிய, இருவோர்கள்உம் - (சாத்தகி பூரிசிரவா என்னும்) இருவரும், ஒருவோர் தொழில் காணல் அரிது ஆம் முறை - ஒருவரும் (தமது) தொழில் வகையைக்காண முடியாததாகும்படி, கடிதின் - விரைவாக, கணை தொட - அம்புகளை யெய்ய,-(அதனால்), நாண் அற்றன - (இருவரது) வில்நாணிகளும் அறுந்தன; வெம் சாபம்உம் நடு அற்றன - கொடியவிற்களும் நடுவிலே துணிபட்டன; எனின்உம்-என்றாலும்[ஆயினும்], அவர்க்கு - அவ்விரண்டு வீரர்கள்விஷயமாக, கோண் அற்றன புகல்வான் - குற்றமில்லாத புகழ்மொழிகளைச்சொல்லுதற்கு, ஒரு குறை அரற்றது - சிறிதுகுறையும் இல்லை; (எ-று.)*

*சிறிதும்பழியில்லாத புகழ் பெறும்படி இருவரும் பின்வாங்காமல் தம்மாலியன்றவளவுபோர்விளைத்தனரென்பதாம். வில்லையேந்துதல் வளைத்தல் நாணேற்றல்அம்பெடுத்தல் அதனைவில்லில் தொடுத்தல் பகைவர்மேல் விடுத்தல் முதலியதொழில்கள், செய்யுங் கைவிரைவால்எவர்க்கும்வகுத்துக் காணவொண்ணாதபடியிருந்தன என்பது இரண்டாம் அடியின்கருத்து. ஏண் அற்றுஉயர் மர்ர்பு என எடுத்து, குற்றமில்லாமற் சிறந்த மார்பு எனினுமாம். (196)*

*16.* **ஒருகேடகவுரைதேறினருளமேயெனவமரிற்**
**பொருகேடகநடவுங்கனபொற்றேர்மிசையிழியா**
**முருகேடவிழ்தார்மார்பினர்முனைவாளமிரண்டோ**
**டிருகேடகமிருகையினுமிருவோரு மெடுத்தார்.**

*(இ-ள்.) முருகு-வாசனையையுடைய, ஏடு அவிழ் தார்-பூவிதழ்கள் விரிந்த மாலையைத்தரித்த, மார்பினர் - மார்பை யுடையவர்களாகிய இருவோர்உம்-இந்த இரண்டுபேரும்,-ஒரு கேள் தக- ஒற்றுமையான சினேகம் பொருந்த, உரை தேறினர்- (ஒருவர்)பேச்சை(ஒருவர்) நம்புபவரான சினேகிதரது, உளம்ஏ என - மனம்போல, செய்தொழிலில் ஒற்றுமைப்பட்டு),-அமரில் போர்க்களத்திலே, நடவும்- செலுத்தப்படுகிற, கேடகம்பொரு-விமானத்தை யொத்த, கனம் பொன் தேர்மிசை- பெரியபொன்னாலாகிய தேர்களின்மேலிடத்தினின்றும், இழியா-இறங்கி,-முனை வாளம் இரண்டோடு-கூர்நுனியையுடைய இரண்டுவாளாயுதத்துடனே, இருகேடகம் - இரண்டு கேடகங்களையும், இரு கையின்உம் எடுத்தார் - இரண்டுட கையிலும் எடுத்துக்கொண்டார்கள்; (எ-று.)*

*சமகாலத்தில் ஒருவரால் ஒருவர் வில் அறுபட்ட இவ்விருவரும் தேரினின்றுஇறங்குதல், வலக்கையில்வாளையும் இடக்கையிலே கேடகத்தையும் ஏந்துதல்என்னுந் தொழில்களை மாறுபடாது ஒருங்கேசெய்ததுபற்றி ஒருவருக்கொருவர்பகைவரான இவருக்கு, ஒருவரோடொருவர் ஒத்தமனமுள்ள உயிர்நண்பரை உவமைகூறினார். இரண்டாமடியில், கேடகம்-வடசொல்: வானத்திற் சஞ்சரிப்பதென்றகாரணம்பற்றி விமானத்தைக்காட்டும். இனி, கேடுஅகம்நடவும் என்பதற்கு- கேட்டைஅவ்விடத்திற் செலுத்தும் என்றும், கேட்டைத் தன்னிடத்தினின்று ஓட்டுகின்றஎன்றும் பொருளுரைத்தாருமுளர். கனபொன் - நிலைமொழி வட மொழியாதலின், வலி இயல்பு, முருகு-தேனுமாம். கேடகம்-தன் மேற் பிறர் எறியும் படைக்கலங்களைத்தடுப்பதொரு கருவி; பரிசை. 'தக' என்பது தேறுதலோடு இயையும்,* ***பி-ம்*** *: கேடறநடவும். (197)*

*17,     படிவாயுடுபதியுந்தினபதியும்பொருதெனவே
தொடிவார்கரதலமொன்றியதுறுதோலிடைமறையா
வடிவாண்முனையசையாவிசைவருசாரிகள்பயிலா
விடிவாய்முகிலதிராவெதிரெதிர்சீறினரிப்பால்.*

*(இ-ள்.)* படிவாய்-பூமியிலே, உடுபதிஉம்-சந்திரனும், தினபதிஉம்-சூரியனும், பொருது என - (வந்து) போர்செய்தாற்போல, தொடி வார் கர்தலம் ஒன்றிய துறு தோலிடை மறையா - தொடியென்னும் அணியை அணிந்த நீண்ட (தம்) கைகளினிடத்திற்பொருந்திய நெருங்கிய கேடயத்தினுள்ளே மறைந்தும், வடி முனை வாள் அசையா-கூரிய நுனியையுடைய வாள்களைச் சுழற்றியும், விசை வரு சாரிகள் பயிலா-வேகமாக வருகிற (இடசாரி) வலசாரி யென்னும்) நடைகளை நடத்தியும், இடி வாய் முகில் அதிரா-இடிபொருந்தின மேகம்போலச் சிங்கநாதஞ்செய்தும், எதிர் எதிர் சீறினர்-எதிரெதிராகநின்று கோபித்துப்போர்செய்தார்கள்: (அதுநிற்க), இபால்- இந்தப்பக்கத்தில்,- (எ-று)- "துரகம்....,கரிமா சீறின" என மேற் கவியில் முடியும்.

"ஓடிய ஞாயி றுவாமதியோ டொத்தாற்போல், கேடகங்க ளோரிரண்டுங் கேழ்கிளர்-ஆடமரில், தாக்கினார் சாரிகைகள் சந்தித்தா ராயுதங்கள், ஒக்கினார் தம்மி லுடன்று" என்றார் பெருந்தேவனாரும். சந்திர சூரியருவமை- தேககாந்தியோடுகூடிய சாத்தகி பூரிசிரவாக்களுக்குப் பொருந்தும்; வட்டவடிவமானகேடயத்துக்குக் கொள்ளுதலும் ஒன்று. முதலடி - **இல்பொருளுவமை.** உடுபதி -நஷத்திரங்களுக்குத் தலைவன். தினபதி- நாளுக்குத்தலைவன். தோலமைத்துச்செய்யப்படுதலால், கேடகத்துக்கு 'தோல்' என்பது -கருவியாகுபெயர். *(198)*

### 18.-இரண்டுபக்கத்திலும் மன்னவரும் சதுரங்கசேனைகளும் ஒன்றோடொன்று பொருதல்.

**தோலாதடலொடுசீறினதுரகத்தொடுதுரக
மேலாளொடுமேலாள்வரிவில்லாளொடுவில்லாள்
ஏலாமுடியரசோடரசிரதத்துடனிரதங்
காலாளொடுகாலாண்மதகரிமாவொடுகரிமா.**

*(இ-ள்.)* துரகத்தொடு துரகம் - குதிரைகளோடு குதிரைகளும், இரதத்துடன் இரதம் - தேர்களோடு தேர்களும், மத கரி மாவொடு கரிமா-மதயானைகளோடு யானைகளும், மேல் ஆளொடு மேல் ஆள்-(இவற்றின்) மேலுள்ள வீரர்வகையோடு வீரர்வகையும், வரி வில் ஆளொடு வில் ஆள் - கட்டமைந்த வில்லின் வீரர்வகையோடு வில்வீரர்வகையும், முடி அரசோடு அரசு - கிரீடாதிபதிகளான அரசர்வகையோடு அரசர்வகையும், காலாளொடு காலாள் - பதாதிவகையோடு பதாதிவகையும், ஏலா - எதிர்த்து, தோலாது- தோல்வியடையாமல், அடலொடு சீறின-வலிமையோடு கோபித்துப்போர்செய்தன; (எ-று)

உயர்திணைப்பெயர்களெல்லாம் சாதியுணர்த்துவனவாக வைத்து 'சீறின' என அஃறிணைப்பன்மைமுற்றுக் கொடுத்து முடித்தார். *(199)*

### 19.-இதுமுதல் மூன்றுகவிகள்-படுகளச்சிறப்பு.

**நீடுங்கடகரியின்கரநிரையற்றனநதியா
யோடுங்குருதியின்வாளைகளெனவோடினவொருசார்
கோடுஞ்சிலையம்பிற்றலையரியுண்டனகுறைநின்
றாடுந்தொறுமுடனாடுவவலகைக்குலமொருசார்.**

*(இ-ள்.)* (அப்போர்க்களத்தில்), ஒரு சார் - ஒரு பக்கத்தில், நிரை அற்றன- வரிசையாக அறுந்துவிழுந்தனவான, கட கரியின் நீடும் கரம்-மதயானைகளின் நீண்ட துதிக்கைகள், நதி அய் ஓடும்

*குருதியின் - ஆறுகளாக விரைந்துபெருகுகிற இரத்தவெள்ளத்திலே, வாளைகள் என ஓடின- வாளைமீன்கள் போல ஓடின: ஒரு சார் - மற்றொருபக்கத்தில், கோடும் சிலை அம்பின் - வளைந்த வில்லினால் விடப்பட்ட (பகைவரது) பாணங்களால், தலை அரியுண்டன-தலை அறுபட்டனவான,குறை - உடற்குறைகள், நின்று ஆடும் தொறுஉம் - நின்று ஆடும்பொழுதெல்லாம்,அலகை குலம் - பேய்களின் கூட்டம், உடன் ஆடுவ- கூடநின்று கூத்தாடுவன;(எ-று.)*

*முன்னிரண்டடி - **வடிவுவமை** . தலையரியுண்டன குறை-கபந்த மெனப்படும். தலைநீங்கியஉடல் முன்தொடர்ச்சியால் சிறிதுநேரம் கைகால்களை அசைத்துத் தொழில்செய்தலையும் பதைபதைத்துத் துடிப்பதையுமே. 'நின்று ஆடுதல்' என்றது: இனி, "பேரொத்த வாயிரம்பேர் மடிந்தாற்பிறக்குங்கவந்தம், நேரொத்தவாடும்" என்றபடி, ஒத்த ஆயிரம்வீரர் மடிந்தால் கவந்தமெழுந்து ஆடுமென்று கூறுதலுமுண்டு. கவந்தம் ஆடும்பொழுது பேய்கள் உடன் ஆடுவது, அவற்றைத் தாம் உண்ணலா மென்ற களிப்பினாலென்க. (200)*

***20. கோல்கொண்டவைசிலைக்கொண்டவைவாள்கொண்டவைகூர்வாய்
வேல்கொண்டவையவைதம்முடன்விழுகைத்தலமொருசார்
கால்கொண்டுகுசெந்நீர்விரிகளமேககனமதா
மால்கொண்டகரிக்கோடிளமதியாவனவொருசார்.***

*(இ - ள்) கோல் கொண்டவை-அம்புகளை எடுத்தவையும், சிலை கொண்டவை-வில்லைப் பிடித்தவையும், வாள் கொண்டவை- வாளையேந்தியவையும், கூர் வாய் வேல் கொண்டவை - கூரிய நுனியையுடைய வேலைத்தரித்தவையுமா யிருந்து, அவை தம்முடன்விழு - அவற்றுடனே அறுந்து கீழ்விழுந்த, கைத்தலம் - கைகள், ஒரு சார் - ஒருபக்கத்தில், (கிடந்தன); ஒரு சார் - ஒரு பக்கத்தில், கால் கொண்டு உகு செந்நீர் விரிகளம்ஏ - வாய்க்கால்களாகிப்பெருகுகிற இரத்தம் பரந்த போர்க்களமே, ககனம் அது ஆ - (செவ்) வானமாக, மால் கொண்ட கரி கோடு - மதமயக்கங்கொண்ட யானைகளின் தந்தங்கள், இள மதி ஆவன - பிறைச் சந்திரனாக இருப்பன; (எ-று.)*

*முதல்வாக்கியத்துக்கு முற்று வருவிக்கப்பட்டது. இரண்டாவதுவாக்கியம் - வடிவொப்புமைபற்றிய **உருவகவணி.** உபமேயத்தில் 'செந்நீர்விரி' என்ற அடைமொழிக்கு ஏற்ப, ககனம் 'செவ்வானம்' எனப்பட்டது. **பி-ம்;** கைக்குலம். (201)*

***21. முந்நீர்தருபவளங்கொடுமுன்னஞ்சமைவனபோற்
செந்நீரின்மிதந்தோடுவதேராழிகளொருசார்
நன்னீர்மழைமொழிசெம்புனனதிவாய்வருநுரைபோ
லந்நீரிடைபுகுமூளைகளலைபாய்வனவொருசார்.***

*(இ - ள்) ஒரு சார் - ஒருபக்கத்தில், தேர் ஆழிகள்-தேர்ச் சக்கரங்கள், முந்நீர் தரு பவளங்கொடு முன்னம் சமைவன போல்- கடலிலுண்டாகிற பவழத்தால் முன்னமே செய்யப்பட்டவை போல, செந்நீரில் மிதந்து ஓடுவ - இரத்தத்திலே மிதந்து ஓடுவன; ஒருசார்-, நல் நீர் மழை பொழி செம் புனல் நதிவாய் வரும் நுரை போல் - நல்லநீரை மேகம்சொரிவதனாற் பெருகிய சிவந்த புதுநீர்வெள்ளத்தையுடைய நதியிலே வருகிற நுரைகள் போல, அ நீரிடை புகும் மூளைகள் அலை பாய்வன - அவ்விரத்தநீரிலே விழுந்த (வெண்மையான) மூளைகள் (எப்புறத்தும்) அலைவன;*

*நல்நீர்மழை - உலகத்துக்கு நன்மைசெய்யுந் தன்மையுள்ள மேக மென்றுமாம். **தற்குறிப்பேற்றவுவமையணி.** (202)*

***22.- போர்க்களத்து இறந்த மன்னவரின் தொகை.***

***வையாரயில்கணைதோமரம்வாள்கப்பணமுதலாங்
கையாயுதமுழுகுந்துளை வழிசெம்புனல்கால***

**மெய்யாயிரவிதமாய்விழவெம்போரிடையிருபத்**
**தையாயிரமுடிமன்னவரகல்வானமடைந்தார்.**

*(இ-ள்.) வை ஆர் - கூர்மை மிகுந்த, அயில் - வேலும், கணை-அம்பும், தோமரம்-ஈட்டியும், வாள்-வாளும், கப்பணம் - யானை நெருஞ்சிமுட்படையும், முதல் ஆம்-முதலாகிய, கை ஆயுதம்-(பகைவர்) கையிலுள்ள ஆயுதங்கள், முழுகும்- (தம் உடம்பில்) அழுந்திய, துளை வழி - துவாரத்தின் வழிகள், செம் புனல்கால-இரத்தத்தைக் கக்கவும், மெய் ஆயிரம் விதம் ஆய் விழ - உடம்புகள்பலவகைத்துண்டுகளாய் விழவும், வெம் போரிடை-கொடிய அப்போரிலே, இருபதுஐ ஆயிரம் முடி மன்னவர் - இருபத்தைந்து ஆயிர மென்னுந் தொகையுள்ளகிரீடாதிபதிகளான அரசர்கள், அகல் வானம் அடைந்தார் - விசாலமானவீரசுவர்க்கத்தை அடைந்தார்கள் [இறந்தார்கள் என்றபடி]; (எ-று.)-கப்பணம் -இரும்பால் பெருநெருஞ்சிமுள்ளின் வடிவமாகச் செய் யப்படும் ஓர் ஆயுதவிசேடம், இருபத்தையாயிரம்-இருபதினாற்பெருக்கிய ஐயாயிரம்: லஷம் என்றாலும் ஒன்று. (203)*

### *23.-சூரியாஸ்தமன வருணனை*

**இவ்வாறுமுனைந்தாருயிரிருசேனையுமடிய**
**மைவானுலகிடமற்றதுவயவீரர்நெருக்கா**
**லவ்வானவர்தமதாலயம்வலம்வந்தவருக்கன்**
**செவ்வானுறுகுடபால்வரையிடமென்றதுசேர்ந்தான்.**

*(இ-ள்.) இ ஆறு - இப்படி, முனைத்து - போர்செய்து, இரு சேனைஉம் - இருதிறத்துச் சேனைகளும், ஆர் உயிர் மடிய - அருமையான உயிர் நீங்க [இறக்க],வய வீரர் நெருக்கால் - (உடனே வீரசுவர்க்க மடைந்த) வலிமையையுடையஅவ்வீரர்களது நெருக்கத்தால், மை வான் உலகு இடம் அற்றது - கரியஆகாசத்திலுள்ள சுவர்க்கலோகம் வெற்றிடம் (சிறிதும்) இல்லையாயிற்று;(அப்பொழுது), அ வானவர் தமது ஆலயம் வலம் வந்த அருக்கன் - அந்தத்தேவர்களது இருப்பிடமான மேருமலையைப் பிரதஷிணமாகச் சூழ்ந்துவந்த சூரியன்,செவ் வான் உறு குட பால் வரை இடம்என்று - செவ்வானம் பொருந்திய (மேற்குத்திசையிலுள்ள) அஸ்தகிரியைத் தனக்கு இடமாக்கருதி, அது சேர்ந்தான் -அம்மலையை அடைந்தான் [அஸ்தமித்தான்.]*

*பூமியின் மத்தியிலுள்ள மேருமலையை வானத்திலே சுற்றி வருந்தன்மையுள்ள சூரியன் இயல்பாக மறைந்ததை, தேவர்களுக்கு இருப்பிடமாகிய சுவர்க்கலோகமும் மேருகிரியும் போரிலிறந்து விண்ணுலகடைந்த வீரர்களால் நெருங்கியிருப்பதைப் பார்த்து அங்கு எங்குந் தனக்கு இடம்பெறாமல் மேற்குத்திசை மலையைத் தனியே இடமாகக்கொண்டு சூரியன் சேர்ந்தாற்போலுமென உத்பிரேக்ஷித்தார்:* ***தற்குறிப்பேற்றவணி.*** *வானத்துக்கு வடிவ மில்லையாயினும், 'மைவான்' என்பது - தோற்றமாத்திரத்தைக் கொண்டு. (204)*

### *24.-இருதிறத்து மன்னவரும் பாசறைபுகுதல்.*

**எப்போதுமரும்போரினிலிதயங்களிகூர்வார்**
**கைப்போதுறுபடைசெம்புனல்வழியேயுயிர்காய்வா**
**ரொப்போதுதலரியாரிருதிறமன்னருமொருவா**
**வப்போதனிகத்தோடுமகன்பாசறைபுக்கார்.**

*(இ-ள்.) ஏ போதுஉம் - எப்போழுதும், அரும் போரினில் - அருமையான போர்செய்தலிலே, இதயம் களி கூர்வார் - மனங்களிப்பு மிகுபவரும், போது கை உறு - தாமரைமலர்போன்ற (தங்கள்) கைகளிற் பொருந்திய, படை - ஆயுதங்களால், செம்புனல் வழிஏ - இரத்தம் பெருகியவழியாகவே, உயிர் - பகைவருயிரை, காய்வார் - கொல்லுபவரும், ஒப்பு ஓதுதல் அரியார் - (எவரையும்) உவமை சொல்லுதற்குக் கூடாதவர்களும் ஆகிய, இரு திறம் மன்னர்உம் - இரண்டுபக்கத்து அரசர்களும், அ*

*போது - அப்பொழுது, அனிகத்தோடும் - சேனைகளுடனே, ஒருவா - (போர்க்களத்தை நீங்கி, அகல் பாசறை புக்கார் - விசாலமான படைவீட்டை அடைந்தார்கள்; (எ - று,)*

*'படை செம்புனல் கடலுண்டது கால்வார்' என்ற பாடத்துக்கு - ஆயுதங்களாற்கடல்கொள்ளும்படியான [மிக அதிகமான] இரத்தத்தைப் பெருக்குபவர்களும் என்க.அகல்+பாசறை=அகன்பாசறை; குறில்செறியாலள" என்னுஞ்சூத்திரத்து 'பிற' என்றமிகையால் அமைக்கப்படும். (205)*

### *25-மறுநாள் சூரியோதய வருணனை.*

**இரவென்றிருள் கெழுநஞ்சினி ளந்திங்களெ யிற்றோ**
**ராவுண்டது தான்மீளவு மிழ்ந்தென்னவ ருக்க**
**னுரவுங்குட் திசைநீனிற வுததிக்குளொ ளித்தோன்**
**விரவுங்குண திசைவேலையின் மிசைவந்துகி ளர்ந்தான்.**

*(இ-ள்.) இருள் - இருட்டாகிய, கெழு நஞ்சின் - மிகுந்த விஷத்தையும் இள திங்கள் - கலைகுறைந்த (பிறைச்) சந்திரனாகிய, எயிறு - கோரப்பல்லையுமுடைய, இரவு என்ற - இராத்திரியாகிய, ஓர் அரவு - ஒரு கரும்பாம்பினால், தான் உண்டு- தான் உண்ணப்பட்டு, அது மீள உமிழ்ந்து என்ன- அப்பாம்பினால் மறுபடி உமிழப்பட்டாற்போல, அருக்கன்-சூரியன், உரவுகுடதிசை நீல் நிறம் உததிக்குள் ஒளித்தோன் - வலிமையுடைய மேற்குத் திக்கிலுள்ள நீலநிறத்தையுடைய கடலிலே (முந்தினநாள் மாலைப்பொழுதில்) மறைந்தவன், விரவும் குண திசை வேலையின் மிசை வந்து கிளர்ந்தான் - பொருந்திய கிழக்குத்திக்கிலுள்ள கடலின் மேலே (மறுநாளுதயத்தில்) தோன்றி விளங்கினான்; (எ-று.)*

*உண்ணப்பட்டாற்போல அஸ்தமித்தவன் உமிழப்பட்டாற்போல உதித்தனனென்பதாம்: சூரியன் சிலகாலத்தில் இராகுவென்னும் கரும்பாம்பாலுட்கொள்ளப்படுதலைக் கருதி. இங்ஙனம் கூறினார்.* **உருவகவணியை** *அங்கமாகக்கொண்டுவந்த* **தன்மைத்தற் குறிப்பேற்றவணி.** *என்றிருள் - விகாரம். 'உரவுக்குடதிசை' என்பது-உரவுங்குடதிசை யென ஓசையின்பம் நோக்கிமெலித்தல்பெற்றது. நீல் - கடைக்குறை-* ***பி-ம்*** *: உமிழ்ந்தோனென. (206)*

### *ஐந்தாம்போர்ச்சருக்கம் முற்றிற்று.*

*--------*

## *ஆறாம்போர்ச்சருக்கம்.*

### *1.-கடவுள்வாழ்த்து.*

**கோயிலா ளுடையபைங் கொண்டலார் கண்டுயில்**
**பாயலாய் வாழநீ பாக்கியஞ் செய்ததென்**
**தீயிலா துவமைவே றில்லெனத் தீயநின்**
**வாயெலா நஞ்சுகால் வாளெயிற் றுரகமே.**

*(இ-ள்.) தீ அலாது உவமை வேறு இல் என-அக்கனியல்லது வேறு உபமானம் இல்லை யென்று சொல்லும்படி, தீய நின்வாய் எலாம் நஞ்சு கால் - கொடிய உனது வாய்களெல்லாவற்றினின்றும் விஷத்தைக் கக்குகிற, வாள் எயிறு - வாள்போலக் கொடிய பற்களையுடைய, உரகமே-பாம்பே [ஆதிசேஷனே!], நீ- ,கோயில் ஆள் உடைய - திருவரங்கமென்னுந் திருப்பதியை ஆளுதலையுடைய பைங் கொண்டலார் - பசுநிறமான நீர்கொண்ட மேகம்போன்ற திருமால், கண் துயில் - அறிதுயில்செய்தருளப் பெற்ற, பாயல் ஆய் வாழ - படுக்கையாய் வாழ்வதற்கு, செய்தது பாக்கியம் என் - செய்துள்ள நல்வினைப்பயன் யாதோ? (எ-று.)*

*மிகக்கொடிய பாம்புகளுக்கெல்லாம் அரசனும் நெருப்புப் போலத் தவறாது கொல்லவல்ல விஷத்தை எல்லாவாயினின்றும் உமிழ்பவனும் பயங்கரமான விஷபற்களை யுடையவனு மான நீ எம்பெருமானுக்குத் திருப்பள்ளி மெத்தையாவதற்குச் செய்த பாக்கியத்தை எளியவனான எனக்குக் கூறினால், கொடுந்தன்மையையுடைய யானும் அந்நல்வினையைச் செய்து அப்பிரான் அகத்தில்வந்து தங்கப்பெற்று உய்ந்திடுவேனென்பது குறிப்பு. அளவிறந்த நல்வினையைச்செய்திருந்தாலொழிய எம்பெருமான் இடைவிடாது தன்னிடத்தில் வந்துதங்கும்படியான பெரும்பேற்றைப் பெறுதல்கூடாதென்பதாம், திருமாலின் திருப்பதிகள் நூற்றெட்டனுள் முதலதான திருவரங்கத்துக்கு,வைஷ்ணசம் பிரதாயத்தில் 'கோயில்' என்று ஒரு பெயர். பசுமை கருமைநீலநிறங்களை (ச்சிறிதுவேறுபாட்டைக் கருதாமல்) அபேதமாகக்கூறுங் கவிகளது மரபுபற்றி, நீலமேகத்தை 'பைங்கொண்டல்' என்றார். பாயல், அல் - சாரியை, பாக்யம் - வடசொல். கோயில் - கோவில் என்பதன் இலக்கணப்போலி: கோ+இல்:சிறந்த இடம்.*

*இதுமுதல் பதினெட்டுக் கவிகள் - பெரும்பாலும் எல்லாச்சீர்களும் விளச்சீர்களாகிய அளவடி நான்கு கொண்ட* ***கலிவிருத்தங்கள்.*** *(207)*

### *2.-பாண்டவர், சேனையோடு போர்க்களங்குறுதல்.*

***பயிலும்வெம்பாசறைப்பாண்டவரைவருந்***
***துயிலுணர்ந்தணிபசுந்துளபமாலடிபணிந்***
***தயிலநஞ்சனையபோரடுகளங்குறுகினார்***
***சயிலவெங்கடகரித்தானையுந்தாமுமே.***

*(இ-ள்.) பாண்டவர் ஐவரும்-, பயிலும் வெம் பாசறை - (தாம்) பழகிய விருப்பத்திற் கிடனான படைவீட்டிலே, துயில் உணர்ந்து - தூக்க மொழிந்து எழுந்திருந்து, அணி பசு துளபம் மால் அடி பணிந்து - அழகிய பசுநிறமான திருத்துழாய்மாலையையுடைய கண்ணபிரானது திருவடிகளை வணங்கி, (அவனனுமதிப்படி அவனுடனே), சயிலம் வெம் கட கரி தானைஉம் தாம்உம்- மலைபோன்ற கொடிய மதயானைகளின் சேனைகளும் தாமுமாக, அயிலும் நஞ்சு அனைய அடு போர் களம் குறுகினார்-உண்கிற விஷத்தை யொத்த [மிகக்கொடிய] (பகைவரைக்) கொல்லும் போர்க் களத்தை அடைந்தார்கள்; (எ-று.)-கரி - மற்றை மூன்றுவகை அங்கங்களுக்கும் உபலக்ஷணம். (208)*

### *3.-த்ருஷ்டத்யும்நன் தன்சேனையை மகரவியூகமாக வகுத்தல்.*

**பகுத்தபல்லணிகளின்பான்மையக்குரோணியான்**
**மிகுத்தவெஞ்சேனையாம்வெள்ளநீர்வேலையைத்**
**தொகுத்துவண்டிமிர்தொடைத்துருபதன்றிருமகன்**
**வகுத்தனன்புறமிடாமகரமாவியூகமே.**

*(இ-ள்.) வண்டு இமிர் தொடை-வண்டுகள் ஒலிக்கப்பெற்ற பூமாலையைத் தரித்த, துருபதன் திரு மகன் - துருபதராசனது சிறந்த குமாரனான திட்டத்துய்மன்,-பகுத்த - பிரிக்கப்பட்ட, பல் அணிகளின் பான்மை-பலவகை அணிகளின் தன்மையையுடைய, அக்குரோணியால்-அகௌஹிணியென்னுந் தொகையால், மிகுத்த-மிகுதியாகவுள்ள, வெம் சேனை ஆம்- பயங்கரமான(தன்பக்கத்துச் சேனையாகிய, வெள்ளம் நீர் வேலையை- நீர்வெள்ளத்தையுடைய கடலை, தொகுத்து - ஒருங்குசேர்த்து, - புறம் இடா- (பகைவர்க்குப்) புறங்கொடுக்காத, மாமகர வியூகம்-பெரிய மகர வியூகமாக, வகுத்தனன்-அணிவகுத்தான்; (எ-று.)*

*பல் அணி - சதுரங்கசேனைகளின் வரிசைகள். மகரவியூகம் - சுறாமீன் வடிவமாகச் செய்யும் படைவகுப்பு. மகரத்தின் தலையிடத்தில் அருச்சுனனும், கண்களில் நகுல சகதேவரும், வாயில் பீமசேனனும், கண்டத்தில் அபிமந்யு கடோற்கசன் சாத்யகி தருமபுத்திரன் முதலியோரும். புறத்தில் விராடனும் திட்டத்துய்மனும், இடப்பக்கத்தில் கேகயநாட்டரசர் ஐவரும், வலப்பக்கத்தில்*

*திருஷ்டகேதுவும் சேகிதாநனும். கால்களில் குந்திபோசனும் சதாநீகனும், வாலில்சிகண்டியும் இராவானும் நின்றனரென்று வியாசபாரதங் கூறும். (209)*

### *4.-வீடுமன் தம்பக்கத்தவரோடு போர்க்களங்குறுகுதல்*

**போகமுந்தருமமேயானமெய்ப்புனிதனும்**
**நாகவெங்கொடியுடைநாயகக்குரிசிலும்**
**வேகவெம்படையுடைவேந்தருஞ்சேனையும்**
**ஆகவங்குறுகினாராரவம்பெருகவே.**

*(இ-ள்.) தருமம்ஏ போகம்உம் ஆன-அறத்தையே இன்பமுமாகக் கொண்ட, மெய் புனிதன்உம்-சத்தியந்தவறாத பரிசுத்த குணமுடைய வீடுமனும், நாகம் வெம் கொடி உடை-பாம்பை யெழுதிய கொடிய துவசத்தையுடைய, நாயகன் குரிசில்உம் (யாவர்க்குந்) தலைமையரசனான துரியோதனனும், வேகம் வெம் படை உடை - (போரில்) விரைவையும் வெவ்விய ஆயுதங்களையு முடைய, வேந்தர்உம்- அரசர்களோடும், சேனைஉம்-சேனைகளோடும், ஆரவம்பெருக-முழக்கம் மிக, ஆகவம் குறுகினார்-, போர்க்களத்தை அடைந்தார்கள்; (எ - று,)*
*வீடுமன் அறத்தையே இன்பமுமாகப் பாவித்ததை, தந்தைக்கு மணஞ் செய்விக்கும் பொருட்டுத் தான் மணஞ்செய்வதை விட்டு இவ்வுலகவின்பத்தைத் துறந்ததனால் அறிக. அதன் பொருட்டு முன்னே இவன் தேவர்முன்னிலையில் செய்த சபதம் தவறாமல் உறுதிநிலையாயுள்ள தன்மையை நோக்கி, 'மெய்ப்புனிதன்'என்றார். (210)*

### *5.-வீடுமன் தன்சேனையைக் கிரௌஞ்சவியூகமாக வகுத்தல்.*

**பொருஞ்சமங்கருதியாள்புரவிதேர்போதகந்**
**தெரிஞ்சுகொண்டீரிருதிசையினுஞ்செல்லவே**
**பெருஞ்சனந்தன்னையப்பீடுடைவீடுமன்**
**கரிஞ்சமென்றுள்ளபேர்வியூகமுங்கட்டினான்.**

*(இ-ள்.) ஆள்-காலாட்களும், புரவி - குதிரைகளும், தேர்-தேர்களும், போதகம்-யானைகளும், பொரும் சமம் கருதி - பொர வேண்டும் போரை நினைந்து, தெரிஞ்சு கொண்டு-(தன் குறிப்பை) அறிந்துகொண்டு, ஈர் இரு திசையின்உம் செல்ல - நான்குதிக்குக்களிலும் பரவும்படி, பெரும் சனம் தன்னை-பெரிய அச்சேனைவீரர்களை, அ பீடு உடை வீடுமன்- பெருமையையுடையஅந்தப்பீஷ்மன், கரிஞ்சம் என்று பேர் உள்ள வியூகம்உம் கட்டினான் -கரிஞ்சமென்று பெயருடைய வியூகமாக அணிவகுத்தான்; (எ-று.)*

*கரிஞ்சம்-க்ரௌஞ்சம் என்னும் வடமொழித் திரிபு போலும். அன்றில்,கிரௌஞ்சம் என்பன-ஒருபொருட்சொற்கள்; ஆதலால், கிரௌஞ்சவியூகமாக வகுத்தன னென்க. கிரௌஞ்சவியூகம்-அன்றிற்பறவையின் வடிவமாகச் செய்யப்படும் படைவகுப்பு. அப்பறவையின் வாயிடத்தில் துரோணனும்,கண்களில் அசுவத்தாமனும் கிருபனும், தலையில்: பல அரசர்களோடுகிருதவர்மாவும், கழுத்தில் பல அரசர்களோடு துரியோதனனும், மார்பில் பலஅரசர்களோடும் பெருஞ்சேனையோடும் பகதத்தனும், இடச்சிறகில் தன்சேனையோடு சுசர்மாவும், வலச்சிறகில் யவனர் முதலிய பல அரசர்களும், புறத்தில்சுருதாயுவும் சதாயுவும் சௌமதத்தியும் நின்றறர் என்று முதனூல் கூறும். அன்றில் -எப்பொழுதும் ஆணும் பெண்ணும் கூடியே நிற்பதும், கணப்பொழுது ஒன்றையொன்று விட்டுப்பிரிந்தாலும் அத்துயரத்தைப் பொறாமல் ஒன்றையொன்று இரண்டுமூன்றுதரம் கத்திக்கூவி அதன்பின்பும் தன்துணையைக் கூடாவிட்டால் உடனே இறந்துபடுவதுமான ஒருவகைப்பறவை, கருதி, தெரிஞ்சுகொண்டு என்ற வினைகளுக்கு ஏற்ப, 'தேர்' என்றது-அதனை நடத்துபவரையே குறிக்கும் **பி-ம்** : தெரிந்து. (211)*

### *6.-இருபடைவீரர்களும் நெருங்கிப்பொருதல்.*

***இந்திரன் முதலியவிமையவர்தங்களா***
***லந்தரமிடனறவரவுளைந்தலமர***
***வந்துவந்திருபெரும்படைஞருமாறுபட்***
***டுந்தினார்முந்தனாரொட்டினார்முட்டினார்.***

*(இ-ள்.) இந்திரன் முதலிய இமையவர்தங்களால் - (போர்காணவந்த) இந்திரன்முதலான தேவர்களால், அந்தரம் இடன் அற - ஆகாயவெளி வெற்றிடமில்லையாகவும், அரவு உளைந்து அலமர - (தமது அதிபாரத்தைப் பொறுக்கமாட்டாமல்) ஆதிசேஷன் வருந்திக் கலங்கவும், இரு பெருபடைஞர்உம் - இரு திறத்துப் பெருஞ்சேனைவீரரும், வந்து வந்து - நெருங்கிவந்து,மாறுபட்டு - (ஒருவரோடொருவர்) எதிர்த்து, உந்தினார் - (ஆயுதங்களைச்)செலுத்தி, முந்தினால் - முற்பட்டு, ஒட்டினார் - வீர வாதஞ்செய்து, முட்டினார் - தாக்கிப்போர்செய்தார்கள்; (எ-று.) - இமையவர் - இமையாதவர் இமையில்விசேஷமுடையவர்; இமயமலையில் வாழ்பவர். (212)*

*7.-துரோணாசார்யன் வீமன்மேல் போருக்கு நெருங்குதல்.*

***பரவிநால்விதவயப்படைஞருஞ்சூழவா***
***ளிரவிநான்வெம்பகையிருளினுக்கென்றுதன்***
***புரவிநான்மறையெனப்பூண்டதேர்தூண்டினான்***
***விரவினான்வீமன்மேல்விற்கையாசிரியனே.***

*(இ-ள்.) நால் விதம் வய படைஞர்உம் - நான்குவகைப்பட்ட வலிமையையுடைய சேனைவீரர்களும், பரவி சூழ - பரந்து (தன்னைச்) சூழ்ந்து வர,-வில் கை ஆசிரியன் - வில்லைத் தரித்த கையையுடைய ஆசாரியனான துரோணன், வெம் பகை இருளினுக்கு நான் வாள் இரவி என்று - 'கொடிய பகைவர்களாகிய இருளை யொழிப்பதற்கு நான் ஒளியையுடைய சூரியன்' என்று கூறி, நால் மறை என புரவி பூண்ட தன் தேர் தூண்டினான்-(திரிபுரசங்கார காலத்தில் சிவபிரானுக்குக் குதிரைகளாக விருந்த) நான்குவேதங்கள்போல(ச் சிறந்த)குதிரைகளைப் பூட்டியுள்ள (தனது) தேரைச் செலுத்தினவனாய், வீமன்மேல்விரவினான்-வீமசேனன்மேல் (போருக்கு) நெருங்கினான்; (எ-று.)*

*துரோணனது தேர்க்குதிரைகளுக்குச் சிவனது வேதக்குதிரைகளை உவமை கூறியதனால், துரோணன் அழித்தல்தொழிலில் சிவன்போல்வானென்பது தொனிக்கும். நான்குவேதம்வல்ல துரோணனது குதிரைகளுக்கு நான்குவேதங்களை உவமைகூறியது ஏற்கும். இருளினுக்கு - நான்காம் வேற்றுமை, பகைப்பொருளது. விற்கையாசிரியன் என்றதை - இரண்டாம்போர்ச்சருக்கத்து ஒன்பதாம்பாட்டிலுங் காண்க. (213)*

*8.-வீமன் துரோணனுடைய தேர்க்குதிரைகளையும் பாகனையும் அழித்தல்.*

***சிலைவரம்பெறுதலிற்றேசிகன்சீறவும்***
***நிலைபெறும்புகழினானெஞ்சினஞ்சல்செயா***
***மலையினும்பெரியதேர்வலவனும்புரவியுந்***
***தலையறும்படிசரந்தனுவளைத்துதையினான்.***

*(இ-ள்.) தேசிகன் சீறஉம்-வில்லாசிரியன துரோணன் (இவ்வாறு) கோபித்து(த் தன்மேல்) போருக்கு வரவும், நிலை பெறும் புகழினான- (அழியாது) நிலைபெற்ற கீர்த்தியை யுடைய வீமன், வரம் சிலை பெறுதலின் - (தான் அவனிடம்) சிறந்த வில்வித்தையைப் பெற்றவ னாதலால், நெஞ்சின் அஞ்சலி செயா-மனத்தில் (அவனுக்கு) நமஸ்காரத்தைச் செய்து, தனு வளைத்து - வில்லைவளைத்து, மலையின்உம் பெரிய தேர் வலவன்உம் புரவிஉம் தலை அறும்படி - மலையைக்காட்டிலும் பெரியதாகவுள்ள (அவனது) தேரைச் செலுத்தும் பாகனும் தேர்க்குதிரைகளும் தலைதுணியும்படி, சரம் உதையினான் - அம்புகளைச் செலுத்தினான்; (எ-று.)*

*வெளிபடையாகக் கைக்கூப்பிவணங்குவது போரில் தோல்விக்கு அறிகுறியாக முடியு மாதலால், மனத்தில் அஞ்சலிசெய்தான். தலைதெரியாது எதிர்த்துச்செய்யும் போரிலும் வீமன் குரு பக்தியை விடாத சிறப்புப்பற்றி, 'சீறவும்' என்றதை அடுத்து 'நிலைபெறும்புகழினான்' என்றார். தேஸிகன் - குரு; வடசொல். அஞ்சலி - கைகூப்பித்தொழுதல்; வடசொல். நெஞ்சின் - மனப்பூர்வமாக எனினுமாம். **பி-ம்:** பெறுதிறற்றேசிகன். (214)*

### *9.-பின்னும் பல அரசர்களை வீமன் அழிக்க, அப்போது தன்னுடன பொருமாறு சல்லியன் அங்குத் தோன்றுதல்,*

**சூழிவெங்கசரததூரகதநிருபரை**
**வீழவெங்கணைகளான்மெய்துளைத்தளவிலே**
**தாழநின்றிலனெழிற்சல்லியன்றன்னொடே**
**தோழவின்றமர்செய்கென்றொருதிசைத்தோன்றினான்.**

*(இ-ள்.) (இவ்வாறு வீமன் துரோணனது தேர்ப்பாகனையுங்குதிரைகளையும் அழித்துத் தேரைப் பயனற்றதாக்கி), சூழி வெம்கசம் - முகபடாத்தையுடைய கொடியயானைகளும், ரதம்- தேர்களும், துரகதம்-குதிரைகளும், (என்னும்) இவற்றின்மேலுள்ள), நிருபரை - அரசர்களை, வீழ-(இறந்துகீழ்) விழும்படி, வெம் கணைகளால் - கொடிய (தனது) அம்புகளால், மெய் துளைத்த அளவிலே - உடம்பைத் துளைசெய்தமாத்திரத்திலே, - எழில் சல்லியன் - அழகையுடைய சல்லியன், தாழ நின்றிலன்-தாமதமாக நிற்காதவனாய், (வீமனைநோக்கி), 'தோழ - தோழனே!' (இன்று) தன்னொடே அமர்செய்க - இப்பொழுது என்னுடனே போர்செய்வாயாக,' என்று-என்று சொல்லிக்கொண்டு, ஒரு திசை தோன்றினான் - ஒருபக்கத்திலே வந்தான்; (எ-று.)*

*தனது மருமக்களான நகுல சகதேவர்களுக்கு இரண்டாந்தமையனான வீமனைச் சல்லியன் 'தோழ' என விளித்தது, போரில் தன்னோடொத்த பல பராக்கிரம முடையவனாதலால் என்க. அன்றியும், சல்லியன் பகைவர் பக்கத்திற் சேர்ந்தும், முந்தின அன்பை மறவாமல், 'தோழ' என அழைத்தன னென்க. இனி, பின் இரண்டடிகட்கு-தாழ நின்றிலன் - (துரோணன் தேரின்றிக்) கீழே நிற்கமாட்டாதவனாய், எழில் சல்லியன் தன்னொடே தோழ இன்று அமர்செய்க என்று - அழகுள்ள சல்லியனுடனே 'தோழ!'*
*இப்பொழுது (நீ எனக்காக வீமனை யெதிர்த்துப்) போர்செய்வாய்' என்று சொல்லி, ஒரு திசை தோன்றினான் - (அவ்விடம்விட்டு) மற்றோரிடத்துக்குப் போயினான் என்பாரு மூளர். துளைத்தளவில்-தொகுத்தல்,*

### *10.-சல்லியன்வில்லை வீமன் துண்டித்து அவனைத் தேரொடுந்தூக்கி யெறிதல்.*

**வல்லைவெஞ்சமர்செயவல்லைநீவருகென**
**வில்லையுந்துணிசெய்துவெல்லவந்தவனையுந்**
**தொல்லைவெங்கரியெனத்தேரொடுந்தோண்மடுத்**
**தெல்லையம்புவியின்மேலெற்றினான்வீமனே.**

*(இ-ள்.) (அப்பொழுது), வீமன்-, (சல்லியனை நோக்கி), 'நீ வெம் சமர் செயவல்லை-நீ கொடிய போரைச் செய்ய வல்லவன்; (ஆதலால்), வல்லை வருக -விரைவில் வருவாயாக,' என - என்று சொல்லி (எதிர்கொண்டு அழைத்து), வில்லைஉம் துணிசெய்து - (சல்லியனது) வில்லையுந்துண்டாக்கி, வெல்ல வந்தவனைஉம் - (தன்னைச்) சயிக்க வந்த அச்சல்லியனையும், தொல்லை வெம் கரி என - முன்னொருநாள் கொடிய யானைகளை எடுத்து எறிந்தாற்போல, தேரொடுஉம் தோள் மடுத்து-தேரொடு தோளிலேஎடுத்து, அம் புவியின் எல்லைமேல் எற்றினான்- அழகிய பூமியிலே மோதினான்; (எ-று.)*

*தொல்லை என்றது, நான்காம்போர் காளை, அந்நாட்போரில் வீமன் யானைகளைக் கைகளால் எடுத்து எறிந்ததைக் கீழ் நான்காம் போர்ச்சருக்கத்தில் ஐந்து பத்துப்பதினோராங் கவிகளிற் காண்க.*

*முதலடியிலுள்ள வல்லை யென்னுஞ் சொல் இரண்டினுள், முந்தினது - வன்மையென்னும் பண்படியாப் பிறந்த முன்னிலையொருமைக் குறிப்பு முற்று; பிந்தினது - விரைவுப்பொருளுணர்த்தும் வல்என்னும் இடைச்* ***சொல் ஐகாரச்சாரியை பெற்றது.*** *(216)*

*11.- சல்லியனது சலிப்புக்கண்டு வீமன் வீரவாதங்கூற, துரியோதனன் அங்குவருதல்.*

***சல்லியன்றன்பெருஞ்சலிவுகண்டங்கையி***
***னெல்லியங்கனியினிநேரலாருயிரெனப்***
***பல்லியங்களுமெழப்பாந்தளம்பொற்கொடி***
***அல்லியந்தெரியலானங்குவந்தணுகினான்.***

*(இ-ள்.) (இவ்வாறு தான் எற்றியதனால் நேர்ந்த), சல்லியன் தன் பெரு சலிவுகண்டு - சல்லியனது மிகுந்த தளர்ச்சியைப் பார்த்து, வீமன் இனி நேரலார் உயிர்அம் கையின் நெல்லி அம்கனி என - 'இப்பொழுது பகைவர்களது உயிர் உள்ளங்கைநெல்லிக்கனிபோல (என்கைவசத்தது)' என்று வீரவாதங்கூற,- பாந்தள் அம் பொன் கொடி அல்லி அம் தெரியலான்-பாம்பையெழுதிய அழகிய பொற்காம்பையுடைய துவசத்தையும் அக விதழ்களால் தொடுத்த அழகிய மாலையையுமுடைய துரியோதனன், பல் இயங்கள்உம் எழ - பலவகைவாத்தியங்களும் ஒலிக்க, அங்கு வந்து அணுகினான் - அவ்விடத்தில் [வீமனெதிரில்] வந்து நெருங்கினான்; (எ-று.)*

*உள்ளங்கைநெல்லிக்கனி, கவிகளால் தெளிவுக்கு உவமை கூறப்படும். இரண்டாமடிக்கு - 'இனிமேல் (நாம் வீமனை எதிர்க்காமலிருந்தால் அவனுக்குப்) பகைவர்களான நம்முடைய சேனையாரது உயிரெல்லாம் அவன்கைவசத்ததாம்' என்றுகருதி எனவும் உரைக்கலாம், அன்றி, துரியோதனன் கூறிய வீரவாதமெனை உரையிடினுமாம். (217)*

*12.-துரியோதனன் தம்பிமார்முதலினோரொடுஞ்சேர்ந்து அம்புமாரிபொழிதல்.*

***வெம்புயவீமன்மேல்வில்வளைத்தாயிரம்***
***அம்புகண்மாரிபோலார்த்தெழவீசினார்***
***தும்பையந்தார்முடிச்சூழ்படைமன்னருந்***
***தம்பியர்யாவருமாமனுந்தானுமே.***

*(இ-ள்.) தான்உம் - (அவ்வாறு வந்த) துரியோதனன் தானும், தம்பியர் யாவர்உம் - (அவனது) தம்பிமார்க ளெல்லோரும், மாமன்உம் -(அவர்கள்) மாமனான சகுனியும், தும்பை அம்தார் முடி - தும்பைப்பூவினாலாகிய அழகியமாலையைச்சூடிய மயிர் முடியையுடைய, சூழ் படை மன்னர்உம் - சூழ்ந்துள்ள சேனையரசர்களும், வெம் புயம் வீமன் மேல் - கொடிய தோள்களையுடைய வீமசேனன்மேல், (எதிர்த்து), வில் வளைத்து - (தம் தம்) வில்லை வணக்கி, ஆயிரம் அம்புகள் - மிகப்பலபாணங்களை, மாரி போல்- மழைபோல, ஆர்த்துஎழ- ஆரவாரித்துச் செல்லும்படி, வீசினார் எய்தார்கள்; (எ-று.)-'தும்பையந்தார்முடி' என்பதை, தம்பியர் முதலியோர்க்குங் கூட்டலாம்.*

*13.-மைந்தர் முதலியோர் புடைவர வீமன் துரியோதனாதியரை யெதிர்த்தல்.*

***தோன்றரித்துவசனுஞ்சோகமில்பாகனூர்***
***வான்றடந்தேரொடும்வருகெனச்சென்றெதிர்***
***ஊன்றினான்மைந்தருமிளைஞருமுயிரையே***
***போன்றமைத்துனரும்வாணிருபரும்புடைவர.***

*(இ -ள்.)* தோன்று அரி துவசன்உம்-விளங்குகிற சிங்கத்தையெழுதிய கொடியையுடைய வீமசேனனும்,-மைந்தர்உம் -(தன்) பிள்ளைகளாகிய கடோற்கசன் முதலியோரும், இளைஞர்உம்-தம்பியரான அருச்சுனன் முதலியோரும், உயிரைஏ போன்ற - உயிரையொத்து மிக அன்புள்ள, மைத்துனர்உம் - மைத்துனன்மாரான திட்டத்துய்மன் முதலியோரும், வாள் நிருபர்உம்-ஆயுதமேந்திய (மற்றும் பல) அரசர்களும், புடை வர-பக்கத்திலே வர,-சோகம் இல் பாகன் ஊர் வான் தட தேரொடுஉம் - (போரில்) சோர்தலில்லாத சாரதி செலுத்திய சிறந்த பெரிய தேருடனே, சென்று - போய், வருக என எதிர் ஊன்றினான் - (துரியோதனன் முதலியோரை) வருவீர்களாக' என்றுசொல்லி எதிர்த்து நிலைநின்றான்.

அரித்துவசன், மைந்தர்முதலியோர் புடைவரத் தேரொடுஞ் சென்று ஊன்றினானென்க. ஸோகம் - வடசொல். 'உயிரையே போன்ற' என்ற அடைமொழியை 'மைந்தர்' முதலியோர்க்குக் கூட்டுதலு மொன்று. *(219)*

### *14.-இருபுறத்து வீரரும் பொருமாறு நெருங்குதல்.*

**நின்றிருசேனையுநேர்படவேலினும்**
**வன்றிறல்வில்லினும்வாளினுமலைவுறக்**
**குன்றனதோளினாரிருவருங்கொக்கரித்**
**தொன்றினார்வில்வளைத்தொருவருக்கொருவரே.**

*(இ-ள்.)* இரு சேனைஉம்-இருதிறத்துச் சேனைகளும், நேர் படநின்று- (ஒன்றுக்கொன்று) எதிராக நின்று, வேலின்உம் - வேல்களாலும், வல்திறல் வில்லின்உம் -கொடிய வலிமையையுடைய விற்களாலும் வாளின்உம்- வாள்களாலும்,மலைவு உற-போரைச் செய்ய,-குன்று அன தோளினார் இருவர்உம்-மலையையொத்த தோள்களையுடையவரான (வீமன் துரியோதனன் என்ற) இரண்டுபேரும்,வில் வளைத்து- (தம் தம்) வில்லை வளைத்து, கொக்கரித்து - கர்ச்சித்துக்கொண்டு,ஒருவருக்கு ஒருவர் ஒன்றினார் - ஒருத்தருக்கொருத்தர் நெருங்கினார்; (எ-று.) *(220)*

### *15.-வீமதுரியோதனரின் கைகலந்த போர்.*

**அவனுமம்பிவனுரத்தழகுறவெழுதினான்**
**இவனுமம்பவன்மணித்தோளின்மேலெழுதினான்**
**புவனமெங்கணுமிகப்பொறியெழப்போர்செய்தார்**
**பவனனுங்கனலியுநிகரெனும்பரிசினார்.**

*(இ-ள்.)* அவன்உம் - துரியோதனனும், இவன் உரத்து - வீமன்மார்பிலே, அம்பு - பாணங்களால், அழகு உற எழுதினான் - அழகாகப் பதிவுசெய்தான்; இவன்உம் - வீமனும், அவன் மணி தோளின்மேல் - துரியோதனனது அழகிய தோள்களின்மேல், அம்பு - அம்புகளால் எழுதினான் - பதிவுசெய்தான்; (இவ்வாறு),பவனன்உம் கனலிஉம் நிகர் எனும் பரிசினார்-காற்றும் நெருப்பும் (தமக்கு) உவமையென்றுசொல்லப்படுந்தன்மையையுடைய அவ்விருவரும்,-புவனம் எ கணும் மிகபொறி எழ போர் செய்தார் - பூமிமுழுவதிலும் மிகுதியாக(க் கோபாக்கினியின்)பொறிகள் சிந்தும்படி யுத்தம்பண்ணினார்கள்; (எ-று.)

அம்பெய்தற்கு மார்புதோள் சிறந்த இலக்காதல் தோன்ற, 'அழகுறஎழுதினான்' என்றார்.அவன்- வந்தவன். இவன்- எதிரூன்றி நின்றவன். *(221)*

### *16.-வீமன் துரியோதனனை அம்பெய்து வருத்துதல்.*

***வரத்தின்முன்பெறுகதைவன்மையும்வின்மையுஞ்***
***சிரத்தினின்றெண்ணவோர்பேர்பெறுஞ்சேவகன்***
***சரத்தினுங்கடுகுதேர்ச்சர்ப்பகேதனனையன்***
***றுரத்தின்வெங்கணைகள்பட்டுருவவில்லுதையினான்.***

*(இ-ள்.) வரத்தின் - வரத்தினாலே, முன் பெறு - முன்னே பெற்ற, கதை - கதாயுதத்தினது, வன்மைஉம் - வலிமையிலும், வின்மைஉம் - வில்லின்திறத்திலும், சிரத்தின் நின்று எண்ண - (தன்னைத்) தலைமையாகவைத்து (யாவரும்) மதிக்கும்படி, ஓர் பேர் பெறும் - ஒப்பற்ற புகழைப் பெற்ற, சேகவன் - வீரனான வீமன்,-அன்று - அப்பொழுது, சரத்தின்உம் கடுகு தேர் சர்ப்பகேதனனை - (வில்லினின்று விடப்பட்ட) அம்பைக்காட்டிலும் விரைவாகவருகிற தேரையுடைய பாம்புக்கொடியனான துரியோதனனை, உரத்தின் வெம் கணைகள் பட்டு உருவ - மார்பிலே கொடிய அம்புகள் பட்டு ஊடுருவும்படி, வில் உதையினான் - வில்லினின்று (அம்புகளைச்) செலுத்தினான்; (எ-று.)*

*காண்டவதகநகாலத்தில் அக்காட்டுத்தீயினின்று அருச்சுனனால் உயிர் பிழைப்பிக்கப்பட்ட மயனென்னும் அசுரசிற்பி, பின்பு அவ்வுதவிக்குக் கைம்மாறாக,பாண்டவர்களுக்கு இராசசூயயாகத்துக்குரிய ஒரு சிறந்த இரத்தினமண்டபத்தை அமைத்துக் கொடுத்தது மன்றி, வீமசேனனுக்கு ஒரு கதாயுதத்தையும்,அருச்சுனனுக்கு ஒரு சங்கத்தையும் கொடுத்தா னென்றவரலாறு கொண்டு, இங்கே'வரத்தின்முன்பெறு கதை' எனப்பட்டது.*

*17.-வீமன், துரியோதனன் தம்பியரைப் புண்படுத்திப்*
*பலரையும் உயிர் வதைத்தல்.*

***தான்விடுங்கணைகளிற்றம்பியர்தம்மையுந்***
***தேன்விடுந்தெரியலானெய்துபுண்செய்துபின்***
***ஊன்விடும்படிதுளைத்துருவுபல்பகழியால்***
***வான்விடும்பேரையும்வானிலுய்த்தனனரோ.***

*(இ-ள்.) (இவ்வாறு துரியோதனனை வருத்தியபின்பு),- தேன் விடும் தெரியலான் - தேனைச்சொரிகிற பூமாலையையுடைய வீமன்,- தான் விடும் கணைகளின் - தான் செலுத்தும் அம்புகளால், தம்பியர் தம்மைஉம் எய்து புண் செய்து - (துரியோதனன்) தம்பிமார்களையுந் துளைத்துப் புண்படுத்தி,-பின் - பின்பு,ஊன் விடும்படி துளைத்து உருவு பல் பகழியால் - (பகைவருயிர்) உடம்பைநீங்கும்படி (அவ்வுடம்பைத்) துளைசெய்து ஊடுருவுந்தன்மையுள்ள பல பாணங்களால், வான் விடும் பேரைஉம் வானில் உய்த்தனன்-(அப்பொழுது) வீரசுவர்க்கத்துக்குச் செலுத்தத் தக்கவர்களையும் அவ்விடத்துக்குச் செலுத்தினான் [கொன்றான்]: (எ-று.)-அரோ - ஈற்றசை.*
*சிற்சிலரை காயப்படுத்திச் சிற்சிலரைக் கொன்றானென்பதாம், ஊன் விடும்படி என்பதற்கு - சதை வெளிப்படும்படி என்று உரைப்பாருமுளர். (223)*

*18.- துரியோதனன் பக்கத்தார் வீமனுக்குப் புறங்கொடுக்க,*
*வானோர் பூமாரி பொழிதல்.*

***வாவருங் கவனமாக் கடுகுதேர் வலவர்போய்***
***ஏவருஞ் சிலைகள்போ யிருபுய வலிமைபோய்***
***யாவரும் பண்டுதா மிடுபுற மிட்டனர்***
***தேவருங் கண்டுவந் தலர்மழை சிந்தினார்.***

*(இ-ள்.) (அப்பொழுது வீமன் முன்னிலையில்). யாவர்உம் - (எதிர்த்த துரியோதனன் சேனையார்) எல்லோரும், வா வரும் கவனம் மா-தாவிவருகிற வேகத்தையுடைய குதிரைகளும், கடுகுதேர் - வேகமாகச்செல்லுகிற இரதங்களும், வலவர் - சாரதிகளும், போய் - ஒழியப்பெற்று, ஏ வரும் சிலைகள் போய் - அம்புகள் (தொடுத்தற்குப்) பொருந்திய விற்க ளொழியப்பெற்று, இரு புயம்*

*வலிமைபோய் - இரண்டு தோள்களின்பலமும் ஒழியப்பெற்று, பண்டு தாம் இடு புறம்இட்டனர்- பழமையாகத் தாம் கொடுக்கிற புறத்தை இப்பொழுதும் கொடுத்தார்கள்[முதுகுகாட்டி யோடினார்கள்]; கண்டு - (அதனைப்) பார்த்து, உவந்து - (வீமனதுவல்லமைக்கு) மகிழ்ந்து, தேவர்உம் - (வானத்தில் நின்ற) தேவர்களும், அலர்மழை சிந்தினார்-(வீமன்மேற் பூமாரி பொழிந்தார்கள்; (எ-று.)*

*துரியோதனாதியர்க்குப் புறங்கொடுத்தல் இன்றைக்குமாத்திரமே புதியதன்று, முன்னமே அமைந்துள்ளது என்பதுதோன்ற 'பண்டு தாம் இடுபுற மிட்டனர்' என்றார். இங்ஙன் புறங்கொடுத்தலை, கீழ் நடந்த போர்களிலும் சிற்சிலவிடத்துக் கூறிப்போந்தார். வாவரும் - வாவிவரும் என்பதன் விகாரம். (224)*

வேறு.

### *19.-விகன்னன் முதலியோர் பொருமாறுவர, அபிமன்யு விகன்னனெதிரிற்சென்று சேர்தல்*

**ஏய வரிசிலை வீம னொடுபொரு போரி லனைவரும் வென்னிட**
**மேய விழியிலை யாய பதிதரு வீரர் பலரும்வி கன்னனும்**
**ஆய முதிர்சின மூள விரைவுடன் மீள வரவபி மன்னுவுந்**
**தூய வரிசிலை வாளி கொடுதன தேர்கொ டவனெதிர்**
**துன்னினான்.**

*(இ-ள்.) ஏய - (அம்புகளை) ஏவிய, வரி சிலை - கட்டமைந்த வில்லையுடைய, வீமனொடு - வீமசேனனுடனே, பொரு - தாக்கிச் செய்த, போரில்-யுத்தத்தில், அனைவர்உம் வென் இட - (இவ்வாறு துரியோதனன் முதலியோர்)எல்லோரும் புறங்கொடுக்க,- (பின்பு-), மேய விழி இலை ஆய பதிதரு -பொருந்தின கண்களில்லையான் திருதராட்டிரமகாராசன் பெற்ற (புத்திரரான), வீரர்பலர்உம் விகன்னன்உம் - பராக்கிரமமுடைய பல அரசர்களும். விகர்ணனென்பவனும், ஆய முதிர் சினம் மூள - பழமையான முதிர்ந்த கோபம் அதிகப்பட, விரைவுடன் மீளவர - வேகத்தோடு மறுபடி(போருக்கு) வர, அபிமன்னுஉம் - அபிமநயுவும், தூய வரி சிலை வாளி கொடு - குற்றமில்லாத கட்டமைந்த வில்லையும் (பல) அம்புகளையும் உடன் கொண்டு, தன தேர் கொடு - தன்னுடைய தேர்மே லேறிக்கொண்டு, அவன் எதிர் துன்னினான்- அவ்விகர்ணனெதிரிலே சென்றுசேர்ந்தான்; (எ-று.)*

*இவர்கள், கீழ்த் துரியோதனனோடுவந்து வீமனோடு எதிர்த்துத்தோற்றவராதலால்,'மீளவர' என்றார். விகன்னன்-விகர்ணன்; வடசொல்திரிபு; இவன் துரியோதனனது இளையதம்பியரில் ஒருவன்; இராவணன் தம்பியருள் விபீஷணன் போல, நீதிகளை நன்குஉணர்ந்து நடுவுநிலைமையோடு நியாயவழியையே பேசுகிற நற்குணமுடையவன். கீழ்ச் சூதுபோர் நடந்தகாலத்தில் துரியோதனனேவலால் துச்சாசனன் திரௌபதியை முடிபிடித் திழுத்து வந்த பொழுதும் இவன் நீதியையெடுத்துக் கூறினான்; பின்பு கிருஷ்ணன் தூதுவந்த சமயத்தில், துரியோதனனும் திருதராட்டினனும் அவனைக் கொல்லும்படி ஆலோசித்தபொழுதும், இவன் தகுதியன்றென மறுத்தான்; இந்நற்குணம்பற்றியே, மேல் யுத்தத்தில் வீமன் இவனைச் சபதப்படி விதியாற் கொல்லவேண்டிய பொழுதும் மிக இரங்குவன்: இவனது நல்லுணர்வை நன்கு மதித்து, கவி இவனை அடுத்த பாட்டில் 'ஞான விகனன்' என்பர்; இப்படிபட்ட சிறப்புடையவ னாதலால், இவனை மற்றையோரினும் பிரித்தெடுத்து இங்கே தலைமையாக்கிக் கூறினார். இவனுக்கு வீமனிடத்துக் கோபம் இயல்பாகவுள்ளதன்று, தன் தமையனான துரியோதனனுக்குச் சோற்றுக்கடன் கழிக்கும்பொருட்டாக ஆகியது என்பது தோன்ற, ' ஆயமுதிர்சினம்' எனப்பட்டது. 'மேய விழியிலையாயபதி தரு' என்ற அடைமொழி-வீரர்பலர்க்கும் விகர்ணனுக்கும் உரியது. ஏய=ஏவிய: மேய=மேவிய. மூன்றாம் அடியின் முதலில் 'மாய, எனப் பிரித்து, பகையழிய என்றும், மாயம் எனப் பிரித்து, முதிர் மாயம் சினம் - மிகுந்த பொய்க் கேபம் [செயற்கையாகக்கொண்ட கோபம்] என்றும் கூறினுமாம்.* ***பி - ம்:*** *அவரெதிர்.*

*இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் பத்துக் கவிகள் - பெரும்பாலும் ஒன்றுமூன்றுஐந்தாஞ்சீர்கள் மாச்சீர்களும், மற்றை நான்கும் விளச்சீர்களு மாகிய கழிநெடிலடிநான்குகொண்ட* ***எழுசீராசிரியவிருத்தங்கள்.*** *(225)*

*20.- அபிமன்யு விகன்னனுடைய தேர்முதலியவற்றை அழிக்கை.*

***மானவபிமனுஞானவிகனனைவாளிபலபலவேவமே***
***லானவிரதமுமாவும்வலவனுமாழிகளுமுடனற்றபின்***
***தானவிரதமுறாமல்விசையொடுதத்தியருகுறுசித்திர***
***சேனனெனுமிளையோனதணிபெறுதேரின்மிசைகடிதேறினான்.***

*(இ-ள்.) மானம் அபிமன்உம்-பெருமையையுடைய அபிமந்யுவும், ஞானம் விகனனை - நல்லறிவுடைய விகர்ணனை, பல பல வாளி ஏவ-மிகப்பலவான அம்புகளையேவி எதிர்க்க, (அதனால் அவனது), மேல் ஆன இரதம்உம்-சிறந்ததேரும், மாஉம்-தேர்க்குதிரைகளும், வலவன்உம் - தேர்ப்பாகனும், ஆழிகள்உம் - தேர்ச்சக்கரங்களும், உடன் அற்ற பின்-ஒரு சேர அழிந்தபின்பு,- தான் - அவ்விகர்ணன், அ இரதம் உறாமல் - (அழிந்த) அத்தேரிற் பொருந்தாமல், விசையொடு தத்தி-வேகத்தோடு பாய்ந்து, அருகு உறு சித்திரசேனன் எனும் இளையோனது அணி பெறு தேரின்மிசை-பக்கத்துப்பொருந்திய சித்திரசேனனென்னும் இளவீரனது அழகுபெற்ற தேரின்மேல், கடிது ஏறினான்-விரைவாக ஏறினான்; (எ-று.)*

*மூன்றாம் அடியில், அவிரதம்-அவ்விரதம் தம் என்பதன் தொகுத்தல்; இனி, அவிரதம் என்றுபிரித்து-அந்த [தோல்விக்குஉரிய] ஓய்வை, உறாமல்-அடையாமல் என்றும், அப்படிப்பட்ட பழிப்பைப் பெறாமல்என்றும் பொருள் கொள்ளலுமாம்; விரதம் - ஒழிவு: விரஸம் - நிந்தை: வடசொற்கள் சித்ரஸேநன் - பலவகைச் சேனையையுடையா னென்று காரணப்பொருள்; வடமொழிப்பெயர் - சித்திர சேனனென்பவன் துரியோதனனுடைய தம்பியரில் ஒருவனென்பர் ஒருசாரார். மேல்ஆன - தான் மேலேறிய என்றுமாம். இளையோன் - (போரில்) இளைப்படையாதவனுமாம். (226)*

*21.-பிறகு துரியோதனன்தம்பிமார் சயத்திரதன் பகதத்தன் இவர்கள்பொர, இவர்களை அபிமன்யு அம்பினால் மொத்துதல்.*

***மற்றயிளைஞருமைத்துனனுமதமத்தகயபகதத்தனுஞ்***
***செற்றவிகனனுமுற்றுமிவனொடுசெற்றியமர்பொருகிற்றினார்***
***வெற்றியபிமனும்விற்கையுடனவர்விட்டகணைகள்விலக்கிமார்***
***பெற்றுகணையனைவர்க்குமவரவரெய்த்துவிழவிழமொத்தினான்.***

*(இ-ள்.) மற்றை இளைஞர்உம்-(விகர்ண னொழிந்த) மற்றைத் துரியோதனன் தம்பிமார் பலரும், மைத்துனன்உம் - இவர்களுடன் பிறந்தவளது கணவனான சயத்திரதனும், மதம் மத்தம் கயம் பகதத்தன்உம் - மதத்தினாற் களித்துள்ள யானைச்சேனையையுடைய பகதத்தனும், செற்றம் விகனன்உம்-கோபத்தையுடைய விகர்ணனும், முற்றுஉம் - (ஆகிய) எல்லோரும், இவனோடு - இவ்வபிமனுடனே, செற்றி அமர் பொருகிற்றினார்-நெருங்கிய போரைச் செய்தார்கள்; (அப்பொழுது), வெற்றி அபிமன்உம் - சயத்தையுடைய அபிமந்யுவும், வில்கையுடன்-வில்லைப்பிடித்த கையுடனே, அவர் விட்ட கணைகள் விலக்கி-அவர்கள் (தன்மேல்)எய்த அம்புகளைத் (தான் எய்யும் அம்புகளால்) தடுத்து, (உடனே), மார்பு எற்றுகணை-(பகைவர்) மார்பைத் தாக்கும் படியான அம்புகளை, அனைவர்க்குஉம் -அவர்களெல்லோர்க்கும், அவர் அவர் எய்த்து விழ விழ - அவரவர்கள் களைத்துமிகுதியாக விழும்படி, மொத்தினான்-செலுத்தினான்; (எ-று.)*

*மதமத்தகஜபகதத்தன்-வடசொற்றொடர், கீழ்த்தனது தேர்க் குதிரை சாரதிகளைஅழித்தது பற்றி, விகர்ணன் அபிமந்யுவினிடம் கோபங்கொண்டதனால், 'செற்ற விகனன்' என்றார். செற்ற எனப் பெயரெச்சமாகக்கொண்டு,*

*(அபிமனாற்) பங்கப்பட்ட எனினுமாம். பொருகிற்றினார் என்ற இறந்தகாலமுற்றில், கில்- ஆற்றலுணர்த்தும் இடைநிலை து - சாரியை. (227)*

### *22.-அப்போதும் விகன்னனை வருந்துமாறுஅபிமன்யு அம்பினாற் பொருதல்.*

***நெடியவரிசிலைநிமிரமுறைமுறைநெடியவிசையுடன்விசியுநா***
***ணிடியுமுகிலெனவகிலவெளிமுகடிடியவதிர்பெருநகையுடன்***
***கொடியவிகனனைமடியவவனுடல்கொடியகுடருகுகுருதிநீர்***
***வடியவிருபுயமொடியவுதையினன்வடியகணையொருநொடியிலே.***

*(.இ - ள். ) (மற்றும் அபிமந்யு), நெடிய வரிசிலை - நீண்ட கட்டமைந்த (தன்)வில், முறை முறை - அடிக்கடி, நிமிர - நிமிர்ந்துநிற்கவும்,- நெடிய விசையுடன் -மிகுந்த வேகத்தோடு, விசியும் - இழுக்கப்பட்ட, நாண் - வில்நாணி, இடியும் முகில்என-இடிக்கிற மேகம்போலொலிக்கவும்,-அகிலம் வெளி முகடு - அண்டகோளத்தின் மேல்முகடு, இடிய - அதிரவும்,-அதிர் பெரு நகையுடன்- ஆரவாரிக்கிற பெருஞ்சிரிப்புடனே,-கொடிய விகனனை - (பகைவர்க்குப்) பயங்கரனான விகர்ணனை (எதிர்த்து),- அவன் உடல் மடிய - அவனுடம்பு வருந்தவும்,-கொடிய குடர் உகுகுருதி நீர் வடிய - வலிமையையுடைய - அவன்குடலினின்று பெருகுகிற இரத்தநீர் வழியவும், - இரு புயம் ஒடிய - (அவனது) இரண்டு தோள்களும் காயப்படவும்,-வடிய கணை - கூர்மையுடைய அம்புகளை, ஒரு நொடியில்-ஒருமாத்திரைப்பொழுதிலே, உதையினன் - செலுத்தினான்; (எ-று.)*

*வடிய என்னுஞ் சொல்இரண்டனுள், முன்னது-வடிஎன்னும் வினைப்பகுதியடியாப்பிறந்த செயவென்னும் வினையெச்சம்: பின்னது - வடி என்னும் பெயரடியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். சிலை முறைமுறை நிமிர்தல் - அம்பை யிழுத்துவிடும் பொழுதுதோறும் வில்லின் வளைவு சிறிது மாறல். கொடிய குடர்-கொடிபோல்சுற்றியுள்ள குடருமாம். குடர் - போலி. **பி-ம்** : விசையுடன் வீசினான். (228)*

### *23.- அபிமன்யுவின் வீரத்தைக் கண்டு பகைஞர் அஞ்சுதல்.*

***மன்னர்மணிமுடிமன்னுகனைகழன்மன்னனிளவல்விகன்னனை***
***முன்னருறுகணைபன்னர்விழவிழமுன்னரமர்பொரமுன்னினான்***
***பொன்னசலநிகரன்னபுயவபிமன்னுவொருவனுமின்னுநா***
***மென்னவமர்பொரவின் னரணுகுவதென்னவெருவினர்துன்னலார்.***

*(இ-ள்.) 'பொன் அசலம் நிகர் அன்ன - பொன்மலையான மேருவையொத்த, புயம் - தோள்களையுடைய, அபிமன்னு ஒருவன்உம் - அபிமன்யு ஒருத்தனும்,- மன்னர் மணி முடி மன்னு - (வந்து வணங்குங்காலத்தில்) அரசர்களது இரத்தினகிரீடங்கள் பொருந்தப்பெற்ற, கனை கழல் - ஒலிக்கின்ற வீரக்கழலையுடைய (பாதத்தையுடைய), மன்னன் - துரியோதனராசனது, இளவல் - தம்பியான, விகன்னனை - விகர்ணனை,-முன்னர் உறு கணை - முன்னே [மார்பில்] பொருந்திய அம்புகள், பின்னர் விழ விழ - (ஊடுருவிக்கொண்டு) பின்னே மிகுதியாக விழும்படி, முன்னர் அமர் பொர முன்னினான்-எதிரில்நின்று போர்செய்யத் தொடங்கி விட்டான்; இன்னும்-பின்பும், நாம்-, என்ன அமர் பொர-என்னபோரைச் செய்வதற்கு, இன்னர் அணுகுவது - இப்பொழுது (அபிமந்யுவை) நெருங்குவது?' என்ன - என்று கருதி, துன்னலார் - பகைவர்கள், வெருவினர் - அஞ்சினார்கள்;(எ - று)*

*'அபுமந்யு வேறுதுணையில்லாமல் தானொருவனாகவே இராசராசனான துரியோதனனது தம்பியான விகர்ணனை மார்பு துளைக்கும்படி பல அம்புகளை எய்தா னென்றால், நாம் அவ்வபிமனோடு எதிர்த்து என்ன போர் செய்யமாட்டுவோம்?' என்று எதிரிகள் பலர் அஞ்சினரென்பதாம். நிகர் அன்ன என்ற இடத்து - திருக்கோவையாரில், "கோளரிக்குந் நிகரன்னார்" என்பதற்கு - கோள்வல்ல அரிமாவிற்கு மறுதலைபோல்வார்' என்றும், 'கோளரிக்கு ஒப்பாகிய அத்தன்மையர் எனினும் அமையும்' என்றும் பேராசிரியர் கூறியது அறியத்தக்கது. ஒருவனும், உம் - இழிவு சிறப்பு: அவனது*

*துணையின்மையையும், இளம்பிராயத்தையும் காட்டும். இன்னர் - இத்தன்மையரெனினுமாம். இப்பாட்டு - மெல்லோசையால் மிக்கது. முன்னும் பின்னு முள்ள இவ்வகை விருத்தங்களில் ஒவ்வொருபாட்டும் ஒவ்வொரு ஓசைவிகற்பம் பொருந்தப் பாடப்பட்டுள்ளவாறு காண்க. (229)*

### *24.- அபிமன் போர்வெல்ல, தந்தைமார் எதிர்கொண்டு மகிழ்ந்து அவனைத் தழுவுதல்.*

***அன்றையமரினிலொன்றுபடவவரங்கமயர்வுறுபங்கமே***
***தென்றுமொழிவதுதந்தமனையுறவெந்தநிருபருமுந்தினார்***
***வென்றுபொருமுனைநின்றவபிமனைவிஞ்சுமுவகைகொணெஞ்சுடன்***
***சென்றுதழுவினரிந்துவரவெழுசிந்துவெனமகிழ்தந்தைமார்.***

*(இ-ள்.) அன்றை அமரினில் - அன்றையதினத்துப்போரில், ஒன்று பட - ஒருசேர, அவர் அங்கம் - (விகர்ணன் முதலிய) பகையரசர்களது உடம்பு, அயர்வுஉறு-தளர்ச்சியடைந்த, பங்கம் - தோல்வியை, ஏது என்று மொழிவது - (யாம்) என்னவென்று எடுத்துச்சொல்வது? எந்த நிருபர்உம் - (துரியோதனன் பக்கத்தில்) எல்லா அரசர்களும், தம் தம் மனை உற - தங்கள் தங்கள் வீட்டை அடைவதற்கு, முந்தினார் - (ஒருவரினும் ஒருவர்) முற்பட்டார்: (அப்பொழுது), இந்துவரவு எழு சிந்து என - சந்திரன் உதிக்கப்பொங்குகிற கடல்போல, மகிழ தந்தைமார் - மகிழ்ச்சி கொண்ட (அபிமனது) தந்தையரான பாண்டவர், வென்று பொருமுனை நின்ற அபிமனை - வெற்றி கொண்டு போர்க்களத்திலேநின்ற அபிமந்யுவை, விஞ்சும் உவகை கொள்நெஞ்சுடன் - மிகு களிப்புக் கொண்ட மனத்துடன், சென்று தழுவினர்-; (எ-று.)*
*சந்திரனது வரவைக் கண்டமாத்திரத்தில் கடல் பொங்குவதற்குக் காரணம், தன்னிடத்திலிருந்து உண்டானதுபற்றித் தனக்குப் பிள்ளைமுறையாகிய அச்சந்திரனைக் காணுதலாலாகுங் களிப்பு என்று கூறுவது கவிமரபு: அதுபற்றி அபிமனதுவெற்றியைக் கண்டுகளிக்கிற அவன் தாதையர்க்கு, சந்திரனது வரவைக் கண்டு பொங்குங் கடல் உவமை. (230)*

### *25.-இதுமுதல் மூன்றுகவிகள் - படுகளச்சிறப்பு.*

***கோடுமுதலொடுவாளிகளினிறவீழ்வபலகடகுஞ்சரங்***
***காடுபடுதுளவோன்முன்வரவிடுகஞ்சன்மழகளிறொக்குமால்***
***ஓடுகுருதியினூடுவடிவொருபாதிபுதைதருமோடைமா***
***நீடுமுதலையின்வாயின்வலிபடுநீலகிரியைநிகர்க்குமால்.***

*(இ-ள்.) (அப்போர்க்களத்திலே),-கோடு - தந்தங்கள், முதலொடு - அடியோடு,வாளிகளின் இற - (எதிரிகளின்) பாணங்களால் அழிய, வீழ்வ- விழுந்துகிடப்பனவான, பல கடம் குஞ்சரம் - அநேகமதயானைகள்,-காடு படு துளவோன் முன்-காட்டிற் பொருந்திய திருத்துழாயைத் தரித்த கண்ணபிரானுக்கு முன்னே, வர - சொல்லும், கஞ்சன் - கம்சன், விடு - ஏவிய, மழ களிறு - இளமையான (குவலயாபீடமென்னும்) யானையை, ஒக்கும் - ஒத்திருக்கும்; ஓடு குருதியின் ஊடு - ஓடுகிற இரத்தவெள்ளத்தினிடையே, வடிவு ஒரு பாதி புதைதரும் - உடம்பில் ஒருபாதி அழுந்திய, ஓடைமா - நெற்றிப்பட்டத்தையுடைய யானைகள்,- நீடு முதலையின் வாயின் - நீண்ட முதலையினது வாயினால், வலி படு - வலிமையொழிந்த, நீலகிரியை - நீலநிறமுள்ள மலைபோன்ற (கஜேந்திரனென்னும்) யானையை, நிகர்க்கும்-; (எ-று.)*

*முன் இரண்டடியிற் கூறிய உவமை-யானைகள் தந்தம் வேரோடு ஒழிய இறந்து விழுந்து கிடந்ததற்கும், பின் இரண்டடியிற் கூறிய உவமை - பாதியுடம்பு வெளித்தெரியாது மறைய ஒடுக்கியதற்கு மென்க. துளசி - முல்லை நிலத்திற்கு உரியதாதலால், 'காடுபடுதுளவு' எனப்பட்டது; இனி, 'காடுபடுதுளவோன்' என்பதற்கு - முல்லைநிலத்துக்குத் தெய்வமாகப் பொருந்திய கண்ணபிரானென்றும் கொள்ளலாம். நீலகிரி - கருநிறமுடைய யானைக்கு, உவமையாகுபெயர், வீழ்வ - பெயர். ஆல் இரண்டும்- அசை.*

*வில்விழாவென்கிற வியாஜம்வைத்துக் கம்சனால் வரவழைக்கப்பட்ட ஸ்ரீ கிருஷ்ணபலராமர்கள், கம்ஸனரண்மனையை நோக்கிச் செல்லுகையில், அவனது அரண்மனைவாயில் வழியில் தம்மைக் கொல்லும்படி அவனால் ஏவி நிறுத்தப்பட்ட குவலயாபீடமென்னும் மதயானை கோபித்துவர, அவ்யாதவ வீரர் அதனையெதிர்த்து அதன் தந்தங்களிரண்டையும் சேற்றிலிருந்து கொடியை யெடுப்பதுபோல எளிதிற்பறித்து அவற்றையே ஆயுதமாகக்கொண்டு அடித்து உயிர்தொலைத்து உள்ளேபோயினரென்பது,* ***இரண்டாம் அடியின் கதை. (231)***

***26. மாலுமதகடசாலநுதலுமருப்புமொருகையும்வதனமுந் தோலுமொழியவுளானதசைபலபேய்கணுகர்தருதும்பிமா நாலுமறைகளுமோலமெனவகல்வானமெனமுழுஞானமே போலுமெனவொளிர்மேனியுடையவர்போர்வையுரியதள்போலுமே.***

*(இ-ள்,) மாலும்-மயங்குதற்குக் காரணமான, மதசாலம்- மதப்பெருக்கைக்கொண்ட, கடம்- கன்னங்களையுடைய, நுதல்உம்-நெற்றியும், மருப்புஉம் - தந்தங்களும், ஒரு கைஉம் - ஒன்றாகிய துதிக்கையும், வதனம்உம்- முகமும், தோல்உம்-(உடம்பின்) தோலும், ஒழிய-நீங்க, உள் ஆன தசை- உள்ளே பொருந்திய சதைகளை, பல பேய்கள் நுகர்தரு- அநேகம் பேய்கள் உண்ணப்பெற்ற, தும்பிமா - யானைகள்,-நாலு மறைகள்உம்-நான்கு வேதங்களும், ஓலம் என - அபயமிட்டழைக்கவும், அகல்வானம் என-பரந்த ஆகாயம் மென்று சொல்லவும், முழு ஞானம்ஏ போலும் என-பூர்ணமான அறிவையே ஒக்கு மென்று சொல்லவும், ஒளிர்-விளங்குகிற, மேனி உடையவர்- திருமேனியையுடைய சிவபிரானுக்கு, போர்வை - போர்வையாக உள்ள, உரி அதள்- உரிக்கப்பட்ட(யானைத்) தோலை, போலும்-ஒக்கும்.*

*உடம்பிலுள்ள உறுப்புக்கள் ஒழியத் தோலுரிபட்ட யானைகள், சிவபிரானால்முன்பு தோலுரிக்கப்பட்ட யானையை யொக்கு மென்க. தமது துன்பத்தையழிக்கும்பொருட்டு யாவராலும் அபாயங்கூறி அடையப்படுங் கடவுள் இவரேயென்றும், ஆகாசமூர்த்தி யென்றும், பூர்ணஞானசொரூபி யென்றும் வேதங்களாற்புகழப்பட்டுத் தேசோமயமாய் விளங்குபவர் சிவபிரானென்பது, பின்னிரண்டடிகளில்விளங்கும். சாலம்-ஜாலம் என்னும் வடசொல்லின் விகாரம்: இனிஜலமென்பதன்விகாரமெனக் கொண்டு, நீர் என்றுமாம். அன்றி. 'மதகடசாலும் 'என்றுபாடங்கொண்டு, மதநீரைக் கொண்ட கன்னமாகிய சாலும் என்று பொருளுரைப்பாருமுளர்: சால்-நீர்ப்பாத்திரம். போர்வை-போர்க்கப்படுவது.* ***யானைத்தோலுரித்த கதை*** *:-அருந்தவமியற்றிப் பெருவரம்பெற்ற கஜாசுரனென்பவன்தேவர் முனிவர் முதலியோரை இடைவிடாது வருத்தித் துரத்த, அஞ்சியோடினஅவர்களது பிரார்த்தனையால் பரமசிவன் தம்மை யெதிர்த்துப் போர்செய்யவந்தஅவ்வசுரனைக் காலாலுதைத்துத் தள்ளிக் கொன்று தோலை உரித்துப்போர்த்தருளின தென்றாயினும், தாருகவனமுனிவரேவிய யானையினுட் சென்றுஉருத்திரமூர்த்தி உடலைப்பிளந்து அதனுரிவையைப் போர்த்துக்கொண்ட தென்றாயினுங்கொள்க. (232)*

***27. சேனையிபமுகமற்றுவிழுவனசென்றுதிசைவழிகவ்விவிண் போனவயவர்கள்படைகொடெதிரெதிர்பூசல்புரியிருபூதமுஞ் சோனைமழைமுகில்வாகன்முதலசுரேசர்தொழுதுதுதிக்கவே யானைமுகவசுரேசனுடனமராடுமுதல்வனையொக்குமே.***

*(இ-ள்.) சேனை - அச்சேனையிலே, அற்று விழுவன-அறுந்து விழுந்தனவாகிய, இபம் முகம்- யானைகளின் முகங்களைக், திசை வழி சென்று கவ்வி-(அவை விழுந்துள்ள) திக்குகளின் இடங்களிலே ஓடிப்போய் (வாயினாற்) கௌவி யெடுத்துக்கொண்டு, விண்போன வயவர்கள் படைகொடு-(இறந்து) வீரசுவர்க்கஞ்சென்ற வீரர்களது ஆயுதங்களை (த்தம் கைகளில்) ஏந்திக்கொண்டு, எதிர் எதிர் பூசல் புரி-எதிரெதிராக நின்று ஒன்றோடொன்று) போர்செய்கிற, இரு பூதம்உம் - இரண்டு சேனைகளும், சோனை மழை முகில் வாகன் முதல - விடாப்பெருமழை பொழியும், சோனை மேகத்தை வாகனமாகவுடைய இந்திரன் முதலிய, தலை சிறந்த தேவர்கள், தொழுது துதிக்க. (தன்னை வந்து) வணங்கித் தோத்திரஞ்செய்ததனால், யானை முகம் அசுரேசனுடன்*

*அமராடு - யானைமுகத்தையுடைய அசுரராசனோடுபோரைச்செய்த, தலைவனை - தலைவனானவிநாயகக்கடவுளை, ஒக்கும்-; (எ-று.)*

*மாகதனென்னும் வீமனுக்கு விபுதையென்னும் அசுர கன்னிகையினிடத்தில் பிறந்தகஜமுகாசுரனென்பவன் அநேகவரங்களைப் பெற்று தன்னுடன் பிறந்த பல அசுரர்களுடனே உலகத்துக்கு பலவகைத் தீங்குகளை இழைத்து வருகையில், வேண்டுகோளால்* ***அவனைக்*** *கொல்லும்பொருட்டுச் சிவ குமாரராய் யானைமுகக்கடவுளாக அவதரித்த விநாயகர் இந்திரன் முதலிய தேவர்களின் பிரார்த்தனையாற்சென்று எதிர்த்துப் போர்செய்து அவ்வசுரனை* ***அழித்திட்டனர்***
*என்பது* ***கதை.*** *அவ்வசுரன் இரணியன்போலத் தேவர்களாலும் அசுரர்களாலும் மனிதர்களாலும் மிருகங்களாலும் மற்றும் பல பிராணிகளாலும் (தனித்தனி) இறவாதபடி வரம்பெற்றிருந்தன னாதலால், அவனைச் சிவபிரான் யானைமுகமும், தெய்வப் பிறப்பும், பூதவடிவமும் கொண்ட ஒருபுத்திரனை யுண்டாக்கி அவனால் அழித்தருளின்ரென்க. அவன் படைக்கலங்களாலும் அழியாதபடி வரம்பெற்றனனாதலால், அவன்மேல் விநாயகர் தமது தந்த மொன்றை யொடித்து வீசி அதனால் கொன்றன ரென்று நூல்கள் கூறும். யானைமுகத்தை வாயிற்கௌவியவையும், அங்குள்ள பிணங்களைத் தின்பதில் தமக்குஉண்டான மாறுபாட்டினாலும் விளையாட்டினாலும் தம்மில்ஒன்றோடொன்று போர்செய்கிறவையுயான பூதங்களுக்கு, ஒருவரோடொருவர்போர்செய்த பயங்கரரூமான கஜமுகாசுரனும் கைகால்வயிறுகளில்பூதவடிவங்கொண்ட யானைமுகக்கடவுளும் உவமை யெனக் காண்க. முதல் - குறிப்புபெயரெச்சம், வயவர் வலிமையுடையவர், எல்லாச் சுபகாரியங்களிலும் முதலில் பூசிக்கப்படுகிற தலைமைபற்றி, விக்கிநேசுவரரை 'முதல்வன்'என்றார்.* ***பி-ம்:*** *தசைவழி. (233)*

### *28.-சூரியாஸ்தமனமும், மறுநாள் சூரியோதயமும்.*

***இமைய மணுகினன் விசயன் மதலையை யின்றை யமரினி***
***யுங்களுக்***
***கமைமயு மெனமுத லனிக மடையவு மணியு மவனிபர்***
***நால்வருந்***
***தமைய னொடுதம பதியி னணுகினர் தங்க விரைவொடு***
***கங்குல்போய்ச்***
***சிமைய மணுகினன் மீள நனியிருள் சிதைய வுதய திவாகரன்***

*(இ-ள்.) (சூரியன்),-விசயன் மதலையை-அருச்சுனனது புத்திரனான அபிமன்னுவை (நோக்கி),'இன்றை அமர் இனி உங்களுக்கு அமையும்' என- இன்றைய தினத்துப்போர் இப்பொழுது உங்களுக்கு அமையும்' என- இன்றைய தினத்துப்போர் இப்பொழுது உங்களுக்குப் போதுமென்று (கூறியவன் போல), முதல்-முத*
*லிலே, இமையம் அணுகினன்-(அஸ்தமந) கிரியை அடைந்தான் (அஸ்தமித்தான்); (உடனே), அனிகம் அடையஉம் - சேனைகளெல்லாவற்றோடும், அணியும் அவனிபர் நால்வர்உம் - அழகு பொருந்திய (வீமன் முதலிய) நான்கு அரசர்களும், தமையனொடு, (தங்கள்) தமையனான தருமபுத்திரனுடனே, தம பதியின் அணுகினர் தங்க - தமதுபடைவீட்டிற் சேர்ந்து தங்க,-கங்குல் விரைவொடு போய்- இராத்திரி துரிதமாகக் கழிய, மீள - பின்பு, நனி இருள் சிதைய-மிகுந்த இருள் அழியும்படி, உதயம் திவாகரன் - உதயகாலத்துச் சூரியன், சிமையம் அணுகினன் - உதயகிரியைஅடைந்தான் [உதித்தான்]; (எ-று.)*

*சூரியன் இயல்பாக அஸ்தமித்ததை அன்றைய தினம் சிறப்பாகப் போர் செய்தஅபிமனைநோக்கி 'இவ்வளவோடு இன்றைப் போர் போதும்' எனக்கூறிச் சென்றதாக உத்பிரேக்ஷித்தார். முதல் இமையமணுகினன் திவாகரன், கங்குல்போய் இருள்சிதைய மீளச் சிமையம் அணுகினன் என ஒருவாக்கியமாகவே முடித்தலுமொன்று. இமயம், சிமயம் என்பன - எதுகைநோக்கி இடைப்போலிபெற்றன இமயம் - இங்கே, மலையென்னுமாத்திரமாய், சிறப்புப்பெயர் பொதுப்பொருளை யுணர்த்திற்று; பின் வருவதை நோக்கி அஸ்தகிரியாயிற்று. தமையன் - தம் ஐயன் எனப்பிரிந்து தம் தந்தைபோல்வானென்று பொருள்படும்; ' தமையன் தந்தை போல்*

*மதிக்கத்தக்கவன்' என்பது - நூல்வழக்கு, திவாகரன் - பகலைச்செய்பவன்; வடமொழிப்பெயர்; 'பகலவன்' என்பது - இதற்கேற்ற தமிழ்மொழி. உதயச்சிமயமென மொழிமாற்றியுரைப்பினும் அமையும். சிமயம் - மலையுச்சி; இங்கே, மலைக்குச் சினையாகுபெயர். (234)*

### ஆறாம்போர்ச்சருக்கம்முற்றிற்று.

-------

## ஏழாம் போர்ச்சருக்கம்,

### 1.-கடவுள் வாழ்த்து.

**உரலும் வேதமுந் தொடர நந்தகோப னுடன சோதைகண்டுருக**
**வாழ்வுகூர்**
**தரணி மீதுசெங் கையு மாமுழந் தாளும் வைத்துவைத் தாடு**
**மாயனார்**
**விரவி நின்றமாமருதி னூடுதா மெத்தெ னத்தவழ்ந் தருளி**
**மீளவும்**
**புரியு நீள்கடைக் கண்ணும் வண்ணமும் போற்று வார்கண்மெய்**
**புளகமேறுமே.**

*(இ-ள்.) உரல்உம் வேதம்உம் தொடர - (தன்னைக் கட்டி வைத்த) உரலும் (தன்னையே புகழ்கிற) வேதங்களும் உடன்வரவும், நந்தகோனுடன் அசோதை கண்டு உருக - (தன்னை வளர்த்த தந்தை தாயாராகிய) நந்தகோபனும் யசோதையும் பார்த்து மனமுருகவும் வாழ்வு கூர் தரணி மீது செம்கைஉம் மா முழந்தாள்உம் வைத்து வைத்து - வாழ்க்கைமிகுந்த பூமியின் மேல் சிவந்த (தன்) கைகளையும் அழகிய முழங்கால்களையும் மாறிமாறி எடுத்து வைத்து, ஆடும் மாயனார்- திருவிளையாட்டுச்செய்கிற கண்ண*
*பிரான் விரவி நின்ற மா மருதினூடு - [ஒன்றோடொன்று] கூடி நின்ற பெரிய மருதமரங்களின் நடுவிலே, தாம் மெத்தென தவழ்ந்து - தாம் மெதுவாகத்தவழ்ந்து சென்று, அருளி - (அந்த மருதமரங்களுக்கு) நற்கதிகொடுத்து, மீளஉம் புரியும் - திரும்பிப் பார்த்தருளுகின்ற, நீள் கடைக்கண்உம் - நீண்ட கடைக்கண்களையும் வண்ணஉம் - அழகையும், போற்றுவார்கள் - துதிப்பவர்களது, மெய் - உடம்பு, புளகம் ஏறும்-மயிர்ச்சிலிர்ப்பு மிகப்பெறும்;*

*இங்கே, உடம்பில் ரோமாஞ்சமுண்டாதல் - அன்புமிகுதியாலாகும் மெய்ப்பாடாம், வேதமுந் தொடர - "தொடர்ந்த நான்மறை பின்செல" என்றது காண்க. கண்ணனைப்பெற்ற தந்தை தாயரான வசுதேவனும் தேவகியும், கண்ணனது குழந்தைதிருவிளையாடல்களைக் காணப்பெறாமல், வளர்த்த தந்தைதாயரான நந்தகோபனும் யசோதையுமே அவற்றைக் கண்டு களிக்கப்பெற்ற அருமை தோன்ற, 'நந்தகோனுடன் அசோதை கண்டு உருக' என்றார். பூமிதேவியின் பாரத்தை நிவிருத்தி செய்யும்பொருட்டுக் கண்ணன் தன்னிடம்வந்துதிருவவதரிக்கப் பெற்றதனாலும், அப்பெருமானது திருக்கைகளும் திருவடிகளும்தன்மீது பரிசிக்கப்பெற்ற பாக்கியவிசேஷத்தை யுடைமையாலும், பூமியை 'வாழ்வுகூர் தரணி' என்றார். குழந்தை தவழும்பொழுது பின்னே திரும்பித் திரும்பிப் பார்த்துக்கொண்டு செல்லும் இயல்புபற்றி, 'தவழ்ந்தருளி மீளவும் புரியும் நீள் கடைக்கண்' என்றது. கடைக்கண் - கடாஷம், பகவான் தன்னுடைய பரத்துவத்தைவிட்டுச் சௌலப்பியத்தைக் கைக்கொண்டு உரலுடன் கட்டுப்பட்டு எளிமையாக இருந்த இவ்வரலாறு, "பத்துடையடியவர்க் கெளியவன் பிறர்களுக்கரிய, வித்தகன் மலர்மகள் விரும்பும் நம் அரும்பெறலடிகள், மத்துறுகடைவெண்ணெய் களவினி லுரவிடையாப்புண்டு, எத்திறம் உரலினோ டிணைந்திருந் தேங்கிய எளிவே" என்று கூறி நம்மாழ்வார் ஈடுபட்டு ஆறுமாதகாலம் 'மோகித்துக்கிடக்கும்படியான மகிமை யுடையதனால், இவ்வரலாற்றைப் போற்றுபவர்களது மெய்புளகமேறும் என்றார். அருளி மீளவும் புரியும்-(அம் மரங்களுக்கு)முன்னையநிலையை மறுபடி கொடுத்தருளின எனப் பொருள் கொள்ளலுமாம். நந்தகோன்-நந்தன்கோன் எனப் பிரியும்: இரு பெயரொட்டுப் பண்புத்தொகை. ஈற்றேகாரம்-தேற்றம்-புளகம் - வடசொல். மெத்தென - மந்தக்குறிப்பு,*

*கண்ணன் குழந்தையாயிருக்குங்காலத்தில் துன்பப்படுத்துகின்ற பல திருவிளையாடல்களைச் செய்யக்கண்டு கோபித்த நந்த கோபரின் மனைவியான யசோதை, ஒருநாள் கிருஷ்ணனைத் திருவயிற்றிற் கயிற்றினாற் கட்டி ஓருரலிலே பிணித்துவிட, கண்ணன் அவ்வுரலை யிழுத்துக்கொண்டு தவழ்ந்து அங்கிருந்த இரட்டை* ***மருதமரத்தின் நடுவிலே எழுந்தருளியபொழுது*** *அவ்வுரல் குறுக்காய் நின்று இழுக்கப்பட்டபடியினாலே அம்மரங்களிரண்டும் முறிந்து விழுந்தவளவில், முன் நாரதர்சாபத்தால்* ***அம்மரங்களாய்க்கிடந்த*** *நளகூபரன். மணிக்கிரீவ னென்னும்* ***குபேரபுத்திரர் இருவரும் சாபந் தீர்ந்து சென்றனரென்பது கதை.*** *இந்தக் குபேரபுத்திரர்கள் முன்பு ஒரு காலத்தில்பலதெய்வமகளிருடனே ஆடையில்லாமல் ஜலக்கீரிடை செய்துகொண்டிருக்கையில்,நாரதமகாமுனிவர் அங்கு எழுந்தருள, மங்கையரனைவரும் நாணங்கொண்டுஆடையெடுத்து உடுத்து நீங்க, இந்த மைந்தர்மாத்திரம் மதுபாந மயக்கத்தால் நிர்வாணமாகவே யிருக்க, நாரதர்கண்டு கோபங்பொண்டு 'மரங்கள் போலிருக்கிறநீங்கள் மரங்களாவீர்'என்று சபித்து, உடனே அவர்கள் வேண்டிக்கொண்டதற்குஇரங்கி, 'நெடுங்காலஞ் சென்ற பின்பு திருமால் உங்களை யடையுஞ் சமயத்தில்இவ்வடிவமொழிந்து முன்னைய வடிவம் பெற்று மீள்வீர்' என்று சாபவிடை கூறிப்போயினரென அறிக.*

*இச்சருக்கத்திலுள்ள பத்துப்பாடல்களும் - பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்துஏழாஞ் சீர்கள் மாச்சீர்களும், மற்றைநான்கும் விளச்சீர்களுமாகிய கழிநெடிலடிநான்குகொண்ட* ***எண்சீராசிரியவிருத்தங்கள்.*** *(235)*

### *2 .- பாண்டவசேனையும்கௌரவசேனையும் களங்குறுக, வியூகமாக வகுக்கப்படுதல்.*

***இருவர்சேனையுஞ்சேனைமன்னருமிகலியேபலதிசைகளெங்கணு***
***முரசமாதிவெம்பணைமுழங்கவேமுன்னைவெங்களம்பின்னுமெய்தினார்***
***மரகதாசலம்போலுமேனிமாமாயனச்சுமாசுணவியூகமுந்***
***தரணிகாவலன்றன்பிதாமகன்சகடவியூகமுந்தான்வகுக்கவே.***

*(இ-ள்.) இருவர் சேனைஉம்-இருதிறத்தாரது சேனைகளும், சேனை மன்னர்உம்- அந்தச்சேனைகளிலுள்ள அரசர்களும், இகலி - பகைமைகொண்டு, பல திசைகள் எங்கண்உம் முரசம் ஆதி வெம்பனை முழங்க-எல்லாத்திக்குக்களினிடம் முழுவதிலும் பேரிகை முதலிய பயங்கரமான போர்ப்பறை கோஷிக்க, முன்னை வெம் களம் பின்உம் எய்தினார்-முந்தின நாள்களில் அடைந்த கொடிய போர்க் களத்தை அந்தநாளிலும் அடைந்தார்கள்: (அங்கு ஒரு பக்கத்தில்) மரகத அசலம் போலும் மேனி மா மாயன் - மரகதரத்தினமயமானதொரு மலையை யொத்த திருமேனியையுடைய மிக்க மாயையுள்ள கண்ணபிரான், நஞ்சு மாசுணம் வியூகம்உம் - விஷத்தையுடைய சர்ப்பத்தின் வடிவமான வியூகத்தையும், (மற்றொருபக்கத்தில்), தரணி காவலன் தன் பிதாமகன் - பூமியையாளும் அரசனானதுரியோதனனது பாட்டனான வீடுமன், சகடம் வியூகம்உம் - வண்டி வடிவமானவியூகத்தையும், வகுக்க - அமைக்க,-(எ-று,) - 'பாண்டியன் அஞ்சி யோடினான்'என்று அடுத்த கவியோடு குளகமாக இயையும், வகுக்கவே, களம் எய்தினார் எனஇக்கவியிலேயே இயைத்தலு மொன்று தான் - அசை.*

*ஏழாம்நாட்போரில் பாண்டவசேனை வச்சிரவியூகமாகவும், கௌரவசேனை மண்டலவியூகமாகவும் வகுக்கப்பட்டதாக முதனூலில் உள்ளது.* ***பி - ம்:*** *பணைகொழிக்கவே. (236)*

### *3.-பாண்டியன் துரோணனுக்குத் தோற்றுப்போக, கடோற்கசன் வருதல்.*

***மன்றனிம்பநாண்மாலைமௌலியான்மாறன் மீனவன்வழுதிபஞ்சவ***
***னன்றுபஞ்சவர்க்காகவேயுடன்றந்தணற்குடைந்தஞ்சியோடினான்***
***துன்றுமாயமால்யானைகொண்டுபோர்யானைமன்னரைத்தொல்ல மர்க்கணே***
***வென்றுகண்டவர்புறமவர்க்கிடான்மீளவந்தனன்வீமன்மைந்தேன.***

*(இ-ள்.) மன்றல் - வாசனையையுடைய, நிம்பம் - வேப்பம் பூவினாலாகிய, நாள்மாலை - புதியமாலையை, மௌலியான் - முடியிற் சூடியவனும், மீனவன் - மீனக்கொடி யுடையவனும், மாறன் வழுதி பஞ்சவன் - மாறன்முதலிய பெயர்களையுடையவனுமான பாண்டியராசன், அன்று - அப்பொழுது, பஞ்சவர்க்காகஏ உடன்று - பாண்டவர்களுக்காகவே போர்செய்து, அந்தணற்கு உடைந்து - துரோணாசாரியனுக்குத் தோற்று, அஞ்சி ஓடினான்-; துன்று - நெருங்கிய, மாயம் மால் யானை - மாயையினாலாகிய மதயானைகளை, கொண்டு - அமைத்துக்கொண்டு, போர் யானை மன்னரை - போர் செய்யவல்ல (உண்மை) யானைகளின்மேலேறிய (பகதத்தன் முதலிய) அரசர்களை, தொல் அமர்க்கண் - பழைய (நான்காநாட்) போரிலே, வென்று - சயித்து, அவர் புறம் கண்டு - அவர்களை முதுகுகண்டு (முதுகுகாட்டியோடச் செய்து) அவர்க்கு (புறம்) இடான் - அவர்களுக்கு (எப்பொழுதும் தான்) புறங்கொடாதவனாகிய, வீமன் மைந்தன்- கடோற்கசன், (இன்றைப்போரில்), மீள-மறுபடி, வந்தனன்-வந்தான்; (எ - று,)*

*நிம்பம் - வடசொல்; இது-அடையாளப்பூ, சேரசோழபாண்டியர்க்கு, பனை ஆத்திவேம்பின் பூமாலைகளும் வில் புலி மீன் கொடிகளும் முறையே உரியன, மாறன் -{எவரையும்} மாறுபட்டு அழிக்கவல்லவன். புறம் - மத்திமதீபம். **பி - ம்:***
*மாலைவேலினான்.*

*4.-சாத்தகிக்குச் சுதாயு தோற்க, வீமன் சகுனிசல்லியரை வெல்லுதல்.*

**முகினிறங்கொண்மாமேனிமாயனார்முன்பிறக்கவேபின்பிறந்தவன்**
**புகுநிலத்தனிற்சற்றுநின்றிலன்பொருசுதாயுதன்போர்பொறாமையிற்**
**சகுனியும்பெருஞ்சேனைமுன்வரத்தக்கசல்லியன்றானுமோடவே**
**மிகுநிறங்கொள்பைந்தாமவாகைபோர்வென்றுசூடினான்வீமசேனனே.**

*(இ-ள்.) முகில் நிறம் கொள் - மேகம்போன்ற (கரிய) திருநிறத்தைக் கொண்ட,மா மேனி - அழகிய திருமேனியையுடைய, மாயனார் - கண்ணபிரான், முன் பிறக்க- முன்னே (யதுகுலத்து வசுதேவனிடம்) திருவவதாரஞ் செய்ய, பின் பிறந்தவன் -பின்பு (அக்குலத்துச் சத்யகனிடத்திலே) தோன்றின [கண்ணன் தம்பியான]சாத்தியகி, புகும் - (போருக்குச்) சென்ற, நிலந்தனில் - இடத்திலே பொரு (சுதாயு -(வந்து) போர்செய்து சுருதாயு என்பவன், சற்றுஉம் நின்றிலன்- சிறிதும் முன்நிற்கமாட்டாதவனாயினான்; தன் போர் பொறாமையின் - தனது யுத்தத்தைச்சகிக்கமாட்டாமையால், சகுனியும்-, பெரு சேனை முன்வர தக்க-பெரிய சேனை(தன்) முன்னே வரப் பொருந்திய, சல்லியனும்-, ஓட-(தோற்று) ஓட, வீமசேனன்-,போர் வென்று - அப்போரில் வெற்றிகொண்டு, மிகுநிறம் கொள் பை வாகை தாமம் சூடினான் - (அவ்வெற்றிக்கு அறிகுறியாக) மிகுந்த ஒளியைக்கொண்ட குளிர்ச்சியான வாகைப்பூமாலையைத் தரித்தான்; (எ-று.)*

*தன் என்றது, வீமனை. 'தண்போர் பொறாமையின்' என்றதை **மத்திமதீப** மாகக் கொண்டு, சாத்தகியினது போரைப் பொறாமையால் என்று உரைத்து, சுதாயு நின்றலின் என முன் வாக்கியத்தோடும் கூட்டலாம். பெருஞ்சேனை முன் வரத்தக்க - பெரிய சேனைக்குத் தலைவனாய் முன்னே வரத்தக்க (சௌரிய தைரியங்களையுடைய) எனினுமாம்; பெரிய சேனைக்கு முன்னே எதிர்த்துவரத்தக்க என்றுங் கொள்ளலாம். சுதாயு - வடசொல் திரிபு; இவன் - வருணபகவானுக்குப் பந்நவாதையினிடம் பிறந்தவன். கையில் ஆயுதமில்லாதவன்மேல் தன்ஆயுதம் எறியப்பட்டால் தான்இறக்கும்படியும், வேறோருவிதத்திலும் இறாவாதபடியும் வரம் பெற்றவன். (238)*

*5.-நான்குகவிகள்-அருச்சுனனுடையவும் வீடுமனுடையவும் கடும்போரைக் கூறும்.*

**உயர்ந்தமேருவோடொத்திலங்குதேருலகளந்ததாள்வலவனூரவே**
**செயந்தன்மாபெருந்துணைவன்வன்பெருஞ்சேனைதன்னொடுஞ்**
**சென்றுபற்றினான்**
**வியந்ததேரின்மேன்முப்புரங்களும்வென்றமீளிபோனின்றவீடும**

**னியைந்துபோரினுக்கெதிரவில்வலோரிருவர்விற்களுமெதிர் வளைந்தவே.**

*(இ-ள்.) உயர்ந்த மேருவோடு ஒத்து இலங்குதேர் - (எல்லா மலைகளினும்) உயர்ந்த மகாமேருமலையோடு ஒத்து(ப் பொன்மயமாய்ப் பெரியதாக) விளங்குகிற தேரை, உலகு அளந்த தாள்வலவன் ஊர - உலகங்களை அளவிட்ட திருவடிகளையுடைய (கண்ணனாகிய) சாரதி செலுத்த, செயந்தன் மா பெரு துணைவன்-(இந்திரகுமாரனான) ஜயந்தனது சிறந்த பெருமையுள்ள தம்பியான அருச்சுனன், வல் பெரு சேனை தன்னொடுஉம் சென்று - வலிய பெரிய சேனைகளுடனே போய், பற்றினான் - (வீடுமனைத்) தொடர்ந்தான்; வியந்த தேரின்மேல் - (காண்பவர்) அதிசயித்தற்குக் காரணமான (சிறந்த பெரிய) தேரின்மேலே, மு புரங்கள்உம் வென்ற மீளிபோல் நின்ற - திரிபுரங்களையுஞ் சயித்த பராக்கிம சாலியான சிவபிரான்போல நின்ற, வீடுமன் - அவ்வீடுமனும், போரினுக்கு இயைந்து - (அவ்வருச்சுனனோடு) போர்செய்தற்கு உடன்பட்டு, எதிர - எதிர்நிற்க,(உடனே), வில்வலோர் இருவர்விற்கள்உம் - விற்போரில் வல்லவரான இவ்விரண்டுபேரின் விற்களும், எதிர் வளைந்த - (ஒன்றுக்கொன்று) எதிரிலே வளைந்தான்; (எ-று.)*

*உயர்தல்-ஓங்குதலும், சிறத்தலும். 'உலகளந்ததாள்வலவன் தேரூர' என்ற தொடரில் எம்பெருமானது அளவிறந்த ஆற்றலும் அடியவர்க்கெளிமையும் விளங்கும். செயந்தன் - இந்திரனுக்கு இந்திராணியிடம் பிறந்த புத்திரன்: இந்திரனுக்குக் குந்தியினிடம் பிறந்த அருச்சுனன் காலத்தாற் பிந்தியவனாதலால், செயந்தனுக்கு அருச்சுனன் தம்பியாவன்* ***.பி-ம்*** *: எதிரில் வல்லரோர். (239)*

**6. ஒருவரெய்தவம்பொருவர்மேலுறாதோரொரம்பினுக்கோரொரம்புதொட் டிருவரும்புகுந்தெய்தவல்லபமின்னதாகுமென்றுன்னலாகுமோ வரிவில்வெங்கடகரியின்வந்ததராகனுமாமயிற்குகனுமன்றியே மருவுவெங்குரற்கொண்டல்வாகனும்வலனும்ராமராவணருமென்னவே.**

*(இ-ள்.) வரி - கட்டமைந்த, வில் - வில்லுடனே, வெம் கடகரியின் வந்த - வெவ்விய மதயானைமுகமாக வந்த, தாரகன்உம் - தாரகாசுரனும், மா மயில் குகன்உம் - சிறந்த மயில்வாகனத்தையுடைய சுப்பிரமணியனும்,-அன்றி - அல்லாமல், மருவு வெம் குரல் கொண்டல் வாகன்உம் - பொருந்திய பயங்கரமான இடி முழக்கத்தையுடைய மேகத்தை வாகனமாகக்கொண்ட தேவேந்திரனும், வலன்உம் - பலாசுரனும்,-(அன்றியும்), ராமராவணர்உம் - ஸ்ரீராமபிரானும் இராவணனும்,-என்ன - என்னும் இவர்கள்போல,-இருவர்உம்- (அருச்சுனன் வீடுமன் என்ற) இரண்டு பேரும், புகுந்து - (போர்க்களம்) அடைந்து, ஒருவர் எய்தஅம்பு ஒருவர்மேல் உறாது -ஒருத்தர் தொடுத்த பாணம் மற்றொருத்தர் மேற் படாதபடி, ஓர் ஓர் அம்பினுக்கும் ஓர் ஓர் அம்பு தொட்டு எய்த- ஒவ்வொரு அம்புக்கும் ஒவ்வொரு எதிரம்பை (வில்லில்) தொடுத்துப் பிரயோகித்த, வல்லபம் - போர்த்திறமை, இன்னது ஆகும் என்று - இப்படிப்பட்டதாகு மென்று, உன்னல் ஆகும்ஓ-(மனத்தில்) நினைத்தலுங் கூடுமோ? (எ-று.)-எண்ணுதற்கும் முடியாதெனவே, சொல்லுதற்குஞ் செய்தற்கும் முடியாமை பெறப்படும்.*

*ராவணண் - கூவினவன்; கைலாசகிரியின் கீழ்க்கையகப்பட்டுக் கொண்டபொழுது பேராரவாரமிட்டதுபற்றி, இவனுக்கு இப்பெயர் சிவபிரானால் அளிக்கப்பட்டது. இனி, ராவணன் - கூச்சலிடச் செய்தவ னென்றுங் கொள்ளலாம்; தான் செய்யும் பல துன்பங்களால் உலகத்தாரை அலறிக் கதறிக் கூவச்செய்தான் இவன், இனி, விஸ்ரவஸின்மகன் என்னும் பொருளில் ஆதேசம் வந்து ராவணன் என்று ஆயிற்று என்றும் இப்பெயர்க்குக் காரணங் கூறுவர். இப்பாட்டின் பின் இரண்டடிகளில்* **எதிர்நிரனிறைப்பொருள்கோள்** *உள்ளது. அருச்சுனனுக்கு-முருகக்கடவுளும், இந்திரனும், இராமனும்; வீடுமனுக்கு-தாரகனும், வலனும், ராவணனும் உவமையாவர். என்ன எய்தஎன்க.*

*சுப்பிரமணியக் கடவுளால் வேல்கொண்டு பிளக்கப்பட்ட சூரபதுமனது உடம்பின் கூறுஇரண்டும் மயில்வடிவமும் கோழி வடிவமும் பெற்று அக்கடவுளருளால் அப்பிரானுக்கு வாகனமுங் கொடியுமாய் அமைந்த சிறப்பைக் கருதி, 'மாமயில்' என்றார். குஹன் என்னும் வடசொல்லுக்கு -*

*அஞ்ஞான இருளைப் போக்குபவனென்று பொருள்; கு - இருள்; இது இப்பொருளதாதலை 'குரு' என்ற சொல்லிலுங் காண்க. இனி, இச்சொல்லுக்கு-*

*(பகைவர் படையினின்றும் தன்படையைக்) காத்துக்கொள்கின்றவனென்றுமாம்.*

*தாரகன் - அசுரேசன்மகளாகிய மாயையென்னும் பெயர் பெற்ற சுரசையென்பவள் காசியபமகாமுனிவரைக் கூடிப்பெற்ற புத்திரர்மூவரில், சூரபதுமனுக்கும் சிங்கமுகனுக்கும் இளையவன்; யானைமுகத்தோடு பிறந்தவன். சூரபத்மன் தாரகன் சிங்கமுகன் என்ற இம்மூவரும் பரமசிவனைக்குறித்து யாகமுந் தவமுஞ் செய்து அவரருளால் அளவிறந்த வரங்களைப்பெற்றுச் செருக்குற்றுத் தமது குருவாகிய சுக்கிரபகவானது தீய உபதேசத்தால் மற்றும் பல ஆயிரம் அசுரர்களோடு சென்று இந்திரன் முதலிய தேவர்களனைவரோடும் போர்செய்து வென்று பற்பல வகையாக உலகத்தை வருத்தினவளவில், அத்துன்பம் பொறுக்கலாற்றாததேவர்கள் திருக்கைலாயமடைந்து பரமசிவனைத் தொழுது துதி செய்து 'தேவரீரைப்போல ஒரு புத்திரனை யுண்டாக்கி அக்குமாரனால் அசுரர்களையழித்து எங்கள் துன்பத்தைப் போக்கிக் காத்தருளல்வேண்டும்' என்று பிரார்த்திக்க,சிவபெருமான் அவ்வேண்டுகோளுக்கு இரங்கிக் குமாரக்கடவுளை யுண்டாக்கிஅனுப்பியருள, அவர் வீரவாகுதேவர் முதலான சிவபுத்திரர்களோடும் மற்றும் பலலஷம் வீரர்களுடனும் போய் யுத்தஞ்செய்து அவ்வசுரர்க ளனைவரையும்அழித்துத் தேவர்களைக் காத்தருளின ரென்பது*
***கதை*** *. தாரகாசுரனோடுமுருகக்கடவுளுக்குப் போர், அவ்வசுரனுக்கு இருப்பிடமான கிரௌஞ்சகிரியினிடத்திலே நடந்தது.*

*சிவபெருமானைக் குறித்து அரிய தவஞ்செய்து போரில் யாவரையும் வெல்லும் ஆற்றலையும், தான் இறப்பின் தன்னுடைய உடம்பிலுள்ள தாதுக்கள் நவரத்தின மாதல்வேண்டு மென்பதையும் வரமாகப் பெற்ற* **பலாசுரனென்பவன்** *, இந்திரனைப் போருக்கு அழைக்க இருவர்க்கும் பெரும்போர் நிகழ்ந்தது; அப்போரில் முன்நிற்கமாட்டாது தோற்ற* **இந்திரன்** *, பின்பு* **அவனை** *வஞ்சனையால் வெல்லக்கருதிச்சென்று புகழ்ந்து.* **குறையிரந்து** *வேண்டி யாகபசுவாக வரித்து உடன்பட்டுவந்த அவனை* **யூபஸ்தம்பத்திற்கட்டிக்** *கொன்றான் என்பது* **கதை.**

***(****240)*

### *7 .* **கரியணிக்குளெக்கரிகள்புண்படாகடவுதேரிலெத்தேர்கலக்குறா பரிநிரைக்குளெப்பரிதுணிப்புறாபாகர்தம்மிலெப்பாகர்வீழ்கலார் நரனும்வெற்றிகூர்வசுவுமுற்றபோர்நவிலுகிற்கினுநாநடுங்குமா லிருதளத்தினுமிருவரம்பினுமேவுணாதபேரெந்தமன்னரே.**

*(இ-ள்.) (அப்பொழுது), கரி அணிக்குள் - யானைவரிசைகளிலே, ஏ கரிகள் புண் படா - எந்த யானைகள்தாம் காயப்படாதவை? கடவு தேரில்-செலுத்தப்படுகிற தேர்வரிசைகளிலே, எ தேர் கலக்கு உறா - எந்தத் தேர்கள்தாம் கலக்க மடையாதவை? பரி நிரைக்குள் - குதிரைப்பந்திகளிலே, எ பரி துணிப்பு உறா- எந்தக் குதிரைகள் தாம் வெட்டுப்படாதன? பாகர் தம்மில் - (இவற்றைச்) செலுத்துபவர்களில், எ பாகர் வீழ்கலார் - எந்தப் பாகர்*
*தாம் - இறந்து விழாதவர்? இரு தளத்தின்உம் - இரண்டு சேனைகளிலும், இருவர்அம்பின்உம் - இந்த இரண்டுபேரது பாணங்களாலும், ஏவுணாத பேர்- எய்யப்படாதவர், எந்த மன்னர்- எந்த அரசர்தாம் (உளர்)? (எவருமில்லை யென்றபடி); (இவ்வாறு), நரன்உம் - நரனது அவதாரமான அருச்சுனனும், வெற்றி கூர்வசுஉம் - சிறப்பு மிகுந்த வசுவினது தோற்றமான வீடுமனும், உற்ற - பொருந்தின, போர் - யுத்தத்தை, நவிலுகிற்கின்-சொல்லத் தொடங்கினால், நாஉம் நடுங்கும் - (பேசுங்கருவியான) நாக்கும் அஞ்சும்; (எ-று.)*

*இதில் நால்வகைச்சேனையிலும் எல்லாம் அடிபட்டதன்மை கூறப்பட்டது. அப்போர்,சொல்லுதற்கு அரிது என்பதாம். கீழ்ப்பாட்டில், 'உன்னலாகுமோ' எனஎண்ணமுடியா தென்றவர், இப்பாட்டில் 'நவிலுகிற்கினும் நாநடுங்கும்' எனச் சொல்லலாகாமையை வெளியிட்டார். ஏவுணாத, உண்-செயப்பாட்டுவினைப் பொருளுணர்த்தும் இடைநிலை. ஆல் - ஈற்றசை (241)*

***8. வேறுபோரினிப்பொருதல்வேண்டுமோவிசயன்வீடுமனென்னும் வீரர்தஞ்***
***சீறுபோரிடைத்திசையடங்கலுசிவந்தகோலமெய்க்கவந்தமாடுமால்***
***கூறுபோர்பொரக்கருதிவெங்களங்கொண்டுதங்களிற்கொல்லலுற்றநா***
***ளாறுபோரினும்பட்டபேரினுமறுமடங்குபேரன்றுபட்டதே.***

*(இ-ள்.) விசயன்வீடுமன் என்னும் வீரர்தம்-அருச்சுனன் பீஷ்மன் என்கிற இரண்டு வீரர்களது, சீறு போரிடை-கோபித்துச் செய்த யுத்தத்திலே, திசை அடங்கல்உம்-எல்லாத்திக்குக்களிலும், சிவந்த கோலம் மெய் கவந்தம் ஆடும்-(இரத்தத்தாற்) சிவந்த நிறத்தையுடைய வடிவமுள்ள கவந்தங்கள் (எழுந்து) கூத்தாடும்; (இருதிறத்தாரும்), கூறு போர் பொர கருதி - (சிறப்பித்துச்) சொல்லப்படுகிற போரைச் செய்யஎண்ணி, வெம் களம் கொண்டு-கொடிய போர்க்களத்தை யடைந்து, தங்களில்கொல்லல் உற்ற - தம்மில் (ஒருவரையொருவர்) கொல்லத்தொடங்கிய, ஆறு நாள் போரின்உம்-(கீழ் நடந்த) ஆறுநாளை யுத்தத்திலும், பட்ட பேரின்உம் - இறந்த சேனைத்தொகையினும், அறு மடங்கு பேர்-ஆறளவுகொண்ட சேனைத்தொகை, அன்று பட்டது - அந்தஏழா நாட்போரில்இறந்தது; (என்றால்), இனி வேறு போர் பொருதல் வேண்டும்ஒ - இனிமேல் மற்றும்போர்செய்தல் வேண்டுமோ? (எ-று.)-அவ்வளவோடு அன்றையதினத்துப்போர்முடிந்தது என்க (242)*

***9.-சூரியாஸ்தமனவருணனை.***

**பாரவாளினுங் கூரவேலினும் பகழிவாயினும் பட்டபட்டபோர்**
**வீரர்வானின்மேல்வழிநடத்தலான்மெய்தளர்ந்துவேதனைமிகுத்தபின்**
**சேரநீருநும்பாடியெய்துவீர்செருவினொந்ததிச்சேனையென்றுபோ**
**யாரவாரநீடாழியெய்தினானாழியொன்றுடைத்தேரருக்கனே.**

*(இ-ள்.) பார வாளின்உம்-பெரிய வாள்களாலும், கூரவேலின்உம் - கூர்மையையுடைய வேல்களாலும், பகழி வாயின்உம்-*
*அம்புநுனிகளாலும், பட்ட பட்ட - மிகுதியாக இறந்த, போர் வீரர்-யுத்தவீரர்கள், வானின்மேல் - ஆகாயத்திலே [வீரசுவர்க்கத்தை நோக்கி] வழி நடத்தலான்-(தன் மண்டலத்தைப்பிளந்துகொண்டு அதன்) வழியே செல்லுதலால், ஆழி ஒன்று உடை தேர் அருக்கன் - ஒற்றைச்சக்கரத்தையுடைய தேரையுடைய சூரியன், மெய் தளர்ந்து-(தன்) வடிவந்தளர்ச்சிபெற்று, வேதனை மிகுத்த பின் - துன்பத்தைமிகுதியாகப்பெற்றபின்பு, (இருதிறத்தாரையும்நோக்கி), 'சேர - ஒருசேர, நீர்உம் - நீங்களும், நும் பாடி எய்துவீர் - உங்கள் படைவீட்டை அடையுங்கள்: இ சேனை-,செருவில் நொந்தது-போரில் வருந்திற்று,' என்று-என்று (சொல்லியவன், போல), போய்-, ஆராவாரம் நீடு ஆழி எய்தினான் - பேரொலி மிகுந்த (மேல்) கடலைச் சேர்ந்தான் [அஸ்தமித்தான்]; (எ - று.)*

***தன்மைத்தற்குறிப்பேற்றவணி.*** *கீழ் முதற்போர்ச்சருக்கத்தில்" உம்பர், வானிலடைந்த வயவருக்கு வழியாயசுடர்மண்டலம்" என்றது காண்க. நீரும், உம்மை - 'நானும் என்னிடத்தை அடைவேன்' என்பதை உணர்த்தலால், எதிரதுதழுவியஎச்சம்* ***பி - ம்:*** *பேர்வீர வானின்மேல். (243)*

***10.-மறுநாள்சூரியோதயவருணனை.***

**வெங்க ளந்தனிற் பகன்ம லைந்தபோர் மெய்வி டாய்கெடக் கைவிடாதுபோய்த்**
**திங்க ளின்குலத் திருவர் தம்பெருஞ் சேனை மன்னரும் பாடி யெய்தினார்**
**இங்க ளந்தவா றப்பு றத்துவா னெல்லை தானளந் திந்த மன்னவர்**

***தங்கள் வெஞ்சமங் காண மாமணிச் சயில மெய்தினான்***
***றபனன் மிளவே.***

*(இ-ள்.) திங்களின் குலத்து - சந்திரகுலத்திலே (பிறந்த), இருவர்தம் - இருதிறத்தாரது, பெரும் சேனை - பெரிய சேனையில் (உள்ள), மன்னர்உம் - அரசர்களும்,-வெம் களந்தனில் பகல் மலைந்த போர் மெய் விடாய் கெட - கொடிய போர்க்களத்திலே பகல்முழுவதும் (தாம்) செய்த போரிலாகிய உடலில்தோன்றிய களைப்புத் தணிய, கைவிடாது போய்-தொடர்ச்சியாகச்சென்று, பாடி எய்தினார் - (தங்கள்) படைவீட்டையடைந்தார்கள்; தபனன்-சூரியன், இங்கு அளந்த ஆறு - (பூமிமத்தியிலுள்ள மகாமேருமலையின் தென்திசையாகிய) இப்பக்கத்தை(ப் பகலில் தான் செல்லுதலால்) அளந்ததுபோலவே, அ புறத்து வான் எல்லை தான் அளந்து - (அம்மலையின்) வடபுறத்திலுள்ள ஆகாயஎல்லையை (இராத்திரியில்) தான் அளவிட்டு, மீள- பின்பு, இந்த மன்னவர் தங்கள் வெம் சமம்காண - இவ்வரசர்களது கொடிய போரைப் பார்ப்பதற்கு, மா மணி சயிலம் எய்தினான் - சிறந்த இரத்தினங்களையுடைய உதயகிரியை அடைந்தான் [உதித்தான்;] (எ-று.)*

***பயன்தற்குறிப்பேற்றவணி,*** *நிலத்தில்நடக்கும்போரை அச்சமும் வருத்தமுமின்றிக் காண்பதற்கு உயர்ந்த இடத்திலிருத்தல் இனிதாகுதலால், 'சமங்காணச் சயிலமெய்தினான்' என்றார்; இங்கே "குன்றேறி யானைப்போர்கண்டற்றால்" எனத் திருக்குறளிற் கூறியதைக் காண்க. உதயகிரியில் சிந்தூர அருவிவீழ்ந்த சிந்தூராகரத்திற் சிறந்தமாணிக்கம் பிறத்தலால், அம்மலை 'மாமணிச்சயிலம்' எனப்பட்டது. சூரியன் ஒவ்வொருநாளும் மேருமலையைச் சுற்றிவருகிறா னென்றும், அவன் அம்மலையின் தென்புறத்தில் விளங்குங்காலம் நமக்குப் பகலும், வடபுறத்திலிருக்குங் காலம் நமக்குஇரவு மாகிறதென்றும், இவ்வாறே பகலிரவுகள் வடபுறத்திலுள்ளார்க்கு மாறுபடக்ககாணு மென்றும் நூற் கொள்கை; அதுபற்றி 'இங்களந்தவா றப்புறத்துவானெல்லை தானளந்து' என்றார். (244)*

***ஏழாம்போர்ச்சுருக்கம் முற்றிற்று.***

-------------

## *எட்டாம்போர்ச்சருக்கம்.*

### *1,-கடவுள்வாழ்த்து.*

**பூத்த நாபியந் தாமரைப் பூவில் வந்துபல் பூதமுஞ்**
**சேர்ந்த நான்முகப் புனிதனு முனிவர் யாவருந் தேவரும்**
**ஏத்த நாலுவே தங்களுந் தேட நின்றதா ளெம்பிரான்.**
**பார்த்தன் மாமணித் தேர்விடும் பாக னானதெப் பான்மையே.**

*(இ-ள்.) நாபி - (தன்னுடைய) கொப்பூழிலே, பூத்த - உண்டான, அம்- அழகிய, தாமரைப்பூவில்-, வந்து - பிறந்து, பல் பூதம்உம் - பலவகைப்பிராணிவர்க்கங்களையும், சேர்த்த-படைத்த, நால்முகம் புனிதன்உம்- நான்கு முகங்களையுடைய பரிசுத்தருண முள்ளவனான பிரமதேவனும், முனிவர் யாவர்உம் - இருடிகளெல்லோரும், தேவர்உம் - தேவர்களெல்லோரும், ஏத்த - துதிக்கவும், நாலு வேதங்கள்உம் தேட - நான்குவேதங்களும் (உண்மைகாண மாட்டாமல்) ஆராய்ந்துதேடவும், நின்ற - பொருந்தின, தாள் - திருவடிகளையுடைய, எம் பிரான் - நமக்கெல்லாம்தலைவனான திருமால் பார்த்தன்மா மணி தேர் விடும் பாகன் ஆனது - அருச்சுனனது சிறந்த அழகிய தேரைச்செலுத்தும்சாரதியானது, எ பான்மைஏ - எத்தன்மையோ? (எ - று.)*

*பிரமன்முதலிய தேவர்களெல்லோருக்கும், முனிவர்களெல்லோருக்கும், வேதங்களுக்கும் பலநாளாகப் புகழ்ந்து தேடிப்பார்க்கவும் காணவெண்ணாத கழலிணைகளையுடைய கடவுள், அந்தப் பரத்துவத்தை இருந்ததுதெரியாதபடி விட்டு மனிதர்களிலொருவனான அருச்சுனனுக்குத் தேர்செலுத்தும் ஆளாக அமர்ந்த சௌலப்பியம் எத்தன்மைத்து எனக் கூறி வியந்து அதில் தமக்கு உள்ள ஈடுபாட்டை ஆசிரியர் விளக்குகிறார். வேதங்களால்இன்ன முந்தேடிக் காணவொண்ணாமை*

*அவ்வேதத்திலேயேகூறியுள்ளது. நாபீ, பூதம் - வடசொற்கள், யாவரும் - மத்திமதீபம். ஈற்று ஏகாரம் - வியப்பை விளக்கும்.*
*இதுமுதல் ஒன்பதுகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ் சீரும் மாச்சீர்களும், மற்றையவை விளச்சீர்களு மாகிய* ***அறுசீராசிரியவிருத்தம்.*** *(245)*

*2.-தருமபுத்திரன் சேனையோடு போர்க்களங்குறுதல்.*

***நெருநலிப்பெருஞ்சேனையோநிலைதளர்ந்ததச்சேனையைப்***
***பொருநிலத்தினிற்புறமிடப்பொருதுமென்றுறக்கருதியே***
***வருநிலத்தெழுந்தூளியால்வானயாறுநீர்வற்றவுந்***
***தருநிலத்துளோர்காணவுந்தருமன்வந்தனன்சமரிலே.***

*(இ-ள்.) 'இ பெரு சேனைஓ - (நமது) இந்தப் பெரியசேனையோ, நெருகல் -நேற்று, நிலை தளர்ந்தது - வலிமைநிலை தளர்ச்சியடைந்தது; (ஆதலால் இன்றைக்கு), பொரு நிலத்தினில்- போர்செய்யுமிடத்திலே, அ சேனையை புறம் இட பொருதும் - எதிர்ப்பக்கத்துச் சேனையை முதுகுகொடுக்கும்படி போர்செய்து அழிப்போம்,' என்று உற கருதி - என்று மிகுதியாக எண்ணி,- தருமன்-யுதிட்டிரன்,- வரு நிலத்து எழும் தூளியால் வானம் யாறு நீர் வற்றஉம்-(தன்சேனைகள்) வருகிற பூமியினின்று மேற்கிளம்பும் புழுதிகள் போய்ப்படிதலால் ஆகாசகங்காநதி நீர் வறளவும், தரு நிலத்துஉளோர் காணஉம்-(கற்பக) விருக்ஷங்களையுடைய சுவர்க்கலோகத்திலுள்ள தேவர்கள் (வானத்தில்வந்துபோர்) காணவும், சமரில் வந்தனன்-போர்செய்ய வந்தான்; (எ-று.)*

*கீழ் ஏழாம்போர்ச்சருக்கத்திலே அத்தினத்தில் இருதிறத்துச் சேனையும் வெற்றி தோல்வி அடைந்தது கூறாமல் சமமாக இருந்ததுபோலக் கூறி முடித்த ஆசிரியர், இங்குப்பாண்டவசேனை அந்நாளில் தோற்றதாகவும், கௌரவசேனை வென்றதாகவும் கூறியதனால், இத்தன்மையை அங்கே கூட்டிக்கொள்க. இவ்வாறு கவிகள் எங்கேனும் ஓரிடத்தில் கூறியதை ஏற்றவிடத்துப் பொருத்திக் கொள்ளவேண்டும் மரபைப் பலகாவியங்களிலும் காணலாம். இச்செய்தியை அங்குக்கூறாமல்விட்டது. இங்குக்கூறுவோ மென்ற கருத்தினாலே ஆதல்வேண்டும்: இது- முப்பத்திரண்டுவகை யுத்திகளுள்* ***'உரைத்தும்'*** *என்றதன்பாற் படும். ஏழாநாளில் கௌரவசேனை வென்றது. அடுத்தகவியிலுங் கூறப்படும் இனி, இத்தனைநாளில் பாண்டவர்கள் போரில்மேம்பட்டு நின்றதுபோல்அல்லாமல் ஏழாநாள் இருதிறத்தாரும் ஒருநிகராகஇருந்ததே துரியோதனாதியர் வென்றதாகக் கூறியதெனின் ஏற்கும். பொருநிலம்-போர்க்களம். மூன்றாமடி-* ***உயர்வுநவிற்சி.***

*(246)*

*3.-இருதிறத்தாரும் சேனையை வியூகம் வகுத்தல்.*

***வென்றுபோனபோர்மேன்மையால்விலோதனப்பணிக்காவலன்***
***இன்றும்வேறுமென்றக்களத்தெண்ணில்சேனையோடெய்தினான்***
***துன்றுகங்கையின்றிருமகன்றூசியூகமுந்துளபமால்***
***வென்றிகூர்பெருஞ்சகடமாம்வெய்யயூகமுஞ்செய்யவே.***

*(இ-ள்.) விலோதனம்-கொடியிலே, பணி-பாம்பையுடைய, காவலன்- துரியோதனராசன், போர் வென்று போன மேன்மையால் - (ஏழாம்நாட்) போரில் (எதிரிகளைத் தாம்) சயித்துப்போன சிறப்பினால், இன்றுஉம் வேறும் என்று - இன்றைத்தினமும் (நாம்) சயிப்போ மென்று கருதி, அ களத்து' - அந்தப் போர்க்களத்திலே, எண் இல்சேனையோடு-அளவில்லாத சேனைகளுடனே, எய்தினான் - வந்து சேர்ந்தான்; (அங்கு), துன்று கங்கையின் திரு மகன்- (சேனாதிபதியாகப்) பொருந்தின கங்காநதியின் சிறந்த புத்திரனான வீடுமன், தூசியூகம்உம்- (தம்சேனையைக்கொண்டு) தூசியென்னும் வியூகத்தையும், துளபம் மால் - திருத்துழாயையுடைய கண்ணபிரான், வென்றி கூர் பெரு சகடம் ஆம் வெய்ய யூகம்உம் - (தம்சேனையைக்கொண்டு) வெற்றி மிகுதற்குக் காரணமானபெரியவண்டிவடிவமான கொடியவியூகத்தையும், செய்ய-வகுக்க -(எ- று.)-*

*"வலம்புரிதாரினான் வீமனைவளைத்துவந் தெதிர்திளைத்தனன்" என அடுத்த கவியோடு குளகமாகத் தொடரும். செய்ய எய்தினான் என இப்பாட்டிலேயே முடித்தலுமாம்.*

*தூசிஎன்ற சொல்லுக்கு-குதிரையென்று ஒருபொருள் உள்ளதனால், 'அசுவவியூகம்' என்று ஒருவியூகம் அமைத்ததாகப் பொருள்காணலாம்: எட்டாம்வாளில்வீடுமன் கூர்மவியூகம் வகுத்ததாகவும், திருஷ்டத்யுமநன் ஸ்ருங்காடக [நாற்சந்தி] வியூகம் வகுத்ததாகவும் வியாசபாரதத்திலுள்ளது. வேறும்என்று-வெல்வொமென்று வீரவாதஞ்செய்து என்றுமாம். **பி-ம்** : சூசியுகமும்.*

### *4.- துரியோதனன் வீமனோடுபொரத் தம்பிமாருடன் வளைத்துவந்து நெருங்குதல்.*

**தொலைவிலங்கழற்றுணைவரேதுணைவராகவெஞ்சூறைபோற்**
**கொலைவிலங்கையன்பிறைமுகக்கூரவாளியன்றேரினன்**
**மலைவிலங்குதோள்வீமனைவளைத்துவந்தெதிர்திளைத்தனன்**
***தலைவிலங்கலுக்கரசெனத்தகும்வலம்புரித்தாரினான்.***

*(இ-ள்.) தலை விலங்கலுக்கு-(எல்லா மலைகளிலும்) சிறந்த இமயமலைக்கும், அரசு என தகும் - அரசனென்று சொல்லத்தக்க, வலம்புரி தாரினான் - நஞ்சாவட்டைப்பூமாலையையுடைய துரியோதனன்,-கொலை வில் அம் கையன் - கொல்லுதலைச்செய்யும் வில்லையேந்திய அழகிய கையையுடையவனும், பிறை முகம் கூரவாளியன் - பிறைச்சந்திரன்போல நுனியமைந்த கூர்மையையுடைய (அர்த்த சந்திர;) பாணங்களை யுடையவனும், தேரினன் - தேரின்மேல் ஏறியவனுமாய்,-தொலைவு இல் அம் கழல் துணைவர்ஏ துணைவர் ஆக - தோல்வியில்லாத அழகிய வீரக் கழலையுடைய (தன்) தம்பிமார்களே சகாயராய்வர், வெம் சூறை போல் - கொடிய சுழல்பெருங்காற்றுப் போல, மலை விலங்கு தோள் வீமனை வளைத்து - மலையும் (எதிராகாமல்) விலகும்படியான [மிகவலிய] தோள்களையுடைய வீமசேனனைச் சூழ்ந்து, எதிர்வந்து திளைத்தனன்- எதிரில்வந்து நெருங்கினான்; (எ-று.)*
*இப்பாட்டில், அடிகளைப் பொருளுக்கு ஏற்றவிடத்தில எடுத்துக்கூட்டியது- **அடிமறிமாற்றுப்பொருள்கோள்** . இனி, இரண்டாம் அடியை வீமனுக்கு அடைமொழியாகக் கொள்ளினும் அமையும், இமயமலைக்குத் தென்புறத்ததாகிய பரதகண்டம் முழுவதையும் அரசாண்டவனென்ற கருத்தை, மலையரசனாகிய இமயத்துக்குத் தலைவனென்று விளக்கினார். இனி, (தைரியத்தில்) இமயமலை போல்பவனெனினுமாம். விலங்கலுக்கரசு மேருமலையென்பாரு முளர். விலங்கல்- ஒருபுறத்தே விலகியிருப்பதெனக் காரணக்குறி.*

### *5.-இதுவும் அடுத்த கவியும்-துரியோதனன்தம்பிமாரில் எண்மரை வீமன் கொன்றமையைக் கூறும்.*

***தும்பிமேன்மதத்திடைவிழுந்தும்பிபோல்விறற்றோன்றலுந்***
***தம்பிமாருமுற்றெய்தவெஞ்சாயகங்கண்மெய்தைக்கவே***
**வெம்பிவீமனுந்தன்சரம்விண்டலத்திலிவ்வேந்தனுக்**
**கெம்பிமாரிலின்றெண்மர்போயிடம்பிடிக்கவென்றேவினான்.**

*(இ-ள்.) தும்பி மேல் - யானையின்மேலுள்ள, மதத்திடை- மதசலத்திலே, விழும் - (கூட்டமாக வந்து) விழுந்து மொய்க்கிற, தும்பி போல் - வாண்டுகள் போல,விறல் தோன்றல்உம் தம்பிமார்உம் உற்று - வலிமையையுடைய துரியோதனராசனும்[அவனது] தம்பிமார்களும் (வீமனை) நெருங்கி, எய்த - பிரயோகித்த,வெம்சாயகங்கள் - கொடிய அம்புகள், மெய் தைக்க-(தன்) உடம்பிற்பட,-வீமன்உம்- வீமசேனனும், வெம்பி - கோபம்கொண்டு, எம்பிமாரில் எண்மர் இன்று விண்தலத்தில போய் இ வேந்தனுக்கு இடம் பிடிக்க என்று - 'என்தம்பியரில்எட்டுப்பேர் இன்றைக்கு வீரசுவர்க்கத்திற்சென்று (பின்பு வரும்) இத்துரியோதனனுக்காக அங்கு இடம் அமைத்து வைப்பார்களாக' எனக்கூறி, தன் சரம் ஏவினான் - தன் அம்புகளை (அவர்கள்மேல்) செலுத்தினான்; (எ-று.)*

*தும்பி - வண்டின் சாதிபேதம், யானைமதத்தில் மொய்க்கிற வண்டுகள் - வீமன்மேல் ஒருங்கு நெருங்கிய துரியோதனாதியர்க்காயினும், அவர்களம்புகளுக்காயினும் உவமையாம். அவர்களும் அம்புகளும் அவனை மிகுதியாகவருத்தமாட்டாமையையும் அவற்றை வீமன் சிறிதும் மதியாத மேன்மையையும் இவ்வுவமை விளக்கும். துரியோதனனுக்குத் தம்பியர் வீமனுக்கும் தம்பியரே யாதலால், 'எம்பிமார்' என்றான். எண்மர்பெயர். அடுத்த கவியிற் கூறப்படும். தமக்குத்தலைவனான அரசன் ஓரிடத்திற்குச் செல்லுதற்கு முன்னமே அவனைச்சேர்ந்தவர்கள் தாம் சென்று இடமமைத்தல் இயல்பு; அத்தன்மையை இங்கே வீமன் பகைவர்க்குச் சமத்காரமாகக் கூறினான். இடமமைக்க என்னாது, இடம்பிடிக்க என்றது - அப்பொழுது போரில் அளவில்லாமல் மேல்மேல் இறக்கிற வீரர்களால் சுவர்க்கம் இடம்நெருங்கியிருக்கு மென்பது பற்றி யென்க. இங்ஙனம் கூறியதனால், துரியோதனனைத் தான் விரைவில் தவறாதுகொல்லுதல் உணர்த்தப்பட்டது.*
*(249)*

***6. முந்தவன்றுசென்றாசுகன்மைந்தனாசுகமூழ்கவே***
***சுந்தரன்விசாலக்கணன்வீரவாசிபௌதுண்டனு***
***மந்தமாமகோதரனுடன்மாகவிந்துவுமபயனுஞ்***
***சிந்தினார்களந்தன்னிலாதித்தகேதுவுஞ்சேரவே.***

*(இ-ள்.) அன்று - அப்பொழுது, ஆசுகன் மைந்தன் - வாயுகுமாரனான வீமனது, ஆசுகம் - அம்புகள், முந்த சென்று - விரைவாகப் போய், மூழ்க - (அவர்களுடம்பில்) அழுந்த,- சுந்தரன்-, விசாலக் க(ண்)ணன்-, வீரவாசி-, பௌதுண்டனும்-, அந்த-, மா-பெரிய, மகோதரனுடன்-, மாகவிந்துவும்-, அபயனும்-ஆதித்தகேதுவும்-, [இப்பெயர்கொண்ட துரியோதனன்தம்பிமார் எண்மரும்]. சேர- ஒருசேர, களந்தன்னில்- போர்க்களத்திலே, சிந்தினார் - உயிர்நீத்தார்கள்; (எ-று.)*

*சிந்தினார் என்று சொன்னது - **மங்கலவழக்கு.** சுநாபன், விசாலாக்ஷன், பஹ்வாசீ, பண்டிதன், மகோதரன் குண்டதாரன், அபராஜிதன், ஆதித்யகேது என இவர்கள்பெயர் வியாசபாரதத்திற் கூறப்பட்டுள்ளது. சுநாபன் சுந்தரன் என்பனவும், விசாலாஷன் விசாலக்கண்ணன் என்பனவும், பஹ்வாசீ வீரவாசி என்பனவும், அபராஜிதன் அபயன் என்பனவும் காரணப்பெயர்களாகக் கருதுமிடத்துப் பெரும்பாலும் பொருளில் ஒற்றுமைப்படும் மகோதரன்=மகா உதர அன் - பெருவயிறுடையான், ஆதித்ய கேது - சூரியக்கொடியுடையவன். பௌதுண்டனும்என்றவிடத்து 'பண்டிதனுமே' எனப் பாடங்கொள்ளலாம். குண்டதாரன், மாக விந்து என்றவை-ஒற்றுமைப்படவில்லை. மூன்றாம் அடியின் முதலில், மந்தம் ஆம் எனப்பிரித்து - மந்த புத்தியுடைய எனப் பொருள் கொள்ளலுமாம். ஆசுகன் - விரைந்து செல்பவன்; வாயு: ஆசுகம்-விரைந்து செல்வது;பாணம்: வடசொற்கள். அன்று முந்தச்சென்று - அப்பொழுது (அவர்கள் போருக்கு)முற்பட வந்து எனினுமாம். (250)*

*7.-தம்பிமாரெண்மர் இறந்ததுகண்ட வருத்தத்தோடு துரியோதனன் வீடுமனைக் குறுகுதல்.*

***அற்றகந்தரமுயிரினோடந்தரம்புகத்துள்ளவு***
***மிற்றபேருடம்பவனிமேலெடுத்தவில்லுடன்வீழவு***
***முற்றதம்பியர்மாய்தல்கண்டுள்ளுடைந்துபோயுரனுடைக்***
***கொற்றவன்பெருங்குருகுலக்குரிசினின்றுழிக்குறுகினான்.***

*(இ-ள்.) அற்ற கந்தரம் - (வீமனால்) அறுபட்ட கழுத்து (தலை), உயிரினோடு- உயிருடனே, அந்தரம் புக - ஆகாயத்திலே பொருந்த, துள்ளஉம்- எழும்பிக்குதிக்கவும், இற்றபேர் உடம்பு-(தலை)போன பெரிய உடம்பு, எடுத்த வில்லுடன் -(கையிற்) பிடித்த வில்லுடனே, அவனி மேல் வீழ உம் - தரையிலே விழுந்திடவும்,உற்ற தம்பியர் மாய்தல் - மனமொத்த (தன்) தம்பிமார் இறத்தலை, கண்டு-, உரன்உடை கொற்றவன் - வலிமையையுடைய வீரனான துரியோதனன், உள்உடைந்துபோய் - மன மழிந்து, குருகுலம் பெரு குரிசில் நின்ற உழி-குருகுலத்துப் பெரிய அரசனான வீடுமன் நின்றவிடத்தில், குறுகினான் - சேர்ந்தான்.*

*கந்தரம் - தலையைத் தரிப்பது; கம் - தலை: கழுத்தின் பெயர் இங்கே தலைக்கு இலக்கணை. (251)*

*8.- இதுவும், மேற்கவியும்-ஒருதொடர்: துரியோதனன் வீடுமனிடம் சிலகூறிப் புலம்பலைத் தெரிக்கும்.*

***தன்பிதாமகன்செய்யதாடனதுமௌலிமேல்வைத்துநின்***
***றுன்பிதாவின்மேலன்பினாலுலகமும்பியர்க்குதவுவா***
***யென்பிதாவுநீயாயுநீயென்றிருந்தனனெம்பிமார்***
***முன்பிதாமருத்தென்னுமம்முதல்வனான்முடிவெய்தினார்.***

*(இ-ள்.) (துரியோதனன்), தன் பிதாமகன்-தனது (பெரிய) பாட்டனான வீடுமனது, செய்ய தாள் - சிவந்தபாதங்களை, தனது மௌலிமேல் வைத்து - தனது தலையின்மேல் சூடி [வணங்கி], நின்று - (அருகில்) நின்று, (அவனைநோக்கி), 'உன் பிதாவின் மேல் அம்பினால் - உனதுதந்தையினிடத்து அன்பினாலே, உலகம் - இராச்சியத்தை, உம்பியர்க்கு - உன் தம்பிமார்களுக்கு, உதவுவாய் - கொடுத்தவனே! என் பிதாஉம் நீ - எனக்குத் தந்தையும் நீயே; யாய்உம் நீ - என்தாயும் நீயே, என்று இருந்தனன் - என்றுகருதியிருந்தேன்; (இப்படியிருக்கையில்), எம்பிமார் - என்தம்பியர், முன் பிதா மருத்து என்னும் அ முதல்வனால் - முன்னே (இவனைப்) பெற்றதந்தை வாயு வென்று கூறப்படுகிற அந்தப்பெரியவீமனால், முடிவு எய்தினர் - அழிவையடைந்தார்கள்; (எ - று.)-இப்பாட்டில், வைத்துநின்று' என்பதற்கு. அடுத்தபாட்டில் "வேந்தர் வேந்து" - எழுவாய். வைத்துநின்று "என உரைசெய்தான்" என்க.*

*இரண்டாமடியில், உன்பிதாஎன்றது-சந்தனுவையும், உம்பியர் என்றது- சித்திராங்கதனையும், விசித்திரவீரியனையுங் குறிக்கும். முதல் மனைவியான கங்கை வீடுமனைப் பெற்றுச் சந்தனுவைவிட்டு நீங்கியபின், சந்தனு, செம்படவன் வளர்த்த மகளாகிய பரிமள கந்தியென்பவளைக் கண்டு காமுற்று மணம்பேச, அவள்தந்தை 'மநுநீதிமுறைப்படி மூத்தமனைவியின் குமாரன் அரசாள, என்மகளுக்குப் பிறக்கும் பிள்ளை அரசின்றிக் கீழ்மைப்பட்டிருப்பானாதலால், நான் உனக்கு மகனைக் கொடேன்" என்று சொல்ல அதை அறிந்த பீஷ்மன், தந்தைக்கு மணஞ்செய்வித்தற் பொருட்டு, தான் மணஞ்செய்து கொள்வதில்லை யென்றும், இராச்சியத்தைத் தன் தம்பிக்கே கொடுப்பதாகவும் தேவர்கள் முன்னிலையில் பயங்கரமான சபதஞ் செய்து, அம்மகளைத் தந்தைக்கு மணஞ்செய்வித்து, பின்பு அவளுக்குப் பிறந்த சித்தி ராங்கதன் விசித்திரவீரியன் என்பவர்க்கே முன்னைய வாக்குப்படி அரசாட்சியைக் கொடுத்தானென* ***வரலாறு*** *அறிக. இவ்வாறு தம்பியரிடத்தில் மிகுந்தஅன்புகொண்ட நீ, அவர்களில் ஒருவனுக்குப் பௌத்திரனான என்னை உபேக்ஷிக்கலாமோ? உன் தம்பியர்உனக்குந் அருமையாயிருந்ததுபோல, என தம்பியர் எனக்கும் அருமை*
*யன்றோ? அவர்கள் இறக்கப் பார்த்திருப்பது தகுதியோ? என்ற கருத்துத் தோன்ற இவ்வாறு கூறினான். வீடுமன் முனைந்து போர்செய்திருந்தால் தன் தம்பியர் இவ்வாறு இறந்திரா ரென்ற எண்ணத்தால், இவ்வாறு கூறியது. (252)*

***9. நீவி னைத்தலைச் சேனையின் றலைவ னாகிமுன் னிற்கவே***
***வீவெ னக்குவே றில்லையென் றெண்ணி னேனென வேந்தர்வேந்***
***தோவி யத்தின்மெய் யுணர்வழிந்துள்ள ழிந்துகொண் டுரைசெய்தான்***
***வாவி நித்தில மென்னவே மலர்ந்த கண்கணீர் மல்கவே.***

*(இ-ள்.) 'நீ-, வினைத்தலை - (போர்த்) தொழிலிலே, சேனையின் தலைவன் ஆகி - சேனைத்தலைவனய், முன் நிற்கஏ - முன்னே நிற்பதனால், வேறு வீவு எனக்கு இல்லை என்று எண்ணினேன் - (வாழ்வுக்கு) வேறான அழிவே எனக்கு உண்டாகா தென்று நினைத்திருந்தேன்', என - என்று, வேந்தர் வேந்து - ராஜராஜனான துரியோதனன், ஓவியத்தின் - சித்திரப்பாவைபோல, மெய் உணர்வு அழிந்து - (அதிகசோகத்தால்) உடம்பின் உணர்ச்சி ஒழிந்து, உன் அழிந்துகொண்டு- மனம்*

*வருந்திக்கொண்டு, மலர்ந்த கண்கள் - பரந்த (தன்) கண்களினின்றும், நீர்-, வாவி நித்திலம் என்ன - நீர்நிலைகளில்வெளித்தோன்றுகிற முத்துக்கள்போல, மல்க- நிறைய, உரை செய்தான் - கூறினான்; (எ-று.)*

*என உரைசெய்தான் என இயையும், வாலி - வாபீ: வட சொல், வாவியில் நித்திலம் - சங்கு முதலியவற்றினின்று உண்டாவன; இனி, நித்திலம் என்பதை உவமையாகுபெயராகக் கொண்டு, முத்துப்போலத் தெளிவான குளத்துநீர் கண்ணீர்க்கு உவமையெனினும் அமையும். (253)*

வேறு.

***10.-இதுமுதல் ஏழு கவிகள்-ஒருதொடர்: இவ்வாறு சோகித்துக்கூறிய துரியோதனனுக்கு வீடுமன் கூறுவன.***

***இரங்கனீ சிறிது மைய வெறிபடை யெடுப்ப தியாரும்
உரங்கள்போ யமரிற் சாகா துய்ந்தன ரோட வன்றே
சரங்களா லயிலால் வாளாற் றம்பகை செகுத்துத் தாமுஞ்
சிரங்கள்வே றுடல்கள் வேறாக் கிடப்பதே செல்வ மம்மா.***

*(இ-ள்.) ஐய -ஐயனே! நீ-, சிறிதுஉம் இரங்கல்-கொஞ்சமும் வருந்தாதே; (உலகத்தில்), யார்உம் - எல்லோரும், எறிபடை எடுப்பது - (பகைவர்மேல்) வீசத்தக்க ஆயுதங்களை யேந்துவது, அமரில் - போரில், உரங்கல் போய் சாகாது -வலிமைகள் அழிந்து இறவாமல், உய்ந்தனர் ஓட அன்றே - தப்பிப்பிழைத்தவர்களாய் ஓடிப்போகும் பொருட்டன்று; சரங்களால் - அம்புகளாலும், அயிலால் - வேல்களாலும், வாளால் - வாள்களாலும், தம் பகை செகுத்து - (தம்மால் இயன்றவளவு) தமது பகைவர்களை அழித்து, (தம்மால் இயலாதவிடத்துப் பகைவர்களால் அழிந்து), தாம்உம் சிரங்கள் வேறு உடல்கள் வேறு ஆ கிடப்பது ஏ - தாங்களும் தலைகள் வேறும் உடல்கள் வேறுமாக விழுவதே,
செல்வம் - (வீரர்க்குச்) சிறப்பாம்; (எ-று.)- அம்மா - ஈற்றசை; இவ்வுண்மையை உணராமல் துரியோதனன் துன்பமுற்றதைப் பற்றிய வியப்பை நன்கு விளக்கும் இடைச்சொல்லுமாம்.*

*போரிற் படையெடுத்துச் சென்றால், வெற்றியுந் தோல்வியும் ஒருவர் பங்கன்று; போரிற் பகைவரை வெல்லுதல்போலவே, பகைவரால் இறத்தாலும் வீரர்க்குச் சிறப்பேயா மென்பதாம், பௌத்திரனை 'ஐய' என்றது - மரபுவழுவமைதி, போய் என்ற வினையெச்சம் - சாகாது என்பதில் சா என்ற பகுதியைக் கொள்ளும். கிடப்பதே, ஏ - பிரிநிலை.*

*இதுமுதற் பதினான்கு கவிகள் - ஒன்று நான்காஞ்சீர்கள் விளச்சீர்களும் மற்றவை மாச்சீர்களுமாகிவந்த* ***அறுசீராசிரியவிருத்தங்கள்.*** *(254)*

***11. இருந்தனம்படைத்தமாக்களின்பமுமறனுமஞ்சார்
விருந்தெதிர்சிறிதுமஞ்சார்மேம்படவாழுமில்லோர்
பொருந்தியவிறப்பையஞ்சார்போதமெய்யுணர்ந்தமாந்தர்
அருந்தவமுனிரவரஞ்சாரசருமடுபோரஞ்சார்.***

*(இ-ள்.) இரு தனம் படைத்த மாக்கள்-மிகுந்த செல்வத்தைப்பெற்ற மனிதர்கள்.இன்பம்உம் அறன்உம் அஞ்சார்-(அதைச் செலவழித்துத்தாம்) இன்பமடைதற்கும்(பிறர்க்குத்) தருமஞ்செய்தற்கும் பின் வாங்கமாட்டார்கள்; மேம்பட வாழும்இல்லோர் - மேன்மையாக இல்லறத்தில் வாழ்பவர், விருந்து எதிர் சிறிதுஉம்அஞ்சார்-விருந்தினரை யெதிர்கொள்ளுதற்குச் சிறிதும் பின்னிடமாட்டார்கள்;போதம்மெய் உணர்ந்த மாந்தர்-ஞானத்தால் தத்துவப்பொருள்களை யறிந்தமனிதர்கள், பொருந்திய இறப்பை அஞ்சார்- (இயல்பாகப்) பொருந்தியமரணத்துக்குப் பயப்படமாட்டார்கள்; முனிவர்-இருடிகள், அரு தவம் அஞ்சார்-(செய்வதற்கு) அருமையான*

*தவத்தைச் செய்வதற்கு வருந்தமாட்டார்கள்;(அவ்வாறே), அரசர்உம் அடு போர் அஞ்சார்- அரசர்களும்கொலைக்கிடமானபோர்த்தொழிலுக்கு அஞ்சமாட்டார்கள்; (எ-று.)*

*போதமெய்யுணர்தல் - நிலையாகவுள்ள பொருள்கள் நிலையில்லாத பொருள்கள் என்பவற்றின் தன்மையை உள்ளபடியறிதல்; இதுவே தத்துவஞானம.் -தநம், போதம் - வடசொற்கள். விருந்து- புதுமை; புதியராய்வந்தவர்க்குப் பண்பாகுபெயர். எதிர்-எதிர்கொள்ளுதல்: முதனிலைத்தொழிற்பெயர். ஆறிலுஞ்சாவு நூறிலுஞ்சாவு' என்றபடி பிறந்தவுயிர் எப்பொழுதாயினும் இறத்தல் நிச்சயமாதலால், 'பொருந்தியஇறப்பு' என்றது. அரசர் அடு போரஞ்சாரென்று சொல்லவேண்டிய இடத்து, அப்ரஸ்துதமாகத் தனம்படைத்தார் இன்பமும் போகமுமஞ்சார் முதலிய அஞ்சாமையுடையவரையெல்லாஞ் சேர்த்து 'அஞ்சார்' என்பதைப் பலமுறை கூறியஇது- (* ***சொற்பொருட்பின்வந்ததீபகவணி.)*** *(255)*

***12..     இன்னமொன்றுரைப்பக்கேண்மோவிருசெவிக்கேறாதேனு***
***முன்னரசாண்டவேந்தர்முறைமையிற்சிதைந்ததுண்டோ***
***மன்னவைதன்னினின்றமாசிலாவடமீன்போல்வாள்***
***தன்னிருகண்ணீரின்னமிவைகொலோதருவதம்மா.***

*(இ-ள்.) இரு செவிக்கு ஏறாது ஏன்உம் - (உனது) இரண்டு காதுகளிலும் (ஒப்பாக) நுழையாதாயினும், இன்னம் ஒன்று உரைப்பகேள் - இன்னுமொருசெய்தியை (யான்) சொல்ல (நீ) கேட்பாய்; முன் அரசு ஆண்ட வேந்தர் - (உனக்கு) முன் அரசாட்சி செய்த அரசர் (எவராயினும்), முறைமையில் சிதைந்தது உண்டுஓ-நீதியில் தவறினது உண்டோ? [இல்லையென்றபடி]; மன் அவைதன்னில் - இராசசபையிலே, நின்ற - (முன்புஉன்னால்துச்சாதனனைக் கொண்டு வலியப்பிடித்து இழுத்துவரப்பட்டு) நின்ற, மாசு இலா வடமீன் போல்வாள்தன் - குற்றமில்லாத அருந்ததியை ஒப்பவளான திரௌபதியினது, இரு கண் நீர் - இரண்டுகண்களினின்று பெருகிய நீர், இன்னம்இவை கொல்ஓ தருவது - இனி இத்தீங்குகளைமாத்திரமா விளைப்பது?-(எ-று.)அம்மா - ஈற்றசை. இரக்கப்பொருளதுமாம்.*

*இன்னும் பலதீங்குகளைத்தருமென்றபடி; உனக்கும் மரணத்தையுண்டாக்கு மெனக் குறிப்பித்தவாறாம். இவைகொலோ தருவது, இன்னம் தருவது எனத் தனித்தனிகூட்டி முடிப்பினுமாம். "ஏழை யழுத கண்ணிர் கூரியவாளொக்கும்", "தோற்றத்தாற்பொல்லார் துணையிலர் நல்கூர்ந்தார். மாற்றத்தாற் செற்றாரென வலியார்- ஆட்டியக்கால், ஆற்றா தவரழுத கண்ணீ ரவையவர்க்குக். கூற்றமாய் வீழ்ந்துவிடும்", "அல்லாற்பட்டாற்றாதழுத கண்ணீரன்றே, செல்வத்தைத் தேய்க்கும் படை"என்பன காண்க. மாசு இலா-கற்பு நிலைமையிற் கலங்குதலில்லாத என்க; "கலங்கலில் கற்பினருந்ததி" என்றார் கம்பரும். அருந்ததி-வசிஷ்ட முனிவரது மனைவி, கற்புடையார்பலரினும் இவளுக்கு மேன்மை என்னவெனின்? - நக்ஷத்திரநிலையிலும் கணவனைப் பிரியாதிருக்கை. அதனை இங்ஙனம் அறிக:- வடக்கில் சப்தருஷி மண்டலமென்று (இரண்டாயிரத்தெழுநூறுவருஷங்களுக்கு ஒரு சுற்றுச்சுற்றுகிற) நக்ஷத்திரக்கூட்டமொன்று இருக்கிறது. அதில் நான்குநக்ஷத்திரங்கள் நீண்ட சதுரமாய்ப் பெட்டிப்பண்டிபோலிருக்கின்றன; அவற்றின்முன்புறத்து அடியில் நடுவளைந்த ஏர்க் காலைப்போல மூன்றுநட்சத்திரங்கள் இருக்கின்றன: இவற்றில் நடு நட்சத்திரம் வசிஷ்டநட்சத்திரம், அதனடியிற்கிட்டினதாய் நுட்ப நோக்கினாற் காணப்படத்தக்கதொரு நக்ஷத்திரம் இருக்கின்றது; அதுதான் அருந்ததி நக்ஷத்திரம். வடமீன் - வடக்கில் மின்னுவதெனக் காரணப்பெயர். எதிர்காலங் குறிக்கும் இனியென்னும் இடைச்சொல் - விகாரப்பட்டு, இன்என்று ஆகி, அம் சாரியை பெற்று, இன்னம் என நிற்கும் கேண்மோ, மோ-முன்னிலையசை.*

***13.     கால்வருகவனமான்றேர்க்கன்னனுங்கன்னபாக***
***மால்வருகலுழிவேகமாவலான்சகுனிதானும்***
***நூல்வருபழுதில்கேள்விநும்பியுநீயுமிந்த***
***நால்வருங்குறித்தவெண்ணநாளையேதெரியுமையா.***

*(இ-ள்.) ஐயா - ஐயனே! கால் வரு - காற்றுப்போல (வேகமாக) வருகிற, கவனம் -நடையையுடைய,*

*மான் - குதிரைகளைப் பூட்டிய, தேர் - தேரைச் செலுத்தலில்வல்ல, கன்னன்உம் - கர்ணனும், கன்னம்பாகம்- கன்னங்களினிடத்திலே, மால் வரு - மிகுதியாகவழிகிற, கலுழி-கலங்கல்நீராகிய மதசலத்தையுடைய, வேகம் - உக்கிரத்தன்மையுள்ள, மா - யானையைச் செலுத்துதலில், வலான் - வல்லவனாகிய, சகுனிதான்உம்-, நூல் வரு பழுது இல் கேள்வி - நூற்களிலே பொருந்திய குற்றமில்லாத கேள்விகளையுடைய, நும்பிஉம் நீஉம் - உன்தம்பியான துச்சாதனனும் நீயும், இந்த நால்வர்உம் - இந்த நாலுபேரும், குறித்த - முன்பு எண்ணின, எண்ணம் - தீயசிந்தையின் பயன், நாளைஏ தெரியும் - நாளைக்கே தெரிந்துவிடும்; (எ-று.)-நாளையே தெரியும் - விரைவிலே உங்களுக்கு முழுவதும் அழிவுண்டாமென்றபடி.*

*பெரியோர்கள் பலர் சாஸ்திரங்களிலுள்ள நீதிகளை எடுத்துச் சொல்லக்கேட்டும் இயல்பான துர்க்குணத்தை விடாத இழிவு தோன்ற, 'நூல்வருபழுதில் கேள்வி நும்பியும் நீயும்' என்றார்; இனி, இகழ்ச்சியுமாம். முன்னிலையோடு படர்க்கையை உளப்படுத்தி முன்னிலையாக முடியாமல் 'நால்வர்' எனப் படர்க்கையாற் குறித்தது.* **இடவழுவமைதி.** *வழாநிலையாயின், 'நால்விர் எனநிற்கும். இவர்கள் குறித்த எண்ணம் - பாண்டவரைப் பலபடியாலும் கெடுத்தல், கால்வரு - கால்களாற் பாய்ந்துவருகிற என்றுமாம். இதைத் தேருக்கு அடைமொழி யாக்கினால், சக்கரம்பொருந்திய என்று பொருள். 'தேர்கண்ணன்' என்றதில், கர்ணன்தேர்ப்பாகன்மகனென்ற இழிவும் தோன்றும். கன்னன்முதலியநால்வர் துஷ்டசதுஷ்டரெனப்படுவர், நாளையே, ஏ - தேற்றம். (257)*

***14. விதுரனும்வெஞ்சொலாற்றன்வில்லினையொடித்துநின்றான்
அதிரதனானாலன்றியங்கர்கோனமரில்வாரான்
முதிர்படைவிசயன்வீமன்மூண்டமர்புரியுங்காலை
யெதிரினிநானுநீயுமல்லதிங்கிலக்குவேறார்***

*(இ-ள்.) விதுரனும்-, வெம் சொல் ஆற்றான் - (உனது) கடுஞ்சொல்லைப் பொறுக்கமாட்டதவனாய், வில்லினை ஒடித்து நின்றான் - வில்லை யொடித்துப் போய்நின்றான்; அங்கர் கோன்-கர்ணன், அதிரதன் ஆனால் அன்றி - (தன்னை) அதிரதனாக வைக்காமற்போனால், அமரில் வாரான் - போரில் வரமாட்டான்: இனி - இனிமேல், முதிர் படை - மிகப்பயின்ற ஆயுதங்களையுடைய, விசயன் வீமன் - அருச்சுனனும் பீமனும், மூண்டு - கோபத்தோடு வந்து, அமர் புரியும் காலை - போர்செய்யும்பொழுது, எதிர் - (அவர்களை) எதிர்க்கவல்லவர், நான்உம் நீஉம் அல்லது - நாம் இருவருமே யல்லாமல், இங்கு - இந்தப்பக்கத்தில், இலக்கு வேறு ஆர் - (அவர்களுக்கு எதிர்க்கும்) குறியாய்நிற்பவர் வேறுயாவர்? [எவருமில்லையேன்றபடி]; (எ-று.)*

*அருச்சுனனையும் வீமனையும் ஒருங்கே எதிர்க்கும் வல்லமை யுடையானென்று தன்னாற் கருதப்பட்ட விதுரனும், அவ்வாறே
துரியோதனனாற் கருதப்பட்ட கர்ணனும் உதவாமற்போனதைக் கூறினான். நின்றான்-இங்கு வாராதுநின்றான் என்க. இனி-வராதபின்பு என்றபடி. (258)*

***15. புரிந்தறம்வளர்க்குநீதிப்பொய்யிலாமெய்யனங்கே
செருந்தவிழ்துளபமாலைத்திருநெடுமாலுமங்கே
அருந்திறலமரிற்பொன்றாதங்கிருந்தவரையிங்கும்
இருந்தவர்காண்பதல்லால்யார்கொலோவிறக்கலாதார்.***

*(இ-ள்.) புரிந்து-விரும்பி, அறம்-தருமத்தை, வளர்க்கும்-விருத்திசெய்கிற, நீதி-நியாயத்தையுடைய, பொய் இலா மெய்யன் - பொய்யில்லாத மெய்ம்மையையுடைய, யுதிட்டிரன், அங்கே - அப்பக்கத்திலே (உள்ளான்); செருந்துஅவிழ்-வாசனை வீசப்பெற்ற, துளபம் மாலை- திருத்துழாய்மாலையையுடைய, திருநெடு மால்உம்- சிறந்த பெரிய கண்ணபிரானும், அங்கே - அப்பக்கத்திலே (உள்ளான்); (ஆதலால்), அரு திறல் அமரில்-அருமையான வலிமையாற் செய்யும் போரில், பொன்றாது - இறவாமல், அங்கு இருந்தவரை - அப்பக்கத்தில் இருந்தவர்களை, காண்பது அல்லால் - பார்ப்பதேயல்லாமல், இங்குஉம் இருந்தவர் - இப்பக்கத்திலுள்ளவர்களுள், இறக்கலாதார் யார்கொல்ஓ - (இன்னும்) இறக்க மாட்டாதவர் யாவர்உளர்? (எ-று.)*

*அப்பக்கத்தில் தருமனது சத்தியபலமும் கண்ணனதுதெய்வபலமும் இருத்தலால், பலர் இறத்தலில்லை; இப்பக்கத்தில்உங்கள் தீச்செய்கைப் பயனும், விதுரன் கர்ணன் இவர்களது உதவியின்மையும் இருத்தலால், மற்றும்பலரும் இறத்தல் கூடுமென்றான். செருந்து-தேனும், இதழுமாம்; இச்சொல்லுக்குச் சந்தருப்பத்திற்குஏற்ப இப்பொருள்கள் கொள்ளப்பட்டன. 'திருந்தவிழ்' என்ற பாடம்பொருத்தம். இங்கும்-உம்-இசைநிறை. மாலும்-,உம் - இறந்ததுதழுவிய எச்சத்தோடுஉயர்வுசிறப்பு. மெய்க்கு 'பொய்யிலா' என்ற அடைமொழி கொடுத்தது, அதன்எப்பொழுதுந் தவறாத உறுதிப்பாட்டை உணர்த்தும். (259)*

***16. விடுகநீகவலவேண்டாமேலுனக்குறுதிசொன்னேன்***
***முடுகவாளமரிற்சென்றுமுனைமுனைந்தாரையின்றே***
***யடுகமற்றென்றிலொன்றிலாங்கவர்தங்கள்கையாற்***
***படுகவாவென்றுதேர்மேற்சென்றனன்பரிதிபோல்வான்.***

*(இ-ள்.) நீ-, கவல வேண்டா - கவலைப்படவேண்டாம்; விடுக -*

*(அக்கவலையை)ஒழித்துவிடுவாயாக; மேல்-இனி நடக்க வேண்டிய காரியத்துக்கு, உனக்கு-, உறுதிசொன்னேன்-உறுதி மொழி கூறுகிறேன்: வாள் அமரில் - ஆயுதங்களைக்கொண்டு செய்யும் போரிலே, முடுக சென்று - விரைவாகப்போய், முனை முனைந்தாரை. -அப்போர்க்களத்திலே போர்செய்தவர்களை இன்றே அடுக - இப்பொழுதேகொல்வோமாக; (அல்லது), ஆங்கு - அவ்விடத்து (அப்போரில்), அவர் தங்கள்கையால் படுக - அப்பகைவர்களது கையால் இறப்போமாக; வா - (புறப்பட்டுப்போர்*

*செய்ய நீ) வா, என்று - என்றுசொல்லி, பரிதி போல்வான் - சூரியன்போல் விளங்குபவனான வீடுமன், தேர்மேல்-, சென்றனன்-(போருக்குப்) போனான்; (எ- று.)-இப்பாட்டின் மூன்றாமடியிலுள்ள 'ஒன்றில்' என்றசொல் இரண்டும் - விகற்பப்பொருளன; ஒன்றில், போர்செய்து பகைவரைக்கொல்வோம்; ஒன்றில், போரில் அவர்களால் இறப்போம் என்க. மற்று - வினைமாற்று.*

*இங்ஙன் ஒன்றற்குமாறான இருதொழிலை ஒத்தவலிமையுடையனவாக வைத்துக்கூறுவது* ***விகற்பாலங்கார*** *மெனப்படும். வேண்டாம் எனவும் பிரிப்பர். சொன்னேன் - இயல்புபற்றி நிகழ்காலம் இறந்தகாலமான வழுவமைதி.* ***பி-ம்*** *: முன்முனைந்தாரை.*

***17.அப்போது கடோற்கசன் மாயையாற் பல வடிவுகொண்டு பகைஞரை மாய்த்து வருதல்.***

***காயிருங்களிற்றின்மேலான்கடோற்கசக்காளைதானோர்***
***ஆயிரம்வடிவாய்முந்தியரசர்பேரணியையெல்லாந்***
***தோயிருட்பிழம்போடுற்றசோனையம்புயலிற்றோன்றி***
***மாயிருவிசும்பிற்றாராகணமெனமாய்த்துவந்தான்.***

*(இ-ள்.) (அப்பொழுது), கடோற்கசன் காளை - கடோற்ககசனாகிய (வீம) குமாரன், தான்-,-காய் இருங் களிற்றின் மேலான் - கோபிக்குந்தன்மையுள்ள பெரியஒரு ஆண்யானையின்மே லேறியவனாய், தோய் இருள் பிழம்போடு உற்ற சோனை அம் புயலின் தோன்றி - திரண்ட இருளின் தொகுதியோடு பொருந்திய விடா மழைபொழியும் அழகியகாளமேகம்போல விளங்கி, ஓர் ஆயிரம் வடிவு ஆய் முந்தி-(மாயையாற்) பலவடிவங்கொண்டு வந்து, மா இருவிசும்பில தாரா கணம் என - மிகப்பெரிய ஆகாயத்திலே பொருந்திய நட்சத்திரங்களின் கூட்டம்போல் (மிகுதியாக அடர்ந்துள்ள), அரசர் பேர் அணியை எல்லாம்-பகையரசர்களது பெரிய சேனைகளையெல்லாம், மாய்ந்து வந்தான் - அழித்துக்கொண்டு வந்தான்; (எ-று.)*

*கரியயானையின்மேல் வந்த கடோற்கசனக்கு இருளினோடு பொருந்திய காளமேகம்உவமை. மழைபொழி காளமேகம் நட்சத்திரங்களை மறைப்பது போல, யானையோடுவந்த கடோற்கசன் பகைவர்சேனைகளை ஒழித்தன னென்க. மாயிரு - ஒருபொருட்பன் மொழி; உரிச்சொற் புணர்ச்சி: "மாமுன் உயிர்வரின் யகரமெய் தோன்றும்". தாராகணம் - வடசொற்றொடர். (261)*

*18.-ஒருபுறத்தில் இராவான் பலவடிவுகொண்டு பொருதல்.*

***ஒருபுடையிவன்போர்செய்யவொருபுடையுரககன்னி***
***யருளுடைமைந்தனெண்ணிலாயிரமுருவமாகி***
***யிருபுடையினும்போர்வேந்தரெலிகள்போலேங்கியம்பாற்***
***பொருபடையுருண்டுபோகப்பொருவில்வெம்பூசல்செய்தான்.***

*(இ-ள்.) ஒரு புடை இவன் போர் செய்ய-ஒருபக்கத்திலே இந்தக்கடோற்கசன் (இவ்வாறு)போரைச் செய்துகொண்டிருக்க,- ஒரு புடை - மற்றொரு பக்கத்தில், உரக கன்னி அருள் உடைமைந்தான் - நாககன்னிகையாகிய உலூபியினது அன்புள்ளபுத்திரனான இராவான், எண் இல் ஆயிரம் உருவம் ஆகி - அளவில்லாத பல ஆயிரம்வடிவங்கொண்டு, போர் வேந்தர் - போர் செய்யவல்ல அரசர்கள், எலிகள் போல் ஏங்கி-(பாம்பின் முற்பட்ட) எலிகள் போல அஞ்சி வருந்தி, பொரு படை - போர்செய்யும் சேனைகளோடு, இருபுடையின்உம் உருண்டு போக - இரண்டு பக்கங்களிலுஞ் சிதறிப்போகும்படி, அம்பால் - அம்புகளால், பொருவு இல் வெம் பூசல் செய்தான் - ஒப்பில்லாத கொடிய போரைச்செய்தான்.*

*நாககன்னிகைமகனான இவன், தலையின்மேற் படத்தோடு கூடிச் சிறிது பாம்புவடிவம் உடையனாதலால், இவனுக்குமுன் ஒடுங்கின அரசர்களுக்கு எலிகளை உவமைகூறினார்; இங்கே "ஒலித்தக்கா லென்னா முவரி யெலிப்பகை, நாக முயிர்ப்பக்கெடும்" என்ற திருக்குறளை யுணர்க்க, பல எலிகள் கூடி ஆரவாரித்தாலும் ஒருபாம்பினால் எளிதில் அழிதல்போல, பலர் திரண்டு ஆரவாரித்து வந்து இவனொருவனால் அழிவடைந்தன ரென்க.*

*19.-அப்போது பகாசுரன்தம்பி வீமன்மேற் பொரவருதல்.*

***இப்பகன்முடியுமுன்னேயாரையுமுடிப்பனென்னாப்***
***பைப்பகன்மகுடமைந்தன்பலபெரும்படையுமாகி***
***யப்பகலடுபோர்செய்யவன்றமரழிந்துமாய்ந்த***
***மெய்ப்பகனிளவலந்தவீமன்மேல்வெகுண்டுவந்தான்.***

*(இ-ள்.) 'இ பகல் முடியும் முன்ஏ - இந்தப்பகற்பொழுது முடிவதற்கு முன்னே, யாரைஉம் முடிப்பன்- (பகைவர்கள்) எல்லோரையும் அழிப்பேன்', என்னா- என்றுகூறி, பை பகல் மகுடம் மைந்தன் - படத்தையும் ஒளியையுடையகீரிடத்தையு முடைய இராவான், பல பெரு படைஉம் ஆகி - (தான்ஒருவனே மாயையால்) பல பெரிய சேனைகளுமாக வடிவங்கொண்டு, அ பகல் - அன்றைத்தினத்திலே, அடு போர் செய்ய - கொல்லும்போரைச் செய்துகொண்டிருக்க,- அன்று அமர் அழிந்து மாய்ந்த மெய்பகன் இளவல்- முன்னொருகாலத்திலே போரில்(வீமனால்) அழிந்து இறந்த வடிவத்தையுடைய பகாசுரனது தம்பியான (அலம்புசனென்னும்) அரக்கன், அந்த வீமன்மேல் வெகுண்டு - (தன் தமையனைக் கொன்றவனான) அவ்வீமசேனன்மேற் கோபங்கொண்டு, வந்தான் - (பாண்டவசேனையை) எதிர்த்து வந்தான்; (எ-று.)*

*வேத்திரகீயநகரத்தின் புறத்தி லுள்ளதொரு வனத்தில் வசித்துக்கொண்டு, பகாசுரனென்பவன், அவ்வூரிலுள்ள வீடுகளிலிருந்து நாள்தோறும் ஒருவண்டியுணவையும் ஓரிளமகனையும் தனக்கு முறைப்படி திறையாகப்பெற்று உண்டுவாழ்ந்திருந்தான்; இருக்கையில், பாண்டவர்கள் அரக்கு மாளிகையினின்று தப்பியுய்ந்து பிராமணவேடம்பூண்டு குந்தியோடுகூட அவ்வூரில் ஓர் அந்தணன்மனையிற் சென்று தங்கியிருக்க, ஒருநாள் அவ்வீட்டுக்குரிய முறை நேர்ந்தது; நேரவே, தன்மகனுக்கு அழிவுண்டாவதனை நோக்கி வருந்திப் புலம்பிய அவ்வீட்டுவேதியன்மனைவியினது சோகத்தைத் தணித்துக் குந்தி தன்மகனான வீமனையனுப்ப, இவன் சென்று அவனுக்கென்றுகொடுத்த உணவையெல்லாந் தானுண்டு அவனுடன்பொருது அவனையழித்து அவ்வூரவர்க்கு இடையூறில்லாதபடி செய்தனனென்பது* ***கதை.*** *அந்தப் பகாசுரனது தம்பியான அலம்புசன், அதுமுதல் வீமனிடத்துப் பகைகொண்டு, பின்பு பாரதயுத்தத்தில் வீமனைக்கொல்வதாகத் துரியோதனனோடு சொல்லி, மற்றும் பல அரக்கர்களோடு அவன் பக்கத்தில் துணையாய் வந்துநின்றா னென்க.* *(263)*

*20.-இரண்டுகவிகள்: உடன்வந்த அரக்கரைமாய்த்து அலம்புசனை இராவான் புறங்கொடுக்கச் செய்தமையைக் கூறும்.*

***என்னுடன்பிறந்தோன்றன்னையுதிட்டிரனிளவல்கொன்றான்***
***தன்னுடல்பிளப்பேனென்றுதானைவல்லரக்கரோடு***
***மன்னுடன்சொல்லிநிற்பான்வந்தெதிர்மலைந்தகாலை***
***மின்னுடைமுகில்போற்சென்றான்வீமனுக்கிளையோன்மைந்தன்.***

*(இ-ள்.) 'என் உடன் பிறந்தோன் தன்னை - எனது உடன் பிறந்தவனான பகனை, யுதிட்டிரன் இளவல்கொன்றான்-தருமபுத்திரனது தம்பியான வீமன் (முன்னே) கொன்றிட்டான்; தன் உடல் பிளப்பேன் - (அதற்குப்பிரதியாக) அவ்வீமனுடம்பை (நான்) பிளந்திடுவேன்,'என்று-, மன்னுடன்-துரியோதனராசனுடனே, சொல்லி-, நிற்பான்,-(அவனுக்குப் படைத்துணையாய்) நிற்பவனாகிய அலம்புசன், தானை வல் அரக்கரோடு-சேனையாகத்திரண்டவலிய பல அரக்கர்களுடனே, வந்து-,எதிர் மலைந்த காலை - எதிரிற்போர்செய்த பொழுது, வீமனுக்கு இளையோன் மைந்தன்-வீமனது தம்பியான அருச்சுனனது புத்திரனான இராவான், மின் உடை முகில்போல்-மின்னலையுடைய மேகம்போல, சென்றான் - (அவனை எதிர்த்துப்) போனான்:(எ-று.)*

*யுதிஷ்டிரன் - போரிற் பின்வாங்காதவன், இராவானது தேக காந்தியை நோக்கி, மின்னுடை முகில்' என்றது. (264)*

***21.- வலம்புரித்தாமவேந்துக்காகவேமலைவான்வந்த***
***அலம்புசனோடுஞ்சென்றோரடங்கலுமரக்கர்மாயக்***
***குலம்பழுதற்றமைந்தன்கொண்டபல்லுருவத்தோடும்***
***புலம்புறப்பொருதானந்தவரக்கனும்புறந்தந்தானே.***

*(இ-ள்.) வலம்புரி தாமம் வேந்துக்காகஏ - நஞ்சாவட்டைப் பூமாலையுடைய துரியோதனனுக்கு உதவியாகவே, மலைவான் - போர்செய்வதற்கு, வந்த-, அலம்புசனோடுஉம் - அலம்புசனுடனே, சென்றோர் - வந்தவர்களாகிய, அரக்கர் அடங்கல்உம் - எல்லாவரக்கர்களும், மாய - அழியும்படி. குலம் பழுது அற்ற மைந்தன் - (தந்தைதாயரது) குலங்களில் ஒருகுற்றமுமில்லாத இராவான், கொண்ட பல் உருவத்தோடுஉம்-(தான்) கொண்ட பலவடித்துடனே, புலம்பு உற - (அவ்வலம்புசன்) தனிமைப் படும்படி, பொருதான் - போர்செய்தான்; (செய்யவே), அந்த அரக்கன்உம் புறம் தந்தான் - அவ்வலம்புசனும் முதுகுகொடுத்தான்; (எ - று.)*

*புலம்பு என்பது-தனிமையுணர்த்தும் உரிச்சொல்) "புலம்பே தனிமை" என்பது,தொல்காப்பியம். இனி, புலம்புற - விசனப் படஎன்றலுமொன்று,* ***பி-ம்:***
*அலம்புதனோடும், அலம்பசனோடும்.*

*22.-இதுவும் அடுத்த கவியும்-அலம்புசன் கருடன்வடிவுகொண்டுமீளவந்து இராவானை அழித்தமை கூறும்.*

***அஞ்சினன்போனபின்னரரவினையடர்க்குமாய***
***வெஞ்சினக்கலுழனாகியுருமெனமீளவந்தான்***
***நஞ்சினையுமிழும்வெவ்வாய்நாகங்களனைத்துமொன்றா***
***யெஞ்சினபோலநின்றானிருதருக்கிறுதிசெய்தான்.***

*(இ-ள்.) (அவ்வலம்புசன்),-அஞ்சினன் போன பின்னர் - பயந்து புறங்கொடுத்துப்போனபின்பு, அரவினை அடர்க்கும்வெம்சினம் மாயம் கலுழன் ஆகி - பாம்புகளைநாசஞ்செய்யும் கொடிய கோபத்தையுடைய மாயை யாலாகிய ஒருகருடனதுவடிவமாய், மீள - பின்பு, உரும் என - இடிபோல (பயங்கரமாக), வந்தான்-;(அப்பொழுது), நிருதருக்கு இறுதிசெய்தான் - (முன்னே) அரக்கர்களுக்கு அழிவைச்செய்த அவ்விராவான், (அந்தக்கருடனைக் கண்டமாத்திரத்தில்), நஞ்சினைஉமிழும் வெம்*

*வாய் நாகங்கள் அனைத்துஉம் ஒன்று ஆய் எஞ்சின போலநின்றான்-விஷத்தைக் கக்குகிற கொடியவாயையுடைய பாம்புகளெல்லாம் ஒருசேரஒடுங்கினபோல (வலிமை யொடுங்கி) நின்றான்; (எ-று.)*

*அரக்கனும் இராவானும் மாயையினால்பலபலவடிவங்கொண்டு பலபல வகையாகப்போர்செய்து வருகையில், இராவான் மாயையால் பலபாம்புகளின் வடிவத்தைஅடைய, அரக்கன் மாயையால் கருடவடிவங்கொண்டு அப்பாம்புகளை அழிக்கவே,இராவான் திகைப்படைந்துநின்றான் என முதனூலிற் கூறியதையுங் காண்க. பாம்புகளைஅஞ்சுவிக்குந்தன்மை பற்றியும். அரக்கனுக்கு இடியுவமை ஏற்கும். நிருதர் -நைர்ருதர், வடசொல்: நிருருதியென்னுந் திக்பாலகி மரபில் தோன்றினவர் - கலுழன் -கருடன் என்னும் வடசொல்லின்திரிபு. (266)*

***23. நின்றவன் றன்னை யந்த நிருதனும் வடிவா ளோச்சிக்***
***கொன்றனன் கொன்றா னாகக் குருகுலத் தரசன் சேனை***
***வென்றன னர்க்க னென்று விரிகடல் போல வார்த்த***
***தன்றவ னடர்த்த மாய மார்கொலோ வடர்க்க வல்லார்.***

*(இ-ள்.) நின்றவன்தன்னை - (அங்ஙனம் ஒடுக்கி) நின்ற இராவானை, அந்த நிருதன்உம் - அந்த (அலம்புசனென்ற) இராக்கதனும், வடி வாள் ஓச்சி-கூறிய வாளாயுதத்தை வீசி, கொன் றனன்-; கொன்றான் ஆக - கொல்ல, குருகுலத்து அரசன் சேனை-துரியோதனனது சேனை, அரக்கன் வென்றனன் என்று - இராக்கதன் சயித்திட்டான் என்றகாரணத்தால், விரி கடல் போல ஆர்த்தது - (பிரளயகாலத்துப்) பொங்குங் கடல்போல ஆரவாரித்தது; அன்று அவன் அடர்த்த மாயம் - அப்பொழுது அந்த இராக்கதன் போர் செய்த மாயையை, அடர்க்க வல்லார் ஆர்கொல்ஓ-எதிர்த்துப் போர்செய்து அழிக்கவல்லவர் யாவர் உளர்? (எ - று.)-மாயையால் மிகவும் உக்கிரமாகப் போர்செய்தனனென்றபடி. ஈற்றடி - கவிக்கூற்று. (267)*

வேறு.

### *24.-அசுவத்தாமனும் துரோணனும், பாஞ்சாலர்பலரும் தோற்கப் பொருதல்.*

***பூஞ்சா யகன்கைப் பொருசாபம்பொ சிந்து கண்ணாற்***
***றீஞ்சா றுபாயுஞ் செழுநீர்வயற் செந்நெல் வேலிப்***
***பாஞ்சா லநாடர் பலரும்படப் பாணம் விட்டார்***
***தாஞ்சா பம்வாங்கி மறைமைந்தனுந் தந்தை தானும்.***

*(இ - ள்.) பூ சாயகன் - மலர்களை அம்பாகவுடைய மன்மதனது, கை - கையிலேயுள்ள, பொரு சாபம் - போர்செய்தற்குரிய வில்லாகிய கரும்புகள், கண்ணால் - கணுக்கள்தோறும், தீம் சாறு பொசிந்து பாயும் - இனிமையான இரசம்ஊறிப்பெருகப்பெற்ற, செழு நீர் வயல் - மிகுந்த நீர்வளத்தையுடைய கழனிகளையும், செந்நெல் வேலி - செந்நெற்பயிர்நிலங்களையுமுடைய, பாஞ்சால நாடார் பலர்உம் - பாஞ்சாலதேசத்து அரசர்கள் பலரும், பட - தோற்கும்படி, மறைமைந்தன்உம் தந்தைதான்உம் - வேதம்வல்ல குமாரனான அசுவத்தாமனும் (அவனது) தந்தையாகிய துரோணாசாரியனும், தாம் சாபம் வாங்கி - தாங்கள் வில்லை வளைத்து, பாணம் விட்டார்-அம்பு தொடுத்தார்கள்; (எ-று.)*

*பாஞ்சாலநாடர் - யாகசேனன், திட்டத்துய்மன் முதலியோர்; இவர்களுக்கும் துரோணஅசுவத்தாமர்களுக்கும் ஒருவரோடொருவர் பழமையாகவே பகைமையுள்ளது, பிரசித்தம். கணுக்களினின்று சாறுபெருகுதலைக் கண்களால் நீர்பெருகுதலாகக் கற்பிக்கக் கருதி, 'கண்ணால் தீஞ்சாறு பாயும்' என்றார்போலும், செழு நீர்-செழிப்பான தன்மையையுடைய என்றுமாம். வேலி- ஊர்சூழ்ந்த கழனி, மன்மதனது அம்புகள் தாமரைமலர், அசோகமலர், மாமலர், முல்லைமலர், நீலோற்பலமலர் என்னும் ஐந்துமாம். கரும்புகளில் தானாகவே சாறுபெருகிற தெனச்செழிப்பு விளக்கியவாறு. கண்ணால், 'ஆல்' உருபு - தோறும் என்னும் பொருளுடையது.*

*இதுமுதல் இச்சருக்கம் முடியுமளவும் பதினாறு பாடல்கள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீரொன்று மாங்கனிச்சீரும் மற்றைநான்கும் மாச்சீர்களுமாகிய நெடிலடி நான்கு கொண்ட **கலிநிலைத்துறைகள்.***

### *25.-அபிமன்யு இராவானிறந்ததுகேட்டுப் பலமன்னர்கெடக் கடும்போர் புரிதல்.*

***பட்டான்றுணைவனெனக்கேட்டுப்பரிவுபொங்க***
***விட்டான்மணித்தேர்வளைத்தான்றனிவெய்யசாபந்***
***தொட்டான்பகழியபிமன்னுதொடுத்தலோடுங்***
***கெட்டாரரசன்பெருஞ்சேனையிற்கேடில்வேந்தர்.***

*(இ-ள்.) (பின்பு). அபிமன்னு-, துணைவன் பட்டான் என கேட்டு-(தன்) உடன்பிறந்தவனான இராவான் இறந்தானென்று சொல்ல (அச்செய்தியை)க் கேட்டறிந்து, பரிவு பொங்க - துயரம் மிக, மணி தேர் விட்டான்-அழகிய(தன்) தேரை(ப் பகைவர் சேனையிற்) செலுத்தி, தனி வெய்ய சாபம் வளைத்தான் - ஒப்பற்ற கொடிய (தன்)வில்லை வளைத்து, பகழி தொட்டான் -அம்புகளைத் தொடுத்தான்; தொடுத்தலோடும் - (அங்ஙனம்) செலுத்தினவளவிலே, அரசன் பெருசேனையில் கேடு இல் வேந்தர் - துரியோதனராசனது பெரிய சேனையிலுள்ள குற்றமில்லாத அரசர்கள், கெட்டார் - தோற்றார்கள்; (எ-று.)*

*இதுவரையிலும் எந்தப்போரிலும் பங்கப்படாதவ ரென்பார், 'கேடில் வேந்தர்' என்றார். இராவான், அபிமன்னு என்ற இருவரும் அருச்சுனனது குமார ராதலால், இராவானை அபிமன்னுவின்துணைவ னென்றது. (269)*

### *26.-மைந்தனிறந்ததுகேட்டுச் சீறி வீமன் பொர நடத்தல்*

***மைந்தன்களத்தின்மடிந்தாரெனவாயுமைந்தன்***
***தந்தம்பறியுண்டெதிர்சீறியதந்தியென்ன***
***வெந்தங்கமுற்றுமனந்தீயெழமேனடந்தான்***
***சிந்தந்திகழவெழுதுந்திறற்சிங்கமன்னான்.***

*(இ-ள்.) சிந்தம் - (பகைவர்) வெல்லப்படுந்தன்மை, திகழ - விளங்க, எழுதும்-(தன்கொடியில்) எழுதப்பட்ட, திறல் சிங்கம்- வலிமையையுடைய சிங்கத்தை,அன்னான்-ஒத்தவனாகிய, வாயுமைந்தன் - வாயுகுமாரனான வீமன், மைந்தன்களத்தில் மடிந்தான் என - (தன் தம்பியாகிய) அருச்சுனனது) புத்திரனானஇராவான் போர்க்களத்தில் இறந்தா னென்று அறிந்து,-தந்தம் பறியுண்டு எதிர் சீறியதந்தி என்ன-(தன்) தந்தம் (பகைவரால்) பறிக்கப்பட்டு அவரெதிரிலேகோபங்பொண்டு போருக்குச் சென்ற யானைபோல, அங்கம் முற்றுஉம் வெந்து-(அவனிறந்ததனாலாகிய சோகத்தால்) உடம்புமுழுவதும் தவித்து, மனம் தீ எழ -மனத்தில் கோபாக்கினி கொதிக்க, மேல் நடந்தான் - (பகைவர்சேனை) மேல்(போருக்குச்) சென்றான்; (எ-று.)*

*வீமனுக்கு இராவானிடம் உள்ள அன்பை விளக்க, 'தம்பி மைந்தன' என்னாது, 'மைந்தன்' என அபேதமாக் கூறியது. சிங்கக் கொடியானுக்குச் சிங்கத்தையே உவமைகூறினார். யானைக்குத் தந்தம்போல, வீமனுக்கு இராவான் சிறந்த அங்க மென்க. தந்த முடையது, தந்தீ; வடசொல். ஜிதமென்னும், வடசொல்லின் விகாரமாகிய சித மென்பது, எதுகைநோக்கி, சிந்தம் என விரித்தல்விகாரம்பெற்றது; இனி, சிந்தம் என்பதற்கு-இடத்துக்குஏற்ப, கொடிச் சிலையில் எனப் பொருள்கொள்ளினும் அமையும். (270)*

### *27.-வீமன் சினத்தோடுவருவதுகண்டு துரியோதனன் பலரோடு அவனெதிரே சீறிவருதல்.*

**சினத்தோடுதம்மேல்வருகின்றனன்செம்மலென்னா**
**இனத்தோடுசெல்லும்பிறைவாளெயிற்றேனமென்ன**
**மனத்தோடியைந்ததிருத்தம்பியரோடுமன்னர்**
**சனத்தோடும்வந்தானெதிர்சீறித்தரணிவேந்தன்.**

*(இ-ள்.) 'சினத்தோடு-கோபத்தோடு, செம்மல்-சிறந்தவீரனான வீமன், நம்மேல்வருகின்றனன்-நம்மேல் (எதிர்த்து) வருகின்றான்,'என்னா-என்று அறிந்து, - தரணிவேந்தன்-நிலவுலகத்துக்கு அரசனான துரியோதனன்,-எதிர் சீறி- எதிரிற்கோபித்து,மணத்தோடு இயைந்த திருதம்பியரோடுஉம் -(தன்) மனத்தோ டொத்தசிறந்ததம்பிமார்களோடும், மன்னர் சனத்தோடுஉம்-(மற்றும்) அரசர் கூட்டத்தோடும்,இனத்தோடு செல்லும் பிறை வாள் எயிறு ஏனம் என்ன-(தன்) கூட்டத்தோடுவருகிறபிறைச்சந்திரன்போலும் ஒள்ளிய கோரப்பற்களையுடைய பன்றிப்போல,வந்தான்- வீமனோடு போர்செய்ய) வந்தான்; (எ-று.)*

*கீழ்க்கவியில் வீமனது பலபராக்கிரமங்கள் விளங்க அவனுக்கு யானையையும் சிங்கத்தையும் உவமைகூறியவர், இங்கே துரியோதனனது இழிவுதோன்ற இவனுக்குப் பன்றியை உவமைகூறினார். (271)*

### 28.-அரசர்பலரும் வீமனை வளைத்துக்கொண்டு கிளைத்துப் போர்விளைத்தல்.

**திளைத்தாரரசர்திகிரிக்கிரியென்னவோடி**
**வளைத்தார்கனகவரைபோல்வருமன்னன்றன்னை**
**யுளைத்தாரனைவோர்களுமோரொருபாணமேவித்**
**துளைத்தார்கிளைத்தார்விளைத்தாரமர்தூண்டுதேரார்.**

*(இ-ள்.) அரசர் அனைவோர்கள்உம்-(துரியோதனனும் அவன்தம்பிமார்களும் முதலிய) அரசர்கள் எல்லோரும், தூண்டு தேர் செலுத்தின தேரையுடையவர்களாய், ஓடி - விரைந்துசென்று, திளைத்தார் - இடைவிடாது நெருங்கியவர்களாய்,-கனகம் வரை போல் வரும் மன்னன்தன்னை-பொன்மயமான மேருமலையே (ஓங்கிச் செந்நிறமுடையவனாய்) வருகிற வீமராசனை, திகிரி என்ன-(உலகத்தை வளைந்துள்ள) சக்கரவாளகிரிபோல, வளைத்தார்-சூழ்ந்தவர்களாய், உளைத்தார்- ஆராவாரஞ்செய்து, ஓர் பாணம் ஏவி-(ஒவ்வொருத்தரும்) ஒவ்வொருஅம்பைச் செலுத்தி) துளைத்தார்-(அவ்வீமனுடம்பைத்) துளைசெய்து, கிளைத்தார் - ஊக்கங்கொண்டு, அமர் விளைத்தார்-போர்செய்தார்கள்;(எ -று.)*

*அனைவோர்-ரகர வீற்று அயல் அகரம் ஓவாயிற்று. (272)*

### 29.- வீமன் சூழ்ந்தோரை வலிகெடுத்துத் துரியோதனன்தம்பிய ரெழுவரை மாய்த்தல்.

**எடுத்தானொருதன்சிலைவீமனுமெண்ணில்பாணந்**
**தொடுத்தானவர்மேலிமைப்போதையிற்சூழ்ந்துளோரைக்**
**கெடுத்தானரசற்கிளையோரெதிர்கிட்டிமீண்டும்**
**படுத்தானெழுவரிவன்வாளியிற்பட்டுவீழ்ந்தார்.**

*(இ-ள்.) (அப்பொழுது), வீமனும்-, தன் ஒரு சிலை எடுத்தான். தனது ஒப்பற்றவில்லையெடுத்து, அவர்மேல் எண் இல்பாணம் தொடுத்தான் - அவ்வரசர்கள்மேல்அளவில்லாத அம்புகளைத்தொடுத்து, இமைப்போதையின் - ஒருநொடிப்பொழுதினுள்ளே, சூழந்துஉளோரை கெடுத்தான்-(தன்னை) வளைந்துள்ளஅவர்களையெல்லாம் நிலைகெடுத்து, அரசற்கு இளையோர்*

*எதிர் கிட்டி -துரியோதனன் தம்பிமார்களின் எதிரிலே சமீபித்து, மீண்டும் எழுவர்படுத்தான்- மறுபடியும் (அவர்களில்) ஏழுபேரை அழித்தான்; (அவர்கள்) இவன் வாளியின்பட்டு வீழ்ந்தார்- இவனது அம்புகளால் இறந்து விழுந்தார்கள்; (எ - று.)*

*எழுவர்பெயர், மேற்கவியிற் கூறப்படும். கீழ் இச்சருக்கத்து ஐந்தாங்கவியை நோக்கி, 'மீண்டும்' என்றார். போதை - ஐயீற்றுடைக் குற்றுகரம். (273)*

***30.-இரண்டுகவிகள் - துரியோதனன்தம்பியர் எழுவர்தலை வானிற் சென்றது கூறும்.***

***அறமிக்கசொற்குண்டலபோசனனாதியக்கன்***
***திறமிக்கதீர்க்கநயனன்சிலைத்திம்மவாகு***
***மறமிக்கவேற்குண்டலன்குண்டலதாரன்மன்னூற்***
***றுறைமீக்ககேள்விக்கனகத்துசனானதோன்றல்.***

இதுவும், மேற்கவியும்-குளகம்.

*(இ-ள்.) அறம் மிக்க சொல், தருமம்மிகுந்த சொற்களையுடைய, குண்டலபோசன்-, அனாதியக்கன்-, திறம் மிக்கவலிமை மிகுந்த, தீர்க்கநயனன்-, சிலை-வில்லில்வல்ல, திம்மவாகு-, மறம்மிக்க- பராக்கிரமம்மிகுந்த, வேல் - வேலில்வல்ல, குண்டலன்-, குண்டலதாரன்-, மன் நூல் - நிலைபெற்ற சாஸ்திரங்களின், துறை - வழிகளிலே, மிக்க-மிகுந்த, கேள்வி-கேள்விகளையுடைய, கனகத்துசன் ஆன தோன்றல்-கநகத்வஜனாகிய அரசன்,-(எ-று.)*

*குண்டபேதன், அநாத்ருஷ்டி, தீர்க்கலோசநன், தீர்க்கபாகு, சுபாகு, வைராடன், கநகத்வஜன் என்று இவர்கள்பெயர் முதனூலிற் காணப்படுகிறது. தீர்க்கநயநன் என்பது - நீண்டகண்களையுடையா னென்றும், குண்டலதாரன் என்பது குண்டலந்தரிப்பவனென்றும், கநகத்வஜன் என்பது- பொற்கொடியையுடையானென்றும் பொருள்படும். அறம்-தீங்குமாம்.* ***பி-ம்:*** *கருடத்துசனானதோன்றல். (274)*

***31. இப்பேரெழுவர்சிரமேழுமெழுந்துதுள்ளி***
***மைப்பேரெழிலியகல்வானிடைவந்தவெல்லை***
***ஒப்பேதெனவாசவன்கேட்டலுமோங்கல்விந்தை***
***கைப்பேரெழிற்பைங்கழங்கென்றனர்கண்டவானோர்.***

*(இ-ள்.) இ பேர் எழுவர் - இந்தப்பேரையுடைய ஏழுபேர்களின், சிரம் ஏழ்உம் - (வீமனால்அறுபட்ட) தலைகள் ஏழும், எழுந்து துள்ளி - (உடம்பைவிட்டு) எழும்பிக்குதித்து, மை பேர் எழிலி அகல் வானிடை-கரியபெரிய மேகங்களையுடைய பரந்த ஆகாயத்திலே, வந்த எல்லை - வந்தபொழுது,- வாசவன்-இந்திரன், ஒப்பு ஏது என கேட்டலும் - (இவற்றிற்குச்) சமானம் எது வென்று கேட்டவளவிலே,-கண்ட வானோர் - பார்த்துநின்ற தேவர்கள், 'ஓங்கல் விந்தை-உயர்ச்சியையுடைய வீரமகளது, கை-கையினால் (எடுத்து) ஆடப்படுகிற, பேர்-பெரிய, எழில் -மேலெழுதலையுடைய, பைங்கழங்கு - அழகிய அம்மனைக்காய்கள் (இவற்றிற்கு உவமை)', என்றனர் - என்று சொன்னார்கள்; (எ-று.)*

*ஓங்கல் விந்தை - மலைகளிற் சஞ்சரிக்குந் துர்க்கையுமாம். ஓங்கல்- உயர்வென்னும் பொருளில் தொழிற்பெயரும், மலையென்னும்" பொருளில் தொழிலாகுபெயருமாம். போர்க்களத்துக்குத் தலைவி துர்க்கை யாதலாலும், பராக்கிரமத்திற்குஉரியவள் வீரமகளாதலாலும், இவர்களாடிய கழங்கென்று அத்தலைகளைக் கூறுதல் ஏற்கும், விந்தியமலையில் வீற்றிருத்தல்பற்றி, துர்க்கைக்கு'விந்தை' என்று பெயர்; 'விந்த்யவாஸிநீ' என்ற வடமொழிப் பெயருங் காண்க. (275)*

*32.-துரியோதனன் வீமனுக்குப் புறந்தருதல்.*

***அறந்தந்தவாழ்க்கைமுடிக்கின்றனையாகிநீயும்***
***இறந்தந்தரத்திலினியேகுகவென்றுசீறி***
***மறந்தந்தசீயக்கொடியோன்கொடிமாசுணத்தோன்***
***புறந்தந்தபோரிற்புறந்தந்தனன்போகலுற்றான்.***

*(இ-ள்.) மறம் தந்த - பராக்கிரமம் பொருந்திய, சீயம் - சிங்கத்தின் வடிவமெழுதிய, கொடியோன் - துவசத்தையுடைய வீமன்,-(பின்பு துரியோதனனைநோக்கி), 'அறம் தந்த - (பலர்க்குத்) தீங்கு செய்த வாழ்க்கை - (உனது)உயிர்வாழ்வை, முடிக்கின்றனை ஆகி - ஒழிக்கிறவனாய், நீயும்-, இனி - இப்பொழுது, இறந்து-, அந்தரத்தில் ஏகுக- வீரசுவர்க்கத்துச் செல்வாயாக,' என்று - என்று சொல்லி, சீறி-கோபிக்க-கொடி மாசுணத்தோன் - பாம்புக் கொடியையுடைய அத்துரியோதனன், புறந்தந்த போரில் - (தான் இதுவரையில்) பாதுகாத்துவந்த அந்தயுத்தத்திலே, புறந்தந்தனன் போகல் உற்றான் - முதுகுகொடுத்துச் செல்லத் தொடங்கினான்: (எ-று.)*

*அறம் - தீமையாதலை 'அறம்பாடுதல்' என்னுமிடத்துங் காண்க. அறம் - (நன்மை) அறுதல்; தொழிற்பெயர். இனி, அறம் தந்தவாழ்க்கை என்பதற்கு- முற்பிறப்பின் நல்வினையினாலாகிய அரசவாழ்வு என்றும், இல்லறம் நடத்தும்வாழ்வு என்றும் உரைப்பினும் அமையும்: இனி, இங்கு அறம் என்றது - எதிர்மறையிலக்கணையால் பாவத்தைக் காட்டுமென்னலுமாம். வாழ்க்கை- தொழிற்பெயர். சீயம் - ஸிம்ஹம்என்னும் வடமொழிச்சிதைவு. புறந்தருதல்-பாதுகாத்தலும், தோற்றலும். **பி - ம்:** பொரமாசுணத்தோன். (276)*

*33-சூரியாஸ்தமன வருணணை.*

***கந்தேயனையபுயவீமன்கணைகள்பட்டுத்***
***தந்தேரழிந்துபடுமன்னவன்றானையென்ன***
***மந்தேகரெல்லாமலைவுற்றுமடிந்துவீழச்***
***செந்தேரருக்கன்குடபாற்றிசைசென்றுசேர்ந்தான்.***

*(இ-ள்.) கந்துஏ அனைய - தூண்களையேயொத்த, புயம் - தோள்களையுடைய, வீமன் - பீமசேனனது, கணைகள் - அம்புகள், பட்டு - (மேல்) படுதலால், தம் தேர் அழிந்து படும் - தமது தேர் அழிந்து தோற்கிற, மன்னவன் - துரியோதனராசனது, தானை என்ன-சேனைபோல,-மந்தேகர் எல்லாம் - மந்தேகரென்னும் அசுரர்யாவரும், மலைவுற்று-போர்செய்து, மடிந்து வீழ - இறந்து விழும்படி, செம் தேர் அருக்கன் - சிவந்த தேரையுடைய சூரியன், குட பால் திசை - மேற்குத்திக்குகபக்கத்தை, சென்று சேர்ந்தான் - போய் அடைந்தான் (அஸ்தமித்தான்); (எ-று.)*

*மந்தேகாருணமென்னுந் துவீபத்தில் வாழும் மந்தேகரென்னும் அரக்கர்கள் உக்கிரமானதவத்தைச்செய்து பிரமனிடத்து வரம்பெற்று அதனாற் செருக்கி எப்பொழுதும் சூரியனை வளைந்து எதிர்த்துத் தடுத்துப் போர்செய்கின்றன ரென்றும், அந்தணர்கள் ஸ்ந்தியாகாலங்களில் மந்திரபூர்வமாகக் கையில் எடுத்துவிடும் அர்க்கியதீர்த்தங்கள் வச்சிராயுதம்போலாகி அவர்கள்மேல் விழுந்து அவர்களை அப்பால் தள்ளிச் சூரியனது சஞ்சாரத்துக்குத் தடையில்லாதபடிசெய்கின்றன வென்றும் வேதங் கூறும். மூன்றாமடியால், பிராமணர்கள் சந்திசெய்ய என்பது தொனிக்கும். **பி-ம்:** மன்னவர். (277)*

*34,- இதுமுதல் மூன்றுகவிகள்-படுகளச்சிறப்பு.*

***தளவொத்தமூரற்றலமானைத்தருமன்மைந்தன்***
***வளமிக்கவெம்போர்க்களம்வென்றுவதுவைசெய்வான்***
***உளமுற்றளித்தகலன்போலுமுகுகலன்கள்***
***பிளவுற்றவேழநுதனித்திலப்பெட்டிபோலும்.***

*(இ-ள்.) உகு கலன்கள் - (அப்போர்க்களத்திலே) சிந்திக் கிடக்கிற (சேனையின்) ஆபரணங்கள்,-தருமன் மைந்தன்- தருமபுத்திரன், வளம்மிக்க வெம் போர் களம் வென்று - சிறப்புமிகுந்த கொடியயுத்தகளத்திலே (பகைவரைச்) சயித்து, தளவு ஒத்த - முல்லையரும்புகளைப்போன்ற, மூரல்- பற்களையுடைய, தலம் மானை-பூமிதேவியை, வதுவைசெய்வான் - மணஞ்செய்து கொள்ளும்படி, உளம் உற்று-விரும்பி,அளித்த-(அவளுக்குப் பரிசாகக்) கொடுத்த, கலன் - ஆபரணங்களை, போலும் - ஒக்கும்; பிளவு உற்ற-பிளக்கப் பெற்ற, வேழம்நுதல் - யானைகளின்நெற்றிகள், (முத்துக்களையுடைமையால்), நித்திலம் பெட்டிபோலும் - (தருமன் பூமியாகிய பெண்ணை மணஞ்செய்யப் பரிசு கொடுக்கும்)முத்துப்பெட்டியை ஒக்கும்; (எ-று.)*

*தலமானை வதுவைசெய்தல் என்றது, இராச்சியாபிஷேகஞ் செய்து கொள்ளுதலை. பூமியைப் பெண் என்றதற்கு ஏற்ப, பெண்ணுக்குரிய 'தளவொத்த மூரல்' என்ற அடைமொழியைக் கொடுத்தார்.*
***தன்மைத்தற்குறிப்பேற்றவணி.***
*'தளவொத்த. ... .அளித்த' என்பதை, நித்திலப்பெட்டிக்குங் கூட்டுக. தளவு - முல்லை; பூவுக்கு முதலாகுபெயர்: இது - வெண்ணிறத்திலும் அழகிலும், மகளிர் பற்களுக்கு உவமை. மான் - பெண்ணுக்கு உவமையாகு பெயர்; மான்போன்ற பார்வையுடையவள், நித்திலப்பெட்டி- நித்திலங்களை வைத்துள்ளபெட்டி, சிறந்த யானைகளின் தலையிலிருந்து முத்து உண்டாகுமென்பது, நூற்கொள்கை. (278)*

***35. பூட்டற்றவில்லின்மிசைசோரிப்புனலின்வீரர்***
***வாட்டற்றவீரல்பலசுற்றிவயங்குதோற்றம்***
***வேட்டற்பொருட்டாற்புவிமானுக்குவேந்துசூட்டுஞ்***
***சூட்டற்றுமுற்றுங்குடர்வாசத்தொடையலற்றே.***

*(இ-ள்.) சோரி புனலின் - இரத்தப்பெருக்கிலே, (இறந்து விழுந்த), வீரர் வீரர்களது, வாட்டு அற்ற - மெலித லில்லாத (கொழுத்துள்ள), ஈரல் பல - ஈரல்கள் அநேகம், பூட்டு அற்ற வில்லின்மிசை - (நாணியின்) கட்டு அறுந்துவிழுந்துள்ள வில்லின் மேலே, சுற்றி வயங்கு-சூழ்ந்துகொண்டு விளங்குகிற, தோற்றம் - காட்சி,- வேட்டல் பொருட்டால் - கலியாணஞ்செய்துகொள்ளும் நிமித்தமாக, புவி மானுக்கு - பூமிதேவிக்கு, வேந்து சூட்டும் - யுதிட்டிரன் சூட்டுகிற, சூட்டு - நெற்றிச்சூட்டை, அற்று-ஒக்கும்; குடர் முற்றுஉம்- (அருகில்விழுந்துள்ள) குடல் முழுவதும், வாசம் தொடையல் அற்று - (விவாகஞ் செய்யும்பொருட்டுப் பூமிதேவிக்கு யுதிட்டிரன் சூட்டிய) வாசனையையுடைய மணமாலையை ஒக்கும்; (எ-று.)*

இதுவும் - **தன்மைத்தற்குறிப்பேற்றவணி** யே. *நாணியற்றுச் சிறிது வளைவுபடத் தரையில் விழுந்துகிடக்கிற வில்லின்மேல் ஈரல் சூழ்ந்து விளங்குதல் -பூமிதேவியின் வளைவான நெற்றியில் வட்டமாகச் சூட்டிய பூமாலைபோலுமென்றும், தரையிலே நீண்டுபரந்து விழுந்து கிடக்கிற குடல் பூமிதேவியின்தோளிலிட்ட பூமாலைபோலுமென்றும் வருணித்தார். சூட்டப்படுவது சூட்டு: நெற்றிமேல் வட்டமாக அயியும் மாலை, தொடுக்கப்படுவது-தொடையல்; மார்பிலிடும்மாலை. வாட்டு - முதனிலை திரிந்த தொழிற்பெயர்.*

***36. குலமாநிருபருடல்சோருங்குருதிவெள்ளம்***
***பலமாநதிபோய்த்திரைவேலையிற்பாய்ந்ததோற்றம்.***
***நிலமான்விளிம்புசிவப்பேறியநீலவாடை***
***நலமாகமன்றற்குடுத்தென்னநவிலலாமே.***

*(இ-ள்.) குலம் - (சிறந்த) குலங்களிற் பிறந்த, மா - பெரிய, நிருபர்- அரசர்களது, உடல் - உடல்களிலிருந்து, சோரும்-பெருகுகிற, குருதி வெள்ளம் - இரத்தப்பெருக்கு, பல மா நதி போய் - அநேகம் பெரிய நதிகளாய்ச் சென்று, திரை வேலையில் பாய்ந்த-அலைகளையுடைய கடலிலே பாய்ந்திட்ட, தோற்றம்- காட்சி,-நிலம் மான் - பூமிதேவி, விளிம்பு சிவப்பு ஏறிய நீலம் ஆடை - கரைகளிற்செந்நிறம் பொருந்திய நீலநிறமுள்ள சேலையை, நலம்ஆக- அழகாக மன்றற்கு - கலியாணத்தின்பொருட்டு, உடுத்(த)து என்ன - உடுத்துக்கொண்டது போலுமென்று,நவிலல் ஆம்- சொல்லத்தக்கதாம்; (எ - று.)*

*பூமியைச்சூழ்ந்த கடலின் ஓரங்களின் இரத்தவெள்ளம் பாய்ந்துள்ளது, பூமிதேவி சிவப்புக்கரையுள்ள நீலச்சேலையைத் தரித்தது போலு மென்று வருணித்தார்; **(தற்குறிப்பேற்றவணி)** விளிம்பு - ஓரம் **பி - ம்:** நிருபர்குடர். (280)*

### *37.-இருதிறத்தவரும் பாடி புகுதலும் கங்குல்வருதலும்.*

***தன்பாடிபுக்கான்புறந்தந்ததரணிவேந்தன்***
***மின்பாடிலங்குங்கணைவெஞ்சிலைவீமனோடு***
***மன்பாடிபுக்கான்பெரும்போரிடைமாய்ந்தமன்னர்***
***தென்பாடிபுக்கார்குடிபுக்கதுசேர்ந்தகங்குல்.***

*(இ-ள்.) புறம் தந்த - (வீமனுக்கு) முதுகுகொடுத்த, தரணி வேந்தன் - துரியோதனராசன், தன் பாடி புக்கான் - தனதுபடை வீட்டையடைந்தான்; மின் பாடுஇலங்கும் - மின்னலின் தன்மையாய் விளங்குகிற, கணை - அம்புகளைத் தொடுக்கிற, வெம் சிலை - கொடியவில்லையுடைய, வீமனோடு- வீமனுடனே, மன்- தருமராசன், பாடி புக்கான் - (தன்) படைவீட்டை யடைந்தான்; பெரு போரிடை மாய்ந்த மன்னர் - பெரிய அப்போரிலே இறந்த அரசர்கள். தென் பாடிபுக்கார் - தெற்கிலுள்ள (யம) புரத்தைச் சேர்ந்தார்கள்; சேர்ந்த கங்குல் - வந்த இராத்திரி, குடி புக்கது - நன்றாகக் குடிபுகுந்தது; (எ - று.)*

*வீரசுவர்க்கஞ் செல்பவரும் யமதரிசனம் பெற்றே செல்ல வேண்டுதலால், 'தென்பாடிபுக்கார்' என்றார்; பாடி - ஊர். கங்குல் குடிபுக்கது - இராத்திரி தொடங்கிற்று என்பதாம். பாடு-தன்மை. (281)*

### *38-ஸ்ரீ க்ருஷ்ணன் இராவானிறந்ததற்கு வருந்தல் கூடாதெனக் காரணங் கூறுதல்.*

***அன்றேகளத்திற்பலியூட்டியவாண்மைவீரன்***
***இன்றேயிறந்தானிதற்குன்னியிரங்கலீரென்று***
***ஒன்றேமொழியுமுரவோன்முதலைவருக்குங்***
***குன்றேகவித்தகுடைக்கோவலன்கூறினானே.***

*(இ-ள்.) குன்றுஏ. குடை கவித்த - கோவர்த்தனகிரியையே குடையாக எடுத்துப்பிடித்த, கோவலன் - பசுக்களைக் காத்தலில் வல்லவனான கண்ணபிரான்,- ஒன்றுஏ மொழியும் உரவோன் முதல் ஐவருக்குஉம் - ஒருவகையாகவே [சத்தியமாகவே] பேசும் வலிமையயுடைய தருமன் முதலிய பஞ்சபாண்டவர்க்கும்,- 'அன்றுஏ - முன்னொருநாளிலேயே, களத்தில்-போர்க்களத்தில், பலி ஊட்டிய- (தன்னைக் காளிக்குப்) பலியாக நிவேதனஞ்செய்த, ஆண்மை வீரன்- பராக்கிரமமுடைய வீரனான இராவான், இன்றுஏ இறந்தான்-இன்றைத்தினத்தில்தான் இறந்திட்டான்; இதற்கு-இதற்காக, உன்னி இரங்கலீர் - (நீங்கள்) சிந்தித்து வருந்த வேண்டா', என்று-, கூறினான் - உபசாரஞ்சொல்லியருளினான்.*

*கோவலன், ஐவருக்கும், இரங்கலீரென்று கூறினான் என்க. அன்றைக்கே தன்னைக் கொய்து பலிகொடுத்தவன் இதுவரையில் உயிர்வாழ்ந்திருந்ததற்கு மகிழவேண்டுவதேயொழிய, இன்றைக்கு இறந்ததற்கு வருந்தக்காரணமில்லை யென்றான். இரங்கலீர் -ஏவற்பன்மை எதிர்மறை. (282)*

### *39.-சூரியோதய வருணனை.*

***உன்னிக் களத்தி லுயிர்வீடு முரக மைந்தன்***
***சென்னிக் கதிர்மா மணிசிந்திய சோதி யெல்லாம்***
***தன்னிற் கவர்ந்தா னெனப்பண்டையிற் றாம மேனி***
***மின்னிப் பரிதி குணபாற்றிசை மேவி னானே.***

*(இ -ள்.) களத்தில் உயிர் வீடும் - போர்க்களத்திலே உயிர் விட்ட, உரகம் மைந்தன் - நாககன்னிகைகுமாரனான இராவானது, சென்னி-தலையிலுள்ள, கதிர் மாமணி - விளக்கத்தையுடைய சிறந்த மாணிக்கம், சிந்திய - வெளியிட்ட, சோதிஎல்லாம்-ஒளிகளையெல்லாம், உன்னி - எண்ணி [கருத்தோடு], தன்னில்கவர்ந்தான் என - தன்னிடத்துக் கவர்ந்துகொண்டவன்போல, பண்டையின்மேனி தாமம் மன்னி-முன்னையிருந்ததிலும்(தன்) உடம்பு ஒளி மிகப்பெற்று, பரிதி - சூரியன், குணபால் திசை மேவினான் - கிழக்குத்திக் கினிடத்தை அடைந்தான்;(எ-று.)*

*முன் அஸ்தமித்தபொழுது இருந்த ஒளியினும் இப்பொழுது உதிக்கையில் இயல்பாக மிகுந்துள்ள சூரியனொளியை இராவானது தலைமாணிக்கத்தினின்று ஒளிகவர்ந்து மிகுந்ததாக உத்பிரேக்ஷித்தார், உன்னி - (ஆண்மையையே) கருதி என்று உரைத்து, 'உயிர் விடும்' என்பத்தோடு கூட்டலுமாம். வீடும்- விடும் என்பதன் நீட்டல், சிறந்தசாதிநாகத்தின் தலையில் மிகுந்த ஒளியையுடைய மாணிக்கம் உள்ள தென்றல், மரபு. (283)*

***எட்டாம்போர்ச்சருக்கம் முற்றிற்று.***

***-----------***

***ஒன்பதாம்போர்ச்சருக்கம்.***

***1.-கடவுள்வாழ்த்து.***

**பேராறு மூழ்கி மறைநூல் பிதற்றி மிடறும் பிளந்து பிறவித்**
**தூராறு மாறு நினையாம லுங்க டொழிலே புரிந்தசுமடீர்**
**ஓராறு பேத சமயங்க ளுக்கு முருவாகி நின்ற வொருவன்**
**ஈராறு நாம முரைசெய்து மண்கொ டிடுவார்கள் காணு மிமையோர்.**

*(இ-ள்.) பேர் ஆறு மூழ்கி - பெரிய புண்ணியநதிகளிலே நீராடியும், மறைநூல்பிதற்றி மிடறுஉம் பிளந்து - வேதசாஸ்திரங்களை ஓதிக் கண்டம் வருந்தியும், பிறவிதூர் ஆறும்ஆறு நினையாமல் - பிறப்புக்கு வேராகிய கருமம் ஒழியும்விதத்தைஎண்ணாமல், உங்கள் தொழில்ஏ புரிந்த - உங்கள் காரியங்களையே செய்துகொண்டிருந்த, சுமடீர் - அறிவில்லாதவர்களே! ஓர் ஆறு பேதம் சமயங்களுக்குஉம்- ஒரு ஆறுவகைப்பட்ட மதங்களுக்கும், உரு ஆகி நின்ற - (அதததற்குஏற்றதெய்வ) வடிவமாய் நின்ற, ஒருவன்-ஒப்பற்ற திருமாலினது, ஈர் ஆறு நாமம்-பன்னிரண்டு திருநாமங்களை, உரைசெய்து-சொல்லி, மண் கொடு இடுவார்கள் -திருமணை யெடுத்துத் தரித்துக்கொள்பவர்கள் தாமே, இமையோர் - முத்திபெற்றவராவர்; காணும் - (இதனை) அறியுங்கள்; (எ-று.)*

*முத்திபெறுவதற்கு ஏதுவான தத்துவஞானத்தைப்பெற்று பிரபத்திமார்க்கத்தையும் அதற்குஏற்ற அநுஷ்டாநத்தையும் பெறாமல், பாவந்தீர்ந்து புண்ணியமுண்டாகும் வழியையே ஆராய்ந்த வண்ணம் புண்ணியதீர்த்தங்களில் ஸ்நானஞ்செய்தல் வேதசாஸ்திரங்களைப் படித்தல் முதலிய நற்செய்கைகளைச் செய்தல் பயனற்ற தென்பதாம், மறைநூல் - இருபெயரோட்டு: இனி வேதங்களும் சாஸ்திரங்களு மென உம்மைத் தொகையுமாம், சாஸ்திரங்களின் சார மறியாமல் அவற்றைக் கற்றலின் இழிவை விளக்குதற்கு 'பிதற்றிமிடறும் பிளந்து' என்றார். தூர்-வேர்; பிறவித்தூர்-ஆசையென்றுங்கொள்ளலாம்: என்றது, அவித்தையை; "அவாவென்ப வெல்லாவுயிர்க்கு மெஞ்ஞான்றும், தவாஅப் பிறப்பீனும் வித்து" என்ற திருக்குறளைக் காண்க. உங்கள் தொழிலே புரிந்த என்றது, உயிர்க்கு உறுதிதேடாமல் உடம்புக்கு உறுதி தருவனவாகிய உண்பன உடுப்பன முதலிய பொருள்களையே தேடிச் சம்பாதித்தலை.*

*பேதசமயங்கள்-ஒன்றோடொன்று மாறுபட்ட மதங்க ளென்றுமாம். **ஓராறுபேதசமயங்கள்** - வைஷ்ணவம் சைவம் சாக்தம் சௌரம் காணபதம் கௌமாரம் என்னும் ஆறும் வைதிகமத மென்றும்; கபிலமதம் கணாதமதம் பதஞ்சலிமதம் அக்ஷபாதமதம் வியாசமதம் ஜைமிநிமதம்*

*என்னும் ஆறும் வேதாந்தமதமென்றும்; பௌத்தம் ஜைநம் பைரவம் காளாமுகம் லோகாயதம் சூநியவாதம் என்னும் ஆறும் புறச்சமயமென்றும் கூறப்படும். இவற்றிற் கெல்லாம் ஏற்ற அந்தந்தத்தெய்வமாய்த் திருமால் வீற்றிருக்குந் தன்மை, கீழ் முதற்போர்ச்சருக்கத்துக் கடவுள்வாழ்த்தில் "இறைஞ்சுவா ரிறைஞ்சப்பற்பல் தேவருமாகி" என்றவிடத்துக் கூறப்பட்டது.* **ஈராறுநாமம்** *- கேசவன், நாராயணன், மாதவன், கோவிந்தன், விஷ்ணு, மதுசூதநன், திரிவிக்ரமன், வாமநன், ஸ்ரீதரன், இருடீகேசன், பதுமநாபன், தாமோதரன் என்பவை. இந்தத் துவாதசநாமங்களை முறையேசொல்லி உடம்பில் பன்னிரண்டிடத்தில் முறையே திருமணிட்டுக்கொள்ளுதல், ஸ்ரீவைஷ்ணவ சம்பிராயதம்: அது-துவாத சோர்த்துவபுண்ட்ர மெனப்படும். காணும் - தேற்றமுமாம். திரு வாய்மொழியில் "அயர்வறு மமரர்க ளதிபதி யவனவன்" என்றவிடத்து, 'அமரர்கள்' என்றதுபோல, இங்கே 'இமையோர்'என்றது - முத்தியுலகத்தில் நிரதிசய ஆநந்தமனுபவிக்கும் நித்திய சூரிகளைக் குறிக்கும். தன்னை நெற்றியிலே தரித்த பிராணிகளனைத்தையும் இறுதியிற் கருமமொழித்து மீளுதலில்லாத முத்தியைப் பெறுவிப்பது திருமண்காப்பென்னும் ஊர்த்துவபுண்ட்ரக்குறி யென்கிற மகிமையை "என்றும் நான்முகன் முதல்யாரும் யாவையும், நின்ற பேரிருளினை நீக்கி நீணெறிச், சென்று மீளாக்குறி சேரச் சேர்த்திடு, தன் திரு நாமத்தைத் தானுஞ் சாத்தியே" எனக் கம்பர் கூறுவர். சுமடீர் - சுமடர் என்பதன் ஈற்றயல் திரிந்த விளி.*

*இதுமுதற் பதின்மூன்று கவிகள் - பெரும்பாலும் ஒன்று மூன்று ஐந்தாஞ்சீர்கள் மாங்காய்ச்சீர்களும், இரண்டு நான்கு ஆறாஞ்சீர்கள் தேமாச்சீர்களும் ஏழாவது புளிமாச்சீரு மாகிய* ***எழுசீராசிரியவிருத்தங்கள்.*** *(284)*

***2.- இதுமுதல் ஏழுகவிகளில், எட்டாம்போர்நாளிரவில் துரியோதனன் படைவீட்டில் நடந்ததொருசெய்தியைத்தெரிவிக்கிறார்.***

***முன்போருடைந்துதனதில்லடைந்தமுடிமன்னன்முன்னையிரவிற்***
***றன்போலுமாமனவனோடுகேடுதருதம்பியோடுகருதிப்***
***பின்போதில்வண்மையொழிவானையோடியழையென்றுபேசவவனும்***
***மின்போலிறந்தவிளையோர்கள்பாடுவினவாவிருந்தபொழுதே.***

இதுமுதல் ஐந்துகவிகள் - ஒருதொடர்.

*(இ-ள்.) முன் - முன்னே [எட்டாம்போர்நாள் மாலைபொழுதில்], போர் உடைந்து-யுத்தத்தில் (வீமன்முன்) தோற்று, (பின்பு). தனது இல் அடைந்த - தன் படைவீட்டை யடைந்த, முடி மன்னன் - கிரீடாதிபதியான துரியோதனராசன், முன்னை இரவில் - முன்னிராத்திரியிலே, தன் போலும் மாமனவனோடும்- (தீக்குணம் தீத்தொழில்களில்) தன்னையொத்த மாமனாகிய சகுனியோடும், கேடு தரு தம்பியோடு-(தமக்கும் பிறர்க்கும்) தீங்கை விளைக்கிற தம்பியான துச்சாதனனோடும், கருதி- ஆலோசித்து, பின் போதில் வண்மை ஒழிவானை ஓடி அழை என்று பேச- (முன்பகற்பொழுது முழுவதும் தானஞ்செய்து) பின்பகற்பொழுதில் தானமொழிபவனான கர்ணனை விரைந்துசென்று அழைத்துவா என்று (துச்சாதனனை நோக்கிச்) சொல்ல, அவன்உம் - (அவ்வாறு துச்சாதனனால் அழைத்துக் கொண்டுவரப்பட்ட) கர்ணனும், மின் போல் இறந்த இளையோர்கள் பாடு வினவா இருந்த பொழுது - மின்னல்போல (நிலையில்லாமல்) இறந்துபோன தம்பி மார்களின் தன்மையைப் பற்றி(த்துரியோதனனை) விசாரித்திருந்த சமயத்து,- (எ-று.)*

*முன்னையிரவு-இராத்திரியின் முன்பாகம். "முற்பகல் முழுவதிலும் தானஞ்செய்து பிற்பகலில் தானமொழிதல் கர்ணனது இயல்பாதலை"அடுத்ததானமும் பரிசிலு மிரவலர்க் கருளுடன் முற்பகலளவுங், கொடுத்து" என்றதனாலும் அறிக. தன்போலும் வேறு உவமைபெறாத என்றுமாம். (285)*

***3. மாவில்லெடுத்தென்னிளையோர்கள்கந்தவகன்மைந்தன்முன்பு***
***சிவன்முன்***
***பூவில்லெடுத்தமதனானவாறுபுகல்கிற்பதல்லவனிகக்***

***கோவில்லெடுத்தென்மறைநாலும்வல்லகுருவில்லெடுத்***
***தெனினிமேல்***
***நீவில்லெடுக்கிலனைவேமுமுய்துநினையாரும்வாகைபுனையார்.***

*(இ-ள்.)* என் இளையோர்கள்-எனது தம்பிமார்கள் (இருபதுபேர்), கந்தவகன் மைந்தன் முன்பு-வாயுகுமாரனானவீமனுக்கு எதிரில், மா வில் எடுத்து - பெரிய வில்லை யேந்தி (ப் போர்செய்து), சிவன் முன் பூ வில் எடுத்தமதன் ஆன ஆறு- சிவபிரானெதிரிலே புஷ்ப வில்லையெடுத்துப்போர்செய்த மன்மதன்போல் (எளிதில்) அழிந்த விதம் புகல்கிற்பது அல்ல - சொல்லுந்தரமுடையதல்ல; அனிகம் கோ- (எனது) சேனைத்தலைவனாகிய பீஷ்மன், வில் எடுத்து - வில்லையெடுத்துப் போர்செய்து, என்-என்னபயன்? மறை நால்உம் வல்ல குரு வில் எடுத்து என்-நான்குவேதங்களையும், வல்ல ஆசிரியனான துரோணன் வில்லையெடுத்துப் பொருது என்ன பயன்? இனி மேல்-,நீ-,வில் எடுக்கில் - வில்லையெடுத்துப் போர்செய்தால், அனைவேம்உம் உய்தும்-நாங்கள் எல்லோரும் பிழைப்போம்; நினையார்உம் வாகை புனையார்-பகைவர்களும் வெற்றிமாலை சூடமாட்டார்கள்:(எ- று.) -இது-கர்ணனை நோக்கித் துரியோதனன் கூறுவது.

'பூவில்லெடுத்த' என்ற, 'புஷ்பதந்வா' என்னும் மன்மதனது வடமொழிப்பெயரின் பொருள்பற்றி: காமநூலென்னும் பூவிசேடம் காமனுக்கு வில்லாமென்று தமிழ்நூலிலும், மன்மத தந்திரமென்னும் புஷ்பம் மன்மதனுக்கு வில்லா மென்று வடநூலிலுங் கூறுமாறு உணர்க; இனி, பூ வில் எடுத்த - புஷ்பபாணங்களையுடைய கரும்புவில்லைத் தரித்த என்றுமாம். *(286)*

***4. என்னுஞ்சொலண்ணல்செவியேறநெஞ்சமெரியேறவெய்தின்***
***மொழிவான்***
***முன்னுந்தைதந்தையுரைசெய்தமேன்மையறியாய்கொலம்***
***பொன்முடியாய்***
***தன்னுந்துதேரும்வரிவில்லுமுண்டுசரமுண்டுநாளையவனே***
***உன்னுங்களத்திலவர்வானமாளவுலகாளுவிப்பனுனையே.***

*(இ - ள்.)* என்னும் சொல்-என்று (துரியோதனன்) சொன்னவார்த்தை, அண்ணல் செவி ஏற-பெருமையையுடைய கர்ணனது காதில் பட, (அதனைக் கேட்டவுடனே), (அக்கர்ணன்), நெஞ்சம் எரி ஏற- மனத்தில் கோபாக்கினி மிக, வெய்தின் - கடுமையாக, மொழிவான் - சொல்லுவான்; (என்னவென்னுளனில்.)- முன்-முன்னே [அணிவகுத்தபொழுது], உந்தைதந்தை-உனதுதந்தை யான திருதராட்டிரனது (பெரிய) தந்தையான வீடுமன், உரை செய்த-(என்னை அர்த்தரதனாகச்) சொன்ன, மேன்மை-செருக்கை, அறியாய்கொல் - அறிந்திலையோ? அம் பொன் முடியாய் - அழகிய பொன்னினாலாகியகிரீடத்தை யுடையவனே! தன் - அவ்வீடுமனது, உந்து தேர்உம்-செலுத்தப்படுகிற தேரும், வரி வில்உம் - கட்டமைந்த வில்லும், உண்டு - உள்ள; சரம் உண்டு - அம்புகள் உள்ளன; அவன்ஏ - அவ்வீடுமனே, நாளை-நாளைக்கு [இனி மேல் என்றபடி], உன்னும் களத்தில் - கருதிச்செய்யும்போரிலே, அவர் வானம் ஆள- (பாண்டவராகிய) அப்பகைவர்கள் (இறந்து) வீரசுவர்க்கமடைய, உனைஏ உலகு ஆளுவிப்பன் - உன்னையே உலகமாளும்படி செய்வான்; (எ - று.)- இதுவும், மேற்கவியும் கர்ணனது மறுமொழி. பின்னிரண்டடி -பிறகுறிப்பு. ***பி-ம்** :* செவியேறவெய்தினிடிபோலதிர்ந்து. *(287)*

***5. விற்கவ்வுவாளியடலைவர்மீதுவிடவஞ்சிவீரரெதிரே***
***புற்கவ்வுமாகில்விரைவோடுகங்குல்புலராமுன்வந்துபொருவேன்***
***சொற்கவ்வையாகநினையற்சகொன்றுசுரர்நாடளிப்பனினியுன்***
***சிற்கவ்வைதீரவவருக்குநின்றதிருமாலினுக்குமெனவே.***

*(இ-ள்.)* வில் கவ்வு வாளி - வில்லில்தொடுக்கிற அம்புகளை, அடல் ஐவர்மீதுவிட-வலிமையையுடைய பஞ்சபாண்டவர்கள்மேற் செலுத்துதற்கு, அஞ்சி - பயந்து,(அவ்வீடுமன்), வீரர் எதிரே- பலவீரர்கள் முன்னிலையிலே, புல் கவ்வும் ஆகில் -(தனது தோல்வி தோன்ற வாயினால்) புல்லைக் கௌவியெடுப்பானனால், விரைவோடு வந்து - (நான்) துரிதமாக வந்து, கங்குல் புலரா

*முன் - இராத்திரி கழிந்து விடிவதற்குமுன்னமே, பொருவேன் - [உன்பக்கத்துப்] போர்செய்வேன்; சொல் - (எனது) சொல்லை, கவ்வை ஆக நினையற்க-வீணொலியாக நினையாதிருப்பாயாக; இனி உன் சில் கவ்வை தீர- இனிமேல் உனது சில கவலைகள் நீங்கும்படி, அவருக்குஉம்- அப்பாண்டவர்களுக்கும், நின்ற திருமாலினுக்குஉம் - (அவர்களுக்கு உதவியாய்) நின்ற கண்ணனுக்கும், கொன்று சுரர் நாடு அளிப்பன் - கொன்று வீரசுவர்க்கத்தைக் கொடுத்திடுவேன், என- என்று(கர்ணன்) சொல்ல,- (எ-று.) "இம்மொழி சென்று கங்கைக்சுதனுக்கு உரைக்கவென" என அடுத்த கவியோடுதொடரும்.*

*கவ்வு, கவ்வை=கௌவு, கௌவை: முதற்போலி, தோற்றவர் வாயினாற் புல்லைக்கவ்வுதல், மரபு.கௌவை - துன்பமும். பழி மொழியுமாம். (288)*

***6. துச்சாதனாவிம்மொழிசென்றுகங்கைசுதனுக்குரைக்கவெனவே***
***நச்சாடராவையனையானுமங்கொர்நொடியுற்றபோழ்தினடவா***
***எச்சாபமன்னுமணியூகமானவிரதந்தனக்குநடுவோர்***
***அச்சாணியானவவனுக்கிவன்சொலடைவேபுகன்றனனரோ.***

*(இ-ள்.) (என்று கர்ணன் சொன்ன வார்த்தையைக்கேட்டுத் துரியோதனன் தனது அடுத்த தம்பியை நோக்கி; 'துச்சாதனா -*
*துச்சாசனனே! இ மொழி - இந்தக் கர்ணண்வார்த்தையை, சென்று - (நீ) போய், கங்கை சுதனுக்கு உரைக்க - வீடுமனுக்குச் சொல்வாயாக,' என-என்று சொல்ல,- நஞ்சு ஆடு அராவை அனையான்உம் - விஷத்தையுடையதும் (படமெடுத்து) ஆடுந் தன்மையதுமான பாம்பை யொத்த கொடிய அத்துச்சாசனனும், அங்கு - அவ்வீடுமனுள்ளவிடத்தில், ஓர் நொடி உற்ற போழ்தின் - ஒரு நொடியளவு பொருந்தினபொழுதிலே, நடவா - சென்று சேர்ந்து,-சாபம் மன்னும் - விற்கள்பொருந்திய, அணி - அழகிய, எ யூகம் ஆன - எல்லாச்சேனைகளுமாகிய, இரதந்தனக்கு - தேருக்கு, நடு - நடுவிலே, ஓர் அச்சு ஆணி ஆன - ஒரு அச்சாணியையொத்த, அவனுக்கு - அவ்வீடுமனுக்கு, இவன் சொல் - இந்தக்கர்ணனது வார்த்தையை, அடைவே புகன்றனன்-ஒழுங்காகச் சொன்னான்; (எ-று.) -அரோ - ஈற்றசை. இது-கர்ணன் கூறியதை வீடுமனிடம் தெரிவிக்குமாறு துரியோதனன் துச்சாதனனிடஞ் சொல்ல, அவன் அங்ஙனே கூறியதைத் தெரிவிக்கும்.*

*வியூகத்தையே இரதமாக உருவகஞ்செய்து, வீடுமனை அச்சாணியாக உருவகஞ்செய்தார். அச்சு - சக்கரங்கோக்கும் மரம். ஆணி - அச்சக்கரம்கழலாமல் அச்சின்நுனியில் செருகுவது. அந்த ஆணி தான் ஒன்றாய் ஓரிடத்திலிருந்து கொண்டே மிகப் பெரிய தேர்முழுவதுக்கும் ஆதாரமாயிருத்தல் போல, வீடுமன் தான் ஒருவனாய் ஓரிடத்திலிருந்து கொண்டே வில்முதலிய ஆயுதங்களையுடைய பெரியசேனை முழுவதுக்கும் ஆதாரமாயிருந்து நடத்தும் வலிமையையுடையவனென்க.*
*(289)*

***7. பேரன்புகன்றமொழிகேள்விசெய்துபெரியோன்முகிழ்த்துநகையா***
***வீரம்புகன்றெனினிநானுமக்குவிசயற்செறுத்தன்முடியா***
***தீரந்துறந்தவொருநூறுபேரைமகுடத்துணிப்பலெனவே***
***நேரன்றமர்க்கனுரைசெய்தவாய்மைநிறைவேறுநாளையுடனே.***

இதுமுதல் எட்டுக்கவிகள் - குளகம்.

*(இ-ள்.) பேரன் புகன்றமொழி-பௌத்திரனான துச்சாசனன் சொன்னவார்த்தையை கேள்வி செய்து - கேட்டலைச்செய்து (கேட்டு), பெரியோன் - பெரியபாட்டனான வீடுமன், முகிழ்த்து நகையா- சிறிதாகச்சிரித்து [புன்சிரிப்புச் செய்து], 'இனி - இப்பொழுது, நான்-, உமக்கு - உங்களுக்கு, வீரம் புகன்று- வீரவாதமானவார்த்தையைச் சொல்லுதலால், என் - என்னபயன்? விசயன் செறுத்தல் - அருச்சுனனைக் கொல்லுதல், முடியாது - (எவர்க்கும் எப்பொழுதும்) ஆகாது; ஈரம் துறந்த - (மனத்தில்) இரக்கமில்லாத, ஒரு நூறு பேரை - (துரியோதனாதியர்) நூற்றுவரையும், இனி-, மகுடம் துணிப்பல் - தலையறுத்திடுவேன், என-என்று, நேர் - (யாவர்க்கும்) எதிரிலே, அன்று- (திரௌபதியைத் துகிலுரிந்த) அக்காலத்தில் உரை செய்த - (வீமன்)சொன்ன, வாய்மை-*

*சபதவார்த்தையும், நாளை உடனே-இனி விரைவிலேயே, அமர்க்கண்- போரில், நிறைவேறும் - தவறாமல் நடந்துவிடும்;(எ-று.)-இப்பாட்டில், 'நகையா' என்பது, "குன்றுவிடைநல்கி" என அடுத்த கவியில் தொடரும். இதுவும் அடுத்த கவியும், அது கேட்ட வீடுமன் பதில்கூறி விடைகொடுத்தமையைத் தெரிவிக்கும்.*

*பாட்டன்பெயரைப் பௌத்திரனுக்கு இடுவது பெரும்பாலும் உலகமர பாதலால், அம்மகன்மகனுக்கு, பேரன் என்பது-காரணப் பெயர், வீமன் செய்த சபதத்தை "பாஞ்சாலிக் கரசவையிற்பழுதுரைத்தோனுடலெனது படையா மேழி, போஞ்சாலி னிணஞ்சொரியத் துணைவரொடு குலமாளப்பொருவன் யானே"எனக் கீழ்ச் சூதுபோர்ச்சருக்கத்திற் காண்க. மகுடம் - தலைக்கு, தானியாகுபெயர்.*
***பி - ம்:** துணிப்பனினியென்.* *(290)*

## *8. ஒருநாளுநீவிர்பொறுமின்களும்மையுலகாளுவிக்கவருவோர் வருநாடொடங்கியமர்செய்துதெவ்வைமடிவிப்பர்சொன்ன வகையே குருநாடுமற்றைவளநாடுமெய்திநுமரோடியைந்துகுழுமிப் பெருநாளிருத்துநனிவாழ்திரென்றுவிடைநல்கிவிட்டபிறகே.*

*(இ-ள்.) ஒரு நாள்உம் நீவிர் பொறுமின்கள் - (இன்னும்) ஒருநாள் மாத்திரம்நீங்கள் பொறுத்துக்கொண்டிருங்கள்; உம்மை உலகு ஆளுவிக்க வருவோர் -உங்களை உலகத்தையாளும்படி செய்ய (த் துணையாய்) வருபவர், வரு நாள்தொடங்கி - (அவ்வொருநாள்கழித்தபின்)வருகிற நாள் முதல், அமர் செய்து -போர்செய்து, சொன்ன வகைஏ - (தாம்) சொன்ன விதமாகவே, தெவ்வை மடிவிப்பர்- பகைவர்களை அழித்திடுவார்; (அதன்பின் நீங்கள்), குரு நாடுஉம் - இந்தக்குருநாட்டையும் மற்றை வளம் நாடும்உம் - வளங்களையுடைய மற்றைநாடுகளையும், எய்தி - (உங்களுக்குஉரியவையாக) அடைந்து, நுமரோடு இயைந்து - உங்களுடைய பந்துமித்திரர்களோடு சேர்ந்து, குழுமி - கலந்து, பெரு நாள் இருந்து- பலகாலம் (உயிரோடு) இருந்து, நனி வாழ்திர்-நன்றாக வாழ்வீர்,' என்று - என்றுசொல்லி, விடைநல்கி - (துச்சாதனனுக்கு) விடைகொடுத்து, விட்டபிறகு - (அவனை) அனுப்பின பின்பு,-(எ-று.)-"கண்ணுந் துயின்று" என அடுத்தகவியோடு தொடரும்.*

*இந்த எட்டுநாளும் பொறுத்தீர்கள்: இன்னும் ஒருநாள் பொறுங்கள்: பத்துநாளில் நான் அழிவேன், அதன்பின் உங்ளைக் காப்பவர் காக்கட்டும்: அவர்கள் பகைவரை அழிக்கட்டும்; நீங்கள் அரசாண்டு வெகுகாலம் க்ஷேமமாக வாழுங்களென்றன னென்பதாம். ஒருநாளும். உம் - இறந்ததுதழுவிய எச்சத்தோடு இழிவுசிறப்பு, நீவிர் - முன்னிலைப்பன்மைப்பெயர்: இது முதல் வேற்றுமைக்குமாத்திரமே வரும். 'வருவோர்' என்றது கர்ணனை; இகழ்ச்சிப்பன்மை; (291)*

***9.-இதுவும் அடுத்தகவியும்-வீடுமன்துயின்றெழுத்து போர்க்களங்குறுகி அணிவகுத்துநின்றமை கூறும்.***

## *கண்ணுந்துயின்றுதுயிலும்முணர்ந்துசிறுகாலையுள்ளகடனும் எண்ணுங்கருத்தின்வழியேயியற்றியிகன்மன்னர்சூழவரவே. மண்ணுங்குலுங்கவரையுங்குலுங்கவெழுதூளிமாதிரமுமால் விண்ணும்புதைக்கவடலாகவத்தின்மிசைசென்றுபுக்குவிரகால்.*

*(இ-ள்.) கண்உம் துயின்று-கண்மூடியுறங்கி, (இராத்திரி கழிந்தபின்), துயில்உம் உணர்ந்து - தூக்கமும் விழித்து, சிறு காலை உள்ள கடன்உம்-உதயகாலத்திற் செய்யவேண்டிய (சந்தியா வந்தனம் முதலிய) கடமைகளையும், எண்ணும் கருத்தின் வழிஏ - நினைத்தற்குக் கருவியான மனத்தின் வழியாக [மனவமைதியோடு], இயற்றி - செய்துமுடிந்து,-(பின்பு), இகல் மன்னர் சூழ வர-வலிமையையுடைய அரசர்கள் (தன்னைச்) சுற்றிலும் வரவும், (அந்தப் பாரத்தினால்), மண்உம் குலுங்க (அசலையாகிய) பூமியும் நடுங்கவும், வரைஉம் குலுங்க-(அசலமாகிய) மலைகளும் சலிக்கவும், எழு தூளி மாதிரம்உம் மால் விண்உம் புதைக்க - மேற்கிளம்பின புழுதிதிக்குக்களையும் பெரியஆகாயத்தையும் மூடவும்,*

*அடல் ஆக வத்தின்மிசை- கொடிய போர்க்களத்திலே, சென்று புக்கு-போய்ச் சேர்ந்து, விரகால் - தந்திரமாக,- (எ-று.)-"மானவுரவோன்-அணிசெய்து" என மேற்கவியோடு தொடரும். (292)*

***10.*** **நாகங்குறித்தகொடிமன்னர்மன்னைநடுவேநிறுத்தியடைவே**
**பாகங்கடோறுமொருகோடிமன்னர்பகதத்தனோடுநிறுவிப்**
**பூகம்பமாகவினமோடலம்புசனுமுன்புபோகவொருபேர்**
**யூகஞ்சருப்பதோபத்ரமாகவணிசெய்துமானவுரவோன்.**

*(இ-ள்.) நாகம் - பாம்பின்வடிவத்தை, குறித்த-எழுதிய, கொடி - துவசத்தையுடைய, மன்னர் மன்னை - ராஜராஜனான துரியோதனனை, நடுஏ நிறுத்தி - சோம மத்தியிலே நிற்கச்செய்து, அடைவுஏ - முறையே, பாகங்கள் தோறும்- எல்லாப்பக்கங்களிலும், ஒரு கோடி மன்னர் - ஒருகோடி அரசர்களை, பகதத்தனோடு- பகதத்தனுடனே, நிறுவி - நிற்கச்செய்து, பூகம்பம் ஆக- (அதிபாரத்தால்) பூமியில் நடுக்கமுண்டாம்படி, இனமோடு-(தன்) கூட்டமாகிய பல அரக்கர்களோடு, அலம்புசன்உம்- அலம்புசனென்னும் இராக்கதனும், முன்பு போக - (சேனையின்) முன்னே செல்லும்படி, சருப்பதோபத்ரம் ஒரு பேர் யூகம் ஆக - ஸர்வதோபத்ரமென்னும் ஒரு பெரிய படைவகுப்பாக, அணி செய்து - (சேனைகளை) அணி வகுத்து, மானம் உரவோன்-பெருமையையும் வலிமையையுமுடைய வீடுமன்,-(எ-று.)-"அமர்க்கண் நின்றான்" என அடுத்த கவியோடு தொடரும்.*

*சருப்பதோபத்ரம் - வடசொல்திரிபு; அதாவது - நாற்புறத்திலும் எங்கு நின்று பார்த்தாலும் ஒரேவிதமாகக் காட்சிதோன்றும்படி சேனையை வகுத்தவியூகம்; இது- சித்திரகவிகளில் ஒன்றாகவும் வழங்கும். ஒன்பதாநாட்போரின் தொடக்கத்தில் சில உத்பாதங்கள் உண்டானதாக முதனூலிற் கூறியுள்ளது; அதை இப்பாட்டில், 'பூகம்பமாக' என்றதனால் குறிப்பித்தார் போலும். (293)*

***11.- மூன்றுகவிகள்-யுதிட்டிரன்பக்கத்தார் போர்க்களங்குறுகி அணிவகுத்துநின்றமை கூறும்.***

**நின்றானமர்க்கணவரங்குநிற்கவிவரிங்குநெனனிருதன்**
**கொன்றானெனத்தன்மதலைக்கொரெண்மரெழுவோரைநீடுகொலைசெய்**
**தொன்றாகமன்னர்பலராவிகொண்டவுரவோனுமும்பர்பகைபோய்**
**வென்றானுமற்றையிளையோருமொன்றின்விரகற்றகோவுமுதலோர்.**

*(இ-ள்.) அமர்க்கண் நின்றான் - போர்க்களத்தில் நின்றிட்டான்; அவர் அங்குநிற்க - அந்தத்துரியோதனன் பக்கத்தவர்கள் அவ்வாறுநிற்க,-இங்கு - இப்பக்கத்தில்,கென்னல்-நேற்று, நிருதன்-(அலம்புசனென்னும்) இராக்கதன், கொன்றான் என-(இராவானைக்) கொன்றிட்டா னென்று, தன் மதலைக்கு - தனது (தம்பியின்)மகனான இராவானுக்காக (இரங்கி), (அதற்குஈடாக), ஒர் எண்மர் எழுவோரை (துரியோதனன் தம்பிமார்களுள்) ஒருஎட்டுப்பேரையும் (மற்றும்) ஏழுபேரையும், நீடுகொலை செய்து-பெருங்கொலைசெய்து [ஒருங்கே அழித்து], ஒன்று ஆக -(அவர்களோடு) ஒருசேர, மன்னர் பலர் ஆவி கொண்ட-(மற்றும்) பலஅரசர்களதுஉயிரைக் கவர்ந்த, உரவோன்உம்- வலிமையையுடைய வீமனும், உம்பர் பகை -தேவர்களுக்குப் பகைவரான நிவாதகவசகாலகேயர்களை, போய் வென்றான்உம் -சென்று சயித்த அருச்சுனனும், மற்றை இளையோர்உம் - மற்றைத்தம்பியரான நகுலசகதேவரும், ஒன்றின் விரகு அற்ற - ஒருவகையிலும் வஞ்சனையில்லாத, கோஉம் -தலைவனான தருமனும், முதலோர் - முதலியவர்களாகிய. இவர் - இந்தப்பக்கத்தார்,- (எ - று.) -"களத்தினிடைவந்து" என வருங் கவியோடுதொடரும்.*

*ஒன்றின்விரகற்ற - மனம் மொழி மெய் என்னுந்திரிகரணங்களின் சிந்தை சொல் செயல் என்னும் மூவகைத்தொழிலிலும் வஞ்சனையில்லாத. (294)*

***12.	மற்றுள்ளமன்னர்புடைபோதமுன்னர்மழைமேனிமாயன்வரவே***
***உற்றுள்ளவீரரொடுசேனைநாதனணிநிற்கவொண்கொயுளைமா***
***முற்றுள்ளவெங்குமெழுபூழிதுள்ளளமுரசங்கடுள்ளமிகவுஞ்***
***செற்றுள்ளமேவுகனறுள்ளவந்துசெருவெங்களத்தினிடையே.***

*(இ-ள்.) மற்று உள்ள மன்னர் - மற்றுமுள்ள அரசர்கள் பலர், புடை போத -பக்கங்களில் வரவும், மழை மேனி மாயன்-நீல மேகம் போலுந் திருமேனியையுடைய கண்ணன், முன்னர்வர - முன்னேசெல்லவும், உற்றுள்ள வீரரொடு - கூடப்பொருந்தியுள்ள வீரர்களுடனே, சேனை நாதன் - (தன்) சேனைத்தலைவனான திட்டத்துய்மன், அணி நிற்க - படை வகுப்பின் முன்னே நிற்கவும், ஒள்கொய் உளை மா - பிரகாசமான கத்திரிக்கப்பட்ட பிடரிமயிரையுடைய குதிரைகள், முன் துள்ள- முன்னேகுதித்துச் செல்லவும், எழு பூழி - மேலேழுகிற புழுதி, எங்கும் துள்ள - எல்லாவிடத்தும் பரவவும், முரசங்கள்-யுத்தபேரிகைகள், மிகஉம் துள்ள-மிகுதியாக ஒலிக்கவும், செற்று உள்ளம் மேவு கனல்-கோபித்து மனத்*
*திற்பொருந்திய தீ [கோபாக்கினி], துள்ள - மூண்டெரியவும்,- வெம் செரு களத்தினிடைவந்து- கொடிய போர்க்களத்திலே வந்து,-(எ-று.)-"அமராடலுற்ற பொழுது" என வருங் கவியோடு தொடரும்.* **சொற்பொருட்பின்வருநிலையணி.**

*(295)*

***13.	செம்பற்ப ராக முடிமா மதாணி செறிதொங்கல்***
***வாகுவலயம்***
***பைம்பற்ப ராக மலர்வல்லி யோடு திருமேனி சோதி***
***பயில்வான்***
***வெம்பற்ப ராக வரையூக மாக முறையால ணிந்து***
***வெயில்கால்***
***அம்பற்ப ராக பதியென்ன நிற்க வமராட லுற்ற***
***பொழுதே.***

*(இ-ள்.) செம்-சிவந்த, பற்பராகம் - பதுமராகத்தினங்களைப் பதிக்கப்பெற்ற, முடி-கிரீடமும், மா-சிறந்த, மதாணி-பதக்கம், செறி-பொருந்திய, தொங்கல்- ஆரங்களும், வாகு வலயம் - தோள்வளைகளும், பை-குளிர்ந்த, ராகம் பற்பம் மலர்-செந்தாமரைப்பூவிலே (வீற்றிருக்கிற), வல்லியோடு - பூங்கொடி போல்மெல்லிய திருமகளுடனே, திரு மேனி-(தன்னுடைய) அழகிய வடிவத்தில், சோதி பயில்வான் - ஒளிவிளங்கப்பெற்றவனாகிய கண்ணபிரான்,-வெம்,- (பகைவர்களுக்குப்) பயங்கரமானதும், ராகம் - (தம்மவர்க்கு) ஆசையை (வளர்ப்பதும்), வரை- மலைபோல (எதற்குஞ் சலியாததுமாக வுள்ள), பற்பயூகம் ஆக-பத்மயூகமாக, முறையால்-ஒழுங்காக, அணிந்து-(பாண்டவசேனையைப்) படைவகுத்து,-வெயில் கால்-உஷ்ண கிரணத்தை வீசுகிற, அம் பற்பம் ராகம் பதி என்ன - அழகிய தாமரைக்கு அன்புள்ள கணவனான சூரியன்போல, நிற்க- விளங்கிநிற்க,-அமர் ஆடல் உற்ற பொழுது - (எதிரிகளோடு) போர்செய்யத் தொடகினபொழுது,- (எ-று.)-"அலம்புசன் வந்தனன்" என அடுத்த கவியோடு முடியும்.*

*எம்பெருமானது திருமேனியில் கிரீடம் முதலிய ஆபரணங்களும் இலக்குமியும் விளங்குந் தன்மையை முன் இரண்டடிகளில் விவரித்தார். சூரியனைக்கண்டமாத்திரத்தில் மலர்தலும், காணாதபொழுது குவிதலுமாகிய இயல்புபற்றித்தாமரைக்குச் சூரியனைக் கணவ னென்றல், மரபு. முதலடியில், பற்பராகம் -பத்மராகம் என்னும் வடமொழித் திரிபு; நவரத்தினங்களுள் மாணிக்கத்தின்வகைகளில் ஒன்று, பதுமம் - செந்தாமரைமலர் போன்ற, ராகம் - செந்நிறமுள்ளதுஎன்று காரணப்பெயர். மதாணி - பேரணிகலனென்பர். பாஹு வலயம்- வடசொற்றொடர். பின் மூன்று அடிகளிலும், பற்பம் - என்னும் வடமொழித் திரிபே,ராகம் என்னும் வடசொல்லுக்கு - இரண்டாம் அடியில் செந்நிறமென்றும், மூன்றாம்அடியில் ஆசையென்றும், நான்காம் அடியில் அன்பென்றும் பொருள். பைம்பற்பம்-வாடாமல் பசுமையாகவுள்ள தாமரை யென்றுமாம். வல்லி-கொடிபோன்றபெண்ணுக்கு உவமவாகுபெயர். மூன்றாமடியில்*

*பற்பராகவரையூகம் என்றே எடுத்து- பற்பராகமணிதோன்றுதற்குஇடனாக வரைவடிவான வியூகம் [அசலவியூகம்] என்றலும் ஒன்று. (296)*

வேறு.

### *14.-வீமனுடன்பொர அலம்புசன் வருதல்.*

***இந்திரனு மேனையிமை யோர்களு நடுங்க***
***வந்தரமு மெண்டிசையு நின்றதிர வதிரா***
***வெந்திறல லங்கல்புனை வீமனுடன் மலைவான்***
***வந்தனன லம்புசன் லம்புனைபு யத்தான்.***

*(இ-ள்.) வலம் புனை புயத்தான்-பலத்தைக்கொண்ட தோள்களையுடையவனாகிய, அலம்புசன்- அலம்புசனென்னும் அரக்கன்,- இந்திரன்உம் ஏனை இமையோர்கள்உம் நடுங்க - தேவேந்திரனும் மற்றைத்தேவர்களும், நடுக்கமடையவும், அந்தரம்உம் எண் திசை உம் நின்று அதிர-மேலுலகமும் எட்டுத்திக்குக்களும்மிக அதிர்ச்சி பெறவும், அதிரா- கர்ச்சனைசெய்துகொண்டு, வெம் திறல் அலங்கல் புனை வீமனுடன் மலைவான்- கொடியபோருக்கு (அடையாளமாகத் தும்பைப்பூ) மாலை சூடிய வீமனுடனே போர்செய்வதற்கு, வந்தனன்-,(எ - று.)-வலம் - வடசொல் திரிபு.*

இதுமுதல் பதினைந்து கவிகள்-கீழ் முதற்போர்ச்சருக்கத்தின் ஐம்பதாங்கவி போன்ற ***கலிவிருத்தங்கள்.*** *(297)*

### *15.-அலம்புசன்வருவதுகண்டு வீமன் தேரினின்று இறங்கி அவ்வரக்கனெதிரே யோடுதல்.*

***செருவில்வெருவாநிருதசேகரன்வயப்போர்***
***மருவுசுடர்வாளினுடன்வந்தநிலைகாணா***
***விரவிவருதேரனையதேரின்மிசையிழியா***
***வுருமுருமெனாவிரைவினோடியெதிர்வந்தான்.***

*(இ-ள்.) செருவில் வெருவா - போரில் அஞ்சாத, நிருதசேகரன் - அரக்கர்களுக்குமுடியணிபோலச்சிறந்தவனான அலம்புசன், வய போர் மருவு- வலியபோரைச்செய்தற்குப்பெருந்திய, சுடர் வாளினுடன் - ஒளியையுடைய வாளாயுதத்துடனே,வந்த- (தன்னையெதிர்த்து) வந்த, நிலை-நிலைமையை, காணா- பார்த்து,- (வீமன்)இரவி வரு தேர் அனைய தேரின் மிசை இழியா-சூரியன் வருகிற தேரையொத்த(தன்) தேரின் மேல் நின்றுஇறங்கி, உரும் உரும் எனா-(காண்பவர்) இடி இடிஎன்றுசொல்லும்படி, விரைவின் எதிர் ஓடிவந்தான் - வேகமா (அவ்வரக்கனது)எதிரில்ஓடிவந்தான்;(எ-று.)-அடுக்கு-அச்சம்பற்றியது - இரவிவருதேர்தடைப்படாதுவிரைந்துசெல்லுதற்கு உவமை. (298)*

### *16.-வீமன் அலம்புசனுடைய ஒருதோளைத் துணித்தல்*

***யாளியொரிரண்டிகல்புரிந்ததெனவிகலா***
***மீளிமையினாலும்வலியாலும்விறன்மிக்கோன்***
***வாளின்மிசைவாளதனைவைத்தடலரக்கன்***
***றோளிலொருதோணிலனுறும்படிதுணித்தான்.***

*(இ-ள்.)(இவ்விருவரும்), யாளி ஓர் இரண்டு இகல்புரிந்தது என - ஓர் இரண்டுயாளிகள்*

*(ஒன்றோடொன்று) போர்செய்ததுபோல, இகலா - (தம்மில்)போர்செய்ய,-(பின்புஅப்போரில்), மீளிமையினால்உம் வலியால்உம் விறல் மிக்கோன் - பராக்கிரமத்தாலும் தேகபலத்தாலும் சிறப்புமிகுந்த வீமன், வாளின்மிசைவாள் அதனை வைத்து- (அப்பகைவனது) வாளின் மேல்(தன்) வாளை வைத்து, (தாக்கி அதைத் துணித்து), அடல் அரக்கன்தோளில் ஒரு தோள் நிலன் உறும்படி துணித்தான்-கொடிய அவ்விராக்கதனது தோள்களில் ஒருதோளையும் தரையிலே விழும்படி வெட்டித் தள்ளினான்; (எ-று.)-யாளி - சிங்கம், வேறொருவிலங்குமாம். (299)*

*17.- அலம்புசன் 'மற்போர்புரிக' என்று வீமனை நெருங்குதல்.*

***அற்றதிரடோடுணியவச்சமறவேநின்***
***றுற்றுழியும்வாளுரகமென்னவுளனாகி***
***மற்றையொருதோளின்மிசைதட்டியினிமற்போர்***
***பற்றுகெனவீமனுடல்பற்றுபுபுகுந்தான்.***

*(இ-ள்.) அந்த - (இவ்வாறு வீமனால்) அறுக்கப்பட்ட, திரள்தோள் - திரண்ட (தனது) ஒரு தோள், துணிய - துண்டித்து, விழவும,ு (அவ்வரக்கன்), அச்சம் அறஏ நின்று - பயமில்லாமலே சலியாமல்நின்று, உற்றஉழி உம் - (அத்)துன்பம் நேர்ந்தவிடத்தும், வாள் உரகம் என்ன உளன் ஆகி - கொடியபாம்புபோல (ச் சீற்றத்தை)உடையவனாய், மற்றை ஒரு தோளின் - மற்றொரு தோளினால், மிசை தட்டி-(உடம்பின்)மேல் தட்டிக்கொண்டு, இனிமல் போர் பற்றுக என-'இனி மற்போர்தொடங்குவாயாக' என்று (வீமனை நோக்கிச் சொல்லி), வீமன் உடல் பற்றுபு புகுந்தான் - அவ்வீமனது உடம்பைத் தொடர்ந்து நெருங்கினான்; (எ-று.)*

*உற்றுழி, பற்றுகென-தொகுத்தல் விகாரம், பற்றுபு செய்பு என்னும் வாய்பாட்டுத் தெரிநிலை வினையெச்சம், 'பு' விகுதியே இறந்தகாலங் காட்டும். உளனாகி - கையையுடையவனாயென்பாருமுளர். (300)*

*18.-வீமனும் அலம்புசனும் கடுமையாக மற்போர்புரிதல்.*

***குத்துவர்திரிப்பரிருகுன்றனையதோள்கொண்***
***டொத்துவர்வயப்புலிகளென்னவுடனோடித்***
***தத்துவருரத்தொடுரமூழ்கமுதுதகர்போன்***
***மொத்துவர்சினத்தொடெதிர்முட்டுவர்சிரத்தால்.***

*(இ-ள்.) (இவ்விருவரும் ஒருவரையொருவர்), குத்துவர் - (கையால்) குத்துவார்கள்; திரிப்பர் - (எடுத்து)ச் சுழற்றுவார்கள்; இரு குன்று அனைய தோள் கொண்டு - இரண்டுமலையையொத்த தோளால், ஒத்துவர் - மோதுவார்கள்; வய புலிகள் என்ன - வலிமையையுடைய புலிகள்போல, உடன் ஓடி-விரைந்து ஓடிவந்து,*
*உரத்தொடு உரம் மூழ்க-மார்போடு மார்பு அழுத்து, தத்துவர் -பாய்வார்கள்; சினத்தொடு - கோபத்தோடு, மொத்துவர் - அடிப்பார்கள் முது தகர்போல் - பெரிய ஆட்டுக்கடாக்கள்போல, சிரத்தால் எதிர் முட்டுவர் - தலையால் எதிரில் தாக்குவார்கள்; (எ-று.) எதிர்க்கும்போது இருவர் தோளும் இருகுன்றனைய என்றபடி.*

*19. அரக்கன் மற்போரில் தோற்று வில்லெடுக்க,*
*இருவரும் விற்போர் புரிதல்.*

***மல்வலியழிந்துபிறைவாளெயிறரக்கன்***
***வில்வலியறிந்திடுதுமென்றுவிலெடுத்தான்***
***கல்வலியதோள்விடலைகன்றிவிலெடுத்தான்***
***தொல்வலியினோடிவருங்கணைதொடுத்தார்.***

*(இ-ள்.) மல் - (அங்ஙனஞ்செய்து) மற்போரில், பிறை வாள் எயிறு அரக்கன் - பிறைச்சந்திரன்போன்ற கூர்மையான பற்களையுடைய அலம்புசன், வலி அழிந்து- பலமொடுங்கி, வில் வலி அறிந்திடுதும் என்று - '(இனி) விற்போரில் (நமக்குள்ள) வலிமையை அறிவோம்' என்று சொல்லி, வில் எடுத்தான் - (அவ்வொற்றைக்கையில்) வில்லை யெடுத்துக்கொண்டான்; கல்வலியதோள் விடலை- கற்போல்வலிமையுடைய தோள்களையுடைய வீரனான வீமனும், கன்றி - கோபித்து, வில் எடுத்தான்-; (உடனே), தொல் வலியினோடு - பழமையான [முதிர்ந்த] பலத்துடனே, இருவர்உம்- இந்தஇரண்டு பேரும், கணை தொடுத்தார்- அம்புகளைத் தொடுத்தார்கள்; (எ - று.)*

*ஒருகையற்று மற்றொருகையில் வில்லையேந்திய அரக்கன் பற்களால் அம்பையெடுத்துத் தொடுத்து விடுத்தா னென அறிக; அதைக்குறிப்பிக்கவே, 'எயிறரக்கன்' என்றார்: முதற்போர்ச்சருக்கத்தின் 28 ஆம் பாட்டை இங்கே காண்க.எயிறரக்கன் - சிறுபான்மை வேற்றுமையில் உயிர்த்தொடர் றகர வொற்று இரட்டாதுநின்றது. விடலை - ஆண்பாற்சிறப்புப்பெயர். (302)*

### *20.-வீமஅலம்புசரின் போர்த்திறனைத் தேவர்கள் கொண்டாடுதல்.*

***கணைகளவையொன்றினுடனொன்றெதிர்கடித்துப்***
***பிணைபடவிழுந்தசெயல்கண்டுநனிபேதுற்***
***றிணையிலதிவர்க்கினியிரண்டனிகினிக்கும்***
***புணையுமிவரென்றனர்புரந்தரனொடிமையோர்.***

*(இ-ள்.) கணைகள் அவை - (இரண்டுபேரும் பிரயோகித்த) அம்புகள், ஒன்றினுடன் ஒன்று எதிர்கடித்து- ஒன்றோடொன்று எதிரிலே கௌவிக்கொண்டு, பிணை பட விழுந்த - இரண்டும் ஒரு படியாகக் கீழ்விழுந்திட்ட, செயல் - செய்கையை, கண்டு - பார்த்து, நனி பேது உற்று-மிகுதியாக மதிமயக்கத்தையடைந்து [திகைத்து], புரந்தரனொடு இமையோர் - (போர்காண வானத்து வந்த) இந்திரனும் (மற்றைத்) தேவர்களும், 'இவர்க்கு இனிஇணை இலது -இவ்விருவர்க்கும் வேறு உவமையில்லை; இரண்டு அனி*
*கினிக்கும்உம் - இரண்டுசேனைகளுக்கும், புணைஉம் - (போர்க்கடலைக்கடக்கத்) தெப்பமாகவுள்ளவர்களும், இவர் - இவர்களே,' என்றனர் - என்றுசொல்லிக் கொண்டாடினார்கள்; (எ-று.)-பிணைபட - ஒன்றோடொன்றுகலக்க. (303)*

### *21.-இதுமுதல்ஐந்துகவிகள்-வீமஅலம்புசர்புரிந்த கடும்போரில் வீமனால் அரக்கனுயிரழிய மற்றையரக்கர்கள் கெட்டமையைக் கூறும்.*

***மலையினையும்வாசுகியையும்பொருவுநாணுஞ்***
***சிலையுமறமேலொருசெழுங்கணைதொடுத்தான்***
***தொலைவில்பகையானபகன்மார்புமிருதோளுங்***
***குலைகுலையுமாறுபலகுத்தினுயிர்கொண்டான்.***

*(இ - ள்.) தொலைவு இல் - அழிதலில்லாத, பகை ஆன - பலஉயிர்களுக்குப்) பகைவனான), பகன்- பகாசுரனது,மார்புஉம்-, இரு தோள் உம்-, குலைகுலையும் ஆறு - நடுநடுங்கி அழியும்படி, பலகுத்தின் - (ஆயுதமில்லாமல்) பல கைக்குத்துக்களால், உயிர்கொண்டான்-அவனுயிரை(முன்பு) பறித்தவனான வீமன், (அவன் தம்பியான அலம்புசனது), மலையினைஉம் வாசுகியைஉம் பொருவும் சிலை உம் நாண்உம் - (சிவபிரானுக்கு வில்லாகிய) மேருவையும் (வில்நாணியாகிய) வாசுகியையும் ஒத்த வில்லும் நாணியும், அற-துணிபடும்படி, மேல்- அவனெதிரிலே, ஒரு செழு கணை தொடுத்தான் - சிறந்த ஒரு அம்பைச் செலுத்தினான்; (எ-று.)*

*இரண்டாம்போர்ச்சருக்கத்து "மேருவை வளைத்து நெடு வாசுகி பிணித்து" என்றது காண்க. இனி, முதலடிக்கு - மந்தர மலையையும் அதைச் சுற்றிக் கடைகயிறான வாசுகியையும் ஒத்த எனப்பொருள் கொள்ளுதலும் ஒன்று. மலையினைப் பொருவும் சிலையும், வாசுகியைப் பொருவும் நாணும் என மாறவேண்டுதலால், பெயர்களும் பெயர்ப்பயனிலைகளுமாய் நின்ற* ***எதிர்நிரனிறைப்***

**பொருள்கோள்.** குலைகுலைதல்- இரட்டைக்கிளவி, குத்து - முதனிலைத் தொழிற்பெயர். **பி - ம்** : *நனிகுத்தி.* *(304)*

***22. மந்தரமுமந்தரமுமென்னவமர்மலைவா
னந்தரமிதல்லவெனவந்தரநெறிப்போய்க்
கந்தரநெடுங்கிரகரத்தினிலெடுத்தச்
சுந்தரன்வயங்குதிரடோடனிலெறிந்தான்.***

*(இ-ள்.)* மந்தரம்உம் மந்தரம்உம் என்ன - இரண்டுமந்தர மலைகள்(இருந்து அவை ஒன்றோடொன்று போர்செய்தாற்)போல,அமர் மலைவான்-(வீமனுடன்) போர்வெய்பவனான அலம்புசன், இது அந்தரம் அல்ல என-இப்படிப் போர்செய்தல் (வெல்வதற்கு) உபாய மன்றென்று கருதி, அந்தரம் நெறி போய்-ஆகாச மார்க்கத்திற் சென்று, கந்தரம் நெடு கிரி - மேகங்கள் தவழும்படியான பெரிய ஒருமலையை, கரத்தினில் எடுத்து-ஒற்றைக்கையில் எடுத்து, அ சுந்தரன் வயங்கு, திரள் தோள்தனில் எறிந்தான் - அழகிய அந்த வீமனது விளங்குகிற வலியதோளின்மேல் வீசியெறிந்தான்; (எ - று.) மந்தரமும் மந்தரமு மென்ன - **இல்பொருளுவமை;** இருவரும் வலிமையில் ஒத்தவரென்பதை விளக்கும். இதல்ல - ஒருமைப்பன்மைமயக்கம். இது அந்தரமல்ல என - இந்தப்பூமி(நாம் போர் செய்தற்கு ஏற்ற) இடமல்லவென்று எண்ணி எனினுமாம். சுந்தரம்-நீரைத்தரிப்பது: மேகம்: வடசொல். இனி, சுந்தரம் - குகையுமாம். **பி - ம்** : எடுத்துச். *(305)*

***23. எறியுமளவிற்குரிசிலிளவறிருமைந்தன்
குறியினொடுவெஞ்சிலைகுனித்தருகுநின்றான்
பொறியிலவன்வீசியபொருப்பொரணுவாகி
முறியும்வகைபல்பகழிமுகிலெனவிடுத்தான்.***

*(இ-ள்.)* எறியும் அளவில்-(அரக்க) மலையை வீமன்தோளில்) வீசிய அளவில்,-குறியினொடு வெம் சிலை குனித்து அருகு நின்றான் - (வீமனுக்குத் துணைசெய்யுங்) கருத்தோடு கொடியவில்லைவளைத்து அவனருகில் நின்றவனாகிய, குரிசில் இளவல் திரு மைந்தன் - அவ்வீமராசனது தம்பியான அருச்சுனனது சிறந்த புத்திரனான அபிமந்யு, பொறியில் அவன் வீசிய பொருப்பு ஓர் அணு ஆகி முறியும் வகை-(வீமனது) தோளில் அவ்வரக்கன் எறிந்த அந்தமலை ஒரு சிறுபொடியாய் அழியும்படி, பல் பகழி-பல அம்புகளை, முகில் என- மேகம் (மழைபொழிவது) போல, விடுத்தான் - செலுத்தினான்; (எ-று.)

குறியினொடு - இலக்கை எதிர்நோக்கி என்னவுமாம். பொறி இலவன் எனஎடுத்து,(ஒருதோளாகிய) உறுப்பில்லாதவ னென்றும், அறிவற்றவனென்றும், (இனிவாழும்,விதிஇல்லாதவனென்றும் கொள்ளினுமாம். *(306)*

***24. வில்லபிமன்வெங்கணைகள்விசையொடவனெறியுங்
கல்லசலநீறுபடுவித்ததிறல்கண்டே
கொல்லவினிவேண்டுமெனவெய்யதொருகூர்வேல்
வல்லடலரக்கனகன்மார்பின்மிசைவிட்டான்.***

*(இ-ள்.)* வில் அபிமன் வெம் கணைகள்-விற்போரில்வல்ல அபிமனது வெவ்விய அம்புகள், விசையொடு-வேகத்தோடு, அவன் எறியும் கல் அகலம் நீறு படுவித்த - அவ்விராக்கதன்(தன்மேல்) வீசின கல்மலையைப் பொடிபடச்செய்த, திறல்-வல்லமையை, கண்டு - பார்த்து,- (வீமன்), இனி கொல்லவேண்டும் என-'இனி இவ்வரக்கனைக் கொன்றுவிடவேண்டும்' என்று கருதி, வெய்யது ஒரு கூர் வேல் - கொடியதொரு கூர்மையையுடைய வேலாயுதத்தை, வல் அடல் அரக்கன் அகல் மார்பின்மிசை விட்டான்-மிகுந்தவலிமையையுடைய அலம்புசனது பரந்த மார்பின்மேல் எறிந்தான்;(எ-று.)

*அசலத்திற்குக் கல்என்ற அவசியமில்லாத அடைமொழி கொடுத்தது. அதன் உறுதியைக் குறிக்கும். வல் அடல் - ஒரு பொருட்பன்மொழி, விட்டான் என்பதற்கு - (வீமன்) தோன்றா எழுவாயாதலை, மேல்27 - ஆம் பாட்டால் அறிக. விசையொடு நீறுபடுவித்த என இயையும்; விரையொடு எறியும் என இயைப்பினும்மையும். (307)*

***25. விட்டவடிவேலுருவவேலுருவுமுன்னே***
***பட்டவனும்வீழவிருபாலும்வருசேனை***
***முட்டவுமிவன்கணைமுனைக்கெதிரிலக்காய்க்***
***கெட்டனர்நிசாசரர்கள்கிரிகளெனவீழ்ந்தார்.***

*(இ-ள்.) விட்ட - (வீமன்) எறிந்த, வடி வேல் - கூர்மையான வேலாயுதம், உருவ - (அவ்வரக்கனுடம்பைத்) துளைக்க, வேல் உருவும் முன்ஏ - அவ்வேல் (அங்ஙனம்) ஊடுருவுதற்கு முன்னே [ஊடுருவினவளவிலே என்றபடி], அவன்உம் - அந்த அலம்சுனும், பட்டு வீழ - இறந்து கீழ்விழ, இருபால்உம் வரு சேனைமுட்டஉம் - (அவ்வரக்கனது) இரண்டு பக்கத்திலும் உடன்வந்த சேனைமுழுவதும், இவன் கணை முனைக்கு எதிர் இலக்கு ஆய் - இவ்வீமனது அம்புநுனிக்கு எதிர்ப்பட்ட லக்ஷ்யமாகி,நிசாசரர்கள்-(அச்சேனையிலுள்ள பல) இராக்கதர்கள், கெட்டனர் - அழிந்தவர்களாய், கிரிகள் என வீழ்ந்தார்-(சிறகு அறுபட்ட) மலைகளைப்போல விழுந்திட்டார்கள்; (எ-று.)*

*நிசாசரர் - இராத்திரிகாலத்திற் சஞ்சரிப்பவர்; காரணப் பெயர்; நிசிசாரெனவும் வரும்:வடசொல்: அரக்கர்க்குப்பகலினும் இரவில் வலிமை மிகுதி, முட்டவும் - நெருங்கித்தாக்கவும் எனினுமாம். முட்ட=முற்ற ஆய் -ஆக எனத் திரித்தலுமாம். (308)*

***26.-வீமன் கதாயுதத்தாற் பலரை மாய்த்தல்.***

***ஆறுபடிநூறுபடியாயிரமரக்கர்***
***மாறுபடுபாடைவடமன்னரொருகோடி***
***யூறுபடவெங்கதைகொடன்றவனுடைக்கச்***
***சேறுபடுமூளைகடெறித்தனசிரத்தால்.***

*(இ-ள்.) ஆறு படி நூறு படி ஆயிரம் அரக்கர் - அறுநூறாயிரம் இராக்கதர்களும், மாறுபடு பாடை வட மன்னர் ஒரு கோடி - (ஒருவரோடொருவர்) பேதப்பட்ட பாஷைகளையுடைய வடதேசத்திலுள்ள அரசர்கள் ஒரு கோடிபேரும், ஊறு பட - காயப்படும்படி, அவன் - அவ்வீமன், அன்று-அப்பொழுது, வெம் கதை கொடு,-கொடியகதாயுதத்தால், உடைக்க - பிளக்க,- (அவர்களுடைய), சிரத்தால் - (பிளந்த) தலைகளால், சேறு படும் மூளைகள் தெறித்தன- சேறாகப்பொருந்திய மூளைகள் வெளிச்சிந்தின;*

*படி - அளவு, மடங்கு - ஆறுபடி நூறு - ஆறளவுகொண்ட நூறு: அறுநூறு: அவ்வளவு கொண்ட ஆயிரம் - ஆறுபடிநூறு படியாயிரம் [அறுநூறாயிரம்], படிதல்-அமைதல்என்பாருமுளர். பாடை-பா **பி-ம்** : மூளைகடிறந்தனர். (309)*

***27.-தேவர்கள் வீமனைப் புகழ்தல்.***

***முற்பகலின்மைந்தனைமுருக்கியவரக்கன்***
***பிற்பகலில்வீழவடிவேல்கொடுபிளந்தான்***
***சொற்பகலிலானிளவலசென்றனர்துதித்தார்***
***அற்பகலிலாவுலகில்வாழமரரெல்லாம்.***

*(இ-ள்.) (அப்பொழுது), அல் பகல் இலா உலகில் வாழ் அமரர் எல்லாம் - (இவ்வுலகிற்போல) இராத்திரியும் பகலுமில்லாத சுவர்க்கலோகத்தில் வாழ்கிற தேவர்கள் யாவரும், 'முன் பகலில்-*

*முந்தினநாளிலே, மைந்தனை - அருச்சுனன் மகனான இராவானை, முருக்கிய-கொன்ற, அரக்கன்- அலம்புசன், பின்பகலில்- அடுத்தநாளிலே, வீழ-இறந்துவிழும்படி, சொல் பகல் இலான் இளவல்- (சொன்ன) சொல் மாறுதலில்லாத தருமனுக்குத் தம்பியான் வீமன், வடிவேல் கொடு பிளந்தான் - கூர்மையான வேலாயுதத்தால் (அவனைப்) பிளந்திட்டான்,' என்றனர் - என்று சொல்லி, துதித்தார்- (வைரந்தீர்த்த வீமனது திறமையைக்) கொண்டாடினார்கள்;(எ-று.)*

*சூரியனது உதய அஸ்தமனங்களாலாகிய பகல் இரவு என்னும் காலவேறுபாடுகள் அச்சூரியமண்டலத்துக்கு மிகமேலுள்ள தேவலோகத்தில் இல்லையாதலால், 'அற்பகலிலா வுலகு' எனப்பட்டது. மூன்றாமடியில், பகல்-பகுதல்: தொழிற்பெயர்: பகு - பகுதி, அல் - விகுதி. முற்பகல், பிற்பகல் என்பன-இங்கே, ஒருபகலின் முன்பின்பகுதியை உணர்த்துவன அல்ல: "முற்பகல் செய்தான் பிற்பகல் தன்கேடு, பிறன்கேடு தன்கேடு பிற்பகற்கண்டுவிடும்" என்ற திருக்குறள் இங்குக் காணத்தக்கது (310).*

***28.-அருச்சுனன்பாற் பல மன்னர் மடிதல்.***

**காசியர்கள் சேதியர்கண் மாளவர்க லிங்கர்**
**பூசலிடை யேழுபதி னாயிரவர் பொங்கிக்**
**கேசவ னடாவுகிளர் தேர்கெழு சுவேத**
**வாசியுடை யான்விசயன் வாளியின்ம டிந்தார்.**

*(இ-ள்.) காசியர்கள் - காசிநகரத்தாரும், சேதியர்கள்- சேதிநாட்டாரும், மாளவர் - மாளவதேசத்தவரும், கலிங்கர்-கலிங்க நாட்டவரும் ஆகிய, ஏழு பதினாயிரவர் - ஏழு பதினாயிரம்பேர், பூசலிடை - போரிலே, பொங்கி - உக்கிரமாகஇருந்து (கடும்போர்செய்து),-கேசவன் நடாவு-கண்ணன் செலுத்துகிற, கிளர்தேர்-விளங்குகிற தேரில், கெழு-பொருந்திய, சுவேதவாசி உடையான்- வெள்ளைக்குதிரைகளையுடையவனாகிய, விசயன் - அருச்சுனனது. வாளியின் - அம்புகளால், மடிந்தார் - இறந்தார்கள்: (எ-று.)*

*நான்குவெள்ளைக்குதிரைகள் பூட்டியதொரு சிறந்ததேர், அக்கினிதேவனால் அருச்சுனனுக்குக் காண்டவதகனகாலத்தில் அளிக்கப்பட்டது: இவ்வெள்ளைப்பரிகளை யுடைமையால், 'சுவேத வாகநன்' என்று அருச்சுனனுக்கு ஒருபெயர். ஸ்வேதவாஜ - வட மொழித்தொடர். கெழு- சாரியையுமாம். (311)*

வேறு

***29. தம்சேனை அழிதல்கண்டு வீடுமன் சினந்து போர்க்குச் செல்லுதல்.***

**துரகத் தடந்தேர்ந் தனஞ்சயன்கை வரிவெஞ் சாபஞ்**
**சொரிகணையா**
**லுரகத் துவசன் பெருஞ்சேனை யொருசா ருடைய வொருசாரிற்**
**சருகொத் தனில குமரன்கைத் தண்டா லுடையக் கண்சிவந்து**
**கருகித் திருகி மேனடந்தான் கங்கா நதியா டிருமைந்தன்.**

*(இ-ள்.) துரகம் - குதிரைகள்பூட்டிய, தட - பெரிய, தேர் - தேரையுடைய, தனஞ்சயன் - அருச்சுனனது, கை-கையிற்பிடித்த, வரி - கட்டமைந்த, வெம் சாபம் - கொடிய வில், சொரி-பொழிந்த, கணையால் - அம்புகளால், உரகம் துவசன் பெரு சேனை-பாம்புக் கொடியனான துரியோதனனது பெரியசேனை, ஒரு சார்- ஒருபக்கத்தில், உடைய - அழியவும்,-ஒரு சாரில் - மற்றொருபக்கத்தில், அனிலகுமரன் கை தண்டால் - வாயுகுமாரனான வீமனதுகையிலுள்ள கதாயுதத்தால், சருகு ஒத்து - (பெருங்காற்றிற்பட்ட) உலர்ந்த இலைகள்போல, உடைய - துரியோதனசேனைகள்) அழியவும்,- (கண்டு), கங்காரகநதியாள்*

*திரு மைந்தன் - கங்கைநதியின் சிறந்தபுத்திரனான வீடுமன், (கோபத்தால்,) கண் சிவந்து-கண்கள் செந்நிறமடைந்தும், கருகி - முகங்கறுத்தும், திருகி - மாறுபட்டு, மேல் நடந்தான் - (எதிரிகள்) மேல் போருக்குச் சென்றான்; (எ-று.)-கருகி - மனந்தவித்து என்றுமாம்.*

*இதுமுதற் பதின்மூன்று கவிகள் - கீழ் நான்காம்போர்ச் சருக்கத்தின் இருபத்து மூன்றாங்கவிபோன்ற* ***அறுசீர்க்ககழிநெடிலடி ஆசிரியவிருத்தங்கள்-***

*(312)*

***30.-வீடுமன்முதலோர் பாஞ்சாலர் முதலானாரோடு பொருதல்.***

**பட்டக்களிற்றுப்பாய்புரவிப்பைம்பொற்றடந்தேர்ப்பாஞ்சாலர்**
**திட்டத்துய்மன்முதலானோர்சிகண்டியுடனேயெதிர்தோன்ற**
**வட்டக்கவிகைவீடுமனுமன்னற்கிளையகாளையரு**
**மெட்டுத்திக்கிற்காவலருமவரோடெய்தியிகல்செய்தார்.**

*(இ-ள்.) (அப்பொழுது), பட்டம் களிறு-நெற்றிப்பட்டத்தையுடைய யானைகளையும், பாய் புரவி - பாய்ந்துசெல்லுங் குதிரைகளையும், பைம் பொன் தடதேர் - பசும்பொன்னாலாகிய பெரிய தேர்களையுமுடைய, பாஞ்சாலர் - பாஞ்சாலதேசத்து அரசர்களாகிய, திட்டத்துய்மன் முதலானோர் - திருஷ்டத்யும்நன் தலியவர், சிகண்டியுடன்ஏ எதிர் தோன்ற - சிகண்டியோடு எதிரில் வர,-வட்டம் கவிகை வீடுமன்உம் - வட்டவடிவமான குடையையுடைய பீஷ்மனும், மன்னற்கு இளைய காளையர்உம் - துரியோதனராசனுக்குத் தம்பியான வீரர்களும், எட்டு திக்கில் காவலர்உம் - எட்டுத்திசையினின்றும் (வந்துள்ள மற்றும் பல) அரசர்களும், அவரோடு எய்தி இகல் செய்தார் - அவர்களோடு நெருங்கிப் போர்செய்தார்கள்;(எ-று.) (313)*

***31.-வீடுமன்கணையால் பாஞ்சாலரிற்பலர்***
***தமதுவாகனங்களோடு படுதல்.***

**வரிவெஞ்சிலைக்கைக்கௌரவர்க்குமுதலாமுதல்வன்வடிக்கணைகள்**
**தெரியுங்கணத்திற்றெரியாமற்றேருந்தாமுஞ்சிலர்பட்டார்**
**கரியுந்தாமுஞ்சிலர்பட்டார்கலுழ்வாய்மதுகைக்கால்வேகப்**
**பரியுந்தாமுஞ்சிலர்பட்டார்படாதாருண்டோபாஞ்சாலர்.**

*(இ-ள்.) வரி - கட்டமைந்த, வெம் - கொடிய, சிலை-வில்லையேந்திய, கை -கையையுடைய, கௌரவர்க்கு முதல் ஆம் முதல்வன் - (அக்காலத்திலுள்ள) குருகுலத்தார்க்குள் மூத்தவனான சிறந்த வீடுமன், வடி கணைகள் - கூர்மையான அம்புகளை,தெரியும் கணத்தில்-ஆராய்ந்து விடும்பொழுதே,- (பகைவர்களில்), தெரியாமல் - (அழிவது) தெரியாமல், தேர்உம் தாம்உம் சிலர் பட்டார்-தேர்களும் தாங்களுமாகச் சிலர் அழிந்தார்கள்; கரிஉம் தாம்உம் சிலர் பட்டார்- யானைகளுந் தாங்களுமாகச் சிலர் அழிந்தார்கள்; கலுழ் வாய் மதுகை கால் வேகம் பரிஉம் தாம்உம் சிலர் பட்டார்-நுரையையுடைய வாயையுடையனவும் வலிமையையுடையனவும் காற்றுப்போன்ற வேகத்தையுடையனவுமாகிய குதிரைகளுந் தாங்களுமாகச் சிலர் அழிந்தார்கள்; (இவ்வாறு), பாஞ்சாலர்-பாஞ்சால தேசத்தாருள், படாதார் உண்டுஓ - (வீடுமன்முன்) பங்கப்படாதவர்கள் உளரோ? [யாவரும் பங்கப்பட்டனர்]; (எ-று.)-கால்வேகம்-கால்களின் விசையுமாம். 'கலிவாய்' என்ற பாடத்துக்கு ஒலி அல்லது செருக்கு வாய்ந்த பரி என்க: "கலிமான்" என்று குதிரையைக் கூறுதல் காண்க. (314)*

***32.-வீடுமன் சிகண்டியின்கணைக்கு இலக்காதல்.***

***நீயுங்ககனங்குடியேறநின்பேருடலநீணிலத்திற்
றோயும்படிநிற்பொரநின்றேனென்றேசொல்லாயிரஞ்சொல்லிச்
சேயுந்தனக்குநிகரில்லாச்சிகண்டிகடுங்காற்சிலைவாங்கிக்
காயுங்கணைகட்கிலக்கானான்காமன்கணைக்குங்கலங்காதான்.***

*(இ-ள்.) (அப்பொழுது), சேய்உம் தனக்கு நிகர் இல்லா - முருகக்கடவுளும் (பலபராக்கிரமங்களில்) தனக்கு ஒப்பாகப்பெறாத, சிகண்டி-, (வீடுமன்முன் வந்து), 'நீஉம் ககனம் குடி ஏற - நீயும் மேலுலகத்தை அடையவும், நின் பேர் உடலம் - உனது பெரிய உடம்பு, நீள் நிலத்தில் தோயும்படி - பெரியபூமியிலே விழும்படியும், நின் பொர - உன்னைப் போர்செய்து அழிக்க, நின்றேன் - வந்துநின்றேன்', என்று- , சொல் ஆயிரம் சொல்லி - மிகப்பலவான வீரவாதங்களைச் சொல்லிக்கொண்டு, கடு கால் சிலை, வாங்கி- பயங்கரமான விற்கழுந்தை வளைத்து, காயும் - கோபித்துஎ றிகிற, கணைகட்கு - அம்புகளுக்கு,-காமன் கணைக்குஉம் கலங்காதான் - மன்மதனது அம்புக்கும் சலியாத வீடுமன், இலக்கு ஆனான் - குறியானான்: (எ-று.)*

*சிகண்டி வீரவாதஞ்செய்து வீடுமன்மேல் கொடிய அம்புகளை எய்தன னென்பதாம். காமன்கணைக்கும், உம் - உயர்வுசிறப்பு;
அது -எல்லாவுயிர்களையும் தன்வசப்படுத்துகிற மன்மதபாணத்தின் போராற்றலை விளக்கும். காமன் கணைக்கும் கலங்காதான், என்றது, எந்தமகளிரையும் விரும்பி மணஞ்செய்யாத வீடுமனது விரதவுறுதியை விளக்கும், (315)*

### *33.- அப்போது துச்சாதனன் அம்பெய்து சிகண்டியின் கொடி தேர் வில் இவற்றைச் சிதைத்தல்.*

***வில்லோன்சரங்கள்படநகைசெய்தவன்மேற்றனதுவில்வளையாத்
தொல்லோனின்றநிலைகண்டுதுச்சாதனன்றன்சுடுசரத்தாற்
பல்லோர்வியப்பத்தங்கள்குலப்பகைவன்சேனாபதியிளவல்
செல்லோடணவுநெடுங்கொடியுந்தேருஞ்சிலையுஞ்சிதைவித்தான்.***

*(இ-ள்.) வில்லோன் - வில்லில்வல்லவனான சிகண்டியினது, சரங்கள் - அம்புகள், பட - (தன்மேற்) படவும், தொல்லோன் - பெரியவனான வீடுமன், நகை செய்து-சிரித்துக்கொண்டு, அவன் மேல் தனது வில்வளையா-அச்சிகண்டியின்மேல் (எதிர்த்தற்குத்) தனது வில்லை வளைக்காமல், நின்ற-, நிலை- நிலைமையை, கண்டு-, துச்சாதனன்,-, தன் சுடு சரத்தால் - தனது வெவ்விய அம்புகளால், பல்லோர் வியப்ப - (காண்பவர்) பலரும் அதிசயிக்கும்படி, தங்கள் குலம் பகைவன் சேனாபதி இளவல் - தங்கள்குலத்துக்குப் பகைவனான தருமனது சேனைத்தலைவனாகிய திட்டத்துய்மனுடைய தம்பியான அந்தச்சிகண்டியினது, செல்லோடு அணவு நெடுகொடிஉம் - மேகத்தோடுபரிசிக்கிறநீண்ட துவசத்தையும், தேர்உம் - தேரையும், சிலைஉம் - வில்லையும், சிதைவித்தான் - அழியச்செய்தான்; (எ-று.)*

*பெண், முன்புபெண்ணாயிருந்தவன், பெண்பெயருடையான், பெண்வடிவுகொண்டவன் என இவர்மீது அம்புதொடுப்பதில்லை யென்பது, வீடுமனது விரத மாதலால் முதலிற் பெண்ணாகப் பிறந்து பின்பு யக்ஷனது அருளால் ஆண் தன்மையைப் பெற்ற சிகண்டியுடன் வீடுமன் போர்செய்யவில்லை யென்க. நகைசெய்தது - அவன் இயற்கையில் ஆண்தன்மையில்லாத இழிவைக் கருதி யென்க. முதனூலில் சிகண்டியைத் திட்டத்துய்மனது தமையனென்று கூறியுள்ளதற்கு ஏற்ப, 'தங்கள்குலப்பகைவன் சேனாபதி யிளவல்' என்பதற்கு - அன்மொழித்தொகையாக, திட்டத்துய்மனைத் தம்பியாகவுடையவ னென்று பொருள்கொள்ளலுமாம். செல்-செல்லுவது, காரணக்குறி,* ***பி- ம்*** *.செல்லோடளாவு. (316)*

### *34.- சிகண்டிதோற்றது கண்டு அருச்சுனன்தேரைச் செலுத்திவர எதிரிகள் புறமிடல்.*

***இவனோவிலக்காமென்பகழிக்கென்பான்போலவெங்குலத்தி***
***லவனோசெங்கைச்சிலைவீழ்த்தானரசன்றம்பிக்கழிந்திவனுந்***
***தவனோதயத்திலிருளென்னச்சாய்ந்தானென்றுதனஞ்சயன்றன்***
***பவனோதயத்தேர்நடுவிட்டான்பணியார்தாமும்புறமிட்டார்.***

*(இ -ள்.) (அதுகண்டு), 'எம் குலத்திலவன்ஓ - எங்கள் குலத்தில் மூத்தவனான வீடுமனோ, என் பகழிக்கு இவன்ஓஇலக்கு ஆம் என்பான் போல - 'எனது அம்புகளுக்கு (இயற்கையில்) ஆண்மையில்லாத இச்சிகண்டியோ ஏற்ற குறியாவன்' என்று இகழ்பவன்போல, செம் கை சிலை வீழ்த்தான் - (சிகண்டியோடு) போர்செய்யாமல் சிவந்த கையிற்பிடித்துள்ள (தன்) வில்லைக் கீழே போட்டான்; (பின்பு), இவன்உம் - இச்சிகண்டியும், அரசன் தம்பிக்கு அழிந்து - துரியோதனராசனது தம்பியான துச்சாதனனுக்குத் தோற்று, தவன(ன்) உதயத்தில் இருள் என்ன - சூரியனது உதயகாலத்தில் இருள்கெடுதல்போல், சாய்ந்தான் - உறுதிநிலைகெட்டான்,' என்று - என்று அறிந்து, தனஞ்சயன்- அருச்சுனன், தன் - தனது, பவன(ம்) உதயம் தேர்-காற்றுவருதல் போன்ற (வேகத்தையுடைய) தேரை, நடு விட்டான் - (எதிரிகளின் சேனை) மத்தியிலே செலுத்தினான்; (அப்பொழுது) பணியார் தாம் உம் புறம் இட்டார் - பகைவர்களும் புறங்கொடுத்து ஓடினார்கள்;*

*'இவனோ' என்பது முதல் 'சாய்ந்தான்' என்றது வரையில் அருச்சுனன் எண்ணும் எண்ணம்; அதனுள், 'இவனோ இலக்காம் என்பகழிக்கு' என்றது, வீடுமன்மனத்திற் கருதியதை; தபநோதயம், பவநோதயம்-குணசந்திபெற்ற வடமொழித் தொடர்கள். பணியார்-வணங்காதவர்- **பி-ம்** : அழிந்தவனும். (317)*

### *35.- கவிக்கூற்று: அருச்சுனன் வென்ற சிறப்பு.*

***பார்த்தன்கணையாற்பட்டவரைப்பங்கேருகத்தோன்பலகோடி***
***நாத்தந்திலனேயெண்ணுதற்குநாமார்புகலத்தேமாலை***
***மாத்தந்திகளும்புரவிகளுந்துணியத்துணியவழிசோரி***
***நீத்தந்தன்னால்வடவைமுகநெருப்பொத்ததுகார்நெடுவேலை.***

*(இ - ள்) (அப்பொழுது) பார்த்தன் கணையால்- அருச்சுனனுடைய அம்புகளால், பட்டவரை - இறந்தபகைவர்களை, எண்ணுதற்கு - கணக்கிட்டுச் சொல்லுதற்கு, பங்கேருகத்தோன் - தாமரை மலரில் வாழும் பிரமன், பலகோடி நா தந்திலன்ஏ - அநேக கோடி நாக்குக்களைக் கொடுத்தானில்லையே! நாம் புகல ஆர்-(ஒருநாக்கையுடைய) நாம் (அவர்களை எண்ணிச்) சொல்லுதற்கு யார்? (சொல்லத்தரமுடையோமல்லோம் என்றபடி); தேன் மாலை - தேனையுடைய பூமாலைகளைத் தரித்த, மா தந்திகள்உம் - பெரியயானைகளும், புரவிகள்உம்- குதிரைகளும், துணிய துணிய - மிகுதியாக வெட்டுப்பட, வழி- (அவற்றினின்று)பெருகுகிற, சோரி நீத்தந்தன்னால்- இரத்தவெள்ளஞ் சென்று பாய்தலால், கார் நெடு வேலை - கருநிறத்தையுடைய பெரியகடல், வடவை முகம் நெருப்புஒத்தது-படபாஎன்னும் பெண்குதிரையின் முகத்தினின்று வெளிப்படும் நெருப்புபோலச் செந்நிறமடைந்தது; (எ-று.)*

*மிகப்பலவாகிய நாக்குக்கள் இருந்தால்மாத்திரத்திரமே அப்போர்த்திறத்தைச் சொல்லுதல்கூடு மென்பது, முன்னிரண்டடிகளின்*
*கருத்து, கருங்கடல் குருதியாற் சிவந்தது என்பது, பின்வாக்கியத்தின் கருத்து:*
***பிறிதின்குணம்பெறலணி,** பங்கேருஹம் - சேற்றில் முளைப்பது; வடசொல்: தாமரைக்குக் காரணவிடுகுறி. தேமாலை- (நன்-மெய்,கக) நீத்தம்-நீந்தப்படுவது. (318)*

### *36.-மூன்றுகவிகள் - வீடுமன் கடும்போர்புரியச் சதாநீகன் வந்தெதிர்த்து உயிரொழிந்தமை கூறும்.*

***மன்னுஞ்சேனைபடக்கண்டவாட்சந்தனுவின்றிருமைந்தன்***
***பின்னுந்தனதுசிலையேந்திப்பேணாரெவரும்பின்காட்டத்***

**துன்னும்பகழிமழைபொழிந்துதுரக்கும்பொழுதுவிராடபதி
என்னுங்குரிசிறனக்கிளையோனிராமற்கிளையோனெனத்
தக்கோன்.**

*(இ-ள்.) மன்னும் - நிலைபெற்ற, சேனை - (தம்பக்கத்துச்) சேனை, பட- (அருச்சுனனால்) அழிய, கண்ட-, வாள் சந்தனுவின் திருமைந்தன் - ஆயுதப்பயிற்சியில் வல்ல சந்தனுமகாராசனது சிறந்தபுத்திரனான வீடுமன்,-பின்உம் தனது சிலை ஏந்திமீண்டும் தன்னுடைய வில்லை வளைத்து, பேணார் எவர்உம் பின்காட்ட - பகைவர்கள்எல்லோரும் புறங்காட்டி அழியும்படி, துன்னும் பகழி மழை பொழிந்து - நெருங்கிய அம்புமழையைச் சொரிந்து, துரக்கும் பொழுது - (எதிர்ப்பக்கத்துச் சேனையை) ஓட்டுகிற சமயத்தில், விராடபதி என்னும் குரிசில் தனக்கு இளையோன் - விராடதேசத்தரசனென்கிற வீரனுக்குத் தம்பியும், இராமற்கு இளையோன் என தக்கோன் - இராமபிரானுக்குத் தம்பியாகிய இலக்குமண னென்று சொல்லத்தக்கவனும்,-(எ-று.)- (ஆகிய) "சதானிகன்" என அடுத்த கவியோடு தொடரும்,*

*சிகண்டி எதிரில் வந்தபொழுது, வீடுமன் தன்கைவில்லைக்கீழ் எறிந்ததனாலே, 'பின்னுந் தனது சிலை யேந்தி' என்றார். இலக்குமணன்-போர்த்திறத்துக்கும், தமையனுக்குக் கீழ்ப்படிந்திருக்குந் தகுதிக்கும் உவமை. (319)*

**37. பண்ணும்பரிமான்றேருடையான்படைத்தேர்மன்னர்பலர்சூழ
வெண்ணுஞ்சிலைக்கைச்சதானிகன்வந்தேதிரூன்றுதலு
மெண்டிசையு
மண்ணுந்திகைக்கும்படிமலைந்தான்மன்பேருயிருக்காருயிருங்
கண்ணும்போல்வான்கருதலர்க்குக்கடுங்காலெழுப்புங்கனல்
போல்வான்.**

*(இ-ள்.) பண்ணும்-அலங்கரிக்கப்பட்ட, பரி மான் - குதிரைகளைப் பூட்டிய, தேர் உடையான்- இரதத்தையுடையவனும் ஆகிய, எண்ணும் சிலை கை சதானிகன்-(யாவரும்) நன்குமதிக்கும் வில்லையேந்திய கையையுடைய சதாநீகனென்பவன், படை தேர் மன்னர் பலர் சூழ- சேனைகளையுடைய ரதாதிபதிகளான அரசர்கள்பலர்(தன்னுடன்)சூழ்ந்துவர, எதிர் வந்து ஊன்றுதலும் - வீடுமனெதிரில் வந்து(போருக்கு) நின்றவளவில்,-மன் பேர் உயிருக்கு-(உலகத்தில்) நிலைபெற்ற மிகுந்த பிராணிகளுக்கெல்லாம், ஆர் உயிர்உம் கண்உம் போல்வான்-அருமையான உயிரையும் கண்ணையும் ஒத்து அன்புக்குஇடமானவனும், கருதலர்க்கு-பகைவர்களுக்கு, கடு கால் எழுப்பும் கனல் போல்வான்-மிகுந்தகாற்றினால் வளர்க்கப்பட்ட அக்கினியை யொத்து அழிவுசெய்பவனு மாகிய வீடுமன், எண் திசைஉம் மண்உம் திகைக்கும்படி - எட்டுத்திக்கிலுள்ளாரும் பூலோகத்தவரும் (கண்டு) பிரமிக்கும்படி, மலைந்தான்- போர்செய்தான்; (எ-று.)*

*திசை, மண்-ஆகுபெயர். எவர்க்கும் உயிரினும் சிறந்தது வேறுஇன்று ஆதலாலும், எல்லாவுறுப்புக்களினும் கண் சிறத்தலாலும், அன்பு வைக்கப்படுதலில் அவற்றை வீடுமனுக்குஉவமை கூறினார். (320)*

**38. உற்றுச்சமரில்வில்லெடுத்தவுரவோன்றன்னையுடலோடும்
அகற்றுச்சென்னிவேறாகிவீழத்துணித்தேயம்பொன்றாற்
செற்றுக்கங்கைமகனிற்பச்சேராரோடத்தேரோனும்
இற்றுத்தெரித்தமகுடமெனவீழ்ந்தான்புணரிக்கிடையந்தோ.**

*(இ-ள்.) சமரில்-போரில், உற்று-எதிரில்வந்து, வில்எடுத்த-வில்ஏந்திப் பொருத,உரவோன் தன்னை- வலிமையையுடைய சதானிகனை, கங்கை மகன்- வீடுமன்,உடலோடுஉம் சென்னி அற்று வேறு ஆகி வீழ-உடம்புந்தலையும் அறுபட்டுத்தனித்தனிவிழும்படி, அம்பு ஒன்றால் துணித்து - ஒருபாணத்தால் துண்டுபடுத்தி,செற்று-அழித்து, நிற்ப-(வெற்றியோடு) நிற்க,-(அதுகண்டு), சேரார் ஓட-*

*(மற்றைப்)பகைவர்கள் பயந்துஓட, (அச்சமயத்தில்) தேரோன்உம்-(சிறந்த) தேரையுடைசூரியனும், இற்று தெறித்த மகுடம் என-(தலைதுணிபட்டுவிழுகையில்) கழன்று சிதறிவிழுந்த (அச்சதானிகனது) கிரீடம்போல, புணரிக்கு இடை வீழ்ந்தான்- மேல்கடலிடையிலே விழுந்தான் [அஸ்தமித்தான்]; (எ-று.)-அந்தோ-ஐயோ: ஹந்த என்னும் வடமொழிச் சிதைவான இது-சதானிகன் இறந்ததற்குக் கவி இரங்கியதைத் தெரிவிக்கும்.*

இப்பாட்டின் **ஈற்றடி-சூரியாஸ்தமனவருணனை.** எப்போதும் தேர்மீதே வருவதனால், சூரியனுக்கு *'தேரோன்' என்று ஒருபெயர் கொடுத்தார். (321)*

### *39.-இருதிறத்துச்சேனாவீரரும் சுவேதனையும் சதாநீகனையும் அழித்ததுகுறித்து வீடுமனைப்பற்றிக் கூறியது.*

***திலத்திற்சின்னம்படமுன்னஞ்சிவேதனுடல்கொண்டுயிர்செகுத்தான்***
***தலத்திற்கனகமுடிசிந்தச்சரத்தாலழித்தான்சதானிகனை***
***வலத்திற்றிகிரிதனையுருட்டுமான்றேர்மச்சத்தவனிபர்தங்***
***குலத்திற்கிவனேகூற்றென்றார்கூற்றுங்குலையுங்கொலைவேலார்.***

*(இ-ள்.) (அப்பொழுது), கூற்றுஉம் குலையும்கொலைவேலார்-யமனும் அஞ்சும்படியான கொலைத்தொழிலைச்செய்யும் வேலையுடைய (இரண்டுபக்கத்து) வீரர்களும், ('வீடுமன்), முன்னம் - முன்னே [முதல்நாட்போரில்], திலத்தின் சின்னம் பட-எள்ளின் காய் பிளப்பதுபோலத் துண்டுபடும்படி, சிவேதன் உடல் கொண்டு உயிர் செகுத்தான்-சுவேதனது உடம்பை (இலக்காக)க் கொண்டு அவனுயிரை ஒழித்தான்; (இன்றைக்கு), கனகம முடிதலத்தில் சிந்த-பொற்கிரீடமணிந்த தலை தரையிலேசிதறிவிழும்படி, சதானிகனை-, சரத்தால் அழித்தான்-அம்பினாற் கொன்றான்;(ஆதலால்), வலத்தில் திகிரிதனை உருட்டும்-வலிமையால் ஆஜ்ஞாசக்கரத்தைச்செலுத்துகிற, மான் தேர் மச்சத்து அவனிபர்தம்-குதிரைகள் பூண்ட தேரையுடைய மத்ஸ்யதேசத்து அரசர்களது,குலத்துக்கு-,இவன்ஏ கூற்று- இவ்வீடுமனே யமனாவன்,' என்றார்-என்று சொன்னார்கள்; (எ-று.)*

*வீராடனதுமைந்தனையும் அவன்தம்பியான சதாநீகனையும் வீடுமனொருவனே கொன்றிட்டதுபற்றி, இங்ஙன்கூறினார். திகிரி-தேர்ச்சக்கரமுமாம்.* ***பி-ம்:***
*சிதைத்தான். (322)*

### *40.-இருதிறத்துச் சேனாபதியரும் தம்மவரோடு பாசறைபுகுதல்.*

***சேந்தநெடுங்கண்முரிபுருவத்திட்டத்துய்மன்சேனையொடுஞ்***
***சார்ந்தநிருபரைவரொடுந்தானுந்தன்பாசறையடைந்தான்***
***பாந்தளுயர்த்ததுவசனுடன்பைம்பொற்கவரிமதிக்கவிகை***
***வேந்தருடனும்போய்ப்புகுந்தான்றன்பாசறையில்வீடுமனும்.***

*(இ-ள்.) சேந்த-(கோபத்தாற்) சிவந்த, நெடு கண்-நீண்ட கண்களையும், முரி-(கோபத்தால்) நெறித்த, புருவம்-புருவங்களையுமுடைய, திட்டத்துய்மன்-, சேனையொடுஉம்-(பாண்டவ)சைனியத்துடனும், சார்ந்த நிருபர் ஐவரொடுஉம்- (தலைவராகப்) பொருந்திய பாண்டவராசர் ஐந்துபேரொடும், தானும்-, தன் பாசறைஅடைந்தான்-தனதுபடைவீட்டைச் சேர்ந்தான்; வீடுமனும்-, பாந்தள் உயர்த்த துவசனுடன் - பாம்பை உயரத்தில் எழுதிய கொடியையுடைய துரியோதனனோடும், பை பொன் கவரி - பசும் பொன்னாலாகிய காம்பையுடைய சாமரங்களையும், மதி கவிகை - பூர்ணசந்திரன் போன்ற வெண்கொற்றக்குடையையு முடைய, வேந்தருடன்உம் - அரசர்களுடனுன்,தன் பாசறையில் போய் புகுந்தான்-தனது படைவீட்டிற் போய்ச்சேர்ந்தான்; (எ-று.)*

*சேந்த - சிவந்த: மரூஉ; பொன் - பொற்காம்புக்குக் கருவியாகுபெயர். 'பைம்பொற்கவரி மதிக்கவிகை' என்பதை, மத்திம தீபமாகப் பாந்தளுயர்த்த துவசனுக்குங் கூட்டுக. (323)*

*41.-மறுநாள் சூரியோதயவருணனை.*

**சென்ற பரிதி யாயிரம்பொற் சிகரப் பொருப்புக் கப்புறத்து
நின்ற விருளை யிப்புறத்து நீங்கா வண்ணங் குடியேற்றி
ஒன்ற வுலக முற்றதுயி லுணர்த்து வான்போ லுதயமெனுங்
குன்ற மிசைநின் றனைவரையுங் கரத்தா லெழுப்பக்
குணக்கெழுந்தான்.**

*(இ-ள்.) சென்ற பரிதி - (முந்தினநாள் மாலைப்பொழுதில்) அஸ்தமித்த சூரியன், ஆயிரம் பொன் சிகரம் பொருப்புக்கு அ புறத்து நின்ற இருளை - பொன்மயமான ஆயிரங்கொடுமுடிகளை யுடைய மேருகிரிக்கு வடபுறத்தில் நின்ற இருட்டை, இ புறத்து நீங்கா வண்ணம் குடி ஏற்றி - (அவ்விரவில்) இத்தென்புறத்தில் நீங்காதபடி தங்கச்செய்து, (அவ்விரவு கழிந்த பின்பு), உலகம் ஒன்ற உற்ற துயில் உணர்த்துவான் போல்-உலகத்து உயிர்களெல்லாம் ஒருசேர அடைந்த தூக்கத்தை (ஒழித்து) விழிக்கச் செய்பவன் போல, உதயம் எனும் குன்றம்மிசை நின்று அனைவரைஉம் கரத்தால் எழுப்ப- உதயகிரியென்கிற மலையின்மேல் (தான்) நின்றுகொண்டு எல்லோரையும் (தன்) கைகளால் [கிரணங்களால்] எழுப்பும்படி, குணக்கு எழுந்தான் - கீழ்திசையில் தோன்றினான் [உதித்தான்]; (எ-று.)*

*பூமிமத்தியிலுள்ள மகாமேருகிரிக்கு இப்புறத்தில் இருட்பொழுதாம் பொழுது, அப்புறத்தில் பகற்பொழுதாதலை இருளைக்குடியேற்றியதாகவும், உதயகாலத்திற் சூரியகிரணம் உலகத்தில் விளங்க எல்லாப்பிராணிகளும் துயிலொழிந்து எழுதலைச் சூரியன் தன்கைகளால் உலகத்து உயிர்களைத் தொட்டுத் துயிலெழுப்புவதாகவும் வருணித்தார். இத் **தற்குறிப்பேற்றணிக்கு,** கரம் என்ற சொல்லின் **சிலேடை** அங்கமாக நின்றது. (324)*

*ஒன்பதாம்போர்ச்சருக்கம் முற்றிற்று.*

---

*பத்தாம்போர்ச்சருக்கம்.*

*1.-கடவுள்வாழ்த்து.*

**வலியி லன்று தந்தை செற்ற மைந்த னுக்கு வந்தபேர்
நலிவெ லாம கற்று நாம நாலி ரண்டெ ழுத்துடன்
பொலியு நாம மறைகள் சொன்ன பொருள்வி ளக்கு நாமமுன்
கலிய னெங்கண் மங்கை யாதி கண்டு கொண்ட நாமமே.**

*(இ - ள்.) அன்று - முன்னொருகாலத்தில், வலியில் - கடுமையாக, தந்தைசெற்ற - பிதாவான இரணியனாற் கோபித்துவருத்தப்பட்ட, மைந்தனுக்கு - இளம்பிள்ளையான பிரகலாதனுக்கு, வந்த பேர் நலிவு எலாம் - நேர்ந்த பெருந்துன்பங்களையெல்லாம், அகற்றும் - நீக்கியருளின, நாமம் - திருநாமமும்,- நால் இரண்டு எழுத்துடன்-எட்டு எழுத்துக்களோடு, பொலியும் - விளங்குகிற, நாமம் - திருநாமமும்,- மறைகள் சொன்ன பொருள் - வேதங்கள் சொல்லிய அருத்தங்களையெல்லாம், விளக்கும் - விளங்கத்தெரிவிக்கிற, நாமம் - திருநாமமும்,-முன் - முன்பு, கலியன் - கலியனென்னும் பெயருடையவரும், எங்கள் மங்கை ஆதி-திருமங்கை யென்னும் ஊருக்குத் தலைவருமாகிய எங்கள் திருமங்கையாழ்வார், கண்டுகொண்ட - அறிந்து கொண்ட, நாமம்ஏ - திருநாமமேயாம்;*

*தன் **மகனான பிரகலாதன்** தன்கட்டளைப்படி தன்பெயரைச் சொல்லிக் கல்விகற்காமல் நாராயணநாமம் சொல்லிவரவே, தந்தையான இரணியன் மிகக்கோபங்கொண்டு பாம்புகளையும் யானைகளையும் நெருப்பையும் விஷத்தையும் காற்றையும் மற்றும்பலவுபாயங்களை யும் கொண்டு அம்மகனை மிகவும்வருத்த, அவன் நாராயணநாமோச்சாரணபலத்தால் சிறிதும் துன்பமுறாமல் அந்த **அபாயங்களெல்லாவற்றினின்றும் நீங்கினான்** என்பது **-பிரசித்தம்.***

*நம்பெருமாளெட்டெழுத்தின் பெருமை நவிலுமதோ சம்பரன் மாயப்புரோகிதர் சூழ்வினை தாரணிவாள், வெம்படை மாசுணம் மாமத வேழம்விடம் தழல் கால், அம்பரமேமுதலானவை பாலனுக்கு அஞ்சினவே" என்றார் திருவரங்கத்துமாலையிலும். "ஸர்வமஷ்டாக்ஷராந்தஸ்த்தம்" என்றும், "ஸர்வவேதாந்தஸாரார்த்த:"என்றும்நூல்களிற் கூறப்படுதல்பற்றி, 'மறைகள் சொன்ன பொருள் விளக்கு நாமம்" என்றார்.*

*கலியன்-மிடுக்குடையவன்; கலி-வலிமை. இவர் பெருமாளைக் கொள்ளையிடும்பொழுது, சகலவஸ்திராபரணங்களையுங் கவர்ந்த பின் திருவடிவிரலிலுள்ள திருவாழியைப் பல்லாற் கடித்துவாங்கின மிடுக்கால், இவரைத் திருமால் **கலிய** னென்று பேரிட்டு அழைத்தனர். எங்கள் என்றபன்மை - தன்னைச்சேர்ந்தவர்களையுங் கூட்டியது. 'எங்கள்மங்கையாதி' என்றதனால், வில்லிபுத்தூரராது ஸ்ரீவைஷ்ணவஅபிமானமும் திருமங்கைமன்னன்பாசுரத்தில் இவர்க்குள்ள ஈடுபாடும் விளங்கும். **திருமங்கையாழ்வார்** - ஸ்ரீவைஷ்ணவ சம்பிரதாயத்தில் சிறந்த பக்தர்களாக வழங்கப்படுகிற ஆழ்வார்கள் பதின்மருள் ஒருவர்; சோழநாட்டில் திருமங்கையென்ற தலத்தில் பிறந்தவர்; இவர் ஒரு சோழராசனிடத்தில் மந்திரியாயிருந்து அவனது திறைப்பொருளையெல்லாம் பாகவதாராதநம்பண்ணிச் செலவுசெய்து மற்றும் அந்தக்கைங்கரியத்தை நடத்தும் பொருட்டு வழிபறித்துப் பொருள்தேடிவருகையில், திருமால் இவருக்குத் திருவருள்செய்யக்கருதித் தாம் பிராட்டியுடனே கலியாணக்கோலங்கொண்டு மிகுந்த ஆபரணங்களோடும் திரண்ட செல்வத்தோடும் அவ்வழியிலே செல்ல, இவர் கூட்டத்தோடு சென்று அவர்களை வளைத்துவழிபறித்துப் பொருள்களை யெல்லாங் கட்டிவைத்து எடுக்கத்தொடங்க, அது எடுக்க முடியாமையாலே, அவ்வெம்பெருமானைநோக்கி 'நீ என்ன மந்திரவாதம் பண்ணினாய்' என்றுசொல்லி வருத்திக்கேட்க, அப்பொழுது ஸ்ரீமந்நாராயணன் 'அந்தமந்திரத்தை உனக்குச்சொல்லுகிறேன் வா' என்று தனக்குரிய அஷ்டாக்ஷரமகாமந்திரத்தை இவருக்கு உபதேசித்தருளிக் காட்சிகொடுக்க, இவரும் பெருமாளைச் சேவித்து ஞானக்கண்பெற்று "வாடினேன்.........நாடினேன் நாடி நான் கண்டுகொண்டேன் **நாராயணா வென்னும் நாமம்"** என்று தொடங்கிப் பெரியதிருமொழி முதலிய திவ்வியபிரபந்தங்களைப் பாடிப் பெருமையுற்றுப் பேறு பெற்றனரென்பது **வரலாறு.***

*இதுமுதல் பதினாறு கவிகள் - ஈற்றுச்சீரொன்று விளச்சீரும் மற்றவை மாச்சீர்களுமாகிய **எழுசீராசிரியவிருத்தங்கள்.** (325)*

*2.-இரண்டுகவிகள் - தருமன்தன்சேனையோடு போர்க்களங்குறுக, முந்தியவியூகமாகவே சேனை அணிவகுப்படுதல்.*

***தருமராசன்மதலைபஞ்சசயனநின்றெழுந்தபின்***
***கருமமானகாலையிற்கடன்கழித்துநேமியம்***
**பெருமனோடுசென்றுதக்கபெற்றிபேசிவெற்றியிற்**
**பொருமகீபர்சூழநின்றவிளைஞரோடுபோதவே.**

இதுமுதல் நான்கு கவிகள் - குளகம்.

*(இ-ள்.) தருமராசன் மதலை-யமதருமராசனது புத்திரனான யுதிட்டிரன், பஞ்சசயனம் நின்று-படுக்கைமெத்தையில் நின்று, எழுந்த பின்-துயிலொழிந்து எழுந்தபின்பு, காலையில் கடன் ஆன கருமம் கழித்து-உதயகாலத்திற் செய்யத்தக்க கடமைகளாகிய (சந்தியாவந்தநம் முதலிய வைதிகத்) தொழில்களைச் செய்து முடித்து, நேமி அம் பெருமனோடு சென்று தக்க பெற்றி பேசி - சக்கராயுதத்தையுடைய அழகியபெருமையயுடைய தலைவனான கண்ணபிரானிடம் போய் அவனோடு (அன்றைக்குச்செய்யத்) தக்க தன்மைகளைப்பற்றிப் பேசி, வெற்றியின் பொரு மகீபர் சூழ-சயத்தையுடைய போர்செய்யவல்ல அரசர்கள் (தன்னைச்) சூழ்ந்து வர, நின்ற இளைஞரோடு போத-கூடநின்ற தம்பிமார்களோடு புறப்பட,-(எ-று.)- "ஆகவத்துள் அணிய" என அடுத்தகவியோடு தொடரும்.*

*பஞ்சசயனம்-அன்னத்தூவி, இலவம்பஞ்சு, செம்பஞ்சு, மயில் தூவி, வெண்பஞ்சு என்னும் இவ்வைந்துபொருளாற் செய்யப்பட்ட மெத்தை; "சிறுபூளை செம்பஞ்சு வெண்பஞ்சு சேணம், உறுதூவி சையையோ ரைந்து" என்றார், முன்னோரும்; இனி, திருப்பாவையில், "மெத்தென்றபஞ்சசயனத்தின் மேலேறி" என்றவிடத்து, 'பஞ்சவிதமானபடுக்கையாவது-அழகு, குளிர்த்தி, மார்த்தவம், பரிமளம், தாவள்யம் ஆக இவை; அஞ்சுஉருவிட்டுச் செய்த படுக்கை யென்றுமாம்: பஞ்சாலேசெய்தபடுக்கை யென்னவுமாம்' என்று பெரியவாச்சான்பிள்ளை வியாக்கியானமிட்டருளியுள்ளார். பெருமன்-பெருமான் என்பதன் குறுக்கல். (326)*

***3. திரண்டுபல்லியங்கடேவர்செவிபுதைக்கவானிடைப்***
***புரண்டெழுந்ததூளிகண்புதைக்கமெய்பதைக்கவே***
***முரண்டொடங்குசேனைவந்து முன்னர்நாளையூகமே***
***யரண்டொடங்குயூகமாகவாகவத்துளணியவே.***

*(இ-ள்.) பல் இயங்கள் - அநேகவாத்தியங்கள், திரண்டு-(தம்மிற்) கூடி (முழங்கி), தேவர் செவி புதைக்க-தேவர்களுடைய காதுகளை அடைக்கவும், வானிடை புரண்டு எழுந்த தூளி-ஆகாசத்தில் துள்ளியெழுந்த புழுதிகள், கண் புதைக்க-(தேவர்களது இமையாக்) கண்களை மறைக்கவும், மெய் பதைக்க- (போர்செய்வதற்கு) உடம்பு பதறவும்,-முரண்தொடங்கு சேனை-போரைச் செய்யத்தொடங்குகிற (தங்கள்) சேனை, ஆகவத்துள்வந்து-போர்க்களத்தில் வந்து, முன்னர் நாளை யூகமே அரண் தொடங்கு யூகம் ஆக அணிய-முந்தியநாளில் (செய்த பதும) வியூகமே (அன்றைக்குக்) காவலைச்செய்யும் வியூகமாகும்படி அணிவகுத்துநிற்க,-(எ-று.)-"வீடுமன்எனும்மன்(4) தேரிலேறினான்" (5) என அடுத்தகவிகளோடு தொடரும். தருமன்சேனை ஒன்பதாநாளிற்போலவே,பத்தாநாளிலும் பதுமவியூகமாகப் படைவகுக்கப்பட்டதென்க. மெய்பதைக்க - செவிபுதைத்தலாலும் கண்புதைத்தலாலும் தேவர் உடல் வருந்த என்றலும் ஒன்று. (327)*

*4.-இரண்டு கவிகள்-வீடுமன் நித்தியக்கடனை முடித்துத் தன் தேரிலேறினமையைக் கூறும்.*

***வீடுமன்னெனுந்தடக்கைவீரமன்னும்வெஞ்சுடர்க்***
***காடுமன்னுபரிதியைக்கரங்குவித்திருந்தபின்***
***தோடுமன்வலம்புரித்துலங்குதாமநிருபனும்***
***நீடுமன்னர்பலரும்வாயிலிருபுறத்துநிற்கவே.***

***(இ-ள்.) (அப்பொழுது), வீடுமன் எனும்-பீஷ்மன் என்கிற, தட கை வீரம் மன்உம்-பெரியகைகளையுடைய வீரத்தன்மையுள்ள அரசனும், வெம்சுடர் காடு மன்னு பரிதியை - உஷ்ணமான ஒளிகளின் தொகுதி பொருந்திய சூரியனை, கரம் குவித்து இருந்தபின்-கைகூப்பித்தொழுது [சந்தியாவந்தனம் முதலியன முடித்து] இருந்தபின்பு,-தோடு மன் - இதழ்கள் நிறைந்த, வலம்புரி- நஞ்சாவட்டைமலர்களாகிய, துலங்கு - விளங்குகிற, தாமம்-மாலையையுடைய, நிருபன்உம்-துரியோதனராசனும், நீடு மன்னர் பலர்உம்-பெரிய மற்றும்பல அரசர்களும், வாயில் இரு புறத்துஉம் நிற்க,- (எ-று.)-"நீடுதேரிலேறினான்" எனஅடுத்த கவியோடு முடியும்.***

***வீடுமன்னெனும், ன்-விரித்தல். பரிதியைக் கரங்குவித்திருத்தல்- உபஸ்தாநமும்,ஸூர்யநமஸ்காரமுமாம். திரிபு என்னுஞ்சொல்லணி காண்க. (328)***

***5. பாடல் வனைந்திலங்குகழலுமுத்துவடமும்வாகுவலயமும்***
***புனைந்தசெம்பொன்மவுலியோடுபொற்பின்மீதுபொற்பெழ***

***முனைந்தடங்கவின்றுநாமுடித்தும்வெய்யபோரெனா***
***நினைந்துதன்பனைப்பதாகைநீடுதேரிலேறினான்.***

***(இ-ள்.) வனைந்து இலங்கு - அணியப்பட்டு விளங்குகிற, கழல்உம் - வீரக்கழலும், முத்துவடம்உம் - முத்தாரங்களும், வாகுவலயம்உம் - தோள்வளைகளும், புனைந்த செம் பொன் மவுலியோடு - தரித்த செம்பொன்னலாகிய கிரீடமும், பொற்பின்மீது பொற்பு எழ - (தனதுஉடம்பின்) அழகின் மேல் அழகியதாய்ப்பொருந்த, 'இன்று- இன்றைக்கு, நாம்-, அடங்க-***

***(பகை)ஒழியும்படி, முனைந்து - உக்கிரமாக முயன்று, வெய்ய போர் முடித்தும் - கொடியபோரை முடித்துவிடுவோம்,' எனா நினைந்து-என்று எண்ணி, தன் - தனது,பனை பதாகை நீடு தேரில் - பனைக்கொடியையுடைய உயர்ந்த தேரின்மேல்,ஏறினான்-; (எ-று.)***

***"அழகின்மே லழகுபெற அணியனைத்து மணிந்தருளி" என்றார், கலிங்கத்துப்பரணியிலும். பத்தாநாளில் தான் அழிவ***

*தாக முன்னே சொல்லியுள்ளானாதலால், இவ்வாறு நினைத்தான். முனைந்து - பொருது எனினுமாம். (329)*

***6.-வீடுமன் போர்க்களஞ் சேர்தல்.***

***சுற்றறாதவில்லினன்றொடைமிடைந்ததூணியன்***
***கொற்றவாகைவாளினன்கூரவீரவேலினன்***
***மற்றுமாயுதங்களோடுமன்னரோடும்வார்முர***
***செற்றுமாரவத்தினோடுமடுகளத்தினெய்தினான்.***

*(இ-ள்.) சுற்று அறாத - கட்டு நீங்காத, வில்லினன் - வில்லையுடையவனும், தொடை மிடைந்த - அம்புகள் நெருங்கிய, தூணியன் - புட்டிலை யுடையவனும், கொற்றம் வாகை வாளினன்- வெற்றிக்குஅடையாளமானவாகைப் பூமாலையைச் சூடின வாளையுடையவனும், கூர வீரம் வேலினன் -கூர்மையையுடைய வீரத்தன்மைக்குஉரிய வேலாயுதத்தை யுடையவனுமாய், மற்றும்ஆயுதங்களோடு உம்- வேறு பல படைக்கலங்களுடனும், மன்னரோடுஉம்- எல்லாஅரசர்களோடும், வார் முரசு எற்றும் ஆரவத்தினோடுஉம்-தோற்கயிற்றாற்கட்டிய பேரிகைகள் அடிக்கப்படும் முழக்கத்தோடும், அடு களத்தின் எய்தினான் - போர்செய்தற்குரிய களத்தில் சேர்ந்தான் (வீடுமன்); (எ-று.)-தொடை - தொடுக்கப்படுவது; அம்பு. (330)*

***7.-முன்னைநாள்வியூகமே வீடுமனும் வகுத்துநிற்க, ஸ்ரீக்ருஷ்ணன் அருச்சுனனிடம் இன்றுவீடுமனுக்குவிமானமளிப்பாயெனல்.***

***தானுமுன்னணிந்தவாறுதானையைநிறுத்தியச்***
***சேனைமன்னன்வந்துநின்றநிலைமைகண்டுசெங்கண்மால்***
***வானினின்றிழிந்தகங்கைமைந்தனுக்குவானுலாம்***
***யானமின்றளித்தியென்றுவிசயனோடிசைக்கவே.***

*இதுமுதல் ஆறுகவிகள் - குளகம்.*

*(இ-ள்.) அ சேனை மன்னன் - அந்தச்சேனைத்தலைவனான வீடுமன்,- தான்உம் - (பாண்டவர்கள்போலவே) தானும், முன் அணிந்த ஆறு-முந்தின நாளிற் படைவகுத்தவிதமாகவே*

*[சருவதோபத்திரவியூகமாக], தானையை நிறுத்தி - (தன்) சேனையை (அணிவகுத்து) நிறக்ச்செய்து, வந்து நின்ற - (எதிரில்) வந்து நின்ற, நிலைமை-நிலைமையை, கண்டு-,-செம் கண் மால்-சிவந்த திருக்கண்களையுடைய கண்ணபிரான், விசயனோடு - அருச்சுனனுடனே, 'வானினின்று இழிந்த கங்கை மைந்தனுக்கு-ஆகாயத்தினின்று இறங்கிய கங்கையின் குமாரனான வீடுமனுக்கு, வான் உலாம் யானம் - மேலுலகத்துக்குச் செல்லும் விமானத்தை, இன்று - இன்றைத்தினத்தில், அளித்தி - கொடுப்பாய்,' என்று இசைக்க - என்றுசொல்ல,- (எ-று.)- "விசயன் (8) என்ற போது (11)" என மேற்கவிகளோடு தொடரும்.*

*வானுலாம் யான மளித்தல்-இறந்து தேவவிமானமேறிச்சுவர்க்கஞ் செல்லும்படி செய்தல். 'வானினின்று இழிந்த' என்ற*
*தைக் கங்கைக்கு அடைமொழியாக்கினால், பகீரதன் கங்கை கொணர்ந்த சரித்திரத்தையும், மைந்தனுக்கு அடைமொழியாக்கினால் சாபத்தால பிரபாசவசு பீஷ்மனான வரலாற்றையும் குறிக்கும். யாநம் - வாகனம்; வடசொல். (331)*

### *8.-அருச்சுனன்சிறப்பு.*

***போரினண்டர்பகையைமுன்புபொருதுவென்றவின்மையான்***
***மூரிவெங்கொடிக்குரங்குமுன்னடக்குமேன்மையான்***
***வாரிதங்கொண்மேனியான்வனம்புகுந்துவருதலான்***
***யாருமின்றிராமனென்னவிசையநின்றவிசயனே.***

*(இ-ள்.) முன்பு - முன்னொருகாலத்தில், அண்டர் பகையை- தேவர்களுக்குப்பகைவர்களை, போரின் பொருது - யுத்தத்தில் தாக்கி, வென்ற - சயித்த,வின்மையான்-வில்லின் திறத்தாலும், முன் - (தனதுதேரின்) முன்னிடத்தில், மூரிவெம் கொடி-வலிமையுடைய பயங்கரமான துவசத்தில், குரங்கு நடக்கும் -அனுமான் பொருந்திய, மேன்மையான் - பெருமையாலும்,- வாரிதம் கொள் - மேகத்தையொத்த, மேனியான் - திருமேனியினாலும்,-வனம் புகுந்து வருதலான் -காட்டிற்சேர்ந்து (வசித்து) வந்ததனாலும், யார்உம் இன்று இராமன் என்ன -யாவரும் இக்காலத்தில் (இவன்) இராமபிரான் என்று சொல்லுதற்கு, இசைய நின்ற -ஏற்றபடி நின்ற, விசயன் - அருச்சுனன்,- (எ-று.)- "என்றபோது" என மேற்பதினோராங்கவியோடு இயையும்.*

*விஷ்ணுவின் அவதாரமான ஸ்ரீராமமூர்த்திக்கும் அருச்சுனனுக்கும் சில ஒற்றுமைநயங்காட்டி உவமைகூறினார். இராமனுக்கு, அண்டர்பகையை வெல்லுதல்- இராவணாதி இராக்கதரை அழித்தல்; அருச்சுனனுக்கு, அண்டர்பகையை வெல்லுதல் - நிவாதகவசகாலகேயர்களை வதைத்தல். அனுமக் கொடியும், நீலமேனியும்- இருவர்க்கும் உண்டு, இராமனுக்கு வனம்புகுதல்- பதினான்குவருஷமும், அருச்சுனனுக்கு வனம்புகுதல்-பன்னிரண்டு வருஷமுமாம்; இனி, இரண்டாமடிக்கு - இராமனுக்கு ஆகும்பொழுது, வலிய கொடிய நீண்ட குரங்கின்சேனை முன்னேசெல்லப்பெற்ற பெருமையால் என்று உரைப்பினும் அமையும்; கொடி - நீளம். வாரிதம் - வடசொல்; நீரைக் கொடுப்ப தென்று பொருள். (332)*

### *9.-இரண்டுகவிகள்-வீரவாதமாக அருச்சுனன் கண்ணனோடு கூறுவன.*

***சிலைபதாகையிவுளிதேர்செழுங்கனலளித்தன***
***வலவன்யாரெனிற்குறிப்பொடென்னையாளவந்தநீ***
***தலமகீபரல்லதேவர்தானவரெதிர்ப்பினுங்***
***கொலைபடாமலேவர்போவர்குன்றெடுத்தகோவலா.***

*(இ-ள்.) குன்று-கோவர்த்தனமலையை, எடுத்த-(குடையாக) எடுத்துப்பிடித்த, கோவலா-பசுக்களைக் காத்தலில் வல்லவனே! சிலை-(எனது) காண்டீவவில்லும், பதாகை-குரங்குக்கொடியும், இவுளி- (வெள்ளைக்) குதிரைகளும், தேர்-(சிறந்த) தேரும், செழு*
*கனல் அளித்தன-சிறந்த அக்கினிதேவனால் கொடுத்தருளப்பட்டவையாம்; வலவன் யார் எனில்- (எனக்குத்) தேர்ப்பாகன் யாரென்றால், குறிப்பொடு என்னை ஆள வந்த நீ-திருவுள்ளக்கருத்தோடு*

*என்னைப்பாதுகாத்தருளுதற்குஎழுந்தருளின நீயாவாய்; (ஆதலால்) தலம் மகீபர் அல்ல-நிலவுலகத்து அரசர்கள் மாத்திரமேயல்ல; தேவர் தானவர் எதிர்ப்பின்உம்-(மற்றையுலகத்திலுள்ள) தேவர்களும் அசுரர்களும் (ஒருங்கேவந்து) எதிர்த்தாலும், கொலை படாமல் ஏவர் போவர்-(என்னால்) கொல்லுதல் படாமல் யாவர் தப்பிப்போவார்? (எ-று.)-எவரையும் தப்பாமற் கொல்லவல்லேனென்பதாம்.*

*பதாகை-பெருங்கொடி. மகீபர் அல்ல - திணைவழுவமைதி; 'அல்லர்' எனப் பாடங்கொள்ளின், வழாநிலையாம்: இனி, அல்ல என்பதை, வேறு இல்லை உண்டு என்பனபோல, இருதிணையைம்பால் மூவிடத்துக்கும் பொது வென்றலும் ஒன்று: இது,* ***புதியன புகுதல். பி.-ம்:*** *அளித்தனன். (333)*

***10. எந்தையாகதுணைவராகதனயராகவெந்தைதன்***
***தந்தையாகநீயுரைக்கில்யாரையுந்தறிப்பன்யான்***
***முந்தையாரணங்களுக்குமுடிவினின்றபொருளையென்***
***சிந்தையாரமுற்றுவித்துவினையறுத்தசெம்மலே.***

*(இ-ள்.) முந்தை-பழமையான, ஆரணங்களுக்கு-வேதங்களுக்கெல்லாம், முடிவில்-முடிவாகிய உபநிஷத்துக்களில், நின்ற-பொருந்திய, பொருளை-அர்த்தத்தை, என் சிந்தை ஆர-எனது மனம் கொள்ளும்படி, முற்றுவித்து-முடிய உபதேசித்து, வினை அறுத்த-(எனது) கருமத்தை ஒழித்த, செம்மலே-பெருமையிற் சிறந்தவனே! எந்தை ஆக-என் தந்தையாயினும் ஆகுக; துணைவர் ஆக-(எனது) உடன்பிறந்தவராயினும் ஆகுக; தனயர் ஆக-பிள்ளைகளாயினும் ஆகுக; எந்தைதன் தந்தை ஆக-எனது பாட்டனாயினும் ஆகுக; யாரைஉம்-(வந்து எதிர்ப்பவர்) எல்லோரையும், நீ-, உரைக்கில்-அழிக்கச்சொன்னால், யான் தறிப்பன்- நான் அழித்திடுவேன்; (எ-று.)*

*கீழ், சுற்றத்தாரிடத்துப் பாசபந்தத்தால் "யான்மலைவுறேனினி" என்றவன், பின்பு கீதோபதேசத்தால் பற்றற்றுப் பகவானது கட்டளையையே பிரதானமாகக்கொண்டு இங்ஙனம் கூறினான். உற்றஉறவினரையும் ஒரு பொருளாகக் கொள்ளாமல் எம் பெருமானையே உறுதுணையாகக்கொண்ட உறுதி இதில் விளங்கும். ஆரணங்களுக்கு முடிவில் நின்ற பொருளை மனம்நிரம்ப விளைவித்தல் என்றது, வேதாந்தசாரார்த்தமான கீதையைத் தனக்கு உபதேசித்தருளியதை. ஆக- வியங்கோள். (334)*

*11.-சேனையோடு வீடுமன்வந்துநிற்க, அருச்சுனனைச் சார்ந்துநின்ற மன்னர் அவன்மீது அம்புகளைத் தூவுதல்.*

**என்றபோதுவந்துதேவவிரதனின்றவெல்லையிற்**
**குன்றமன்னதேர்கடாவியருகணைந்தகொற்றவர்**
**ஒன்றுபட்டசேனையோடியாவரும்முடன்றுபோய்**
**நின்றசேனைநிருபன்மேனிரைத்துவாளிதூவவே.**

*(இ-ள்.) என்றபோது-என்று (அருச்சுனன்கண்ணனிடம்) சொன்ன பொழுது,- குன்றம் அன்ன தேர் கடாவி அருகு அணைந்த கொற்றவர் யாவர்உம்- மலையையொத்த (தம்தம்) தேரைச் செலுத்திக்கொண்டு அருச்சுனனருகில் வந்த அரசர்களெல்லோரும், ஒன்று பட்ட சேனையோடு-தம்முடன் கூடியசேனைகளுடனே, தேவவிரதன் வந்து நின்ற எல்லையில்-பீஷ்மன் (போர்க்களத்தில்) வந்துநின்ற இடத்திலே, உடன்று போய்-பகைமை கொண்டு சென்று, நின்ற சேனை நிருபன்மேல்-(எதிரில்) நின்ற சேனைத்தலைவனான அவ்வீடுமன்மேல், வாளி நிரைத்து தூவ-அம்புகளை வரிசையாகச் செலுத்த,- (எ-று.)- "பலரும் எய்தவாளி மெய்படப்பட" என அடுத்த கவியோடு தொடரும். யாவரும் முடன்று-விரித்தல். (335)*

*12.-அப்போது வீடுமன் தளர்ச்சியுறுதல்.*

***பலருமெய்தவாளிமெய்படப்படப்பனித்துநாப்
புலரநொந்துகங்கைமைந்தனிதயமும்புழுங்கினான்
மலருகின்றவார்பனிக்குடைந்துசாலமாழ்கிநீ
டலருமந்தநிறமழிந்தவம்புசாதமென்னவே.***

*(இ-ள்.) பலர்உம்-(அவ்வரசர்கள்) அநேகரும், எய்த-பிரயோகித்த, வாளி- அம்புகள்,மெய் பட பட-(தன்) உடம்பிலே மிகுதியாகத் தைக்க, கங்கை மைந்தன்- வீடுமன்,பனித்து-வருந்தி, நாபுலர-(அவ்வருத்த மிகுதியால்) நாக்கு உலர, நொந்து-,-மலருகின்ற வார் பனிக்கு உடைந்து-பரவுகிற மிகுந்த பனிக்கு வருந்தி, சால மாழ்கி-மிகுதியாக வாடி, நீடு அலரும் அந்த நிறம் அழிந்த-பெரிதாக மலர்ந்துவிளங்குகிறதனக்குரிய நிறம் கெட்ட, அம்பு சாதம் என்ன- தாமரை போல. (உடம்பு மெலிந்து),இதயமஉம் புழுங்கினான் - மனமுந் தவித்தான்; (எ-று.)*

*எப்பொழுதும் மிக அழகிதாக விளங்குந்தன்மையதான தாமரை பனிக்காலத்தில் வாடுதல்போல, எப்பொழுதும் பலபராக்கிரமங்களையுடைய வீடுமன் அப்பொழுது பகைவர் எய்த அம்புகளால் மெலிந்தனனென்பதாம். காலவித்தியாசத்தாலாகும் தீங்கை நன்கு விளக்குவது, இவ்வுவமை. இதயம்=ஹ்ருதயம். அம்புஜாதம் - நீரிற் பிறப்பது; வடசொல். மலருகின்ற வார்பனி-மூடுபனி. நீடு-பகுதியே வினையெச்சப்பொருள்பட்டது. (336)*

### *13.-வீடுமன் மன்னரெய்த அம்புகளை விலக்குதல்.*

***துன்னிமித்தமும்பலதொடர்ந்துசெய்யவெய்யவா
மந்நிமித்தநன்னிமித்தமாகுமென்றகந்தெளிந்
துன்னிமித்திரர்க்குநாளுமுதவிசெய்யுமுறுதியோன்
வின்னிமித்தவாளியாலவ்வாளிகள்விலக்கினான்.***

*(இ-ள்.) (அச்சமயத்தில்), துன்னிமித்தம்உம் பல - அநேக துர்நிமித்தங்களும், தொடர்ந்து செய்ய-தொடர்ச்சியாக உண்டாக, (அதுகண்டு), மித்திரர்க்கு நாள்உம் உதவி செய்யும்உறுதியோன் - சினேகிதர்களுக்கு எந்நாளிலும் உபகாரஞ்செய்யும் உறுதிக்குணத்தையுடைய வீடுமன், வெய்ய ஆம் அ நிமித்தம் நல்நிமித்தம் ஆகும் என்று உன்னி - கொடியனவாகிய அந்தத்தீ நிமித்தங்களை நல்லநிமித்தங்களாகுமென்று கருதி, அகம் தெளிந்து-மனம்தெளிவடைந்து, வில் நிமித்தம் வாளியால் - வில்லைக் கருவியாகவுடைய (தான்) எய்யும் அம்புகளால், அ வாளிகள் விலக்கினான் - (பகைவரது) அந்த அம்புகளை விலகச்செய்தான்; (எ-று.)*

*நிமித்தம் - பின்வரும்பயனை முன்னே தெரிவிக்குங் குறி: அது - துர்நிமித்தமென்றும், சந்நிமித்த மென்றும் இருவகைப்படும். துர்நிமித்தம் - தீநிமித்தம்;பின்வருந்தீமையைத் தெரிவிக்குங் குறி. சந்நிமித்தம்- நல்நிமித்தம்; பின்வரும்நன்மையைத் தெரிவிக்குங் குறி. துர்நிமித்தம் - ஆடவர்க்கு இடக்கண் இடத்தோள் இவை துடித்தல் முதலியன. தனக்கு விரைவில் நேரும் அபாயத்தை முன்னர்த் தெரிவிக்கிற தீநிமித்தங்களைச் சுபநிமித்தங்களாக வீடுமன் கருதியது, உலகவாழ்க்கையில் பற்றுஅற்றதனாலும், உயர்ந்த மறுமைக்கதியை அடையும் உவப்பினாலும், நீதி நெறிதவறாத பாண்டவர்வெற்றிபெறுதல் நியாய மென்ற கருத்தினாலு மென்க. அம்புதொடுத்தற்கு வில் கருவி யாதலால், 'வில் நிமித்தவாளி' எனப்பட்டது. மித்ரன் என்னும் வடசொல்லுக்கு-அளவறிந்து காப்பவனென்று காரணப்பொருள் உரைப்பர். (337)*

### *14.-மாற்றரசர் வென்னிட வீடுமன் எய்தல்.*

***துருபதேயர்மகதநாடர்வெங்குலிங்கர்சோனகர்
கருநடேசர்சிங்களர்கடாரபூபர்கௌசலர்
தருமராசன்மதலைசேனைமுதுகிடச்சரங்கள்போய்
ஒருவர்போலவனைவர்மேலுமுருவவெய்துறுக்கினான்.***

*(இ-ள்.) தருமராசன் மதலை சேனை - தருமபுத்திரனது சேனையிலே, துருபதேயர் - துருபதநாட்டரசர்களும், மகதநாடர்-மகததேசத்தரசர்களும், வெம் குலிங்கர் - கொடிய குலிங்கதேசத்தரசர்களும், சோனகர் - சோனகநாட்டரசர்களும், கருநட ஈசர் - கர்ணாடகதேசத்தரசர்களும், சிங்களர்-சிங்களதேசத்தரசர்களும், கடார பூபர் - கடாரதேசத்தரசர்களும், கௌசலர்-கோசலதேசத்தரசர்களும், முதுகு இட - புறங்கொடுக்கும்படி, ஒருவர் போல அனைவர் மேல்உம் சரங்கள் போய் உருவ-ஒருத்தர்மேற் போலவே எல்லார்மேலும் அம்புகள் சென்று ஊடுருவும்படி, எய்து-உறுக்கினான் - தொடுத்துக் கோபித்தான், (வீடுமன்); (எ-று.)*

*வெய்து உறுக்கினான் எனப் பிரித்து, கடுமையாகச் சினங்கொண்டான் எனினுமாம். துருபதேயர், கௌசலர் - தத்திதாந்த நாமம். கருநடம், சிங்களம் - கர்ணாடம், ஸிம்ஹளம் என்னும் வட சொற்களின் திரிபுகள். **பி-ம்:** மச்சநாடர் வெங்கலிங்கர். கருநடேசர் சிஞ்சியர். (338)*

***15.-இதுவும் அடுத்த கவியும் - வீடுமனாலெய்யப்பட்ட மன்னவ ரடைந்த நிலைமையைக் கூறும்.***

***முடிதுணிந்துபின்புவீழமுன்னடந்துடற்றுவார்
அடிதுணிந்துவிழவிருத்தலங்கல்வில்வணக்குவார்
கொடிதுணிந்துவிற்றுணிந்துகோறொடுத்தகையுடன்
தொடிதுணிந்துசோரிவெள்ளநதியினூடுசோருவார்.***

*(இ-ள்.) (தருமன்சேனைவீரர்கள் வீடுமனம்புகளால்), முடி துணிந்து பின்பு வீழ-(தம்) தலை அறுபட்டுப் பின்னே விழுந்திட, முன் நடந்து உடற்றுவார்- முன்னேசென்று போர்செய்பவர்களும், அடி துணிந்து விழ-(தம்)கால்கள் அறுந்துவிழ,இருந்து-கீழிருந்து கொண்டு, அலங்கல் வில்வணக்குவார் - போர்மாலையைச் சூடிய (தம்) வில்லை வளைப்பவர்களும், கொடி துணிந்து - (தம்)துவசம் அறுபட்டு, வில் துணிந்து - வில் அறுபட்டு, கோல் தொடுத்த கை தொடியுடன் துணிந்து - அம்பையெய்கிற கை தொடியென்னும் வளையோடு துணிபட்டு, சோரி வெள்ளம் நதியினூடு சோருவார்-இரத்தப்பெருக்காகிய ஆற்றிலே தளர்ந்துவிழுபவர்களும் ஆனார்கள்: (எ-று.)*

*முன் இரண்டடிகள், தலையும் கால்களும் அறுபட்டபின்பும் முண்டங்கள் முன்தொடர்ச்சியால் சிறிதுபொழுது தொழில்செய்தலைக் கூறி அம்முகமாக அவர்களது வீராவேசத்தை விளக்கும். கொடிதுணிந்து வில்துணிந்து கைதுணிந்து சோருவார்-சினைவினை முதல்கொண்டது. கையுடன் தொடிதுணிந்து - உருபு பிரித்துக் கூட்டப்பட்டது. வில்லையுங் கோல்தொடுத்த கையையும் உடன் கூறியதற்குஏற்ப, கொடி - கொடிபோல மெல்லிதாய் நீண்டுள்ள வில் நாணி என்றலும்பொருந்தும்; மேல் 22 - ஆம் கவியில் "கைவரிவிலற்று நெடுநாணி நடுவற்றுவளர்கைத் தலமுமற்று விழவே" என்பதைக் காண்க. **(பி - ம்:)** நதியினூடு சுழலுவார். (339)*

***16.- மருந்தே றித்த பூமி யென்ன வந்த வாம டங்குவார்
உருத்தே றிந்த வுருமி னொந்த வுரக மென்னவுட்குவார்
ஒருத்த ரோட வென்னி தென்ற நேக ரஞ்சி யோடுவார்
விருத்தன் வில்வ ளைத்த வாண்மை விசய னுக்கு
மிசையுமோ.***

*(இ-ள்.) (இன்னும் தருமன்சேனையார்), மருத்து எறிந்த பூழி என்ன- காற்றினால் வீசியெறியப்பட்ட புழுதிபோல, வந்த ஆ மடங்குவார் - வந்த வழியே திரும்புவார்கள்; உருத்து எறிந்த-உக்கிரமாய் இடித்த, உருமின் - இடியினால், நொந்த - வருந்திய, உரகம் என்ன - பாம்புகள்போல, உட்குவார் - அஞ்சி ஒடுங்குவார்கள்; ஒருத்தர் ஓட - (முன்பு) ஒருவர் பயந்து ஓட, அநேகர் - (மற்றும்) பலர், இது என் என்று - இது என்ன அபாயகாரணமென்று கருதி, அஞ்சி ஓடுவார் - பயந்து ஓடுவார்கள்; (இங்ஙனம் ஆகும் படி), விருத்தன வில் வளைத்த ஆண்மை - (யாவரினும்) மூத்தவனான வீடுமன் வில்லைவளைத்துப் போர்செய்த பராக்கிரமம், விசயனுக்குஉம் இசையும்ஓ - அருச்சுனனுக்கும் பொருந்துமோ? [பொருந்தாது]; ( எ - று.)*

*வில்லின்திறத்தில் அனைவரினும் பேர்பெற்ற அருச்சுனனும் செய்யமுடியாத விற்போரை வயோவிருத்தனான வீடுமன் அப்பொழுது செய்தன னென்பதாம். காற்றினால் மேலெழுப்பப்பட்ட புழுதிகள் மீண்டும் பூமியிலே அடங்குதல்போல, மிகவிசையாக மேல் வந்த வீரர்கள் வீடுமனிடம் தோற்று வந்தவழியே மீண்டன ரென்பது, முதலடியின் கருத்து. வருத்தன் - வடசொல்; கிழவன். (340)*

*வேறு.*

*17.-சோழராசனும் கிருபன் முதலியோரும் வீடுமனுக்கு உதவியாக வருதல்.*

***வெம்புயவி சாலவடை மேருவொரி ரண்டுடைய வீடுமனை நீடுமுனைவாய்***
***அம்புதமெ ழுந்துபொழி கின்றவழி யோடிவரு மனிலமென வந்த ணுகினார்***
***செம்பியனு மாகிருப னுஞ்செறிது ரோணனொடு சேயொடுசெ யத்தி ரதனுந்***
***தம்பியரு மாமனுஞ்ச யிந்தரொடு வெய்யபக தத்தனொடு சல்லி யனுமே.***

*(இ-ள்.) (அப்பொழுது), நீடு முனைவாய் - பெரிய அப்போர்க்களத்திலே, செம்பியன்உம் - சோழனும், மா - சிறந்த, கிருபன்உம் - கிருபாசாரியனும் செறி - வலிமைமிகுந்த, துரோணனொடு- துரோணாசாரியனும் சேயொடு-அவன்மகனான அசுவத்தாமனும், செயத்திரதன்உம் - சைந்தவனும், தம்பியர்உம்-(துரியோதனன்) தம்பிமார்களும், மாமன்உம் - (அவர்கள்) மாமனான சகுனியும், சயிந்தரொடு - சிந்துதேசத்தரசர்களும், வெய்ய- கொடிய, பகதத்தனொடு - பகதத்தனும், சல்லியனும் - , (என்னும் இவர்கள்), - அம்புதம் எழுந்து பொழிகின்ற வழி ஓடி வரும் அணிலம் என - மேகம் வானத்திலெழும்பி மழைபொழிகிற இடத்திலே (அதற்கு உதவியாக) ஓடி வருகிற காற்றுபோல, வெம் புயம் விசாலம் வட மேரு ஓர் இரண்டு உடைய வீடுமனை - வலிய தோள்களாகிய பெரியவடதிசையிலுள்ள மேருமலைகளிரண்டையுடைய பீஷ்மனை, வந்து அணுகினார் - வந்து சேர்ந்தார்கள்; (எ - று.)*

*மழையோடு பல திசைக்காற்றுங் சேர்ந்து உலகத்தைவருத்தத் தொடங்கினாற்போல, வீடுமனோடு பல அரசர்கள் கூட எதிர்ச் சேனையை அழிக்கத் தொடங்கினரென்பதாம். மேரு இரண்டு -* **இல்பொருளுவமை.** *மேரு எவ்விடத்திலுள்ள தென்றால், நமக்கு வடக்கிலுள்ள தென வேண்டுதலின், அதனை 'வடமேரு' என விளங்கக் கூறினார். அம்புதம் - நீரைக்கொடுப்பது; வடசொல். முன்னே சயத்திரதன் என வந்ததனால், பின்னே சயிந்தர் என்றது, அவன் ஒழிந்த சிந்துநாட்டரசர்களை : சயிந்தர் = ஸைந்தவர்.*

*இதுமுதல் இருபத்தொருகவிகள் - பெரும்பாலும் முதலைந்து சீரும் விளங்காய்ச்சீர்களும், ஆறாவது தேமாச்சீரும், ஏழாவது புளிமாச்சீரும் ஆகிய கழிநெடிலடி நான்கு கொண்ட* ***எழுசீராசிரிய விருத்தங்கள்.*** *(341)*

*18.-வீடுமனுக்குத் துணையாக வந்தவரெய்த அம்புகளை அருச்சுனன் விலக்குதல்.*

***மனஞ்செய்வலிகூர்கசதுரங்கமபதாதியிரதத்துடன்வளைந்துபலருந்***
***தனஞ்சயமடங்கலெதிர்சாபமும்வளைத்தெதிர்சரங்களுமுகைத்ததமர் செய்தார்***

***கனஞ்சலதிமொண்டுகொடொழுந்தனையவண்ணனொருகார்முகம் வணக்கியொருநூ றினஞ்சரமொரோர்தொடையிலேவியவரேவுசரம்யாவுமெதிரே விலகினான்.***

*(இ-ள்.)     பலர்உம் - (இவ்வாறு) பலஅரசர்களும், மனம் செய்வலி கூர்-  மனத்திற்பொருந்திய வலிமை [தைரியம்] மிகுந்த, கச துரங்கம பதாதி இரதத்துடன்-  மிகுந்த யானை குதிரை காலாள் தேர் என்னும் நால்வகைச் சேனைகளுடனே,  வளைத்து - சூழ்ந்து கொண்டு, தனஞ்சய(ன்) மடங்கல்எதிர்- அருச்சுனனாகிய  சிங்கத்தி னெதிரே, சாபம்உம் வளைத்து - வில்லையும் வளைத்து, எதிர்  சரங்கள்உம் உகைத்து - அவன்மேல் அம்புகளையும் செலுத்தி, அமர்செய்தார் -  போரைச் செய்தார்கள்; (அப்பொழுது), கனம் சலதி மொண்டு கொடு எழுந்து  அனைய வண்ணன் - மேகம் கடல்நீரை முகந்துகொண்டு எழுந்தாற்போன்ற  கருநிறத்தையுடைய அருச்சுனன், ஒருகார் முகம் வணங்கி - (காண்டீவமென்னும்  தனது) ஒருவில்லை வளைத்து, ஒரு நூறு இனம் சரம் ஓர் ஓர் தொடையில் ஏவி - ஒவ்வொரு நூறுதொகுதியான அம்புகளை ஒவ்வொருதொடுக்குந்தரத்திலும்  பிரயோகித்து-(அந்த அம்புகளால்), அவர் ஏவுசரம் யாஉம் எதிர்ஏ விலகினான் -  அப்பகைவர்கள் (தன்மேல்) ஏவிய அம்புகளையெல்லாம் எதிரிலே  விலகச்செய்தான்; (எ-று.)*

*விலக்கினான் என்ற பிறவினை, சந்தவின்பத்திற்கேற்ப, தொகுத்தல் பெற்றது.  'மனஞ்செய்வலிகூர்' என்ற அடைமொழி இரதத்துக்குப்பொருந்தாதாதலின்,  சதுரங்கசேனையில் இரதத்தை இறுதியில் வைத்தார். சலதி-நீர் தங்குமிடம்.* ***பி-ம்:***
*தனஞ்சயன் மடங்கவெதிர்.                              (342)*

***19.-ஒருபக்கத்தில் அருச்சுனன் பகைவெல்ல,***
***மற்றொருசார் வீமன் தண்டு கொண்டு விரைதல்.***

***தேருதயபானுவெனநின்றவிசயன்றனெதிர்தெவ்வர்பனியென்னவகலத் தாருதயமாநிருபர்வேலைசுவறத்தனதுதண்டுதனிகொண்டுகுதியா வோருதவியின்றிமுடியோடவர்சிரங்களுமுடைந்துமுதுகிட்டுடையவே மாருதசகாயனெனமாருதனெனக்கடவுண்மாருதசுதன்கடுகினான்.***

*(இ-ள்.) தேர் உதய பானு என நின்ற-தேரோடுஉதித்தலையுடைய  சூரியன்போல விளங்கிநின்ற, விசயன் தன்-அருச்சுனனது, எதிர் -  எதிரிலே, தெவ்வர்-பகைவர்கள், பனி என்ன-மூடுபனி போல, அகல-(இருந்த  இடந்தெரியாது) நீங்க,-(மற்றொருபக்கத்தில்) கடவுள் மாருத சுதன் - வாயுதேவனது குமாரனான வீமசேனன், தார் உதயம் ஆம் நிருபர் வேலை சுவற-  முன்னணிச்சேனையிலே விளங்கித்தோன்றுதலையுடைய அரசர்களாகிய  கடல்வற்றும்படி, தனது தண்டு கொண்டு தனிகுதியா - தன்னுடைய கதாயுதத்தை எடுத்துக் கொண்டு தனியே[ஒப்பில்லாமல் அல்லது வேறு  உதவியில்லாமல்] (தேரினின்று) குதித்து, அவர்-அப்பகைவர்கள், ஓர்உதவி  இன்றி-(தம்மைக்காத்தற்குத்) துணைவருபவர் ஒருவரும்இல்லாமல், முடியோடு  சிரங்கள்உம் உடைந்து - கிரீடங்களோடு தலைகளும்உடைபட்டு, முதுகுஇட்டு-  புறங்கொடுத்து, உடைய-அழியும்படி, மாருத சகாயன்என- காற்றைத்  துணைவனாகவுடைய அக்கினி போலவும், மாருதன் என -காற்றுப்போலவும்,  கடுகினான்- விரைந்து வந்தான்; (எ-று.)*

*அக்கினியை உவமைகூறுதற்கேற்பக் கடல்வற்றுதலும், வாயுவை உவமை  கூறுதற்கேற்பக் கடுகிவருதலுங் கூறினார். மேல் 21-ஆம் கவியில் 'முந்துபடைவீரர்'  என வருதலை நோக்கி, தார் என்பதற்கு - முற்சேனையென்று  பொருளுரைக்கப்பட்டது. இனி, தார் உதயம் மா எனப் பிரித்து, போர்மாலையோடு  எதிரிலே தோன்றுதலையுடையசிறந்த நிருப ரெனினுமாம். மாருதசகாயன்- பஹு  வ்ரீஹிஸமாஸம்பெற்ற வடசொல்தொடர். மாருதசுதன் ஒருதவியின்றிக்  கடுகினான்என்று இயைத்து உரைப்பினுமாம்.*

***20.-வீமனுடைய வீரச்செயல்.***

***ஏறிவருதேருடனெடுத்தெறிதருஞ்சிலரையிருபணைகள்பற்றியிறுகச்***
***சீறிவரும்யானையொடெடுத்தெறிதருஞ்சிலரையைந்துகதியுஞ்சிவணவே***
***மாறிவருவாசியொடெடுத்தெறிதருஞ்சிலரைவஞ்சினமும்வெஞ்சினமுடன்***
***கூறிவரும்வாளரசரேறியணிநின்றரதகுஞ்சதுரதுரங்கம்விழவே.***

*(இ-ள்.) (வீமன்), வெம் சினமுடன் - கடுங்கோபத்தோடு, வஞ்சினம்உம் கூறி வரும்- வீரவாதங்களையுஞ் சொல்லிவருகிற, வாள் அரசர் - கொடியபகையரசர்கள், ஏறி-,அணி நின்ற- ஒழுங்காக நின்ற, ரதகுஞ்சர துரங்கம்-தேர் யானை குதிரைகள், விழ-கீழ் விழும்படி, ஏறிவருதேருடன் எடுத்துசிலரை எறி தரும்-ஏறிவருகிற தேரோடு கையால்தூக்கிச் சில அரசரை எறிவான்; இரு பணைகள் இறுக பற்றி- இரண்டுதந்தங்களையும் (தன்கைகளால்) உறுதியாகப்பிடித்து, சீறி வரும் யானையொடு எடுத்து சிலரை எறிதரும்-கோபித்துவருகிற யானையோடு தூக்கிச் சில அரசரை எறிவான்; ஐந்து கதிஉம் சிவண - ஐவகை நடைகளும்பொருந்த, மாறிவரு-எதிர்ப்பட்டுவருகிற, வாசியொடு-குதிரையுடனே, எடுத்து-தூக்கி, சிலரை எறிதரும்-சிலஅரசரை எறிவான்; (எ-று.)*

*இனி, 'வஞ்சினமும்........விழ' என்பதை அடுத்தகவியில் 'நொந்து'என்பதோடு இயைப்பினும் அமையும். வஞ்சினம்-சபதம். ஐந்துகதி-நான்காம் போர்ச்சருக்கம், 30-ஆம் பாடலினுரையிற் காண்க. (344)*

### *21.-தன்சேனை வீமனுக்குப் புறங்கொடுத்தது கண்ட துரியோதனன்கட்டளையால் ஐந்துலட்சம்வீரர் வீமனை யெதிர்த்தல்.*

***முந்துபடைவீரர்மிகநொந்துகதைவீமனெதிர்முதுகிடுதல்கண்டுமுனியா***
***வைந்துறழுநூறுபடியாயிரவர்வின்மையிலருச்சுனனையொத்தவடலோர்***
***உந்துரககேதனனுரைப்பமுகிலேழுமுடனூழியிறுதிப்பொழிவபோல்***
***வந்துவடிவாளிமழைசிந்தினர்பராக்கிரமவாசியிபமாவிரதரே.***

*(இ-ள்.) முந்து படை வீரர்-(போருக்கு)முற்பட்டுவந்த சேனை வீரர்கள், கதை வீமன் எதிர்- (சந்துருகாதிநியென்னுங்) கதாயுதத்தையுடைய வீமசேனனது எதிரிலே, மிக நொந்து-மிகுதியாக வருந்தி, முதுகு இடுதல்-புறங்கொடுத்தலை, கண்டு - பார்த்து, உந்து உரக கேதனன்- உயர்ந்தபாம்புக்கொடியையுடைய துரியோதனன், முனியா - கோபங்கொண்டு, உரைப்ப - (அவ்வீம அருச்சுனரை எதிர்க்கும்படி கட்டளை) கூற,-ஐந்து உறழும் நூறு படி ஆயிரவர்- ஐந்தினாற்பெருக்கப்பட்ட நூறென்னும் அளவையுடைய ஆயிரமென்னுந்தொகையுடையவர்களும் [ஐந்துலக்ஷம்பேரும்], வின்மையில் அருச்சுனனை ஒத்த அடலோர் - விற்போர் வல்லமையில் அருச்சுனனைப்போன்ற வலிமையையுடையவர்களுமாகிய, பராக்கிரமம் வாசி இபம் மா இரதர்- பகைவெல்லும்ஆற்றலையுடையகுதிரை யானை பெருந்தேர் என்பவற்றில் ஏறிய வீரர்கள்,-முகில் ஏழ்உம்-ஏழுமேகங்களும், உடன்- ஒருசேர, ஊழி இறுதி-கால்பாந்தகாலத்தில் பொழிவ போல் - (வந்து) மழை பொழிவனபோல, வந்து-(திரண்டு எதிர்த்து) வந்து, வடி வாளி மழை சிந்தினர் - கூர்மையான அம்பின்மழையைப் பொழிந்தார்கள்; (எ-று.)*

*பராக்கிரமம்-பர ஆக்கிரமம் எனப் பிரியும்; பரர்-பகைவர், (அவர்களை) ஆக்கிரமித்தல்- வென்றுவசப்படுத்தல்; இது-வீரர்க்கு அடைமொழி. உறழ்தல்- பெருக்கல். உந்துதல்-உயர்தல், ஏறுதல். ஊழி-பிரமனாயுள்; அல்லது, பிரமனது தினம். பிரமனதுநாள் ஒவ்வொன்றன் பகலிறுதியிலும் பிராமனாயுளிறுதியிலும், ஏழுமேகங்களும் விரைந்து ஒருங்கு எழுந்து அளவிறந்த மழைபொழிந்து உலகங்களை யழிக்கு மென்பது நூற்கொள்கை. பொழிவ=பொழிவது: விவகாரம். (345)*

### *22.-அருச்சுனன் சென்று எதிரிகள் பொழியும் அம்புமழையை விலக்குதல்.*

**வெவ்வனமெரிக்கடவுளுண்டிடவணக்குமொருவில்லியுமவ்வில்லொ
டெதிர்போ
யவ்வவர்தொடுத்துவிடுமம்புகளெனைப்பலவுமவ்வகைதொடுத்து
விலகிக்
கைவரிவிலற்றுநடுநாணினடுவற்றுவளர்கைத்தலமுமற்றுவிழவே
வைவரிவடிக்கணைகளேவினன்மணித்திகிரிவலவன்விடுதேரில்
வருவோன்.**

*(இ-ள்.) மணி - அழகிய, திகிரி - சக்கராயுதத்தையுடைய, வலவன்-பாகனாகிய கண்ணபிரான், விடு - விசையாகச் செலுத்துகிற, தேரில்-இரதத்திலே, வருவோன் - வருபவனும், வெம்வனம்- கொடியகாண்டவவனத்தை, எரி கடவுள் உண்டிட - அக்கினிதேவன் புசிக்க, வணக்கும் - (தான்) வளைத்த, ஒரு வில்லிஉம்- ஒப்பற்றவில்லையுடையவனுமான அருச்சுனனனும், அ வில்லொடு- (காண்டீவமென்னும்) அந்த வில்லுடனே, எதிர்போய்-எதிரிற்சென்று, அ அவர் தொடுத்து விடும் அம்புகள் எனை பலஉம்-அந்தந்தப் பகைவீரர்கள் (வில்லில்) தொடுத்து விடுகிற அம்புகள் எல்லாவற்றையும், அ வகை தொடுத்து-அவர்கள் தொடுக்கும் வகையாகவே எதிரம்பு தொடுத்து, விலகி-விலக்கி, (அவர்கள்), கை வரி வில் நடு அற்று - கையிற்பிடித்த கட்டமைந்த விற்கள் நடுவில் துணிபட்டு, நாணின் நடு அற்று - வில்நாணியின் நடுவிடமும் துணிபட்டு, வளர் கை தலம்உம் அற்று - வளர்ந்துள்ள கைகளினிடங்களும் துணிபட்டு, விழ - கீழ்விழும்படி, வை வரி வடி கணைகள் - கூர்மையான நீண்ட வடிக்கப்படுதலையையுடைய அம்புகளை, ஏவினன் - (அவர்கள்மேல்) செலுத்தினான்; (எ-று.)*

*அருச்சுனன் பகைவரெய்த அம்புமழையை விலக்கி மற்றும் பல பாணங்களைச் செலுத்தி அவர்களது வில்லையும் வில்நாணியையும் கைகளையும் அறுத்துத்தள்ளின னென்பதாம். மிகப் பசித்து அந்தணவடிவத்தோடுவந்த அக்கினி பகவானுக்கு அருச்சுனன் காண்டவவனத்தை அதிலுள்ளசராசரங்களுடனே விருந்தளித்தபொழுது, அந்த அக்கினியினிடத்தினின்று காண்டீவமென்னும் வில்லைப் பெற்று, அதினின்று தொடுத்த அம்புகளால், அப்பூஞ்சோலையிலுள்ள பிராணிகள் தப்பி வெளியிற்செல்லாதபடி அவற்றையெல்லாம் கொன்று தள்ளியும், அவ்வனத்துக்குஉரிய இந்திரனால் ஏவப்பட்டுவந்து ஏழுமேகங்களும் பொழிந்த அடைமழையைச் சரக்கூடுகட்டித்தடுத்தும் பின்னும் தேவேந்திரன் பெருங்கோபங்கொண்டு தேவர்களுடன்வந்து எதிர்க்க அவர்களை விற்போரில் வென்றும் அருச்சுனன் திறங்காட்டின னென்பது, கீழ்க்* ***காண்டவதகனச்சருக்கத்து வரலாறாம்*** *. விலகி-விகாரம். (346)*

### *23.-வீமார்ச்சுனர்பொர, யாவரும் பறந்துபோதல்.*

**தருமன்முதலைவரையும்வென்றிடுதுமென்றுதுச்சாதனனொடைவரிளையோர்
பொருமுனையின்வீடுமன்முனின்றவர்களல்லதுபுகன்றநரபாலரெவரும்
பருமமதமாபுரவிதேர்கொடுபறந்தனர்படாதவர்கெடாதகதையுஞ்
செருமுனைசராசனமுமுடையவிருவோருநனிசீறியமர்செய்தபொழுதே.**

*(இ-ள்.) கெடாத - அழியாத, கதைஉம் - (சத்துருகாதினியென்னும்) கதாயுதத்தையும், செரு முனை - போரை உக்கிரமாகச் செய்கின்ற, சராசனம் உம் - காண்டீவவில்லையும், உடைய-, இருவோர்உம் - (வீம அருச்சுனர்) இரண்டுபேரும், நனி சீறி - மிகக்கோபித்து, அமர் செய்த பொழுது - போர் செய்த அச்சமயத்தில்,- தருமன் முதல் ஐவரைஉம் வென்றிடுதும் என்று - தருமபுத்திரன் முதலிய பஞ்சபாண்டவரையும் சயித்திடுவோமென்று (வீரவாதங்) கூறி, பொரு முனையின் - போர்செய்யுமிடத்திலே, வீடுமன் முன் - பீஷ்மனுக்குமுன்னே, துச்சாதனனொடு நின்றவர்கள் - துச்சாதனனுடன் வந்து நின்றவர்களாகிய, ஐவர் இளையோர் அல்லது - அவன் தம்பிமார் ஐந்து பேர்மாத்திரமேயல்லாமல், புகன்ற நரபாலர் எவர்உம்-(மற்றும் வீரவாதம்) கூறிய அரசர்களெல்லோரும், படாதவர் - இறவாதவர்களாய், பருமம் மதம் மா புரவி தேர்கொடு - அலங்காரத்தையுடைய மதயானைகளும் குதிரைகளும் தேர்களு மாகிய (தங்கள்) வாகனங்களைக் கொண்டு, பறந்தனர் - (அஞ்சி) ஓடினார்கள்; (எ-று.)-யாவரும் பயந்து ஓடிப் பிழைத்தனரென்பதாம். புகன்ற-சிறப்பித்துக்கூறப்பட்ட எனினுமாம். பருவம் - பருமையுமாம். (347)*

*24.-வீடுமன் தருமபுத்திரனுக்குத் துணையானதேர்வீரர்களைக் கடுமையாக எதிர்த்தல்.*

**விண்ணவரிலுற்றெழுவர்கண்டுகளிகூரவிறல்வீடுமன்விருப்பினுடனே**
**கண்ணிணைநெருப்பெழவுடன்றினிநமக்குமிதுகாலமெனமாலைபுனையும்**
**வண்ணவரிவிற்றலைவணக்கிவிதமானபலவாளிகடெரிந்துதருமற்**
**கெண்ணுமிரதத்தலைவரனைவரையும்விட்டிலனிமைப்**
**பொழுதினெய்தனனரோ.**

*(இ-ள்.) (அப்பொழுது), விறல் வீடுமன் - பராக்கிரமத்தையுடைய பீஷ்மன், விண்ணவரில் எழுவர் உற்று கண்டு களி கூர (-) (போர்காணும்) தேவர்களில் ஏழுவசுக்கள் (அவர்களினத்தவனான - தனது போர்த்திறத்தைக்) கவனித்துப்பார்த்துக் களிப்புமிகும்படி, விருப்பினுடன்-போர் விருப்பத்தோடு, கண் இணை நெருப்பு எழ உடன்று - இரண்டுகண்களிலும் தீப்பொறி கிளம்பப் பெருங்கோபங்கொண்டு, இனி நமக்குஉம் இது காலம் என - இனிமேல் நமக்கும் (போர்முடித்தற்குக்) காலம் இதுவே யென்றுகருதி, மாலை புனையும் வண்ணம் வரி வில் தலை வணக்கி - போர்மாலையைத்தரித்த அழகியகட்டமைந்த வில்லின்கோடியை வளைத்து, விதம் ஆன பல வாளிகள் தெரிந்து - பலவகைப்பட்ட அநேக அம்புகளை ஆராய்ந்து எடுத்து, தருமற்கு எண்ணும் இரதம்தலைவர் அனைவரைஉம்-தருமபுத்திரனுக்கு (த் துணைவராக) மதிக்கப்பட்ட தேர் வீரர்களெல்லாரையும், விட்டிலன் - (ஒருவரையும்) விடாதவனாய், இமை பொழுதின் எய்தனன் - ஒருகணப்பொழுதிலே அம்பு செலுத்தி யெதிர்த்தான்; (எ- று.) -அரோ - ஈற்றசை,*

*அஷ்டவசுக்களுள் பிரபாசன் வீடுமனாதலால், அவனொழிந்தோரை 'எழுவர்' என்றது. தனக்கு அழிவுகாலம் அருகிலிருத்தலால், அதற்குமுன் தனது போர்த்திறம் முழுவதையும் காட்டக்கருதின னென்பார், 'இனி நமக்கும் இதுகாலமென' என்றார்.*

*25.-மூன்றுகவிகள்-வீடுமன்செய்த கடும்போரினால் அரசர்கள் அங்கமற்று இறந்தமை கூறும்.*

**எத்தனைமுடித்தலைகளெத்தனைபுயக்கிரிகளெத்தனைகரக்கமலம்வே**
**றெத்தனையுடற்சுமைகளெத்தனையுறுப்பினிணமெத்தனைகொடிக்**
**குடர்களு**
**மெத்தனைநிணத்தடிகளெத்தனைநரப்புவகையெத்தனையெலுப்பு**
**நிரைமே**
**லெத்தனைமணித்தொடைகளெத்தனைமலர்க்கழல்களிற்றனகளத்**
**தினிடையே.**

*(இ-ள்.) (அவ்வாறு வீடுமன் உக்கிரமாகப் போர்செய்த பொழுது), களத்தின் இடை-போர்க்களத்திலே, இற்றன - துணிபட்டனவான, முடி தலைகள்- கிரீடத்தையுடைய தலைகள், எதனை-எவ்வளவு! புயம் கிரிகள்-மலைபோலுந் தோள்கள், எத்தனை-! கரம் கமலம்-தாமரைமலர்போலும் கைகள், எத்தனை-! வேறு- இன்னும் உடல் சுமைகள்-பருத்த உடம்புகள், எத்தனை-!உறுப் பின் நிணம் - உடம்பிலுள்ளகொழுப்புகள், எத்தனை-! கொடி குடர்கள்உம்- கொடிபோலச்சுற்றிய குடல்களும், எத்தனை-! நிணம் தடிகள்-கொழுத்துள்ள தசைத்திரள்கள், எத்தனை-! நரம்புவகை-நரம்புகளின்வகைகள், எத்தனை-! எலும்பு நிரை-எலும்புகளின் வரிசைகள், எத்தனை-! மேல் இன்னும், மணிதொடைகள்- அழகியதுடையென்னும் உறுப்புகள், எத்தனை-! மலர் கழல்கள்-தாமரைமலர்போன்ற கால்கள், எத்தனை-! (எ-று.)*

*மிகப்பல வீரர்கள் தலைமுதலியன சின்னபின்னப்பட்டு அழிந்தன ரென்பதாம். தொடையெனினும், துடையெனினும் ஒக்கும். நரம்புவகை, எலுப்பு நிரை-மென்றொடர் வன்றொடராயின.* ***பி. ம்:*** *குடல்களோடு. (349)*

*26.* ***விரிந்தனவு ரங்களும்வெ குண்டனம னங்களும்வி***
***ழுந்தனப சுங்கு ருதிநீர்,***
***தெரிந்தனவெ லும்புகள ழிந்தனகொ ழுந்த சைநி***
***மிர்ந்தனத ரம்பின் விசியுஞ்,***
***சரிந்தனபெ ருங்குடர்து ணிந்தனசி ரங்கடைத***
***வழ்ந்தனநெ டும்பு ருவமு,***
***மெரிந்தனமு கங்களுமெ ழுந்தனசி ரங்களுமி றந்தனர்***
***கடுங்க ணிளையோர்.***

*(இ-ள்.) (மற்றும் வலவீரர்களது), உரங்கள்உம்-மார்புகளும், விரிந்தன-பிளந்தன; மனங்களும்-, வெகுண்டன - கோபங்கொண்டன; பசு குருதி நீர்-புதிய இரத்தப்பெருக்குகள், விழுந்தன-கீழ்ப்பாய்ந்தன; எலும்புகள்-, நெரிந்தன- நொருங்கின; கொழு தசை-கொழுத்த சதைகள், அழிந்தன-; நரம்பின் விசிஉம்- நரம்புகளின் கட்டுக்களும், நிமிர்ந்தன - நெக்கு விட்டன; பெரு குடர் - பெரிய குடல்கள், சரிந்தன-; சிரம்-தலைகள், துணிந்தன - அறுபட்டன; நெடு புருவம்உம்- நீண்ட புருவங்களும், கடை தவழ்ந்தன - நுனி நெறித்தன; முகங்களும்-, எரிந்தன- தீந்துபோயின; சிரங்கள்உம்- தலைகளும், எழுந்தன-(உடலினின்று துணிபட்டு) மேலெழுந்தன; (இவ்வாறு போரில் வீடுமனம்புகளால்), கடுங் கண் இளையோர்- பயங்கரமான கண்களையுடைய வீரர்கள், இறந்தனர்-; (எ-று.)*

*வெகுண்டனமனங்களும், கடைதவழ்ந்தனநெடும்புருவமும் என்ற இரண்டும்- அவர்கள்கொண்ட கோபத்தையும், மற்றவை அவர்கள் பலவகையாக அழிந்ததையும் விளக்கும். எரிந்தனமுகங்களும் என்பதற்கு-முகங்கள் கோபாக்கினியாற் கொதித்தன எனினும் அமையும். கடுங்கண் என்றது, கோபக்கண்களை; இனி, கடுமையான தன்மையுமாம். **பி-ம்:** முகங்களுமிடிந்தனமனங்களும். (350)*

வேறு.

*27.* ***சோமகரின் மச்சரிற் றென்னரிற் றுளுவரிற் றுருப தேயரில்***
***வளவரிற்***
***றேமருவ லங்கற்கு லிங்கரிற் சேரரிற் சிஞ்சிய ரில்வெஞ்ச***
***மர்விடா***
***மாமகுட வர்த்தனரின் மண்டலிக ரிற்பட்ட வர்த்தனரின்***
***மற்றிவ்வுரவோ***
***னேமருக ணைக்கிலக் காகாத மன்னவர்க ளெம்மன்ன***
***ரென்றுமொழிவாம்.***

*(இ-ள்.) சோமகரில் - சோமககுலத்தவரிலும், மச்சரில்-மத்ஸ்ய தேசத்தவரிலும், தென்னரில் - பாண்டியநாட்டவரிலும், துளுவரில்-துளுவதேசத்தவரிலும், துருபதேயரில்-துருபதேசத்தவரிலும், வளவரில்-சோழநாட்டவரிலும், தேன் மருவு அலங்கல்-தேன்பொருந்தின போர்மாலையையுடைய, குலிங்கரில் - குலிங்க தேசத்தவரிலும், சேரரில்-சேரநாட்டவரிலும், சிஞ்சியரில் - சிஞ்சி நாட்டவரிலும், வெம் சமர் விடா- கொடிய போரை நீங்காத, மா மகுடவர்த்தனரில் - பெரியமகுடவர்த்தனர்களிலும், மண்டலிகரில்-மண்டலீகர்களிலும், பட்டவர்த்தனரில் பட்டவர்த்தனர்களிலும், இ உரவோன் ஏமருகணைக்கு இலக்கு ஆகாத மன்னவர்கள்-(வீடுமனாகிய) இவ்வீரன் மிகுந்தகளிப்போடுஎய்த அம்புகளுக்குக் குறியாகாமல் தப்பின அரசர்கள், எ மன்னர் என்று மொழிவாம்-எந்த அரசரென்று (யாம்) கூறுவோம்? (எ-று.)-மற்று-அசை.*

*எனவே, ஒருவரும் தவறாமல் எல்லாரும் வீடுமனம்புக்கு இலக்காயினரென்பதாம். ஏமருதல்-மிகுகளிப்புறுதல்; ஏமா என்னும் பகுதி விகாரப்பட்டு வினைத்தொகையில்வந்தது. இனி, ஏமரு-(காண்பவர்) திகைத்தற்குக் காரணமான என்றுங் கொள்ளலாம்: ஏ மரு-எய்யுந்தொழில் மருவுகின்ற*

*என்றலும் ஒன்று. பின்னே துருபதேயர் என வருதலால், முன்னே சோமகர் என்றது - அக்குலத்தவருள் துருபததேசத்தவரொழிந்தவரையே குறிக்கும்; இனி, துருபதேயர் என்பதை-த்ரௌபதேயர் என்பதன் விகாரமாகக்கொண்டு, திரௌபதீபுத்திரரான உபபாண்டவர் ஐவரென உரைத்தல், முன்னும் பின்னும்வந்த நாட்டவரினத்தோடு பொருந்தாதாம். கீழ் இச்சருக்கத்தின் பதினான்காங் கவியையுங் காண்க. முன்வந்த பல நாடுகளின் சேர்த்தியால், சிஞ்சியென்பது - ஒருநாடென்று கொள்ளப்பட்டது. தென்னர்-தென்னாட்டவர்.*

*இது-கீழ்க்கூறிய விருத்தவகையில் சிறிது ஓசைவேறுபட்டது.*

வேறு.

*28.-அதுகண்டு ஸ்ரீக்ருஷ்ணன் சொல்ல, அருச்சுனன் வீடுமனுடன் பொர வில்வளைத்தல்.*

**மேலெழுந்து தம்படையை நீடுகங்கை மைந்தனடு மேன்மை**
**கண்டிரங்கி வெகுளா,**
**ஞாலமுண்ட செம்பவள வாய்மலர்ந்து கொண்டிவனை**
**நாமுரண்டொடங்க விதுவே,**
**காலமென்று மன்றல் கமழ் கார்முகுந்தன்வெம்புரவி கால்கொள்**
**சந்த னங்க டவவே,**
**கோலவெஞ்ச ரங்களடைவேதெரிந்து கொண்டுசிலை கோலினன்ற**
**னஞ்சயனுமே.**

*(இ-ள்.) (இவ்வாறு), நீடு கங்கைமைந்தன்-பெரிய வீடுமன், மேல் எழுந்து - மேன்மேற் கிளர்ந்துவந்து, தம் படையை அடு - தம்பக்கத்துச் சேனையைஅழிக்கிற, மேன்மை-சிறப்பை, கண்டு-, மன்றல் கமழ் கார் முகுந்தன் - (திருமேனியில்) திவ்வியபரிமளம் வீசப்பெற்ற கருநிறமுடைய கண்ணபிரான், இரங்கி - மனமிரங்கி, வெகுளா - கோபங்கொண்டு,-ஞாலம் உண்ட செம் பவளம் வாய் மலர்ந்து - (பிரளயகாலத்தில்) உலகங்களை அமுதுசெய்கிற சிவந்த பவழம்போன்ற(தன்) திருவாய்மலரைத் திறந்து,இவனைகொண்டு நாம் முரண் தொடங்க இதுஏ காலம் என்று - இச்சிகண்டியை எதிர்கொண்டு நாம் போரைத் தொடங்குதற்கு இதுவே சமயமென்று சொல்லி, வெம் புரவி கால் கொள் சந்தனம் கடவ - வேக மானகுதிரைகளையும் சக்கரங்களையும் கொண்ட தேரை (வீடுமனெதிரில்) செலுத்த,- தனஞ்சயன்உம்-அருச்சுனனும,ு கோலம் வெம் சரங்கள் அடைவுஏ தெரிந்து கொண்டு- அழகியகொடிய அம்புகளை முறையே ஆராய்ந்தெடுத்தது, சிலை கோலினன்-(போர் செய்ய) வில்வளைத்தான் (எ-று.)*

*பிரளயகாலத்தில் திருமால் உலகங்களைத் திருவயிற்றில் வைத்துக் கொண்டு பாதுகாக்கின்றமைபற்றி. 'ஞாலமுண்டவாய்' என்றார். சந்தனம்=ஸ்யந்தநம். இவனைக்கொண்டு - கதையை உட்கொண்டுவந்த சுட்டு.*

*இதுமுதற் பத்துக்கவிகள் - இச்சருக்கத்து 17-ஆம் கவி போன்ற விருத்தவகையிற் சேர்ந்தனவேயாகும். (352)*

*29.-ஸ்ரீக்ருஷ்ணனுடைய பாஞ்சசன்னியமுழக்கம்.*

**ஓதம்வந்தெ ழுந்ததென மேகநின்ற திர்ந்ததென வூழியும்**
**பெயர்ந்த தெனவே**
**மாதிரங்க ளுஞ்செவிடு போயகண்ட மும்பொதுளி வாய்பிளந்த**
**தண்டமுகடுஞ்**
**சீதரன்செ ழுந்துளப மாதவன்ற யங்கருண சீதபங்க யங்கொ**

**டிருவி**
**னுதன்வெஞ் சமங்கருதி யூதுகின்ற சங்கின்முழு நாதம்வந்தெ**
**ழுந்த பொழுதே.**

*(இ - ள்) சீதரன் - ஸ்ரீதரனென்னும் ஒருதிருநாமமுடையவனும், செழு துளபம்- சிறந்த திருத்துழாய்மாலையையணிந்த, மாதவன்-மாதவனென்னும் ஒருதிருநாமமுடையவனும், தயங்கு - விளங்குகிற, அருணம்-செந்நிறமுடைய, சீதம்- குளிர்ந்த, பங்கயம்-தாமரைமலரை, கொள்- (இடமாகக்) கொண்ட திருவின்- இலக்குமியினது, நாதன் - கணவனும் ஆகிய கண்ணபிரான், வெம் சமம் கருதி - கொடியபோரை உத்தேசித்து, ஊதுகின்ற-(அப்பொழுது தன் திருவாய்மலரில்வைத்து) ஊதின, சங்கின்-(பாஞ்சசன்னிய மென்னுந் திவ்விய) சங்கத்தினது, முழு நாதம் - போரொலிமுழுவதும், வந்து எழுந்த பொழுது - வெளிப்பட்டு மிகுந்தபொழுது, ஓதம் வந்து எழுந்தது என - கடல்கள் பொங்கிவந்ததென்று சொல்லவும், மேகம் நின்று அதிர்ந்தது என - மேகங்கள் நிலை பெற்று இடிமுழங்கிற்று என்று சொல்லவும், ஊழிஉம்பெயர்ந்தது என-கல்பகாலம் மாறிற் றென்று சொல்லவும், மாதிரங்கள்உம் செவிடு போய் - எல்லாத்திசையிலுள்ளவர்களும் செவிடுபட்டு, அகண்டம்உம் பொதுளி-எல்லாவுலகங்களும் தாக்கி, அண்டம் முகடுஉம் வாய் பிளந்தது-அண்டகோளத்தின் மேல்முகடும் (அதிர்ச்சியால்) வெடித்தது; (எ-று.)*

*மாதிரம் - ஆகுபெயர். ஸ்ரீதரன்-திருமகளைத் திருமார்பில் தரிப்பவன்: மாதவன்-திருமகள்கணவன். பின்னே 'திருவின் நாதன்' என வந்ததனால், மாதவன் என்னும் பெயர் - இடுகுறி மாத்திரமாய் நின்றது; இனி, (வாமனாவதாரத்தில்) பெருந்தவமுடையா னெனினுமாம். அருணசீதபங்பஜம் - வடமொழித்தொடர். (353)*

### *30.-அருச்சுனன் சிகண்டியை முன்னிட்டுக்கொண்டு போர் தொடங்கி வீடுமனெதிரிற் போதல்.*

**தூரியங்கறங்கநரபாலர்சங்கினங்களணிதோறுநின்றுநின்றுகுமுறத்**
**தேர்களுந்துரங்கமொடுவேழமுங்கலந்துவருசேனைமண்டலங்களுடனே**
**பேர்பெறுஞ்சிகண்டிதலையாகமுன்புகொண்டுலகுபேருமன்றுமின்று**
**கொலெனப்**
**போர்தொடங்கிவென்றிபுனைவீடுமன்றடங்கணெதிர்போயினன்றனஞ்**
**சயனுமே.**

*(இ-ள்.) தூரியம் கறங்க - வாத்தியங்கள் முழங்கவும், நரபாலர் சங்கு இனங்கள் - அரசர்களது சங்கங்களின் கூட்டங்கள், அணி தோறுஉம்- அப்படைவகுப்பினிடந்தோறும், நின்று நின்று குமுற - மிகுதியாகப் பொருந்தி ஆரவாரிக்கவும், தேர்கள்உம் துரங்கமொடு வேழம்உம் கலந்து வரு சேனை மண்டலங்களுடனே - இரதங்களும் குதிரைகளும் யானைகளும் கூடிவருகிற சேனைக்கூட்டங்களுடனே, தனஞ்சயன்உம் - அருச்சுனனும், பேர்பெறும் சிகண்டி தலை ஆக முன்பு கொண்டு - பிரசித்திபெற்ற சிகிண்டியைத் தலைமையாக முன்னேநிறுத்தி, உலகு பேரும் அன்றுஉம் இன்றுகொல் என - 'உலகங்கள் அழியும் அந்த உகாந்தகாலமும் இன்றைக்கோ?' என்று (யாவரும்) அஞ்சும்படி, போர் தொடங்கி - யுத்தத்தைச் செய்யத்தொடங்கி, வென்றி புனை வீடுமன் தட கண் எதிர்போயினன் - சயத்தைக்கொண்ட பீஷ்மனது பெரிய கண்களி னெதிரிற் சென்றான்; (எ-று.)- பேர்பெறும் - வீடுமனைக் கொல்லப் பிறந்தவனென்று புகழ்பெற்ற என்க.*
*(354)*

### *31.-சிகண்டியைக்கண்டதும் ஆயுதத்தைப்போகட்டு வீடுமன் நிற்க, எதிரிசாபம்முதலியன துணியும்படி துச்சாதனன் அம்புதூவுதல்.*

***காதிவெங்கொடும்பகழியேவுதிண்சிகண்டிதலைகாணலுங்குனிந்துநகையா***
***வாதியம்பையின்றுபகைமூளவந்ததென்றுதனதாயுதந்துறந்துவிரைதேர்***
***மீதுகங்கைமைந்தனொருதான்வெறுங்கைநின்றளவின்மேனடந்துசென்று***
***பொருதுச்***
***சாதனன்சரங்கள்பலதூவினன்பரிந்தெதிரிசாபமுந்துணிந்துவிழவே.***

*(இ-ள்.)* காதி-எதிர்த்து, வெம் கொடு பகழிஏவு திண்சிகண்டி-மிகக்கொடிய அம்புகளைச் செலுத்துகிற வலிமையையுடைய சிகண்டியினது, தலை-முகத்தை, காணலும்-பார்த்தமாத்திரத்திலே,-கங்கை மைந்தன்-வீடுமன்,-குனிந்து-(இயற்கையில் ஆண்மையில்லாத அவனோடு போர் செய்ய நாணித்) தலைகுனிந்து, நகையா- சிரித்து, 'ஆதி அம்பை பகை-முன்பு அம்பையினாலாகிய பகைமை, இன்று மூள வந்தது-இப்பொழுது பலிக்கவந்தது', என்று - என்று எண்ணி, தனது ஆயுதம் துறந்து- தன்னுடைய ஆயுதங்களைக் கீழேபோகட்டு, விரை தேர் மீது- துரிதமாகச்செல்லும் *(தனது)* தேரின்மேல், ஒரு தான்-தான் தனியாய், வெறு கை நின்ற அளவில்-வெறுங்கையோடு நின்றபொழுதில்,-பொரு துச்சாசனன்-போர் செய்யவல்ல துச்சாதனன், பரிந்து-(வீடுமனுக்காகப்) பரிவு கொண்டு, மேல் நடந்து சென்று - அச்சிகண்டியின்மேல் எதிர்த்துப்போய், எதிரி சாபம்உம் துணிந்து விழ- அப்பகைவனது
வில்லும் அறுபட்டுவிழ, பல சரங்கள் தூவினன் - அநேகபாணங்களைப் பிரயோகித்தான்; *(எ-று.)*

சாபமும் என்ற எச்சவும்மையால், அவனது இதயமும்தேரும் பிளத்தல் விளங்கும்; அடுத்த கவியிலுங் காண்க. சிகண்டி தலை காணலும்-சிகண்டியை எதிரிற் கண்டவுடனே என்றுமாம். ஒரு தான்- ஒப்பில்லாத தான் என்றுமாம். எதிரி-எதிர்ப்பவன். ***(பி-ம்:)*** பகழிமோது. மீளவந்தது. *(355)*

*32.-சிகண்டி வந்தவழி மீள,*
*வீடுமன் ஸ்ரீக்ருஷ்ணனது திருமேனியும் புண்படச் சரம்விடுதல்.*

***சாகநின்றிலன்றுருபதேயனெஞ்சமின்றிவரிசாபமின்றிவண்கொடிகொடேர்***
***வாகமின்றிவந்தவழிமீளநின்றசந்தனுகுமாரனுஞ்சரங்கள்விடவே***
***யூகமும்பிளந்துசுரராசன்மைந்தன்முந்திரதமூருகின்றசெங்கணெடுமான்***
***மேகமுங்கருங்கடலுநீலமுங்கலந்ததிருமேனியுஞ்சிவந்ததறவே.***

*(இ-ள்.) (அப்பொழுது)* துருபதேயன்-துருபதராச குமாரனானசிகண்டி, நெஞ்சம் இன்றி-மனமழிந்து, வரி சாபம் இன்றி-கட்டமைந்த வில் இல்லாமல், வண் கொடி கொள் தேர் வாகம் இன்றி- அழகியகொடியைக்கொண்ட தேராகிய வாகன மில்லாமல், சாகநின்றிலன்-இறக்க நிற்காதவனாய், வந்த வழி மீள-வந்தவழியே திரும்பிச்செல்ல, *(பின்பு)*, நின்ற-, சந்தனுகுமாரன்உம்- சந்தனுராசபுத்திரனான வீடுமனும், சரங்கள்விட-அம்புகளைச்செலுத்த,-யூகம்உம்-(பாண்டவரது) படைவகுப்பும், பிளந்து-முறிபட்டு, சுரராசன் மைந்தன் முந்தி ரதம் ஊருகின்ற செம்கண் நெடுமால் - தேவேந்திரகுமாரனான அருச்சுனனுக்கு முன்நின்றுதேர்செலுத்துகிற சிவந்தகண்களையுடைய சிறந்த கண்ணபிரானது, மேகம்உம் கரு கடல்உம் நீலம்உம் கலந்த திரு மேனிஉம்-மேகத்தின் தன்மையும் கரியகடலின் தன்மையும்நீலரத்தினத்தின் தன்மையும் பொருந்தின அழகிய வடிவமும், அறசிவந்தது- மிகச் செந்நிறம் பெற்றது;

அங்ஙனமானது, வீடுமன் விசையாக விட்ட அம்புமழைபட்டு இரத்தங்குழம்பியதனா லென்க. பிளந்து-பிளக்க எனத் திரிக்க. சாகநின்றிலன் என்றது, இன்னும் சிறிதுபொழுது சிகண்டி அங்கு நின்றிருந்தால் துச்சாதனனாற் கொல்லப்பட்டேயிருப்பானென்பதை நன்குவிளக்கும். துருபதேயன்- வடமொழித் தத்திதாந்தநாமம். தேர்வாகம்-தேர்க்கு திரையுமாம். *(356)*

*33.-அருச்சுனன் சிகண்டியையிட்டுவந்துமுன்னேநிறுத்தி,*
*அவனம்புகளோடு*
*தன் அம்புகளை வீடுமன் மேனியிற் செலுத்துதல்.*

**போனதிண்சிகண்டிதனைமீளவுங்கொணர்ந்துபொருபூசலுங்கடந்திரதமே**
**னீநிலஞ்சனின்கணையுமேவுகென்றுவெஞ்சமரினேர்நடந்துசென்றுவிசயன்**
**கூனலங்கிதந்தசிலைகோலியம்பொடம்புபலகூடநெஞ்சழன்றுதையினான்**
**வேனிலம்புமுன்புதுதையாதிலங்குமம்பொன்வரைமேனியெங்கணும்**
**புதையவே.**

*(இ-ள்.) (அப்பொழுது), விசயன்-அருச்சுனன், போன திண் சிகண்டிதனை- (அவ்வாறு) புறங்கொடுத்துச்சென்ற வலிய சிகண்டியை, மீளஉம் கொணர்ந்து - மறுபடியும் அழைத்துக்கொண்டு வந்து, (அவனை நோக்கி), 'நீ-,அஞ்சல்- பயப்படாதே; பொரு பூசல் உம் கடந்து-செய்தற்குரிய போரையும் மிகுதியாகச் செய்யக்கருதி, இரதம்மேல்-தேரின்மேலே, நில் - (தைரியங்கொண்டு) எதிர்த்து நில்; கணைஉம் ஏவுக-உனது அம்புகளையும்செத்துவாயாக', என்று-என்றுசொல்லி, (அவனை முன் நிறுத்தி), வெம் சமரில்-கொடிய அப்போரிலே, நேர் நடந்து சென்று-(தானும் வீடுமனை) எதிர்த்துப் போய், அங்கி தந்த கூன் நல் சிலை கோலி - அக்கினி கொடுத்த வளைத்தற்குரிய அழகிய (தனது காண்டீவ) வில்லை வளைத்து, அம்பொடு அம்பு பல கூட- (சிகண்டிவிடும்) அம்புகளுடனே (தனது பல) அம்புகளும் சேர,-வேனில் அம்பு முன்பு துதையாது இலங்கும் - வசந்தகாலத்துக்குரிய (மன்மதனது) பாணங்கள் முன்பு ஒரு பொழுதும் பதியப்பெறாமல் விளங்குகிற, அம் பொன் வரை மேனி எங்கண் உம்-அழகிய பொன்மயமான மேருமலை போன்ற (வீடுமனது சிவந்த) உடம்புமுழுவதிலும், புதைய-தைத்து அழுந்தும்படி, நெஞ்சு அழன்று உதையினான்-மனத்திற் கோபங்கொண்டு செலுத்தினான்; (எ-று.)*

*துரியோதனாதியர்மேலுள்ள கோபம், அவர்கள்சேனைத்தலைவனான வீடுமன்மேலும் சென்ற தென்க. இங்கே, திண்சிகண்டியென்றது-இகழ்ச்சி. ஈற்றடி - வீடுமன் எப்பொழுதும் சிறிதும் காமவசப்படாதவ னென்பதை விளங்கும். வேனில் என்பதைக் காலவாகுபெயராய், அக்காலத்துக்குரிய மன்மதனுக்குக் கொள்ளினும் அமையும். **பி - ம்** : பலபூசலும். உகையினான். (357)*

*34.-வீடுமன் தன்னுடலிற்புதைந்தவை*
*அருச்சுனனம்பின் வலிமையாலென்று தெரிந்து மகிழ்தல்.*

**தோளுநெஞ்சமுஞ்சிரமுமார்பமுந்தொடங்கிநிலைதோறும்வந்துவந்துருவவே**
**சாளரங்கொளங்கவழியோடுகின்றவிந்துமுகசாயகங்கைகொண்டுபிடியா**
**நாளறிந்தெதிர்ந்துபொருவோனுமைந்தனன்றுமுதனாமமுஞ்சிகண்டியிவனெய்**
**வாளியொன்றுமிங்கெமையுறாதனஞ்சயன்செய்பெருவாழ்விதென்றறிந்துமகிழா.**

இதுவும், மேற்கவியும் - குளகம்.

*(இ-ள்.) தோள்உம் நெஞ்சம்உம் சிரம்உம் மார்பம்உம்-, தொடங்கி - (என்னும் இவ்வுறுப்புக்கள்) முதலாக, நிலை தோறுஉம் - உயிர்நிலைகளிலெல்லாம், வந்து வந்து உருவ - (அம்புகள்) மிகுதியாக வந்து ஊடுருவிச்செல்ல, சாளரம் கொள் - (முழுவதும் பலதுளைபட்டுப்) பலகணியின் தன்மையை அடைந்த, அங்கம்வழி-(தன்) உடம்புவழியாக, ஓடுகின்ற-(அப்பாற்) செல்லுகிற, இந்து முகம் சாயகம் - சந்திரன்போன்ற வடிவமுள்ள [அர்த்த சந்திர] பாணங்களை, கை கொண்டு பிடியா - (தன்) கைகளாற் பிடித்து, (அவற்றில் பதிந்துள்ள அருச்சுனன்பெயரைப் பார்த்து), 'நாள் அறிந்து - (நாம் முன்புசொன்ன பத்தாம்போர்) நாளையறிந்து,*
*எதிர்ந்து பொருவோன்உம் - நம்மை எதிரிட்டுப் போர்செய்பவனும், மைந்தன்- (நமது வமிச) புத்திரனான அருச்சுனனே; நன்று-(இவன்கையால் நாம் அழிவது) நல்லதே; (ஆனால்), முதல் நாமம்உம் சிகண்டி தலைமையான பேர்மாத்திரத்துக்குமே சிகண்டி (எதிரில் உள்ளான்); இவன் எய் வாளி ஒன்றுஉம் இங்கு எமை உறா - இச் சிகண்டி தொடுக்கிற அம்புக ளொன்றும் இங்கு எம்மைச் சேரமாட்டா; இது தனஞ்சயன் செய் பெரு வாழ்வு - இவ்வாறு என்னுடம்பை ஊடுருவும்படி அம்புதொடுத்தல் அருச்சுனன் செய்யும் பெருஞ்சிறப்பேயாம்' என்று அறிந்து -,மகிழா - மகிழ்ச்சிகொண்டு, (எ-று.)- "கூறினன்" என அடுத்த கவியோடு முடியும்.*

*'இவனெய்வாளியொன்றும் இங்கு எமை உறா' என்றதனால், வீடுமனைக் கொல்லுதற்கு வியாஜமாக நிற்பதுமாத்திரம் சிகண்டிக்கு உண்டேயொழிய, அவனது அம்புகளுக்கு வீடுமனது தெய்வயாக்கையைத்துளைக்கும் ஆற்றலில்லையெனவிளங்குகிறது. கீழ் முதற்போர்ச்சருக்கத்தின் பதினோராங்கவியை இங்கே காண்க. பொருவோன்உம் மைந்தன் அன்றுஎனஎடுத்து-போர் செய்பவனும் இயற்கையாண்மை யுடையவனல்லனென்றும், முதல்நாமம்உம் சிகண்டி-என் உடம்பிற்பதியும் பாணங்களில் முதற்பெயரே சிகண்டி [அவற்றின்மேல் அருச்சுனன்பெயரும் பின் உள்ளது] என்றும் உரைப்பினுமாம். (358)*

### *35.-வீடுமன் துரியோதனன்தம்பிமாரை 'உங்களாலொன்றும் இங்குச் செய்யலாகாது: மேல்ஆகவேண்டுவதை ஆய்க' என்று கூறுதல்.*

**நாமவெங்கொடுங்கணையினாமுநொந்தனஞ்சமரநாளுமின்று**
**முந்தவினிநீர்,**
**போமடங்கநுந்தமையனீள்பதம்பொருந்தியுறுபோரறிந்துகொண்டு**
**பொருவீ,**
**ராமதன்றியென்செயிமாவதொன்றுமின்றுதனியாண்மைபொன்ற**
**லென்றருகுசேர்,**
**கோமடங்கறம்பியர்களாகிநின்றமைந்தரொடுகூறினன்பனங்**
**கொடியனே.**

*(இ-ள்.) (அப்பொழுது), பனங்கொடியன் - பனைக்கொடியையுடைய வீடுமன்,அருகு சேர் - (தன்) அருகிற் பொருந்திய, கோமடங்கல் தம்பியர்கள் ஆகி நின்றமைந்தரொடு- இராசசிங்கமாகிய துரியோதனனது தம்பிமார்களாய்ப் பொருந்தியவீரர்களுடனே, 'நாமம் வெம் கொடு கணையின் - அச்சத்தைத்தருகிற மிகவுங்கொடிய அம்புகளால் நாம்உம் சமரம் நொந்தனம் - நாமும்போரில் வருந்தினோம்; நாள்உம் இன்று-(நமக்கு அபாயத்தை விளைக்கிற) தினமும் இன்றைக்கே; இனி - இனி மேல், நீர் அடங்க - நீங்களெல்லோரும், முந்த போம் - விரைவாகச் செல்லுங்கள்; நும் தமையன் நீள் பதம் பொருந்தி - உங்கள் தமையனான துரியோதனனது சிறந்த இடத்தை யடைந்து, உறு போர் அறிந்து கொண்டு-இனிச்செய்யவேண்டும் போரைத்தெரிந்துகொண்டு, பொருவீர் - போர்செய்யுங்கள்; அது ஆம் அன்றி - அங்ஙனஞ் செய்வது தகுதியாகுமே யல்லாமல், என் செயின்உம் ஆவது ஒன்றுஉம் இன்று - (நீங்கள்) என்ன முயற்சி செய்தாலும் (எனதுஅபாயத்தைத் தடுப்பதற்குத்) தக்கவழி ஒன்றும் இல்லை;*

*(ஆதலால்), தனி ஆண்மை பொன்றல் - தனியே உங்கள் பராக்கிரமம் அழிவடையவேண்டாம்', என்று கூறினன்-; (எ-று.)*

*வீடுமனுக்கு உதவியாகப் போர்செய்யவந்த துரியோதனன் தம்பிமாரை நோக்கி வீடுமன் 'இனி நீங்கள் எனக்கு உதவிசெய்து பொருதலிற் பயனில்லை; நான் இன்று அழிவது நிச்சயம்; இனிச்செய்ய வேண்டுவதைப்பற்றி உங்கள் தமையனோடு ஆலோசித்துச் செய்யுங்கள்; இப்பொழுது அருச்சுனனையெதிர்த்து வீணாய்வலிமைகெடாதிர்' என்று அறிவுகூறினான். தனது சேனைத்தலைமை யொழிந்ததை 'நாளுமின்று' என்றதனாலும், 'தனி' என்றதனாலும், வீடுமன் விளக்கினான். பதம்-பாதமென்றலுமாம். பொன்றல் - எதிர்மறைவியங்கோள். கோமடங்கல் - அரசரிற்சிறந்தவன்; பகையை எளிதில் ஒழிப்பவன். பனை + கொடி= பனங்கொடி; [நன், உயிர், 53.] நாளும் இன்று என்பதற்கு - (நாம்வாழும்) நாளும் (இனி) இல்லை எனினும் அமையும். (359)*

### *36,-அம்பாகிய அணையில் வீடுமன்சாயத் தேவர்கள் கற்பகமலர்மாரிபொழிதல்.*

**கோடுகொண்டசெம்பவளநாதம்வந்துவந்துசெவிகூடமுன்புநின்றநிலையே**
**நாடிநெஞ்சழிந்துதிருநாமமன்புடன்றனதுநாகுழன்றுகொண்டுநவிலா**

**வோடுகின்றவம்பொழியநீடுடம்படங்கமுனையூரநின்றவம்பொரணையா வீடுமன்கிடந்தகிடைதேவர்கண்டுவந்தனர்கண்மேல்விழுந்ததம்பொன் மலரே.**

*(இ-ள்.) செம் பவளம் - சிவந்தபவழம்போன்ற (கண்ணபிரானது) திருவாய்மலரிலே, கொண்ட - வைத்து ஊதப்பட்ட, கோடு - (பாஞ்சசன்னியமென்னும்) சங்கத்தினது, நாதம்-ஒலி, வந்து வந்து செவி கூட - மிகுதியாகவந்து (தனது) காதுகளிலே பொருந்த,-வீடுமன்-,-முன்பு நின்ற நிலைஏ நாடி - எதிரில் [அருச்சுனனது தேரின் முன்னே] (கண்ணபிரான்) எழுந்தருளி நின்ற நிலைமையையே நெஞ்சிற்கொண்டு [தியானித்து], நெஞ்சு அழிந்து - மனமுருகி, திருநாமம் - (அக்கண்ணபிராணது) திருப்பெயர்களை, அன்புடன் - பக்தியோடு, தனது நா குழன்று நவிலா கொண்டு - தனது நாக்குத் தழுதழுக்கச் சொல்லிக்கொண்டு, ஓடுகின்ற அம்பு ஒழிய நீடு உடம்பு அடங்க முனை ஊர நின்ற அம்பு ஓர் அணை ஆ - (ஊடுருவி அப்பால்) ஓடுகிற அம்புகள் ஒழிய(த் தனது) நீண்ட உடம்புமுழுவதிலும் ஒருமுனை பொருந்த நின்ற அம்புகளையே ஒருபடுக்கையாகக்கொண்டு, கிடந்த - (அந்த அம்பாகிய அணையில்) விழுந்துகிடந்த, கிடை - கிடக்கையை, தேவர் கண்டு - தேவர்கள் பார்த்து, உவந்தனர்கள் - மகிழ்ந்தார்கள்; அம் பொன் மலர் - (அங்ஙனம் மகிழ்ந்த தேவர்களாற் சொரியப்பட்ட) அழகிய பொன்மயமான (கற்பக) மலர்த்தொகுதி, மேல்விழுந்தது; - (அந்த வீடுமன்) மேல் விழுந்தது; (எ-று.)*

*தன் உடம்பை ஊடுருவி நீங்கின அம்புகள் ஒழிய, மார்பில்தைத்து முதுகின்வழி புறப்பட்டு நிற்கும் அம்புகளின்மேல் விழுந்திட்டனனென்பது, மூன்றாமடியின் கருத்து. பக்திமிகுதியாலும், சோர்வினாலும், நாக்குழறும், அம்புஅணை - ஸரதல்பம். முன்பு நின்றநிலை - யோகநிலையென்பாருமுளர். கிடை - கிடைக்கும் நிலை. குழன்று - குழல என்னும் எச்சத்திரிபு; குழல் - பகுதி. கோடு - வளைந்துள்ளது. முனை - நுனி. (360)*

### *37-* போரிலே வீடுமன் எஞ்சியதுகண்டு யாவரும் வருந்துதல்.

**போரிலெஞ்சி னன்குருகு லேசனென்று கண்டபுரு கூதன்
மைந்தனும்புனைதுழாய்,
வீரனுந்து னைந்துவரு தேரினின்றிழிந்திருகண்
வீழுமம்பி னின்முழுகினார்,
சேரவந்தி ரண்டுவகை யாகிவெங்களங்குறுகு சேனையுந்தி
ரண்டலறவே,
யாருநெஞ்ச ழிந்தனர்கள்யாருநொந்து நைந்தனர்கள்
யாருநின்றிரங்கி னர்களே.**

*(இ-ள்.) 'குருகுல ஈசன் - குருகுலத்தலைவனான வீடுமன், போரில் எஞ்சினன் - யுத்தத்தில் அழிந்தான்', என்று-, கண்ட-பார்த்தறிந்த, புருகூதன் மைந்தன்உம் - இந்திரகுமாரனான அருச்சுனனும் புனை துழாய் வீரன்உம் - தரித்த திருத்துழாய்மாலையையுடைய கண்ணபிரானும், துனைந்து வரு தேரினின்று இழிந்து - விரைந்து வருகிற தேரினின்று இறங்கிவந்து, இரு கண் வீழும் அம்பினில் முழுகினார் - (தமது) இரண்டு கண்களினின்றும் விழுகிற நீரில் மூழ்கினார்கள் [மிகக்கண்ணீர்விட்டார்கள்]; இரண்டு வகை ஆகி வெம் களம் குறுகு சேனைஉம் - இரண்டுபகுப்பாய்க் கொடிய போர்க்களத்தையடைந்துள்ள சேனைகளும், சேர திரண்டு வந்து - ஒருசேரக் கூடி (வீடுமன் விழுந்தவிடத்து) வந்து, அலற - அழுது கதற, யார்உம் - (இருதிறத்திலும்) எல்லோரும், நெஞ்சு அழிந்தனர்கள்-மனம் அழிந்தார்கள்; யார்உம்-,நொந்து நைந்தனர்கள் - வருந்தி மெலிந்தார்கள்; யார்உம்- ,நின்று இரங்கினார்கள் - (திகைத்துநின்று) விசனமுற்றார்கள்; (எ-று.)*

*அழிந்தவனாகிய வீடுமன் அம்பினில் மூழ்கியதுபோலவே, அழித்தவராகிய கிருஷ்ண அருச்சுனரும் அம்பினில் மூழ்கினாரென ஒரு சமத்காரம் தோன்றக் கவிகூறினார். பாண்டவதுரியோதனாதியரென்னும் இருவகையார்க்கும் வீடுமன் மூத்தபாட்டனாதலால், இவனழிவுக்கு எல்லோரும் இரங்குவாராயினர். புருஹு தன் - வடசொல்; புரு - மிகுதியாக, ஹூதன்*

*- (யாகங்களில்) அழைக்கப்படுபவன் என்றும்; புரு-புரு என்னும் அசுரனை, ஹூதன் - கொன்றவன் என்றும் பொருள்படும்.* ***பி-ம்:*** *அம்பினால். திரண்டுவரவே. (361)*

*வேறு.*

***38.-வீடுமன் உத்தராயணகாலம் வருமளவும் உயிர்விடேனென யோகத்தாலுயிரை வைத்துக்கொண்டிருத்தல்.***
***ஆக மெங்குந் தங்கு மம்பி னணைமேல் வீழ்வான்***
***யோகங் கொண்டே யுயிரை யோடா வண்ண நிறுவி***
***மாகஞ் சூழும் பரிதி வடபா லெய்து மளவும்***
***நாகங் காணே னென்ன ஞானத் தோடே வைக.***

*இதுவும், மேற்கவியும் - குளகம்.*

*(இ-ள்.) ஆகம்எங்கும் தங்கும் - (தன்) உடம்பு முழுவதிலும் பொருந்திய, அம்பின் - அம்புகளாகிய, அணை மேல்-படுக்கையின் மேல் வீழ்வான் - விழுபவனாகிய வீடுமன, 'மாகம் சூழும் பரிதி - வானத்தை வலம் வருகிற சூரியன், வடபால் எய்தும் அளவுஉம் - வடபுறத்தை அடையுமளவும் [உத்தராயணம் வருமளவும்], நாகம் காணேன் - மேலுலகத்தை அடையமாட்டேன்', என்ன - என்று எண்ணி உயிரை ஓடா வண்ணம் யோகம் கொண்டு நிறுவி - தன் உயிரை (உடம்பைவிட்டு) நீங்காதபடி யோகவலிமையால் நிறுத்தி, ஞானத்தோடே வைக- நல்லறிவோடு தங்க,-(எ-று.)- ''எவரும்,...அன்னான்பாதஞ் சென்னிமேற்கொண்டழுதார்'' என வருங்கவியோடு முடியும்.*

*ஆடிமாசம்முதல் மார்கழிமாசம்வரையிலும் தக்ஷிணாயமாகிய ஆறு மாசம் தேவர்களுக்கு இரவு: தைமாசம் முதல் ஆனிமாசம் வரையிலும் உத்தராயணமாகிய ஆறுமாசம் அவர்களுக்குப் பகல்; ஆக, மனிதமானத்தால் ஒரு வருஷம் தேவமானத்தால் ஒருநாளாம்: தேவர்களுக்கு இரவாகிய தக்ஷிணாயநத்தில் இறந்தவர்களுக்கு நற்கதியில்லை யென்றும், உயர்கதிபெறுபவர் உத்தராயணத்திலே இறப்பரென்றும் நூற்கொள்கை யாதலால் வீடுமன், தக்ஷிணாயநத்தில் உயிர்விடாமல் உத்தராயணத்தை எதிர்நோக்கி உயிர்த்திருப்பவனானான். சூரியன் வடபுறமாக ஒதுங்கிச் சஞ்சரிக்குங்காலம் உத்தராயணம்; தென்புறமாகச் சஞ்சரிக்குங் காலம் தக்ஷிணாயநம். யோகமாவது-இயமம் முதலிய எட்டு இலக்கணங்களோடு நின்று செய்யுந் தவம். யோகம் வல்லார்க்கு வேண்டின பொழுது உயிரைவிடும் உறுதிநிலைகைகூடுதலால், 'யோகங்கொண்டே உயிரை நிறுவி' என்றார். வேண்டியபொழுதுஉயிர் விடும்படி வீடுமனுக்குத் தந்தையால் வரம் கொடுக்கப்பட்டிருந்ததென்றும்நூல்கள் கூறும்: மேல் 43-ஆம்பாட்டில் "வரத்தின் பயனுலுயிரைநிறுத்தும்மன்னன்'' என்று இந்நூலாசிரியருங் கூறுவர்.* ***பி.ம்: இரவி.***

*இதுமுதற் பதினாறுகவிகள்-எல்லாச்சீரும் மாச்சீராகிய கழிநெடிலடி நான்குகொண்ட* ***அறுசீராசிரியவிருத்தங்கள்.*** *(362)*

***39.-தருமன் முதலானாரும் துரியோதனன் முதலானாரும் வீடுமன்பாதத்தைச் சென்னியிற்கொண்டுஅழுதல்.***

**இங்குந்தருமன்முதலாவுள்ளமன்னரெவரும்**
**அங்குந்துரியோதனனையாதியானவரசர்**
**பொங்குங்கடலாலுலகம்பொன்றுமன்றுபோலச்**
**சிங்கமன்னான்பாதஞ்சென்னிமேற்கொண்டழுதார்.**

*(இ-ள்.) இங்குஉம்-இந்தப்பக்கத்திலும், தருமன் முதல் ஆ உள்ள மன்னர் எவர்உம்-யுதிட்டிரன் முதலாகவுள்ள அரசர்களெல்லோரும், அங்குஉம்- எதிர்ப்பக்கத்திலும், துரியோதனனை ஆதி ஆன அரசர்- துரியோதனனை முதலாகவுடைய அரசர்களும், பொங்கும் கடலால் உலகம் பொன்றும் அன்று போல-பொங்குகின்ற கடலினால் உலகங்களழியும் அந்தயுகாந்த காலத்திற்*

*(பிராணிகள் வருந்துவது) போல, சிங்கம் அன்னான் பாதம்சென்னி மேல்கொண்டு அழுதார்- சிங்கத்தை யொத்தவனான வீடுமனது திருவடிகளைத் தலைமேல் வைத்துக்கொண்டு புலம்பினார்கள்; (எ-று.)*

*பாதம் சென்னிற்மேற் கொண்டு - திருவடிமீது முடிபடும்படி சாஷ்டாங்கமாக விழுந்து தண்டனிட்டு என்க. நற்குணநற்செய்கைகளையுடைய பாண்டவர் பக்கல் அபிமானத்தால் 'இங்கும்' என்றும், தீக்குணம் தீச்செய்கைகளையுடைய எதிரிகள் பக்கல் வெறுப்பால் 'அங்கும்' என்றும் கவி கூறினார். **பி - ம்:** பொங்குங்கனலால். (363)*

*40. இதுவும், மேற்கவியும்-ஒருதொடர்; இருதிறத்தாரும் புலம்பல்.*

***மறமும்வாகுவலியும்வல்வின்முதலெப்படையின்***
***திறமுந்தேசும்வாழ்வுஞ்சீருங்கேள்விச்செலவும்***
***நிறமுமுண்மையறிவுநெறியும்புகழுந்திகழ்பேர்***
***அறமும்பொன்றுநின்னோடையாவந்தோவந்தோ.***

*(இ-ள்.) ஐயா-தலைவனே! மறம்உம்-பராக்கிரமமும், வாகுவலிஉம் - தோள்வலிமையும், வல் வில் முதல் எ படையின் திறம்உம்-வலியவில் முதலிய எல்லா ஆயுதங்களின் வல்லமையும், தேசுஉம்- ஒளியும்,வாழ்வுஉம்-(மதிப்போடு) வாழ்தலும, ீசீர்உம்-சிறப்பும், கேள்வி செலவுஉம் - நூற்கேள்விகளின்படி ஒழுகும் ஒழுக்கமும், நிறம்உம்- பெருமையும், உண்மை அறிவுஉம்- தத்துவஞானமும், நெறிஉம்-நீதிவழியும், புகழ்உம்-கீர்த்தியும், திகழ் பேர் அறம்உம்- விளங்குகிற சிறந்ததருமமும், (என்னும் இவையெல்லாம்), நின்னோடு பொன்றும்-(உலகத்தில்) உன்னுடனே அழியும்; அந்தோ அந்தோ-! (எ-று.)*

*உன்போலப் பராக்கிரமம் முதலியன உடையார் ஒருவரும் இனி உலகத்திலில்லை யென்பதாம், தேசு-க்ஷத்திரியதேஜஸ். அந்தோ அந்தோ, அடுக்கு-இரக்கம். நிறம்-நற்குணமுமாம். (364)*

***41. தந்தையின்பமெய்தத்தவமேயின்பமாகச்***
***சிந்தைதெளியுஞானச்செல்வாசெஞ்சேவகனே***
***முந்தைமரபுக்கெல்லாமுதல்வாஞாலமுழுது***
***மெந்தையாளவைப்பாரினியார்கோவேயென்றார்.***

*(இ-ள்.) தந்தை இன்பம் எய்த-பிதாவாகிய சந்தனு (இரண்டாவது மணஞ் செய்து) இன்பமடையும்பொருட்டு, தவம்ஏ இன்பம் ஆக சிந்தை தெளியும்- துறவறவொழுக்கத்தையே உலகவின்பமாகக்கருதி மனந்தெளிந்த, ஞானம் செல்வா- தத்துவஞானமாகிய செல்வத்தையுடையவனே! செம் சேவகனே-நீதிதவறாத வீரனே! முந்தை - பழமையான, மரபுக்கு எல்லாம் - குருகுலத்திற்பிறந்த எங்கள் எல்லோர்க்கும், முதல்வா-மூத்தவனே!எந்தை-எமது வமிச பிதாவே! கோவே-தலைவனே! ஞாலம் முழுது உம் ஆள வைப்பார் இனி யார்- பூமிமுழுவதையும் (எங்களை) அரசாளும்படி (முடிசூட்டி) வைப்பவர் இனி வேறுயாவர் உளர்? என்றார்-என்றுசொல்லி (இருதிறத்தாரும்) புலம்பினார்கள்;(எ-று.)*

*"போகமுந்தரும மேயானமெய்ப்புனிதன்" என்றார், ஆறாம் போர்ச்சருக்கத்தும். எந்தை- அண்மைவிளி; அன்புபற்றிவந்த மரபுவழுவமைதி. (365)*

*42.-அழும் மைந்தர்க்கு வீடுமன் தேற்றரவு கூறுதல்.*

***அழுதமைந்தர்தம்மையஞ்சலென்றென்றாற்றி***
***எழுதுதொல்லைவினையையாரேவிலக்குகிற்பார்***

**உழுதுவாளியுருவவுங்கண்முன்னர்வீழ்ந்தேன்**
**பழுதொன்றில்லையிதுவேபயனென்பவத்தாலென்றான்.**

*(இ-ள்.) (அப்பொழுதுவீடுமன்), அழுத மைந்தர் தம்மை-(இங்ஙனம்) புலம்பின குருகுலகுமாரர்களை, அஞ்சல் என்று என்று-பயப்படாதீர்கள் என்று பலமுறை சொல்லி, ஆற்றி - துயரந்தணித்து, 'எழுது தொல்லை வினையை விலக்குகிற்பார் யார்ஏ-நியமிக்கப்பட்ட பழமையான கருமப் பயனைத் தடுக்கவல்லவர் யாவர்? [எவருமில்லை யென்றபடி]; வாளி உழுது உருவ-அம்புகள் தைத்து ஊடுருவ, உங்கள் முன்னர் வீழ்ந்தேன்-உங்களெதிரில் அழிந்து விழுந்தேன்; (ஆதலால் எனக்கு), பழுது ஒன்று இல்லை-ஒருதீங்கு மில்லை; இது ஏ என் பவத்தால் பயன் - இதுவே எனது (அரசப்) பிறப்பினால் பெற்ற பலன்', என்றான் - என்றுசொன்னான்; (எ-று.)*

*இப்பாட்டின் மூன்றாமடியால், பகைவரம்பால் போரிற் புண்பட்டு வீழ்தல் வீரர்களுக்குச் சிறப்பென்றும், பலபந்துக்களது முன்னிலையில் இறத்தல் யாவர்க்கும் சிறப்பென்றும் விளங்கும். (366)*

### 43.-அருச்சுனன் வீடுமன்சொற்படி அம்புகளால் அவன் முடியைத் தாழாது உயரும்படி செய்தல்.

**சரத்தின்சயனம்பஞ்சசயனங்களினுமினிதென்**
**சிரத்தின்றாழ்வுதீர்ப்பாய்திண்டோள்விசயாவென்ன**
**வரத்தின்பயனாலுயிரைநிறுத்துமன்னன்மகிழ**
**வுரத்தினம்பான்முடியையுயரும்வண்ணமுயர்த்தான்.**

*(இ-ள்.) (பின்பு அருச்சுனனை நோக்கி), வரத்தின் பயனால் உயிரை நிறுத்தும் மன்னன்-(தந்தைகொடுத்த) வரத்தின் பலத்தால் உயிரை (உடம்பு விட்டு நீங்காதபடி யோகங்கொண்டு) நிறுத்தியுள்ள பீஷ்மராசன், 'திண்தோள் விசையா - வலியதோள்களையுடைய அருச்சுனனே! சரத்தின் சயனம்-(உனது) அம்புகளாலாகிய படுக்கை, பஞ்ச சயனங்களின்உம் இனிது - ஐவகைப் பொருள்களால் அமைந்த மெத்தையினும் (எனக்கு) இனிமையாக வுள்ளது; என் சிரத்தின் தாழ்வு தீர்ப்பாய் - எனதுதலை தாழ்ந்திருத்தலை நீக்குவாய்[தலைக்கு உயரஞ்செய்வாய்]', என்ன-என்று சொல்ல,-(உடனே அருச்சுனன்), மகிழ-(அவ்வீடுமன்) மகிழும்படி, உரத்தின் அம்பால்- வலிமையையுடைய (தனது)அம்புகளால், முடியை உயரும் வண்ணம் உயர்த்தான்- (அவ்வீடுமனது) சிரசைஉயர்ந்திருக்கும்படி தலையணை செய்தான்; (எ-று.)*

*மீண்டும் மூன்று அம்புகளைத் தொடுத்து வீடுமன்தலையை அருச்சுனன் உயர்த்தினா னென முதனூல் கூறும். சுத்தவீரர்கள் போரிற்பட்டபுண்ணைப் பொருளாகக் கருதா ராதலாலும், வீடுமன் துன்பத்தையே இன்பமாக நினைக்கும் இயல்புடையவனாதலாலும், 'சரத்தின் சயனம் பஞ்சசயனங்களிலும் இனிது' என்றான். (367)*

### 44.-வீடுமன் துரியோதனனுடைய கண்ணீரைத் துடைத்துக் கன்னனைச் சேனாபதியாக்கிப் பொரக் கூறுதல்.

**சொரியுங்கண்ணீர்துடைத்துத்துரியோதனனைநோக்கி**
**வரியுஞ்சாபக்கன்னன்மன்னர்க்குருமேறன்னான்**
**தெரியுங்காலத்தவனைச்சேனைத்தலைவனாக்கிப்**
**புரியும்போருநாளைப்புரிமினென்றுபுகன்றான்.**

*(இ-ள்.) (பின்புவீடுமன்), சொரியும் கண் நீர் துடைத்து - (துரியோதனனது) கண்களினின்று பெருகுகிற நீரைப் போக்கி [சமாதானப்படுத்தி], துரியோதனனை நோக்கி-, 'மன்னர்க்கு உரும் ஏறு அன்னான் - பகையரசர்களுக்குப் பேரிடியையொத்தவனும் [தவறாது அழிவுசெய்பவனும்], தெரியும் காலத்தவன் - ஆராய்கிறகாலத்தையுடையவனும் ஆகிய, வரியும் சாபம் கன்னனை - கட்டமைந்த*

*வில்லையுடைய கர்ணனை, சேனை தலைவன் ஆக்கி - (இனிச்) சேனாபதியாகவைத்துக் கொண்டு, புரியும்போர்உம்-செய்யவேண்டிய யுத்தத்தையும், நாளை புரிமின் - நாளைமுதல் செய்யுங்கள்',என்று புகன்றான் - என்றுசொன்னான்; (எ-று.)*

*ஒன்பதாநாளிரவில் துரியோதனாதியர் கூடிய பொழுது கர்ணன் சொன்னதை, துச்சாதனன் தமையன்சொற்படி வீடுமனிடம் தெரிவிக்க, அப்போது "ஒருநாளுநீவிர் பொறுமின்களும்மை யுலகாளுவிக்கவருவோர், வருநாடொடங்கியமர்செய்து தெவ்வைமடிவிப்பர்...... வாழ்திர்" என்று கூறியதற்கு ஏற்ப, வீடுமன் இங்ஙன் கூறுகின்றானென்க. தெரியுங்காலத்தவன் என்பதற்கு - தான்வந்து போர்செய்யும்பொருட்டு எனது அழிவு காலத்தை எதிர்நோக்கியிருப்பவ னென்றும், பகைவெல்லும் அரசர்க்கு அவசியம் அறியவேண்டிய காலநிலைமையை அறியுந்தன்மைய னென்றுங் கருத்துக் கொள்ளலாம். இது பரிகாசமாகக் கூறியதென்னலாம். வீடுமன் இவ்வார்த்தை சொல்லும்பொழுது பத்தாநாள் சூரியாஸ்தமனகாலம் சமீபத்தி லிருந்ததனால், 'நாளைப்புரிமின்' என்றான். (368)*

### *45.-யுதிட்டிரன் வீடுமனுக்குத் தங்குமிடம் அமைக்க, அங்கு அவன் உத்தராயணகாலத்தை நோக்கியிருத்தல்*

***கோயிறருமன்செய்யக்கூர்வெஞ்சரமேயணையா***
***நோயிலயர்வுமெய்யினுழையக்காலநோக்கி***
***வீயின்முத்தியில்லையென்னவிருந்தான்விருந்தாய்ச்***
***சேயின்முதியகேள்வித்தெள்ளாரமுதநுகர்வான்.***

*(இ-ள்.) சேயின் - முருகக்கடவுள்போல், முதிய கேள்வி தெள் ஆர் அமுதம் - பழமையானநூற்கேள்வியாகிய தெளிவான அரிய அமிருதத்தை, விருந்து ஆய நுகர்வான் - புதிதுபுதிதாக அமுதுசெய்பவனாகிய வீடுமன்,-தருமன் கோயில் செய்ய-(தனக்குத்) தங்குமிடத்தை யுதிட்டிரன் ஒழுங்காக அமைக்க, கூர் வெம்சரம்ஏ அணைஆ - கூர்மையானகொடிய அம்புகளையே படுக்கையாகக்கொண்டு, நோய் இல் அயர்வுஉம் மெய்யில் நுழைய-பிணியில்லாமலே தளர்ச்சியும் உடம்பில்தோன்ற, வீயின் முத்திஇல்லை என்ன - (தக்ஷிணாயநமாகிய இப்பொழுது) இறந்தால் முத்திகிடையாதென்று கருதி, காலம் நோக்கி - (உத்தராயணம்வருங்) காலத்தை எதிர்நோக்கி, இருந்தான் - பிழைத்திருந்தான்; (எ-று.)*

*சுப்பிரமணியமூர்த்தி கல்வி கேள்விகளில் மிகச்சிறந்தவரென்பது பிரசித்தம் நோயில்யாவும் என்றும் படிக்கலாம்: அங்ஙனம் படிப்பின், நோய் இல் - துன்பந்தராமல், யாவும் - அம்புகளெல்லாம் மெய்யினுழைய என்க: சுத்தவீரனும் பற்றற்றவனுமான வீடுமன், தன் உடம்பில் அம்புகள் பதிந்த வருத்தத்தைப் பொருளாகக் கருதாமல், அப்புண்களை ஆற்றும் பொருட்டு நல்லவைத்தியர்கள் சிறந்தமருந்து முதலியவற்றோடு வந்ததையும் மறுத்து, அத்துன்பத்தையே இன்பமாகப் பாவித்த மனத்தூய்மை தோன்ற, 'நோயில் யாவுமெய்யினுழைய' என்றார்; இத்தன்மை முதனூலால் நன்குவிளங்கும்: இதற்கு, நோயில் என்பதில், இல்என்னும் பகுதியே வினையெச்சத்தன்மை பட்ட தென்றாவது, இன்றி என்பது இல்என விகாரப்பட்டதென்றாவது இலக்கணமறிக: திருமாலையில் "காவலில் புலனைவைத்து" என்றவிடத்து, இல் என்பதற்கு-இல்லாதபடி யென்று ஸ்ரீபெரியவாச்சான்பிள்ளை வியாக்கியான மிட்டருளி யிருத்தல்காண்க. அமிருதம் நாவுக்கு இனிமை தருதல்போல, நூற்கேள்வி செவிக்கு இனிமை தருதலால், 'கேள்வித் தெள்ளா ரமுதம்" என்றது. (369)*

### *46.-சூரியாஸ்தமன வருணனை.*

***இன்றுன்மைந்தன்பட்டானென்றுதந்தைக்கிசைப்பான்***
***சென்றுபரிதிமேலைத்திக்கினெல்லைசேர்ந்தான்***
***அன்றுவருணனன்பாலமுதசெந்நீராறாய்***
***மன்றவெங்கும்பரந்ததொக்குஞ்செக்கர்வானம்.***

*(இ-ள்.) இன்று உன் மைந்தன் பட்டான் என்று-இன்றைக்கு உனது மகன் அழிந்தா னென்று, தந்தைக்கு இசைப்பான் - (வீடுமனது) தந்தையாகிய வருணனுக்குக் கூறும்பொருட்டு, பரிதி- சூரியன், சென்று- போய், மேலை திக்கின் எல்லை சேர்ந்தான் - மேற்குத்திக்கின் இடத்தை யடைந்தான் [அஸ்தமித்தான்]; (அப்பொழுது), செக்கர் வானம் - (அத்திசையில் காணப்படும்) செவ்வானம், அன்று வருணன் அன்பால் அழுத செந்நீர் ஆறு ஆய் எங்கு உம் பரந்தது ஒக்கும்-அப்பொழுது அவ்வருணன் (மகனிடத்து) அன்பினால் அழுத சிவந்த கண்ணீர் ஆறாகி எவ்விடத்தும் பரவியதை யொக்கும்; (எ-று.)-மன்ற-தெளிவையுணர்த்துவதோர் இடைச்சொல்; ஐயச்சொற்களும், உவமைச்சொற்களும், துணிபுச்சொற்களும் கூட்டிச்சொல்லுதலும் தற்குறிப்பேற்றவணியின் இலக்கண மாதலால், 'மன்ற' என்ற துணிபுச் சொல்லைக் கொடுத்தார்: **தற்குறிப்பேற்றவணி.***

*வீடுமனது தந்தையானசந்தனு வருணனது அவதார மென்பது, முன் கூறப்பட்டது. அதிகசோகத்தால் உடம்பிலுள்ள இரத்தமே கண்ணீராகப் பெருகிய தென்பார், 'அன்பாலழுத செந்நீர்' என்றார்போலும். 'தங்கண், உள்ளநீரெல்லாமாறி யுதிரநீரொழுக நின்றான்' என்றார் கம்பரும் கும்பகருணன் வதைப்படலத்து. இனி, புதுநீர் வெள்ளம் செந்நிறமுடைத்தாயிருக்குந் தன்மைபற்றி அச்செம்மையை வருணன் கண்ணறப்புதிதாய்வருகிற நீர்ப்பெருக்குக்கு ஏற்றிக் கூறிய தெனினும் அமையும். (370)*

### *47.-இருசேனையும் பாசறைபுக, வீடுமனிறந்ததைச் சஞ்சயன்மூலமாகத் துரியோதனன் தன்தந்தைக்குத் தெரிவித்தல்.*

***பாண்டுமன்னன்புதல்வர்படையும்பாடிபுக்க***
***தாண்டுபாடிபுக்கதரவத்துவசன்படையும்***
***மீண்டுமுதல்வன்பட்டதெந்தைக்குரைமினென்று***
***தாண்டுமான்றேர்மைந்தன்சஞ்சயனைவிடுத்தான்.***

*(இ-ள்.) ஆண்டு-அப்பொழுது, பாண்டு மன்னன் புதல்வர் படைஉம்- பாண்டவர்களது சேனையும், பாடி புக்கது-படைவீட்டை யடைந்தது; அரவம் துவசன் படைஉம்-துரியோதனன்சேனையும், பாடி புக்கது-படைவீட்டை யடைந்தது; (அப்பொழுது), தாண்டுமான் தேர் மைந்தன்-தாவிப் பாயுங்குதிரைகளைப்பூட்டிய தேரையுடைய குமாரனான துரியோதனன், ஈண்டு முதல்வன் பட்டது எந்தைக்கு உரைமின் என்று-இப்பொழுது நமதுகுலத்துப் பெரியவனான வீடுமன் அழிந்ததை என்தந்தைக்கு [திருதராஷ்டிரனுக்கு]ச் சொல்லு மென்று, சஞ்சயனை விடுத்தான் - சஞ்சயமுனிவனை அனுப்பினான்; (எ-று.) ஸஞ்சயன்-வடசொல்; இவன் கவல்கணனென்பவனது குமாரன்; ஆதலால், இவனுக்குக் காவல்கணி யென்று ஒருபெயரும் வடமொழியில் வழங்கும்; இவன், திருதராஷ்டிரனுக்கு மிகவும் இஷ்டனான நண்பன்; இவன் அவனுக்குச் சிலசமயங்களில் தேர் செலுத்துதலும் உண்டு. இவன் நாள்தோறும் பகலில் போரில் நடக்கிறசெய்தியை அறிந்துபோய் இரவில் திருதராட்டிரனுக்குச் சொல்லிவந்தான். (371)*

### *48.-அதுகேட்ட திருதராஷ்டிரன் கண்ணீர்வடியவாடுதல்.*

***முனியுநகரிற்சென்றுமுகுரானனனுக்குரைப்பக்***
***கனியுமன்பின்வெள்ளங்கண்ணீராகிச்சொரிய***
***இனியென்மைந்தர்க்குறுதியில்லையென்றென்றேங்கிப்***
***பனிவெண்மதியங்கண்டபங்கயம்போலானான்.***

*(இ-ள்.) (அவ்வாறே), முனிஉம்-சஞ்சயனும், நகரில் சென்று-அஸ்தினபுரத்திற் போய், முகுரானனனுக்கு உரைப்ப-திருதராட்டிரனுக்குச் செய்திசொல்ல, (அதுகேட்டவுடனே அவன்), கனியும் அன்பின்-(வீடுமனிடத்து) நெஞ்சுருகிய அன்பினால், கண்ணீர் வெள்ளம் ஆகி சொரிய-, இனி என் மைந்தர்க்கு உறுதி இல்லை என்று என்று - இனிமேல் என்பிள்ளைகளுக்கு வலிமையில்லையென்று பலமுறைசொல்லி, ஏங்கி-விசனப்பட்டு, பனிவெண் மதியம் கண்ட*

*பங்கயம்போல் ஆனான்-குளிர்ந்த வெண்ணிறமான சந்திரனைப் பார்த்த தாமரைமலர்போலாயினான் [வாடி மெலிந்தான்];*

*முகுராநநன் என்ற வடமொழிப்பெயர்க்கு-கண்ணாடிபோன்ற முகமுடையவ னென்று பொருள். முகுரம்-கண்ணாடி, ஆநநம்-முகம். கண்ணாடி தான் பிறராற்காணப்பட்டுப் பிறரைத் தான் காணும் உணர்ச்சி யில்லாதது போல, தான் பிறராற் காணப்பட்டுப் பிறவிக்குருடனாதலாற் பிறரைத் தான் காணாத முகத்தையுடையவனென்றவாறு; இனி, கண்ணாடி போல விளக்கமுடைய முகமுடையனென்றுமாம். "வயக்குறு மண்டிலம் வடமொழிப்பெயர் பெற்ற, முகத்தவன்" என்றார் கலித்தொகையிலும். **பி-ம்** : என்றென்றிரங்கி. (372)*

### *49.-திருதராஷ்டிரன் பெருஞ்சோகமடைந்து கதறுதல்.*

***மண்மேல்விழுந்தானெழுந்தான்மானம்போனதென்றான்***
***கண்மேலெற்றியின்றேகண்ணுமிழந்தேனென்றான்***
***விண்மேலுள்ளோர்செல்வம்வீறுபெற்றதென்றான்***
***புண்மேலனலுற்றென்னப்புலர்ந்தான்முதல்வன்புதல்வன்.***

*(இ-ள்.) (பின்பு), முதல்வன் புதல்வன் - (குருகுலத்துப்) பெரியவனானவீடுமனுக்கு(த்தம்பி) மகனான திருதராஷ்டிரன், மண்மேல் விழுந்தான்- தரையிலே விழுந்திட்டான்; எழுந்தான்-; மானம் போனது என்றான் - (எனது) பெருமையழிந்தது என்று சொன்னான்; கண்மேல் ஏற்றி-(தன்) கண்மேல் (கையால்) மோதிக்கொண்டு, இன்றுஏ கண்உம் இழந்தேன் என்றான்-இன்றைக்கே (நான்) கண்ணையுமிழந்தே னென்று கூறினான்; விண்மேல் உள்ளோர் செல்வம் - தேவலோகத்திலுள்ளோரது ஐசுவரியம், வீறுபெற்றது - (வீடுமன் இனி அனுபவிக்கப்பெறுதலால்) சிறப்புப்பெற்றது, என்றான் - என்றுஞ் சொன்னான்; புண்மேல் அனல் உற்று என்ன புலர்ந்தான்- புண்ணின் மேல் நெருப்புப்பட்டாற் போல மிகவருந்தினான்; (எ-று.)*
*முன்னமே தன்மக்கள்சிலர் இறந்ததனால் மனம்வருந்திய திருதராட்டிரன் இப்பொழுது குலத்தலைவனும் சேனாபதியும் தன்னைவளர்த்த தந்தையுமான வீடுமனும் அழிந்த செய்தியைக் கேட்டு அவ்வருத்தத்தின்மேல் மிக்கவருத்தமுற்றானென்பதாம். நான்காமடி - துன்பத்தின்மேல் துன்பமடைதற்கு உவமை; "புண்ணிலாம்பெரும்புழையிற் கனல்நுழைந்தாலென" எனக் கம்பர் கூறியதுங் காண்க. இனி, முதல்வன் புதல்வன் என்பதற்கு - யாவர்க்கும் முதல்வனாகிய திருமாலினது அவதாரமான வியாசமுனிவனுக்கு மகனாகிய திருதராட்டிர னென உரைத்தலுமொன்று. இரண்டாமடியால், வீடுமனைத் திருதராட்டிரன் தனக்குக் கண்ணாகக் கருதியிருந்தமை விளங்கும். **பி-ம்:** அயலுற்றென்ன. (373)*

### *50.-இனிச்சேனாபதியாகுபவர் யாரென்று துரியோதனன் எண்ணுகையில், கர்ணன் தான் சேனாபதியாவே னெனல்.*

***செங்கணரவக்கொடியோன்சேனாபதியாய்நாளை***
***யிங்குமுனையினிற்பார்யாரென்றெண்ணுமெல்லை***
***அங்கர்பூபன்யானேயமரார்வானத்தமரக்***
***கங்கைமைந்தன்சொன்னபரிசேகாப்பனென்றான்.***

*(இ-ள்.) செம் கண் அரவம் கொடியோன் - (கோபத்தாற்) சிவந்த கண்களையுடைய துரியோதனன், 'இங்கு - இப்பக்கத்தில், சேனாபதி ஆய் - சேனைத்தலைவனாய், நாளை - நாளைக்கு, முனையில்- போர்க்களத்தில், நிற்பார்- நிற்கவல்லவர்,யார்?'என்றுஎண்ணும் எல்லை - என்று ஆலோசிக்கும் பொழுது,- அங்கர் பூபன் - அங்க நாட்டாரரசனான கர்ணன், 'யானே-,அமரார் வானத்து அமர- பகைவர்கள் மேலுலகத்துச் செல்லும்படி, கங்கை மைந்தன் சொன்ன பரிசுஏ - வீடுமன்சொன்னபடியே, காப்பன் - (சேனைத்தலைவனாய் நம்சேனையைக்) காப்பேன்,' என்றான்- என்றுசொன்னான்; (எ-று.)*

*கங்கைமைந்தன் சொன்னதை, கீழ் நாற்பத்துநான்காங்கவியிற் காண்க. கர்ணன்வீடுமனிடஞ் சென்று அவனைக் கண்டு பேசித் தான் சேனாபதியாகும்படி அவனிடம் விடைபெற்றுவந்தானென இங்கே முதனூல் கூறும். அமரார் - (தம்மை) விரும்பிச் சேராதவர்.* ***பி - ம்:*** *அமரிற்றலைவனாகி. (374)*

### *51.-தனக்குத் துணையாக நிற்பவர் ஒருவருமில்லையென்று அக்கர்ணனைத்துரியோதனன் விலக்கித் துரோணனைச் சேனாபதியாகெனல்.*

***தானாதிகனேநீவெஞ்சமரிற்சேனைத்தலைவ***
***னானாலரசாய்நிற்பார்யாரென்றவனைவிலக்கி***
***மீனார்கொடியோன்றன்னைவென்றவேதக்கொடியோய்***
***சேனாபதியாகென்றான்றீவாய்நாகக்கொடியோன்.***

*(இ-ள்.) (அதுகேட்டு), தீ வாய் நாகம் கொடியோன்- விஷாக்கினியை உமிழும் வாயையுடைய பாம்பைக் கொடியிலுடைய துரியோதனன், (கர்ணனை நோக்கி), 'தான அதிகனே - ஈகையால் மேம்பட்டவனே! நீ-, வெம்சமரில் - கொடியயுத்தத்தில், சேனை தலைவன் ஆனால்-சேனாதிபதியாய் விட்டால், அரசு ஆய் நிற்பார் யார் - (என்னுடன் பிரதான) அரசனாய்நிற்பவர் வேறுயாவர்? [எவருமில்லையே என்றபடி],' என்று-என்றுசொல்லி, அவனை விலக்கி - அக்கர்ணனை (ச்சேனைத்தலைமை பூணுதலினின்றி) விலக்கி (துரோணனை நோக்கி), 'மீன் ஆர் கொடியோன்தன்னை-மீன்பொருந்தின கொடியையுடைய மன்மதனையும், வென்ற- (போர்த்திறத்தில்) சயித்த, வேதம் கொடியோய்- வேதமெழுதிய கொடியை யுடையவனே! சேனாபதி ஆக-(நீ) சேனைத்தலைவனாகுக,' என்றான்-என்று பிரார்த்தித்தான்; (எ-று.)*

*காமமுதலிய குற்றங்களை ஒழித்தவனென்றும், மன்மதனை வென்ற சிவபிரானோ டொத்தவனென்றும் மூன்றாமடிக்குக் கருத்துக்கொள்ளல் சாலும். உயர்ந்த சாதியில் சிறந்தகுலத்திற்பிறந்த வனாதலாலும், பிராய அறிவு ஒழுக்கங்களில்முதிர்ச்சியுடையவனாதலாலும், அஸ்திரசஸ்திர வித்தைகளில் சிறந்த அநேகர்க்கும்ஆசிரிய னாதலாலும், துரோணன் சேனைத்தலைவனாக்கப்பட்டான்.*

### *52.-துரோணன் சேனாபதியாயிருத்தற்கு உடம்பட, யாவருந் துயிலுதல்.*

***சிலையாசிரியன்வேந்தர்வேந்தன்சேனைதனக்குத்***
***தலையாய்மன்னர்யாருந்தன்னைவந்துசூழக்***
***கொலையார்பகழிவெள்ளமார்பந்தோறுங்கோத்துத் தொலையாவெம்போர்தொ***
***லைக்கத்துணிந்தானெவருந்துயின்றார்***

*(இ-ள்.) சிலை ஆசிரியன்-வில்லாசிரியனாகிய துரோணன், வேந்தர் வேந்தன்சேனை தனக்கு தலைஆய்-துரியோதனனதுசேனைக்குத் தலைவனாய், மன்னர்யார்உம் தன்னை வந்து சூழ - அரசர்களெல்லோரும் தன்னை வந்துசூழ்ந்திட,-கொலை ஆர்-கொல்லுதல் தொழில் மிக்க, பகழி வெள்ளம் - பாண வருஷத்தை,மார்பம் தோறுஉம்-(பகைவீரர்களது) மார்பிலெல்லாம், கோத்து- தொடுத்து,தொலையாவெம் போர்-நீங்காத கொடிய போரை, தொலைக்க- செய்துமுடிக்க, துணிந்தான்-நிச்சயித்தான்; (பின்பு அவ்விரவில்), எவர்உம் துயின்றார்-எல்லோரும்உறங்கினார்கள்; (எ-று.)-* ***பி-ம்:*** *சேனைக்கெல்லாம். (376)*

### *53.-ஃழ் வருணனை.*

***வருணன் மைந்தன் பாடு வருணற் குரைத்து மீளத்***
***தருண மைந்தன் விசயஞ் சதம கத்தோன் கேட்ப***
***இருணி றைந்த கங்கு லேங்கி முன்னே யோட***
***அருணன் பொற்றேர் தூண்ட வருக்கன் குணபா லடைந்தான்.***

*(இ -ள்,) அருக்கன் - சூரியன், வருணன் மைந்தன் பாடு வருணற்கு உரைத்து- வருணனுக்குக்குமாரனானவீடுமன் அழிந்ததை (முந்தினநாள்மாலையில்) வருணனுக்குச் சொல்லி, மீள - பின்பு, தருணம் மைந்தன் விசயம் சதமகத்தோன் கேட்ப - இளமையையுடைய மகனான அருச்சுனனது வெற்றியை (அவன் தந்தையான) இந்திரன் கேட்க(ச்சொல்லும்படி), இருள் நிறைந்த கங்குல் ஏங்கி முன்னேஓட)-இருட்டு நிறைந்த இராத்திரி பயந்து முன்னே ஓட பொன் தேர் அருணன் தூண்ட-(தனது) அழகியதேரை அருணன் செலுத்த, குணபால் அடைந்தான் - கீழ்திசையைச்சேர்ந்தான்; (எ-று.)*

**தற்குறிப்பேற்றவணி.** *கீழ் நாற்பத்தாறாங்கவியிற் கூறியதை இப்பாட்டின் முதலில் அனுவதித்தார். சதமகத்தோன்-நூறு (அசுவமேத) யாகங்களைச் செய்தவன். கேட்ப, ஓட, தூண்ட, அடைந்தான் என்க. (377)*

**பத்தாம்போர்ச்சருக்கம் முற்றிற்று.**

**வீ ட் டு ம ப ரு வ ம்**

**முற்றுப்பெற்றது.**